உ

श्री गुरुभ्यो नमः



# स्मृतिमुक्ताफलम्

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

## आह्निककाण्डम् - उत्तरभागः - द्रविडानुवादयुतः

## மூன்றாவது பாகம்

## ஆஹ்நிக காண்டம் உத்தரபாகம்



श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

श्री वैद्यनाथदीक्षितविरचितम्

तृतीयो भागः

आह्निककाण्डम् - उत्तरभागः

द्रविडानुवादयुतः

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றியது

மூன்றாவது பாகம்

ஆஹ்நிக காண்டம் உத்தரபாகம்

(தமிழ் உரையுடன்)

தொகுத்தளிப்பவர்:
வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ

வெளியிடுபவர்:
வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை
(கும்பகோணம்) சார்பில்
ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம்
ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்
1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502.

கர - 2011

***SMRITI MUKTA PHALAM***

**AHNIKA KANDAM -PART-3**

***with Tamil Translation***

***Khara - 2011 - II Edition***

***Edited by :***
**Vaidya S.V. Radhakrishna Sastri.**
***Srirangam***

***Published on behalf of :***
***Veda Dharma Sastra Paripalana Sabha***
***Regd. Office : Kumbakonam***

***by***
***Sri Kanchi Kamakoti Peetam,***
***Srimatam, Samsthanam***
***1, Salai Street,***
***Kancheepuram - 631 502.***

---

***Lasertypeset & Printed at :***
***V.K.N. Enterprises***
***Mylapore, Chennai-4, Cell: 98402 17036***

Phone : 044-2722115
Fax : 044-27224305, 37290060
e:mail:skmkanci@md3.vsnl.net.in

Sri Chandramouleeswaraya Namaha:
Sri Sankara Bhagavazdpadacharya
Paramaparagatha Moolamnaya Sarvagnapeeta:
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**
Srimatam Samasthanam
No.1, Salai Street, KANCHEEPURAM - 631 502.

---

मङ्क्त्वा सत्स्मृतिसागरे सुगहने लब्ध्वा वरं मौक्तिकं
श्रुत्यम्बागलभूषणं समतनोत् श्रीवैद्यनाथो महान् ।
भूयस्तद्द्रविडानुवादकनकैस्तन्वन् स्रजं सुन्दरीं
राधाकृष्णसुधीस्सदा विजयतां श्रीचन्द्रमौलीक्षणात् ॥

अक्षैर्मा दीव्येति आम्नायामृताम्बुधिबिन्दुभिः निखिलस्मृतिनिचयेन च प्रभुसम्मिततया, इतिहासपुराणबृन्दमाक्षिकधारया सुहृत्सम्मिततया, काव्यरसानुभूतीक्षुसारवर्षैः कान्तासम्मिततया च प्रतिपादितः धर्मकलापः सूक्ष्मगतिको विलसति । धर्म एव विशिनष्टि समाजं समजात् । मनीषिमनोगोचरस्य तस्य धर्मस्यावगतये परमकारुणिका ऋषयः स्मृतिग्रन्थान् विलिख्य महदुपकारमतानिषुः । धर्मकलापापकलनकलापटौ कलौ मानवानां बोधनाय वैद्यनाथदीक्षिताख्यो विद्वदग्रेगण्यः स्मृतिसागारं निर्मथ्य

पीयूषमाचिन्वन् स्मृतिमुक्ताफलाख्यं ग्रन्थमरीरचत् । सोऽयं ग्रन्थः वर्णाश्रमधर्मकाण्डः, आह्निककाण्डः, आशौचकाण्डः, श्राद्धकाण्डः, तिथिनिर्णयकाण्डः तथा प्रायश्चित्तकाण्डश्चेति काण्डषट्केन निखिलमपि धर्मं प्रतिपादयति । यं वै रक्षसि धर्मं त्वं धृत्या च नियमेन च । स वै राघवशार्दूल धर्मस्त्वामभि-रक्षत्विति श्रीमद्रामायणवचनेन धर्मो रक्षति रक्षित इति सुष्ठु अवगम्यते । लोकानां धारणाद्धर्म इति सार्थाभिधां बिभ्रतो धर्मस्य सेवनं लोकव्यवस्थायाः स्थिरीकरणमिति न संशीतिः । सोऽपि धर्मः अनेन ग्रन्थरत्नेन सुष्ठ्ववगम्यते । तस्यैतस्य ग्रन्थस्य वर्णाश्रमधर्मकाण्डादिः भागशः वैद्यश्री शिवे. राधाकृष्णशास्त्रिभिः द्रविडानुवादेन सह परिष्कृत्य वेदधर्मशास्त्रपरिपालनसभाद्वारा प्रकाश्यते इति ज्ञात्वा भृशं मोदामहे । सोऽयं यत्नः श्रीमहात्रिपुरसुन्दर्यम्बा-समेत श्रीचन्द्रमौलीश्वरकृपया सफलो भवत्विति ग्रन्थ-सम्पादकः एवमेव ग्रन्थरत्नानि प्रकाशयन्नैहिकामुष्मिकश्रेयो-विलासैः समेधतामिति प्रकाशने साहाय्यकर्तारश्च समस्त-मङ्गलानि अवाप्नुयुः पठितारश्च धर्मसेवनेन निखिलश्रेयांस्यधि-गच्छन्त्विति चाशास्महे ।

शङ्करसंवत्सरः २५२०

काञ्चीपुरम् नारायणस्मृतिः ।

உ

ஸ்ரீ குருப்யோ நம:

# ஆந்ஹிக (ஆஹ்நிக) காண்டம்

## அறிமுகம்

இரு பிறப்பாளரால் தினந்தோறும் வாழ்நாள் முழுவதும் தேசகால நிலைக் கேற்பவும் அவரவர் நிலைக்கேற்பவும் அவசியம் பின்பற்ற வேண்டிய ஒழுங்குமுறைகள் பலவற்றை ஆஹ்நிக காண்டம் வரிசைப்படுத்தித் தந்துள்ளது. அவரவர் தான் பிறந்த சூழ் நிலைக்கேற்பக் கட்டுபாட்டுடன் வாழ செளசம் - ஆசெளசம் என்ற நிலைகளையும் தெளிவாக உணர்வது இன்றியமையாதது. மற்ற இரு பிரிவினரைவிட அந்தணரின் வாழ்க்கையை இந்தப் பண்பாட்டிற்கும் கட்டுப்பாட்டிற்கும் சிறிதும் குறையின்றி அமைத்துக் கொள்ளுதல் பெரிதும் எதிர் பார்க்கப்படுகிறது.

இரவு உறக்கத்தில் உடல் தன் நிலையுணர்வை இழக்கிறது. விழித்தெழுந்த அடுத்த கணம் முதல் இரவு மறுபடி உறங்கும்வரை தான் இன்னார் என்ற உணர்வைச் சிறிதும் இழக்காமல் கடமைகளை ஆற்ற நேர்கிறது. மூன்று வர்ணங்களுக்கும் பொதுவானதாயினும் அந்தணர் தான் அந்தணர் என்று வாழ்ந்து காட்டுவது அவச்யமாகிறது. அதனால் ஆஹ்நிக காண்டத்தின் பெரும் பகுதி அந்தணரை முன்னிட்டே அமைந்துள்ளது.

பேராராய்ச்சியுடன் இந்நூலைத் தொகுத்த ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் பெருமானின் நூலமைப்பு தனிச் சிறப்புள்ளது. ஆராய்ச்சிக் கண்ணோட்டத்துடன் தன் வழி என்றோ ஸம்பிரதாயமென்றோ வாழ்க்கை முறைகளை அவர் தொகுக்கவில்லை. அறுபதுக்கும் மேற்பட்ட நூல்களில் ஒவ்வொரு தலைப்பிலும் காட்டப்பட்டுள்ள முறைகளை ஆராய்ச்சித் தொகுப்பின் ஆதாரமாகக் காட்டி, தன் ஆராய்ச்சியின் முடிவு இது என எதிலும் முனைப்புடன்

கருத்தை இவர் நூல் முழுவதிலும் எந்தச் சிறு விஷயத்திலும் வற்புறுத்தவில்லை. வேறுபட்ட கருத்துகளை முனை மழுங்காமல் அப்படியே கூறி நடைமுறையை நிர்ணயிக்கிற பொறுப்பைச் சிஷ்டர்களிடமும் முன்னோர்களின் வழிமுறைகளிடமும் ஒப்புடைத்துள்ளார். அதனால் ஒவ்வொரு சிறு விஷயத்திலும் பல பெரியோர்களின் கருத்தை அப்படியே எழுதியதால், நூல் மிக விரிவடைந்து விட்டது. 10 வரிகளில் அடங்குகிற விஷயத்திற்கு நூருயிரம் வரிகள் விளக்கம் தருகிருர். பல்வேறு மஹான்களின் கருத்துகளை அறிந்துகொள்ள இது பெரிதும் உதவுகிறது. நூல் விரிவு பொருட்படுத்தத்தக்கல்ல என்று உணர முடிகிறது.

ஆத்ம சுத்தி பெரும்பாலும் வைதிகமான மந்த்ரங்களின் மூலமே பெற முடியும் என்று முடிவு. ஆதிபௌதிகம், ஆதி தைவிகம், ஆத்யாத்மிகம் என்ற மூன்றும் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்விலும் தொடர்வதை உணரமுடிகிறது. ஆதி தைவிகத்தின் உதவியால் ஆத்யாத்மிக ஆதிபௌதிகங்களின் மேன்மை உறுதிப்படுகிறது. ஆஹ்நிகப் பணியில் ப்ரஹ்ம முகூர்த்தம் என்ற தெய்விக நேரத்தில் விழித்ததும் வலது உள்ளங்கை பார்த்தல், சிரஞ்ஜீவிகளை - தெய்விகப் பிறவிகளை நினைத்து மனத்தால் வணங்குதல் என்று தொடங்கி இறைவனின் பல்வேறு நிலைகளை நினைத்து அவற்றின் உதவியால் தனது அன்றைய வாழ்வு நலமாக முடிந்தது என்று நினைவுடன் உறங்கச் சொல்கிருேம்.

ஒவ்வொரு கணமும் தெய்விக சக்திமிக்க மந்த்ரங்களும் தெய்வ உணர்வுமிக்க வாக்கு மனம் உடல் என மூன்ருல் நலன் தரும் செயல்களும் வாழ்வின் உயர்விற்கு உதவுகின்றன. ஓம் சிவ சங்கர நாராயண தாயே என உள்ளத்தால் மட்டுமே உணரக் கூடிய தெய்வத்தை ஒவ்வொரு கணமும் உணர்கிருேம். இச்சொற்களே அவற்றிற்கேற்ற தெய்விக ஒழுங்கு முறையுடன் உச்சரிக்க அது மந்த்ரமாகிறது. அந்த மந்த்ரமும் தெய்விக உணர்வு

மிக்க ருஷிகள் என்ற பெரியோர்களால் ஜ்ஞானக் கண்களால் அவர்கள் கண்ட தெய்வத்தின் உருவமாகக் காணப்பட்டது.

மந்த்ரத்தைச் சொல்ல ஒருமுறை உண்டு. மந்த்ரத்தைப் பற்றிச் சிறிது சிந்திக்க வேண்டும். மந்திரம் நம்மளவில் எழுத்து - சொல் வடிவம். ஆனல் அதன் உண்மை நிலை ஒலி வடிவம். ஒலியை நமக்கு உருவகப்படுத்துவது அக்ஷரம். (எழுத்து). ஒவ்வொரு அக்ஷரமும் ஒலிவடிவிலும் ஒளி வடிவிலும் த்யானிக்கிற வழக்கில் ध्यायेत् தியானிக்க வேண்டும் என்று கூறுவர். அதனை ध्यायामि என்று சொல்வது உசிதம். அதனுல் ध्यायामि த்யானிக்கிறேன் எனச் சொல்வதும் குறையுள்ளதே. தியானம் என்பது செயலல்ல. உள்ளத்தில் உருவகப்படுத்தியதன் அநுபவம். இதற்குச் சொல்லேது? शुक्लाम्बरधरं विष्णुं - प्रसन्नवदनं ध्यायेत् என்றே தலையில் குட்டிக்கொள்வர். தியானிக்க வேண்டும் என யாரைத் தூண்டுவது? தானே தனக்கு உணர்த்துவது பயனற்றது. வெண்ணிற ஆடையுடுத்திய எங்கும் நீக்கமற நிரம்பிய பெருமானை அனுபவிக்கும் உணர்வு தியாயேத் என்ற சொல்லில் இல்லை. वन्दे எனச் சிலர் மாற்றிக் கூறுவர். நமஸ்காரம் செய்ய வேண்டுமே தவிர, நமஸ்கரிக்கிறேன் என்று வாயால் சொல்வதும் பகட்டே தவிர உளமார்ந்ததல்ல. ஆஹ்நிகத்தில் சொல்லப்பட்ட மந்திரங்கள் அனைத்தையும் உணர்ந்து உள்ளமாற அதாகவே ஆகிய அநுபவ அளவிற்குக் கொண்டுவர வேண்டியதவசியம். அதுவே பண்படுத்தலாகும்.

மந்திரங்கள் நம் நிலைக்குக் கிட்டியது அதனை முதல் ஞான திருஷ்டியால் கண்டுபிடித்த ருஷிகளின் அருள். அந்த மந்திரத்தின் உச்சரிப்பு சந்தஸ் என்ற சொற்கட்டிற்கு உட்பட்டது. ஒவ்வோர் எழுத்தும் முழு மந்திரமும் அது உணர்த்துகிற தேவதையின் வடிவம். அதனுல் ஒவ்வொரு மந்திரத்திற்கும் ருஷி, சந்தஸ், தேவதை அதற்கான பீஜம்,

சக்தி, ஹ்ருதயம் கீலகம் என்ற பல நிலைகள் இவற்றை உருவகப்படுத்தி நினைவில் வைத்துக் கொள்வது அவச்யமாகிறது. அதற்கான செயல்முறையை ந்யாஸம் என்பர். ருஷி நியாஸம், சந்தஸ் நியாஸம் தேவதா நியாஸம் என்றவாறு உடலின் பகுதிகளைத் தொடுவர். ருஷி - குருவானதால் சிரஸில், சந்தஸ் - மொழியானதால் வாயில், தேவதை த்யானிக்கப்படுவதால் உள்ளத்தின் இடமான இதயத்தில் தொட்டு அனுபவிப்பர். இதனையே விரிவு படுத்தும் போது மந்திரத்தை ஜபம் செய்வதை எண்ணப் பயன்படுகிற விரல்களில் கர நியாஸம், தியானிக்கிற வடிவாகவே தன் உடலும் ஆனதை உணர அங்க நியாஸம், அவ்வுணர்வு த்யான காலத்தில் தன்னைவிட்டு வெளியேருதிருக்க திக்பந்தம், தியானத்திலிருந்து விடுபட்டு வெளி உலகின் உணர்வு துலங்க திக்விமோகம் என்று நியாஸங்கள் விரிவடையும்.

ஒவ்வொரு மந்திரத்திற்கும் இத்தனையும் என்ற நம் ஆர்வம் அக்கரை ஈடுபாடு இதுவே வாழ்வின் இலட்சியம் என்ற தேர்வு இவை வளர இவ்வனுபவம் பேராநந்தம் தரும். இதற்கான வழியையே ஆஹ்நிக காண்டம் பல வாறு விளக்குகிறது. எல்லா மந்திரங்களும் இந்த நியாஸ முறை கொண்டவையே. ஸந்த்யா வந்தனம், காயத்ரீ ஜபம் தேவதாவந்தனம் என்ற மூன்று பகுதிகளில் காயத்ரிக்கு மட்டும் விரிவின்றி மிக சுருக்கமாகச் சில ந்யாஸங்கள் மட்டும் இன்று நடைமுறையிலுள்ளன என்பது வருந்தத்தக்கதே. பொருளை உணராமல் மந்திரம் தியானத்திற்குப் பயன்படாது. உடற் செயலாலோ வாக்காலோ மட்டும் மந்திர விதானம் பலன் தருவதல்ல. மந்திரத்தின் மூலம் வெளிப்படுகிற ஆதி தைவிக சக்தியை ஆத்ம சக்தியாக உணர்கிற அநுபவமே இவற்றின் குறிக்கோள். அதனுல் மந்திரத்தின் ஒவ்வொரு அக்ஷரத்திலுள்ள தேவதா சக்தியை உணரவே ஹோமம், பிரும்ம யஜ்ஞம், தேவ ரிஷி பித்ரு தர்பணம், வைச்வ தேவம், பஞ்ச மஹாயஜ்ஞங்கள், தேவதா பூஜை, அதிதி

ஸத்காரம், பிராம்ஹண போஜநம் என்று பல சடங்குகள் தேவைப்படுகின்றன.

இவற்றிற்கான தகுதி பெற வாழ்நாள் முழுவதும் ஒவ்வொரு கணமும் பயன்பாட்டிற்கு உகந்ததே. முன்னோர்கள் நன்கொடையாகவும் உரிமைப் பொருளாகவும் மனமுவந்து அக்கரையுடன் நம்மிடம் அளித்த தாயம் என்ற சொத்தே ஸம்-ப்ர-தாயம் ஆக நம்வரை வந்துள்ளது. அததனைச் சிதற விடாமல் நாமும் பயன்படுத்தி நம் ஸந்ததியினரிடம் அதே அக்கரையுடன் அளிக்க வேண்டியதே இந்த தார்மிக வாழ்க்கைமுறை எனும் சிஷ்ட ஸம்ப்ரதாயம். ஆஹ்நிக காண்டத்தின் கடைசியில் அனுபந்தமாக இணைக்கப்பட்டுள்ள பகுதி, நீதி சாஸ்திரம் எனத் தனித்துக் கற்றுப் பழகக் கூடியது. மிக அரிய எங்கும் காணக் கிடைக்காத நீதித் தொகுப்பு. (அறத்துப்பால்).

இதனை ஒவ்வொரு கோணத்திலும் ஆராய்ந்து விளக்கம் தந்த ஸ்ம்ருதி முக்தாபலத்தின் ஆசிரியர் பிரும்மஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் பலகோடி வணக்கத்திற்கும் நன்றியுரைக்கும் உரித்தானவர். அதனைத் தமிழாக்கித் தந்த உரையாசிரியர், அதனை வெளியிடுகிற வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபையோர், இவர்களும் நம் பெருமதிப்பிற்கும் வணக்கத்திற்கும் உரியவராவர். இவ்வரிய நூலை நமக்கும் நம் பிற்கால ஸந்தயினருக்கும் வழி காட்டியாக அளிக்க முன்வந்த ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய பரம பூஜ்ய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களுக்கும் பூஜ்யஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களுக்கும் நம் அனைவரின் அனந்த கோடி நமஸ்காரங்களை ஸமர்ப்பித்து இவனுக்கு இதற்கான அரிய வாய்ப்பையும் தகுதியையும் தம் அருளால் வழங்கியதற்கு அனந்தகோடி நமஸ்காரங்களை ஸமர்ப்பித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீரங்கம்

23.2.2011 வைத்ய S.V.ராதாகிருஷ்ண சாஸ்திரீ

உ

# आह्निककाण्डः - उत्तरभागः

## ஆஹ்நிக காண்டம் - உத்தர பாகம்

## विषयानुक्रमणिका - பொருடளக்கம்.

गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

## आह्निककाण्डः

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

## ஆஹ்னிக காண்டம்

## उत्तरभागः

*(உத்தர பாகம்)*

## गायत्रीजप विधिः

तत्र मनुः - आचम्य प्रयतो नित्यमुभे सन्ध्ये समाहितः । शुचौ देशे जपन् जप्यमुपासीत यथाविधीति ॥ शङ्खः – कुशबृस्यामासीनः कुशोत्तरायां वा कुशपवित्रपाणिरुदङ्मुखः सूर्याभिमुखो वा मालामादाय देवतां ध्यायन् मन्त्रजपं कुर्यादिति ॥

### காயத்ரீ ஜபவிதி

மனு:- ஆசமனம் செய்து, சுத்தனாய், கவனமுள்ளவனாய், இரண்டு ஸந்த்யா காலங்களிலும், சுத்தமான ஸ்தலத்தில் ஜபிக்க வேண்டிய மந்த்ரத்தை ஜபிப்பவனாய், விதிப்படி நித்யமும் உபாஸிக்க வேண்டும். சங்கர்:- குசாஸனத்திலாவது, குசத்தைப் பரப்பியுள்ள பூமியிலாவது உட்கார்ந்து, குச பவித்ரத்தைக் கையில் தரித்து, வடக்கு நோக்கி, அல்லது ஸூர்யனை நோக்கி, ஜபமாலையை எடுத்துக் கொண்டு, தேவதையை த்யானித்து மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும்.

मन्त्रजपशब्दयोर्निर्वचनमुक्तं स्मृतिरत्ने – मकारं मन इत्याहुस्त्रकारं त्राणमेव च। मनस्त्राणसमायुक्तो मन्त्र इत्यभिधीयते ।। जकारो जन्मविच्छेदः पकारः पापनाशनः । जन्मकर्महरो यस्मात् तस्माज्जप इति स्मृतः इति ।। आसीन इति वचनं सायं मध्यन्दिनजपविषयम् । तथा च मनुः – पूर्वां सन्ध्यां जपंस्तिष्ठेत् सावित्रीमार्कदर्शनात् । पश्चिमां तु समासीनः सम्यगार्क्षविभावना-दिति । आर्क्षविभावनात् इति पदच्छेदः । आनक्षत्रदर्शनादित्यर्थः ।। स एव – पूर्वां सन्ध्यां जपंस्तिष्ठन् नैशमेनो व्यपोहति । पश्चिमां तु समासीनो मलं हन्ति दिवाकृतमिति च ।।

மந்த்ரம், ஜபம் என்ற பதங்களின் பொருள் சொல்லப்பட்டுள்ளது ஸ்ம்ருதிரத்னத்தில்:- 'ம' என்பது மனதையும் 'த்ர' என்பது காப்பாற்றுதலையும் சொல்லும். மனதைக் காப்பாற்றுவதால் 'மந்த்ரம்' எனப்படுகிறது. 'ஜ' ஜன்மத்தைப் போக்குவது 'ப' பாபத்தை போக்குவது. ஜன்மம், கர்மம் இவைகளைப் போக்குவதால் ஜபம் எனப்படுகிறது. சங்கவசனத்தில்:- ஆஸீநः என்பது, மாலையிலும், மத்யாஹ்னத்திலும் செய்யும் ஜபத்தைப் பற்றியது. அவ்விதமே மனு சொல்கிறார் - 'காலை ஸந்த்யையில் ஸூர்யோதயம் வரையில் காயத்ரியை ஜபித்துக் கொண்டு நிற்க வேண்டும். மாலை ஸந்த்யையில் காயத்ரியை ஜபித்துக் கொண்டு நன்றாய் நக்ஷத்ரங்கள் தெரியும் வரையில் உட்கார்ந்திருக்க வேண்டும்' என்று. மனுவே:- ப்ராதஸ் ஸந்த்யையில் நின்று கொண்டு ஜபிப்பவன் ராத்ரியில் செய்த பாபத்தைப் போக்குகிறான். ஸாயம் ஸந்த்யையில் உட்கார்ந்து ஜபிப்பவன் பகலில் செய்த பாபத்தைப் போக்குகிறான்.

स्थानासनयोरकरणे प्रत्यवायमाह स एव – न तिष्ठति तु यः पूर्वा मुपास्ते न तु पश्चिमाम् । स शूद्रवद्बहिष्कार्यः सर्वस्माद्विजकर्मण इति ।। माधवीये – तथा मध्यमसन्ध्यायामासीनः प्राङ्मुखो जपेत् । स्थितो

जपेत् सदाकालमादित्याभिमुखो द्विजः इति ॥ आदित्याभिमुखश्चेत् सदा प्रातर्मध्याह्ने च स्थित एव जपेदित्यर्थः ॥ याज्ञवल्क्यः – जपन्नासीत सावित्रीं प्रत्यगातारकोदयात् । सन्ध्यां प्राक् प्रातरेवं हि तिष्ठेदासूर्यदर्शनादिति ॥

காலையில் நிற்காமலும், மாலையில் உட்காராமலும் ஜபம் செய்வதில் தோஷம் சொல்கிறார் மனுவே:- ப்ராதஸ் ஸந்த்யையில் நின்று கொண்டும், ஸாயம் ஸந்த்யையில் உட்கார்ந்து கொண்டும் ஜபிக்காதவன் எவனோ, அவனை, ப்ராம்ஹண கர்மங்கள் எல்லாவற்றினின்றும் வெளிப்படுத்த வேண்டும். மாதவீயத்தில்:- மத்யாஹ்ன ஸந்த்யையில் கிழக்கு நோக்கி உட்கார்ந்தவனாய் ஜபிக்க வேண்டும். ஸூர்யனை நோக்கியவனாய் ஜபித்தால், காலையிலும் மத்யாஹ்னத்திலும், நின்று கொண்டே ஜபிக்க வேண்டும் என்று பொருள். யாக்ஞவல்க்யர்:- ஸாயங்காலத்தில் மேற்கு முகமாய், நக்ஷத்ரோதயம் வரையில் காயத்ரியை ஜபிப்பவனாய் உட்கார்ந்திருக்க வேண்டும். காலையில் கிழக்கு முகமாய் ஜபிப்பவனாய், ஸூர்யோதயம் வரையில் நிற்க வேண்டும்.

शौनकोऽपि–ऋष्यादीनि च संस्मृत्य सायमासीत वाग्यतः । प्रातस्तु प्राङ्मुखस्तिष्ठेत् मध्याह्ने सूर्यदिक्स्थितः इति ॥ गौतमः – तिष्ठेत्पूर्वामासीतोत्तरां सज्योतिष्याज्योतिषो दर्शनाद्वाग्यत इति ॥ यस्त्वापस्तम्बेनोक्तं – सन्ध्ययोश्च बहिर्ग्रामादासनं वाग्यतश्चेति, तत्र आसनं स्थितेरप्युपलक्षणम् । वाग्यमनं च लौकिक वाङ्नियमनम् । अन्यथा मन्वादिबहुस्मृतिव्याकोपप्रसङ्गात् । मन्वादिस्मृतिषु विहितस्य स्थानस्य प्रकरणात् ब्रह्मचारिविषयत्वकल्पने ब्रह्मचारिण-मनधिकृत्य द्विजमात्रमधिकृत्य प्रवृत्तानां स्थानासनविशिष्ट जपविधायकश्रुतिस्मृतीनामनन्वयप्रसङ्गः ॥

சௌனகரும்:- ருஷி முதலியதை அனுஸந்தித்து ஸாயங்காலத்தில் மௌனியாய் உட்கார்ந்திருக்க வேண்டும். காலையில் கிழக்கு முகமாய் நின்று கொண்டிருக்க வேண்டும். மத்யாஹ்னத்தில் ஸூர்யனிருக்கும் திக்கை நோக்கியவனாய் நின்றிருக்க வேண்டும். கௌதமர்:- ப்ராதஸ் ஸந்த்யையில் மௌனியாய் ஸூர்யோதயம் வரையில் நிற்க வேண்டும். ஸாயம் ஸந்த்யையில் மௌனியாய் நக்ஷத்ரம் காணப்படும் வரையில் உட்கார்ந்திருக்க வேண்டும். ஆபஸ்தம்பர்:- இரண்டு ஸந்த்யைகளிலும் க்ராமத்திற்கு வெளியில் உட்கார்ந்திருக்க வேண்டும். மௌனியாய் இருக்க வேண்டும் என்கிறார் எனில், இவர் வசனத்திலுள்ள 'ஆஸநம்' என்ற பதம் உட்காருவது என்பதைச் சொல்வதாயினும், நிற்பதையும் சொல்வதாகும். மௌனமென்பது லௌகிக வார்த்தைகளை நிவர்த்திப்பது என்பதாகும். இவ்விதம் சொல்லாவிடில் மனு முதலியவரின் அநேக ஸ்ம்ருதிகளுக்கு விரோதம் நேரிடும். மன்வாதி ஸ்ம்ருதிகளில் விதிக்கப்படும் ஸ்தானத்திற்கு (நிற்பது என்பது) ப்ரகாரண பலத்தால், ப்ரம்ஹசாரி விஷயத்வத்தைக் கற்பிப்பிக்கலாமெனில், ப்ரம்ஹ சாரிகளைப் பற்றி இல்லாமல், பொதுவாய் ப்ராம்ஹணர்களைக் குறித்து ப்ரவர்த்தி உள்ளதும், நின்றும், உட்கார்ந்தும் ஜபத்தை விதிப்பதுமான ச்ருதி ஸ்ம்ருதி வசனங்களுக்குப் பொருத்தமில்லாமை இருக்க நேரும்.

तथा छान्दोग्ये श्रूयते – कस्माद् ब्राह्मणः सायमासीनः सन्ध्यामुपास्ते कस्मात् प्रातस्तिष्ठन् यत्सायमासीनः सन्ध्यामुपास्ते तया वीरस्थानं जयति यत्प्रातस्तिष्ठन् तया स्वर्गं लोकं जयति इति। अखण्डादर्शे – वाग्यतः प्राङ्मुखस्तिष्ठेद्गायत्र्या जपमाचरन् इति ॥ योगयाज्ञवल्क्योऽपि – प्रातस्तिष्ठन् द्विजः सन्ध्याजपं कुर्यात् इति। मनुरपि – उत्थायावश्यकं कृत्वा कृत्वा शौचं समाहितः। पूर्वां सन्ध्यां जपेत् तिष्ठन् स्वकाले चापराह्णिकमिति। अत्र सर्वत्र तिष्ठन् जपेदिति

व्यत्ययेनान्वयः। जपस्यैव प्रधानत्वात् तदङ्गत्वात् स्थानासनयोरिति चन्द्रिकायां व्याख्यातम्॥ अत एव - शङ्खः – पूर्वां सन्ध्यां जपेत्तिष्ठन् आसीनः पश्चिमां तथा इति।

அவ்விதமே சாந்தோக்ய ச்ருதியில்:- ப்ராம்ஹணன், ஏன் மாலையில் உட்கார்ந்தவனாயும், காலையில் நின்றவனாயும் ஸந்த்யோபாஸனம் செய்கிறான்? (இதற்கு உத்தரம்) ஸாயங்காலத்தில் உட்கார்ந்து ஸந்த்யையை உபாஸிப்பதால் வீரஸ்தானத்தை ஜயிக்கிறான். காலையில் நின்று கொண்டு உபாஸிப்பதால் ஸ்வர்க்கலோகத்தை ஜயிக்கிறான். அகண்டாதர்சத்தில்:- காயத்ரியை ஜபிப்பவன் கிழக்கு முகமாய் மௌனியாய் நின்று கொண்டிருக்க வேண்டும். யோகயாக்ஞவல்க்யர்:- ப்ராம்ஹணன் காலையில் நின்றவனாய் ஸந்த்யாஜபம் செய்ய வேண்டும். மனு:- உஷ:காலத்திலெழுந்து, ஆவச்யகமான மல மூத்ர விஸர்ஜனம் செய்து, சௌசமும் செய்து, கவனமுள்ளவனாய், நின்று கொண்டு காலையில் காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். மாலையிலும் உரியகாலத்தில் ஸந்த்யா ஜபம் செய்ய வேண்டும். இங்கு முன் சொல்லிய எல்லா வசனங்களிலும் 'ஜபிப்பவனாய் நிற்க வேண்டும்' என்றிருப்பதை 'நின்றவனாய் ஜபிக்க வேண்டும்' என்று மாற்றிச் சொல்ல வேண்டும். ஜபம் ப்ரதானமானதால், நிற்பதும் உட்காருவதும் ஜபத்திற்கு அங்கமானதால், என்று சந்த்ரிகை என்னும் க்ரந்தத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டுள்ளது. ஆகையால்தான். சங்கர்:- ப்ராதஸ் ஸந்த்யையில் நின்றவனாய் ஜபிக்க வேண்டும். ஸாயம் ஸந்த்யையில் உட்கார்ந்தவனாய் ஜபிக்க வேண்டும் என்றார்.

गृह्यपरिशिष्टेऽपि – देवीमावाह्य तिष्ठन्नर्धनक्षत्रेष्वामण्डल-दर्शनान्मन्त्रार्थमनुसन्दधानः प्रणवव्याहृतिपूर्विकां सावित्रीं जपेदिति ॥ स्मृत्यर्थसारेऽपि – आसूर्यदर्शनात्तिष्ठन् प्राङ्मुखो गायत्रीं

जपेत् । आनक्षत्रदर्शनात् सायन्नासीनः प्रत्यङ्मुखो जपेदिति ॥ चन्द्रिकायाम् – प्रातः सन्ध्यां सनक्षत्रामुपक्रम्य यथाविधि । गायत्रीमभ्यसेत् तिष्ठन् यावदादित्यदर्शनमिति ॥

க்ருஹ்யபரிசிஷ்டத்திலும்:- காயத்ரியை ஆவாஹனம் செய்து, நின்று கொண்டு, பாதி நக்ஷத்ரங்கள் தெரிவது முதல் ஸூர்ய மண்டலம் தெரியும் வரையில் மந்த்ரத்தின் அர்த்தத்தை த்யானிப்பவனாய், ப்ரணவம் வ்யாஹ்ருதி இவைகளை முன்னுடைய காயத்ரியை ஜபிக்க வேண்டும். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலும்:- ஸூர்யோதயம் வரையில் கிழக்கு முகமாய் நின்று கொண்டு காயத்ரியை ஜபிக்க வேண்டும். மாலையில் மேற்கு முகமாய் உட்கார்ந்தவனாய் நக்ஷத்ர தர்சனம் வரையில் ஜபிக்க வேண்டும். சந்த்ரிகையில்:- ப்ராதஸ் ஸந்த்யையில் நக்ஷத்ரங்கள் இருக்கும்போதே ஆரம்பித்து நின்று கொண்டு விதிப்படி ஸூர்யோதயம் வரையில் காயத்ரியை ஜபிக்க வேண்டும்.

व्यासोऽपि – तिष्ठन् प्रातर्जपेद्देवीमासीनः पश्चिमां तथेति ॥ एवञ्च गायत्रीजपस्य प्रधानत्वात् तदनुवर्तित्वादङ्गस्य उदयानन्तरं गौणकाले जपं कुर्वन्नपि तिष्ठन्नेव कुर्यात् । 'तिष्ठन्नासूर्यदर्शनादिति वचनं तु गायत्रीजपस्य मुख्यकालविधिपरम् । न तु उदयानन्तर-मासनविधिपरम् । अग्निकार्यं ततः कुर्यादित्युदयानन्तरं होमविधानात् उदयानन्तरं आसीतेति वचनाभावाच्च । न च तिष्ठेदासूर्यदर्शनादिति वचनात् उदयानन्तरमर्थसिद्धमासनमिति वाच्यम् । आसीनः पश्चिमां सन्ध्यामिति पश्चिमायामेव आसनविधानात् अन्यत्र स्थितेरर्थसिद्धेः । न च प्रातः सूर्यदर्शनपर्यन्तं स्थानस्य सायं नक्षत्रोदयपर्यन्तमासनस्य विधानात् तदन्तरालकाले स्थानमासनं वा वैकल्पिकमिति वाच्यम् । कालविशेषाभिधायिवचननिचयेन व्यवस्थासिद्धेः ॥

வ்யாஸரும்:- காலையில் நின்றுகொண்டும், மாலையில் உட்கார்ந்து கொண்டும் காயத்ரியை ஜபிக்க வேண்டும். இவ்விதமிருப்பதால், காயத்ரீ ஜபம் ப்ரதானமானதால், அங்கம் ப்ரதானத்தை அனுஸரிக்கு மானதால், உதயத்திற்குப் பிறகு கௌணகாலத்தில் காயத்ரீ ஜபம் செய்தாலும் நின்று கொண்டு தான் செய்ய வேண்டும். तिष्ठन्नासूर्यदर्शनात् என்ற வசனமோவெனில், காயத்ரீ ஜபத்தின் முக்ய காலத்தை விதிப்பதில் தாத்பர்யம் உள்ளதேயன்றி உதயத்திற்குப் பிறகு உட்கார்ந்து ஜபிக்க வேண்டும் என்பதை விதிப்பதில் தாத்பர்யம் உள்ளதல்ல. 'பிறகு அக்னி கார்யம் செய்ய வேண்டும்' என்று, உதயத்திற்குப் பிறகு ஹோமத்தை விதித்திருப்பதாலும், 'உதயத்திற்குப் பிறகு உட்கார்ந்து ஜபிக்க வேண்டும்' என்ற வசனம் இல்லாமையாலும். तिष्ठेदासूर्यदर्शनात् என்ற வசனத்தால் ஸூர்யோதயத்திற்குப் பிறகு உட்காரவேண்டும் என்பது அர்த்தத்தால் ஸித்திக்கின்றது என்றும் சொல்லக் கூடாது. 'ஸாயம் ஸந்த்யையில் உட்கார்ந்து ஜபிக்க வேண்டும்' என்று ஸாயம் ஸந்த்யையில் மட்டும் உட்காருவதை விதித்திருப்பதால் ப்ராதஸ் ஸந்த்யையில் நிற்க வேண்டும் என்பது அர்த்தத்தால் ஸித்திப்பதால். 'காலையில் ஸூர்யோதயம் வரையில் நிற்பதையும், மாலையில் நக்ஷத்ரோதயம் வரையில் உட்காருவதையும் விதித்திருப்பதால், இவைகளுக்கு நடுவிலுள்ள காலத்தில் நிற்பதும் உட்காருவதும் விகல்பிக்கப்படுகிறது' என்று சொல்வதும் கூடாது. காலவிசேஷத்தைச் சொல்லும் வசனங்களால், ஸ்தாநாஸனங்களின் வ்யவஸ்தை ஸித்திக்கின்து.

तथा च भरद्वाजसंवर्तव्यासाः – सहस्रपरमां देवीं शतमध्यां दशावराम् । गायत्रीं वै जपेत् प्रातः प्राङ्मुखः प्रयतः स्थितः इति ।। योगयाज्ञवल्क्योऽपि – प्रातस्तिष्ठन् जपेदिति । मनुरपि – पूर्वां सन्ध्यां जपंस्तिष्ठन् नैशमेनो व्यपोहति इति । एतेषु वचनेषु उदयात् पूर्वापरभाव

विवेकविरहात् प्रातःकालस्थितिपरत्वात् असति विशेषोपस्थापके सामान्यसङ्कोचस्य अयुक्तत्वात्। सूर्योदयानन्तरमासनस्य कल्पने सायं नक्षत्रोदयानन्तरं गौणकालजपे स्थितेरपि कल्पनाप्रसङ्गात्। तस्मात् प्रातस्तिष्ठन् सायमासीन इत्याहुः ॥

**பாரத்வாஜ, ஸம்வர்த்த, வ்யாஸர்கள்:-** ப்ராத:காலத்தில் சுத்தனாய் கிழக்கு முகமாய் நின்று கொண்டு காயத்ரியை ஜபிக்க வேண்டும். ஆயிரம் ஆவ்ருத்தி உத்தமம். நூறு மத்யமம். பத்து அதமம். **யோகயாக்ஞவல்க்யர்:-** காலையில் நின்று கொண்டு ஜபிக்க வேண்டும். **மனுவும்:-** ப்ராதஸ் ஸந்த்யையில் நின்று கொண்டு ஜபிக்கின்றவன், இரவில் செய்த பாபத்தை போக்குகிறான். இந்த வசனங்களில் உதயத்திற்கு முன், பின் என்ற பிரிவு இல்லாததால், காலையில் நிற்க வேண்டும் என்பதை மட்டில் சொல்வதால், விசேஷ வசனம் இல்லாவிடில் ஸாமான்ய வசனத்தை ஸங்கோசப்படுத்துவது யுக்தம் இல்லாததால், ஸூர்யோதயத்திற்குப் பிறகு உட்கார்ந்து செய்யலாமென்று கல்பித்தால், ஸாயங்காலத்தில் நக்ஷத்ரோதயத்திற்குப் பிறகு கௌண காலத்தில் செய்யும் ஜபத்தில் நின்று கொண்டு செய்யலாமென்றும் கல்பிக்க நேரிடுமாகையால் 'காலையில் நின்று கொண்டும், மாலையில் உட்கார்ந்து கொண்டும் ஜபிக்க வேண்டும்' என்கின்றனர்.

यमः – सहस्रपरमां देवीं शतमध्यां दशावराम्। गायत्रीं तु जपेन्नित्यं सर्वपापप्रणाशिनीमिति ॥ बोधायनस्तु विशेषमाह – दर्भेष्वासीनो दर्भान् धारयमाणस्सोदकेन पाणिना प्रत्यङ्मुखः सावित्रीं सहस्रकृत्व आवर्तयेत्। प्राणायामशो वा शतकृत्वः। उभयतःप्रणवां ससव्याहृतिपूर्विकां मनसा वा दशकृत्वस्त्रिभिश्च प्राणायामैस्तान्त एवं प्रातः प्राङ्मुखस्तिष्ठन्निति । योगयाज्ञवल्क्योऽपि –

सहस्रकृत्वस्सावित्रीं जपेदव्यग्रमानसः । शतकृत्वोऽपि वा सम्यक् प्राणायामपरो यदि । सप्तव्याहृतिपूर्वां चेदाद्यन्तप्रणवान्विताम् । मनसा वा जपेच्चैव दशकृत्वोऽवरः स्मृतः इति ॥

**யமன்:-** ஸகல பாபங்களேயும் விலக்கும் காயத்ரியை ப்ரதி தினமும் ஜபிக்க வேண்டும். ஆயிரம் தடவை ஜபிப்பது உத்தமம். நூறு தடவை மத்யமம். பத்து தடவை குறைந்த பக்ஷம். **போதாயனர்:-** தர்ப்பங்களில் உட்கார்ந்தவனாய், ஜலத்துடன் கூடிய கையினால் தர்ப்பங்களே தரித்தவனாய், (மாலேயில்) மேற்கு நோக்கியவனாய், காயத்ரியை ஆயிரம் தடவை ஜபிக்க வேண்டும். அல்லது ப்ராணா யாமத்துடன் நூறு தடவை ஜபிக்கலாம். (மூச்சை அடக்கிக் கொண்டு ஜபித்தால் ப்ராணாயாமத்துடன் ஜபிப்பதென்பதாம். மூச்சை அடக்கிய காலத்தில் எவ்வளவு கூடுமோ அவ்வளவு ஜபித்து, மறுபடி மூச்சை விட்டு, மறுபடி மூச்சை அடக்கி ஜபிக்க வேண்டும். மூச்சு விடும் காலத்தில் ஜபிக்கக் கூடாது. இந்த அர்த்தத்தை ஆபஸ்தம்ப தர்மஸூத்ர வ்யாக்யானத்தில் காணலாம்.) அல்லது, இருபுறமும் ப்ரணவமுடையதும், ஏழு வ்யாஹ்ருதிகளே முன்னுடையதுமான காயத்ரியை மனதால் பத்து தடவை ஜபிக்கலாம். மூன்று ப்ராணா யாமங்களால் சோர்ந்தவனாய் ஜபிக்க வேண்டும். காலேயிலும் இவ்விதமே கிழக்கு நோக்கி நின்று கொண்டு ஜபிக்க வேண்டும். **யோக யாக்ஞவல்க்யரும்:-** வேறிடத்தில் மனதில்லாதவனாய் காயத்ரியை ஆயிரம் தடவை ஜபிக்க வேண்டும். அல்லது ப்ராணா யாமத்துடன் ஜபித்தால் நூறு தடவை ஜபிக்கலாம். அல்லது, இருபுறமும் ப்ரணவத்துடன் கூடியதும், ஏழு வ்யாஹ்ருதிகளே முன்னுடையதுமான காயத்ரியை மனதால் பத்து தடவை ஜபிக்கலாம். இது கடைசி பக்ஷம்.

**व्यासः** – सहस्रपरमां नित्यं शतमध्यां दशावराम् । सावित्रीं वै जपेद्विद्वान् प्राङ्मुखः प्रयतश्शुचिरिति । अत्र चन्द्रिकायां व्यवस्था कृता

– दशावरामित्यापद्विषयम्। आशौचविषयं च। आपन्नश्चाशुचिः काले तिष्ठन्नपि जपेद्दशेत्याश्वलायनेनोक्तत्वात्। सहस्रपरमामिति सहस्रकृत्व इति वचनं वानप्रस्थादिविषयम्। 'शतमष्टोत्तर' मित्यनुदितहोमिगृहस्थब्रह्मचारिविषयम्। ब्रह्मचारिणोऽपि सन्ध्ययोरग्निकर्म चेति प्रागुदयादग्निकार्यस्मरणात्। उदितहोमिनस्तु सावित्रीमार्कदर्शनादिति मन्वाद्युक्तं द्रष्टव्यमिति ॥ तथा च योगयाज्ञवल्क्यः – ब्रह्मचार्याहिताग्निश्च शतमष्टोत्तरं जपेत्। वानप्रस्थो यतिश्चैव सहस्रादधिकं जपेदिति ॥ तयोरनग्निकत्वेन, होमकालानतिपत्तेरिति भावः ॥ आहिताग्निग्रहणमेकाग्नेरप्युपलक्षणम्।

**வ்யாஸர்:-** அறிந்தவன், அடக்கம் சுத்தி இவைகளுடையவனாய், கிழக்கு நோக்கியவனாய் காயத்ரியை ஜபிக்க வேண்டும். ஆயிரம் தடவை ஜபிப்பது உத்தமம். நூறு மத்யமம். பத்து தாழ்ந்தது. இது விஷயத்தில் சந்த்ரிகையில் வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளது 'தசாவராம்' என்றது ஆபத்காலத்தைக் குறித்ததும், ஆசௌசம் உள்ளவர்களைக் குறித்ததும். 'ஆபத்துடையவனும், ஆசௌசம் உடையவனும், ஸந்த்யா காலத்தில் நின்றவனாய் பத்து தடவை ஜபிக்க வேண்டும்' என்று ஆச்வலாயனர் சொல்லி இருப்பதால். 'ஆயிரம் தடவை ஜபிப்பது உத்தமம்' 'ஆயிரம் தடவை ஜபிக்க வேண்டும்' என்று சொல்வது வானப்ரஸ்தர் முதலியவரைக் குறித்தது. 'நூற்றெட்டுத் தடவை ஜபிக்க வேண்டும்' என்பது உதயத்திற்கு முன்பு ஹோமம் செய்யும் க்ருஹஸ்தர், ப்ரம்ஹசாரிகள் இவர்களைக் குறித்தது. இரு ஸந்த்யைகளிலும் அக்னி கார்யம் செய்ய வேண்டும்' என்று, ப்ரம்ஹசாரிக்கும் உதயத்திற்கு முன் அக்னி கார்யம் விதிக்கப்பட்டிருப்பதால். 'ஸூர்ய தர்சனம் வரையில் காயத்ரியை ஜபிக்க வேண்டும்' என்று மனு முதலியவர் சொல்லியது உதயத்திற்குப் பிறகு ஹோமம் செய்பவனைப்

பற்றியது. அவ்விதமே யோகயாக்ஞவல்க்யர்:- ப்ரம்ஹசாரியும் ஆஹிதாக்னியும் 108-முறை ஜபிக்க வேண்டும். வானப்ரஸ்தனும் ஸன்யாஸியும் 1000 -க்கு அதிகமாய் ஜபிக்க வேண்டும். அவ்விருவரும் அக்னி இல்லாதவரானதால், ஹோமகாலம் அதிக்ரமிக்கும் என்பதில்லாததாலென்று பொருள். ஆஹிதாக்னி என்றது ஒரு அக்னியை உடைய க்ருஹஸ்தனையும் குறிக்கின்றது.

तथा च संवर्तः – गृहस्थो ब्रह्मचारी च शतमष्टोत्तरं जपेत्। वानप्रस्थो यतिश्चैव जपेदष्टसहस्रकम् इति ।। स्मृत्यर्थसारे – ब्रह्मचारी गृहस्थश्च शतमष्टोत्तरं जपेत्। वानप्रस्थो यतिश्चैव सहस्रादधिकं जपेत्। दशापत्सु जपेद्देवीमष्टाविंशतिमष्ट वा इति । ननु सावित्रीमार्कदर्शनादिति उदयपर्यन्तं जपविधानात्, 'न चान्तरा व्याहरेत्तु विरमेद्वा कथंचन' नान्तरा विरमेत् क्वचिदिति व्यासशौनकाभ्यां जपमध्ये विरमणस्य च प्रतिषिद्धत्वादुदितहोमिन आहिताग्नेर्विहरणलोपप्रसङ्गः । मैवम्। श्रुतिविरोधे सति मध्ये विरमणे अविरोधात्।। अत एवापस्तम्बः – विप्रतिषेधे श्रुतिलक्षणं बलीयः इति।।

அவ்விதமே ஸம்வர்த்தர்:- க்ருஹஸ்தனும், ப்ரம்ஹசாரியும் 108-முறை ஜபிக்க வேண்டும். வானப்ரஸ்தனும் யதியும் 1008 முறை ஜபிக்க வேண்டும். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்- ப்ரம்ஹசாரியும், க்ருஹஸ்தனும் 108 -முறை ஜபிக்க வேண்டும். வானப்ரஸ்தனும், யதியும் 1000 க்கு அதிகமாய் ஜபிக்க வேண்டும். ஆபத்காலங்களில் பத்து அல்லது 28 அல்லது 8 முறை ஜபிக்க வேண்டும். 'காயத்ரியை ஸூர்யோதய தர்சனம் வரையில் ஜபிக்க வேண்டும்' என்று உதயம் வரையில் ஜபம் விதிக்கப் பட்டிருப்பதால், 'நடுவில் எவ்விதத்திலும் பேசக்கூடாது, ஜபத்தை நிறுத்தவும் கூடாது' என்று வ்யாஸர், சௌனகர் இவர்கள் ஜபமத்யத்தில் நிறுத்துவதைத் தடுத்திருப்பதால்,

உதித ஹோமியான ஆஹிதாக்னிக்கு விஹரணம் செய்வது லோபிக்க வாகுமே' எனில், இவ்விதமல்ல. ச்ருதிக்கு விரோதம் வருமாகில், நடுவில் நிறுத்துவதால் விரோதமாகாது. ஆகையாலேயே ஆபஸ்தம்பர் - 'ச்ருதிக்கும் ஸ்ம்ருதிக்கும் விரோதம் வருமாகில் ச்ருதியிற் சொல்லியது அதிக பலமுள்ளது' என்றார்.

शङ्खः – स्वरवर्णपदैर्वाक्यं शुद्धमावर्तयन् जपेत् । न कम्पयेच्छिरो ग्रीवां दन्तान्नैव प्रघट्टयेदिति ।। तच्च वाक्यं मनुनोक्तम् - 'एतदक्षरमेतां च जपन् व्याहृतिपूर्विकाम् । सन्ध्ययोर्वेदविद्विप्रो वेदपुण्येन युज्यते इति ।। एतदक्षरं - प्रणवम् । एतां - गायत्रीम् ।। व्यासोऽपि – प्रणवव्याहृतियुतां गायत्रीं तु ततो जपेत् । समाहितमनास्तूष्णीं मनसाऽपि विचिन्तयेत् इति । पितामहः – प्रणवं व्याहृतीस्तिस्रो गायत्रीं च जपेत् क्रमात् । प्रणवव्याहृतियुता स्वाहान्ता होमकर्मणि । शुद्धा वाऽत्र प्रयोक्तव्या व्याहृतिप्रणवैर्विना इति ।।

சங்கர்:- ஸ்வரம், வர்ணம், பதம் இவைகளால் சுத்தமாயுள்ள 'வாக்யத்தை ஆவ்ருத்தி செய்து கொண்டு ஜபிக்க வேண்டும். தலையையும், கழுத்தையும், அசைக்கக் கூடாது. பற்களை கடிக்கக் கூடாது. அந்த வாக்யம் எதுவெனில், அது மனுவினால் சொல்லப்பட்டிருக்கிறது. 'இந்த அக்ஷரத்தையும் (ப்ரணவத்தையும்) வ்யாஹ்ருதிகளை முன்னுடைய இதையும் (காயத்ரியையும்) ஸந்த்யைகளில் ஜபிக்கின்ற வேதமறிந்த ப்ராம்ஹணன் மூன்று வேதங்களோதிய புண்யத்துடன் சேருகிறான். வ்யாஸரும்:- பிறகு ப்ரணவத்துடனும், வ்யாஹ்ருதிகளுடனும் கூடிய காயத்ரியை ஜபிக்க வேண்டும். மௌனமாய் கவனமுள்ளவனாய் மனதினாலும் சிந்திக்க வேண்டும். பிதாமஹர்:- ப்ரணவத்தையும், 3-வ்யாஹ்ருதிகளையும், காயத்ரியையும் முறையே ஜபிக்க வேண்டும். ஹோமகர்மத்தில், ப்ரணவ வ்யாஹ்ருதிகளை முன்னுடைய காயத்ரியை, 'ஸ்வாஹா' என்பதைக்

கடைசியிலுள்ளதாய் உச்சரிக்க வேண்டும். அல்லது, ப்ரணவ வ்யாஹ்ருதிகளைச் சேர்க்காமல் சுத்தமாகவும் ஹோமத்தில் உச்சரிக்கலாம்.

स्मृतिरत्ने – शुद्धयैव तु होतव्यं गायत्र्या होमकर्मणि। त्रिकेणैव जपः कार्यो जपयज्ञप्रसिद्धय इति। प्रणवः व्याहृतयः गायत्री चेति त्रिकम्। बोधायनः – प्रणवो व्याहृतयस्तिस्रः सावित्री चेत्येते पञ्चब्रह्मयज्ञाः अहरहर्ब्राह्मणं किल्बिषात् पावयन्त इति ॥ यत्तु योगयाज्ञवल्क्य आह – ओङ्कारं पूर्वमुच्चार्य भूर्भुवःस्वस्तथैव च। गायत्रीं प्रणवं चान्ते जप एवमुदाहृतः ॥ एषा सम्पुटगायत्री सर्वपापप्रणाशिनीति ॥ यदपि बोधायनः – उभयतःप्रणवां सव्याहृतिकां जपेदिति, यदपि वृद्धमनुः – षडोङ्कारां जपेद्विप्रो गायत्रीं मनसा शुचिः। अनेकजन्मजैः पापैः मुच्यते नात्र संशयः ॥ तिस्रो व्याहृतयः पूर्वं पृथगोङ्कारसंयुताः। पुनस्संहृत्य चोङ्कारं मन्त्रस्याद्यन्तयोस्तथेति, तत्सर्वं गृहस्थब्रह्मचारिव्यतिरिक्तविषयम्॥

ஸ்ம்ருதிரத்னத்தில்:- ஹோம கார்யத்தில் சுத்த காயத்ரியினாலேயே ஹோமம் செய்ய வேண்டும். ஜப யஜ்ஞம் ஸித்திப்பதற்கு ப்ரணவம், வ்யாஹ்ருதிகள், காயத்ரி இம்மூன்றையும் சேர்ந்தே ஜபிக்க வேண்டும். போதாயனர்:- ப்ரணவம், மூன்று வ்யாஹ்ருதிகள், காயத்ரீ என்ற இந்த ஐந்தும் ப்ரம்ஹயக்ஞங்கள் எனப்படும். இவை ஒவ்வொரு நாளும் ப்ராம்ஹணனை பாபத்தினின்றும் விலக்குகின்றன. யோக யாக்ஞவல்க்யர்:- "ஓங்காரத்தை முதலில் உச்சரித்து, பிறகு வ்யாஹ்ருதிகளையும், பிறகு காயத்ரியையும், முடிவில் ப்ரணவத்தையும் உச்சரித்து ஜபிக்க வேண்டும். இந்த ஸம்புட காயத்ரீ ஸகல பாபங்களையும் போக்கக் கூடியது" என்று சொல்லியதும், போதாயனர்:- "ஆதியிலும், அந்தத்திலும் ப்ரணவமுடையதாயும், வ்யாஹ்ருதிகளுடன் கூடியதாயும் ஜபிக்க வேண்டும்" என்று சொல்லியதும், வ்ருத்தமனு:-

"ப்ராம்ஹணன் சுத்தனாய், 6- ஓங்காரங்களுடையதான காயத்ரியை மனதால் ஜபிக்க வேண்டும். அனேக ஜன்மங்களில் உண்டாகிய பாபங்களால் விடுபடுகிறான். ஸம்சயமில்லை. முதலில் ஒரு ஓங்காரம், வ்யாஹ்ருதிகள் மூன்றுக்கும் ஆதியில் தனித்தனி ஓங்காரம், காயத்ரியின் ஆதியில் ஒன்று, முடிவில் ஒன்று ஆக ஆறு ஓங்காரங்கள்" என்று சொல்லியதும், இதெல்லாம் க்ருஹஸ்தன் ப்ரம்ஹசாரி இவர்களைத் தவிர்த்த மற்றவரின் விஷயமாம்.

तथा च स्मृतिरत्नावल्याम् – सम्पुटैकषडोङ्कारा गायत्री त्रिविधा मता। तत्रैकप्रणवा ग्राह्या गृहस्थैर्जपकर्मणि ।। गृहस्थवत्तु जप्तव्या सदैव ब्रह्मचारिभिः। सम्पुटा च षडोङ्कारा भवेतामूर्ध्वरेतसाम् इति। स्मृतिसारसमुच्चयेऽपि – गृहस्थो ब्रह्मचारी च प्रणवाद्यामिमां जपेत्। अन्ते यः प्रणवं कुर्यान्नासौ वृद्धिमवाप्नुयात् इति। वृद्धमनुः – सोङ्कारा चतुरावृत्त्या विज्ञेया सा शताक्षरा। शताक्षरां समावर्त्य सर्ववेदफलं लभेत्। एतया ज्ञातया नित्यं वाङ्मयं विदितं भवेत्। उपासितं भवेत्तेन विश्वं भुवनसप्तकमिति ।। अस्यार्थः चन्द्रिकायामभिहितः – सोङ्कारेत्यनेन व्याहृतीनां सङ्ख्यानानुप्रवेश उच्यते। एवं च ओङ्कारेण सह पञ्चविंशत्यक्षरा सम्पद्यते । मन्त्रे तु व्याहृतित्रयस्यानुप्रवेशोऽस्त्येवेति ।।

அவ்விதமே, ஸ்ம்ருதி ரத்னாவளியில்:- ஸம்புடை என்றும், ஒரு ப்ரணவம் உள்ளதென்றும், ஆறு ப்ரணவமுள்ளதென்றும், காயத்ரீ மூன்று விதமாய் சொல்லப்பட்டுள்ளது. அவையுள் ஒரு ப்ரணவமுள்ளதை க்ருஹஸ்தர்கள் ஜபத்தில் க்ரஹிக்க வேண்டும். எப்பொழுதுமே ப்ரம்ஹசாரிகள் க்ருஹஸ்தர்களைப் போலவே ஜபிக்க வேண்டும். ஸம்புட காயத்ரியும், ஷடோங்கார காயத்ரியும் ஊர்த்வரேதஸ்ஸுகளுக்கு (வானப்ரஸ்தருக்கும், யதிகளுக்கும்) விதிக்கப்பட்டதாம். ஸ்ம்ருதி ஸாரஸமுச்சயத்திலும்:- க்ருஹஸ்தனும்,

ப்ரம்ஹசாரியும் ப்ரணவத்தை ஆதியிலுடையதாய் காயத்ரியை ஜபிக்க வேண்டும். எவன் முடிவில் ப்ரணவத்தைச் சேர்த்து ஜபிக்கின்றானோ இவன் வ்ருத்தியை அடையமாட்டான். வ்ருத்தமனு:- ஓங்காரத்துடன் கூடிய காயத்ரியை நான்கு தடவை ஆவ்ருத்தி செய்தால், அது நூறு அக்ஷரங்களுடையதாய் ஆகிறது என்று அறியவும். சதாக்ஷர காயத்ரியை ஜபிப்பதால் ஸர்வ வேதங்களையும் ஜபித்த பலனை அடைவான். இதை அறிந்ததால் ஸகல சாஸ்த்ரங்களும் அறியப்பட்டதாகும். அவனால் ஏழு உலகங்களும் உபாஸிக்கப்பட்டதாகும். இதற்கு அர்த்தம் சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது. 'ஓங்காரத்துடன் கூடிய' என்றதால், வ்யாஹ்ருதிகள் ஸங்க்யையில் சேர்க்கப்படவில்லை என்பது சொல்லப்படுகிறது. இவ்விதம் இருப்பதால், ஓங்காரத்துடன் 25-அக்ஷரமுள்ளதாகிறது. ஆனாலும் மந்த்ரத்தில் மூன்று வ்யாஹ்ருதிகளுக்கும் சேர்க்கை உண்டு' என்று.

अत एव विश्वामित्रः – प्रणवोऽप्यत्र मन्त्रादौ व्याहृतित्रितयं ततः । जपे प्रशस्ता सावित्री प्रणवेन समन्विता ।। अतिप्रशस्ता तेनापि व्याहृतित्रितयेन चेति ।। संवर्तोऽपि – प्रणवाद्यां तु सन्ध्यायां जपेद्व्याहृतिभिस्सह इति ।। व्यासः – त्रिसन्ध्यं तु जपेद्देवीं विच्छिद्यैव पदत्रयम् । अविच्छिन्नं जपेद्यस्तु रौरवं नरकं व्रजेदिति ।। विष्णुः – अच्छिन्नपादा गायत्री ब्रहहत्यां प्रयच्छति । छिन्नपादा तु गायत्री ब्रह्महत्यां व्यपोहति । तस्मात् पादत्रयं छित्वा जपयज्ञं समाचरेदिति ।।

ஆகையால்தான் விச்வாமித்ரர்:- 'இங்கு மந்த்ரத்தின் ஆதியில் ப்ரணவமும் பிறகு மூன்று வ்யாஹ்ருதிகளும் சேர்க்கப்பட வேண்டும். ப்ரணவத்துடன் கூடியதால் காயத்ரீ சுத்தமாயாகிறது. மூன்று வ்யாஹ்ருதிகளுடன் கூடியதால் மிகவும் ச்லாக்யமாய் ஆகிறது. ஆகையால் ஸந்த்யா காலத்தில் காயத்ரியை ப்ரணவத்தை

முன்னுடையதாய் வ்யாஹ்ருதிகளுடன் கூடியதாய் ஜபிக்க வேண்டும்' என்றார். ஸம்வர்த்தரும்:- ப்ரணவத்தை முன்னுடையதும், வ்யாஹ்ருதிகளுடன் கூடியதுமான காயத்ரியை ஸந்த்யாகாலத்தில் ஜபிக்க வேண்டும். வ்யாஸர்:- மூன்று ஸந்த்யைகளிலும், காயத்ரியின் மூன்று பாதங்களையும் பிரித்தே ஜபிக்க வேண்டும். பிரிக்காமல் ஜபிப்பவன் ரௌரவமெனும் நரகத்தை அடைவான். விஷ்ணு:- காயத்ரியின் பாதங்களைப் பிரிக்காமல் ஜபிப்பது ப்ரம்ஹஹத்யா தோஷத்தைக் கொடுக்கும். பிரித்து ஜபிப்பது ப்ரம்ஹஹத்யா தோஷத்தையும் போக்கும். ஆகையால் மூன்று பாதங்களையும் பிரித்தே ஜபயக்ஞம் செய்ய வேண்டும் ஸ்ம்ருதி ரத்னவளியில்:- எந்த ப்ராம்ஹணர்கள் பாதங்களைப் பிரிக்காமல் காயத்ரியை ஜபிக்கின்றனரோ அவர்கள், நரகத்தில் அநேககோடி கல்பகாலம் வரை தலைகீழாக இருக்கின்றனர்.

जपयज्ञस्य भेदोऽभिहितो माधवीये – वाचिकाख्य उपांशुश्च मानसश्च त्रयः स्मृताः । त्रयाणां जपयज्ञानां श्रेयान् स्यादुत्तरोत्तर इति। एतेषां लक्षणं तत्रैवोक्तम् – यदुच्चनीचस्वरितैः स्पष्टैः स्पष्टपदाक्षरैः । मन्त्रमुच्चारयेद्वाचा जपयज्ञः स वाचिकः । शनैरुदीरयेन्मन्त्र मीषदोष्ठौ प्रचालयेत् । किञ्चिच्छब्दं स्वयं विद्या दुपांशुः स जपः स्मृतः ।। धिया यदक्षरश्रेण्या वर्णाद्वर्णं पदात्पदम् । मन्त्रार्थचिन्तनं भूयः कथ्यते मानसो जपः ।। उत्तमं मानसं जप्य मुपांशु मध्यमं स्मृतम् । अधमं वाचिकं प्राहुः सर्वमन्त्रेषु वै द्विजाः ।। वाचिकस्यैकमेकं स्यादुपांशु शतमुच्यते । सहस्रं मानसं प्रोक्तं मन्वत्रिभृगुनारदैः इति ।।

ஜபயக்ஞத்தின் பேதம் சொல்லப்பட்டுள்ளது. மாதவீயத்தில்:- வாசிகம், உபாம்சு, மானஸம் என மூன்று விதமாய் ஜபயக்ஞங்கள் சொல்லப்பட்டுள்ளன. இம்மூன்று ஜபயக்ஞங்களுள் முந்தியதை விடப் பிந்தியது

சிறந்ததாகும். இவைகளின் லக்ஷணம் அங்கேயே சொல்லப்பட்டுள்ளது:- உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் இவைகளையும், பதங்கள் அக்ஷரங்கள் இவைகளையும் ஸ்பஷ்டமாய் உச்சரித்து ஜபிப்பது வாசிகஜப யஜ்ஞமாம். மந்த்ரத்தை மெதுவாய் உச்சரிக்க வேண்டும். உதடுகளைக் கொஞ்சமாய் அசைக்க வேண்டும். உச்சரிக்கும் சப்தம் தன்னால் மட்டும் கேட்கப்பட வேண்டும். இவ்விதம் ஜபிப்பது உபாம்சு ஜபமாம். ஒவ்வொரு அக்ஷரத்தையும் பதத்தையும் மனதினால் த்யானித்து மந்த்ரார்த்தத்தையும் த்யானிப்பது மானஸ ஜபம் எனப்படுகிறது. மானஸ ஜபம் உத்தமம், உபாம்சு ஜபம் மத்யமம் எனப்படுகிறது. வாசிக ஜபம் அதமம் எனப்படுகிறது. எல்லா மந்த்ரங்களுக்கும் இது பொதுவான விதி. வாசிக ஜபத்திற்கு ஒரு பங்கு பலன். உபாம்சு ஜபத்திற்கு நூறு பங்கு பலன் சொல்லப்படுகிறது. மானஸ ஜபத்திற்கு ஆயிரம் மடங்கு பலனென்று மனு, அத்ரி, ப்ருகு, நாரதர் இவர்களால் சொல்லப்பட்டுள்ளது.

हारीतः – मन्त्रमुच्चारयेद्वाचा जपयज्ञः स वाचिकः । स उपांशुजपोऽशब्दश्चलज्जिह्वादशच्छदः ॥ मानसस्त्वचलज्जिह्वादशनच्छद ईरितः । उच्चैस्त्वेकगुणः प्रोक्तोऽध्वानो दशगुणः स्मृतः । उपांशुः स्याच्छतगुणः सहस्रो मानसः स्मृतः । मुक्तिदो मानसो ज्ञेय उपांशुस्सर्वसिद्धिदः । त्रिविधो जपयज्ञस्स्यात् वाचिकः क्षुद्रकर्मणीति । वैयाघ्रपादः – त्रिविधो जपयज्ञः स्यात् मानसोपांशुभाषिकः । परश्रवणयोग्यो यः स भाषिक उदीरितः ॥ उपांशुरोष्ठसंस्पर्शमात्रः स्वश्रुतिगोचरः । यो भवेदच लज्जिह्वादशनावरणो जपः ॥ मानसः सः समाख्यातो जपः श्रुतिविभूषणैः । उच्चैर्जपाद्विशिष्टस्स्यादुपांशुर्दशभिर्गुणैः ॥ जिह्वाजपः शतगुणः सहस्रो मानसः स्मृतः। मानसः सिद्धिकामानां पुष्टिकामैरुपांशुकः ॥ वाचिको मारणे चैव प्रशस्तो जप ईरितः इति ॥

यत्तु व्यासेनोक्तम् – मनसैव जपं कुर्यात् सावित्र्यास्तु विशेषत इति, तत् मानसजपप्रशंसाभिप्रायम्, न पुनरुपांशुत्वनिषेधार्थम्। तथात्वे उपांशुजपयुक्तस्य शंसाच्छतगुणो भवेत् इत्यादिवचनविरोधः स्यात्। शंसः - उच्चैर्जपः ॥

ஹாரீதர்:- மந்த்ரத்தை வாக்கினால் உச்சரிக்க வேண்டும். அது வாசிக ஜபம் எனப்படும். சப்தமில்லாமல் நாக்கும் உதடுகளும் அசையும்படி உச்சரிப்பது உபாம்சு ஜபம் எனப்படும். நாக்கும் உதடுகளும் அசையாமல் ஜபிப்பது மானஸ ஜபம் எனப்படும். சப்தத்துடன் ஜபிக்கும் ஜபம் ஒரு மடங்கு பலனை அளிக்கும். சப்தமில்லாது ஜபிக்கும் ஜபம் 10- மடங்கு பலனை யளிக்கும். உபாம்சு ஜபம் 100- மடங்கு பலனை அளிக்கும். மானஸ ஜபம் 1000 - மடங்கு பலனை அளிக்கும். மானஸ ஜபம் முக்தியை அளிக்கும். உபாம்சு ஜபம் ஸகல ஸித்தியையுமளிக்கும். வாசிக ஜபத்தை க்ஷுத்ரமான (அபிசார) கர்மத்தில் உபயோகிக்க வேண்டும். இவ்விதம் ஜபயக்ஞம் மூன்று விதமாகும். வையாக்ரபாதர்:- ஜபயக்ஞம் மானஸம், உபாம்சு, பாஷிகம் என மூன்றுவிதம் உடையது. பிறர் கேட்கும்படி ஜபிப்பது பாஷிகம். உதடு ஒன்றுக்கொன்று ஸம்பந்தித்து, தன்காதிற்கு மட்டில் கேட்கும்படி உச்சரித்து ஜபிப்பது உபாம்சு. நாக்கும் உதடுகளும் அசையாமல் ஜபிப்பது மானஸம் என்று வேதமறிந்தவர்கள் சொல்லுகின்றனர். சப்தத்துடன் ஜபிப்பதைவிட உபாம்சு ஜபம் 10- மடங்கு சிறந்தது. நாக்கினால் ஜபிப்பது 100- மடங்கு சிறந்தது. மானஸ ஜபம் 1000 - மடங்கு சிறந்தது. ஸித்தியை விரும்பியவர்களுக்கு மானஸமும், புஷ்டியை விரும்பியவர்களுக்கு உபாம்சுவும், அபிசார கர்மத்தில் வாசிகமும் சிறந்ததெனச் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு, "காயத்ரீ ஜபத்தை மனதினாலேயே செய்ய வேண்டும். அது விசேஷமானது" என்று வ்யாஸர் சொல்லி இருப்பது, மானஸ ஜபத்தைப் புகழ்வதில் அபிப்பிராயம் உடையதேயன்றி உபாம்சு ஜபத்தை நிஷேதிப்பதற்கல்ல.

நிஷேதிப்பதற்கென்றால், உபாம்சுவாய் ஜபிப்பவனுக்கு, உரக்க வாசிக ஜபத்தைவிட 100- மடங்கதிகமாகும்'' என்பது முதலான வசனங்களுக்கு விரோதம் நேரிடும்.

जपनियममाह – शौनकः । कृत्वोत्तानौ करौ प्रातः सायं चाधोमुखौ तथा । मध्ये स्तब्धकराभ्यां तु जप एव मुदाहृतः इति ।। व्यासोऽपि – प्रातरुत्तानपाणिभ्यां स्तब्धाभ्यां दिनमध्यमे । अधोमुखाभ्यां पाणिभ्यां सायं संलक्षितो जपेत् ।। प्रातर्नासासमौ कुर्यात् मध्याह्ने तूरसा समौ । सायङ्काले नाभिसमौ करौ कुर्यादतन्द्रितः । अपवित्रकरोऽशुद्धः प्रलपन्न जपेत् क्वचित् । अप्रावृतकरो वाऽपि शिरसि प्रावृतोऽपि वेति ।।

ஜபத்தில் நியமத்தைச் சொல்லுகிறார் சௌனகர் - காலையில் கைகளை நிமிர்த்திக் கொண்டும், மாலையில் கீழ்நோக்கியதாய்ச் செய்து கொண்டும், மத்யாஹ்னத்தில் நடுநிலைமையாய் வைத்துக் கொண்டும் ஜபிக்க வேண்டும். வ்யாஸரும்:- காலையில் உயர்த்தப்பட்ட கைகளோடும் மத்யாஹ்னத்தில் ஸ்தப்தமான (விறைத்த) கைகளோடும், மாலையில் கீழ்நோக்கிய கைகளோடும் ஜபிக்க வேண்டும். காலையில் மூக்குக்குச் சமமாகவும், மத்யாஹ்னத்தில் மார்புக்குச் சமமாகவும், மாலையில் நாபிக்குச் சமமாகவும் கைகளை வைத்துக் கொள்ள வேண்டும். கையில் பவித்ரமணியாமலும், அசுத்தனாயும் பேசிக் கொண்டும், கைகளை மூடிக் கொள்ளாமலும், தலையை மூடிக்கொண்டும் ஒருபோதும் ஜபிக்கக் கூடாது.

शौनकः – मनस्सन्तोषणं शौचं मौनं मन्त्रार्थचिन्तनम् । अव्यग्रत्वमनिर्वेदो जपसंपत्तिहेतव इति ।। व्यासः – न प्रकाशं न च हसन् न पार्श्वमवलोकयन् । नापाश्रितो न जल्पंश्च न प्रावृतशिरास्तथा । न पदा पदमाक्रम्य न चैव हि तथा करौ । न चासमाहितमना न च संश्रावयन् जपेत् ।। अपाश्रितः - स्तम्भादिश्रितः । जपकाले न भाषेत

व्रतहोमादिकेषु च ।। एतेष्वेवावसक्तस्तु यद्यागच्छेत् द्विजोत्तमः । अभिवाद्य ततो विप्रं योगक्षेमं च कीर्तयेदिति ।।

சௌனகர்:- மனதில் ஸந்தோஷம், சுத்தி, மௌனம், மந்த்ரார்த்தத்தைச் சிந்தித்தல், கவலை இல்லாதிருத்தல், உத்ஸாஹம் இவை ஜபத்தின் ஸித்திக்குக் காரணங்களாகும். வ்யாஸர்:- ப்ரகாசமாயும், சிரித்துக் கொண்டும், பக்கத்தைப் பார்த்துக் கொண்டும், தூண் முதலியதில் சாய்ந்து கொண்டும், பேசிக் கொண்டும், தலையை மூடிக்கொண்டும், காலின் மேல் காலை வைத்துக் கொண்டும், கையின் மேல் கையை வைத்துக் கொண்டும், கவனமில்லாத மனதுடையவனாயும், பிறருக்குக் கேட்கும்படி உச்சரிப்பவனாயும், ஜபிக்கக் கூடாது. ஜபகாலத்திலும், வ்ரதம், ஹோமம் முதலியவைகளிலும் பேசக்கூடாது. ஜபாதிகளை அனுஷ்டிக்கும் பொழுது சிறந்த ப்ராம்ஹணன் வந்தால், ஜபத்தை நிறுத்தி அவனை நமஸ்கரித்து யோக க்ஷேமங்களைப் பற்றிப் பேசவேண்டும்.

बोधायनः – विरमेत् ब्राह्मणे प्राप्ते कामं तेन च संवदेत् । शूद्रं दृष्ट्वा तु संप्राप्तं नाधीयीत कथञ्चन ।। शूद्रं दृष्ट्वा विरमेदेव, न संवदेदित्यर्थः । लोकवार्तादिकं श्रुत्वा स्पृष्ट्वा दृष्ट्वा प्रभाषिणम् । सङ्ख्यां विना च यज्जप्तं तत् सर्वं निष्फलं भवेत् ।। प्रभाषिणं - बहुभाषिणम् । प्रभाषणं च तन्द्रां च परुषं बहुभाषणम् । क्रोधं माद्यं क्षुतं निद्रां ष्ठीवनं च विजृम्भणम् ।। दर्शनं च श्वनीचानां वर्जयेज्जपकर्मणि । आचामेत् सम्भवे चैषां स्मरेत् विष्णुं सुरार्चितम् ।। ज्योतींषि च प्रपश्येद्वा कुर्याद्वा प्राणसंयमम् ।। ज्वलनं गाश्च विप्रांश्च यतीन्वाऽपि विशुद्धये इति ।।

போதாயனர்:- ஜபகாலத்தில் ப்ராம்ஹணன் வந்தால் ஜபத்தை நிறுத்த வேண்டும். அவனுடன் பேசவேண்டும். சூத்ரனைக் கண்டால், ஜபத்தை நிறுத்த வேண்டும்.

எவ்விதமும் அவனுடன் பேசக்கூடாது. உலகவார்த்தை முதலியதைக் கேட்டுக் கொண்டும், பிறனைத் தொட்டுக் கொண்டும், அதிக வார்த்தை பேசுகிறவனைப் பார்த்துக் கொண்டும், எண்ணிக்கை இல்லாமலும் செய்த ஜபம் முழுவதும் பலனற்றதாகும். வீண்பேச்சு, சோம்பல், கடுமை, அதிகப்பேச்சு, கோபம், மதம், தும்மல், தூக்கம், துப்புதல், கொட்டாவி, நாய், நீசர் இவர்களைப் பார்ப்பது இவைகளை ஜபகாலத்தில் வர்ஜிக்க வேண்டும். இவைகளிலேதாவது நேர்ந்தால் ஆசமனம் செய்ய வேண்டும். அல்லது தேவர்களால் பூஜிக்கப்படும் விஷ்ணுவை த்யானிக்க வேண்டும். அல்லது ஸூர்யன் முதலிய தேஜஸ்ஸுகளைப் பார்க்க வேண்டும். அல்லது ப்ராணாயாமம் செய்ய வேண்டும். அல்லது அக்னி, பசுக்கள், ப்ராம்ஹணர், யதிகள் இவர்களையாவது சுத்திக்காகப் பார்க்க வேண்டும்.

रत्नावल्याम् – चण्डालाशुद्धपतितान् दृष्ट्वाऽऽचम्य पुनर्जपेत्। तैरेव भाषणं कृत्वा स्नात्वाऽऽचम्य जपेत् पुनः ॥ असत्यभाषणं जिह्मभाषणं वर्जयेत् सदा। सत्यैरपि न भाषेत जपहोमार्चनादिषु इति। नारदः – श्वशूद्रपतितांश्चैव रासभं च रजस्वलाम् । दृष्ट्वा तोयमुपस्पृश्याभाष्य स्नात्वा पुनर्जपेत्॥ मार्जारं कुक्कुटं क्रौञ्चं श्वानं गृध्रं खरं कपिम्। दृष्ट्वाऽऽचम्याचरेत् कर्म स्पृष्ट्वा स्नानं विधीयते इति॥

ரத்னாவளியில்:- சண்டாளன், அசுத்தன், பதிதன் இவர்களைப் பார்த்தால் ஆசமனம் செய்து மறுபடி ஜபிக்க வேண்டும். அவர்களுடன் பேசினால் ஸ்நானம் செய்து ஆசமனம் செய்து மறுபடி ஜபிக்க வேண்டும். பொய் பேசுவதையும், வக்ரமாய் பேசுவதையும் எப்பொழுதும் வர்ஜிக்க வேண்டும். ஜபம், ஹோமம், தேவபூஜை முதலியவைகளில் ஸத்யமான வார்த்தைகள் கூடப் பேசக்கூடாது. நாரதர்:- நாய், சூத்ரன், பதிதன், கழுதை, ரஜஸ்வலை இவர்களைப் பார்த்தால், ஆசமனம் செய்து பிறகு

ஜபிக்க வேண்டும். இவர்களுடன் பேசினால் ஸ்நானம் செய்து மறுபடி ஜபிக்க வேண்டும். பூனை, கோழி, க்ரௌஞ்சம், நாய், கழுகு, கழுதை, குரங்கு இவைகளைப் பார்த்தால் ஆசமனம் செய்து பிறகு கர்மத்தைச் செய்ய வேண்டும். ஸ்பர்சித்தால் ஸ்நானம் விதிக்கப்படுகிறது.

बोधायनः – सन्ध्ययोरुभयोर्जप्ये भोजने दन्तधावने। पितृकार्ये च दैवे च तथा मूत्रपुरीषयोः ।। गुरूणां सन्निधौ दाने यागे चैव विशेषतः ।। एतेषु मौनमातिष्ठन् स्वर्गं प्राप्नोति मानवः इति । योगयाज्ञवल्क्यः – यदि वाग्यमलोपः स्यात् जपादिषु कदाचन । व्याहरेद्वैष्णवं मन्त्रं स्मरेद्वा विष्णुमव्ययम् । तद्विष्णोरिति मन्त्रोऽयं स्मर्तव्यस्सर्वकर्मसु। गायत्री वैष्णवी ह्येषा प्रोक्तेदं विष्णुरित्यपि इति। प्रजापतिः – प्रमादात् कुर्वतां कर्म प्रच्यवत्यध्वरेषु यत् । स्मरणादेव तद्विष्णोः सम्पूर्णं स्यादिति श्रुतिः इति। अध्वरेषु - जपादियज्ञेषु ।।

**போதாயனர்:-** இரு ஸந்த்யைகளிலும், ஜபத்திலும், போஜனத்திலும், தந்ததாவனத்திலும், பித்ரு கார்யத் திலும், தேவகார்யத்திலும், மலமூத்ர விஸர்ஜனத்திலும், குருக்கள் ஸன்னிதியிலும், தானத்திலும், யாகத்திலும் மௌனத்தை அனுஷ்டிக்கும் மனிதன் ஸ்வர்க்கத்தை அடைவான். **யோக யாக்ஞவல்க்யர்:-** ஜபம் முதலியவைகளில் எப்பொழுதாவது மௌனத்திற்கு லோபம் நேர்ந்தால் விஷ்ணு தேவதாகமான மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். அல்லது விஷ்ணுவை ஸ்மரிக்க வேண்டும். எல்லாக் கர்மங்களிலும், तद्विष्णोः என்ற இந்த மந்த்ரத்தை ஸ்மரிக்க வேண்டும். இது விஷ்ணு காயத்ரீ எனச் சொல்லப்பட்டிருக்கிறது. இதம் விஷ்ணு: என்ற மந்த்ரமும் அப்படியே. **ப்ரஜாபதி:-** அத்வரங்களில் கர்மங்களை அனுஷ்டிப்பவர்களுக்குக் கவனமின்மையால் ஏதாவது தவறுதல் நேர்ந்தால், அது விஷ்ணுவின் ஸ்மரணத்தினாலேயே ஸம்பூர்ணமாகிவிடும் என்கிறது வேதம். இங்கு 'அத்வரங்களில்' என்ற பதத்திற்கு ஜபம்

முதலிய யக்ஞங்களில் என்பது பொருளாம்.

बोधायनः – नाभेरधः संस्पर्शं कर्मयुक्तो वर्जयेदिति ।। यमोऽपि – नाभेरधः स्वकायं तु स्पृष्ट्वा प्रक्षालयेत् करौ । दक्षिणं वा स्पृशेत् कर्णं स्मरेद्वा विष्णुमव्ययमिति ।।

**போதாயனர்:-** கர்மங்களை அனுஷ்டிப்பவன் தொப்புளுக்குக் கீழுள்ள அங்கங்களை ஸ்பர்சிக்கக் கூடாது. **யமனும்:-** நாபிக்குக் கீழுள்ள தன் தேஹத்தை ஸ்பர்சித்தால் கைகளை அலம்ப வேண்டும். அல்லது வலது காதைத் தொட வேண்டும். அல்லது அழிவற்ற விஷ்ணுவை ஸ்மரிக்க வேண்டும்.

सुमन्तुः – नान्यथोक्तिर्नान्यमना न च व्यत्यस्तपत्करः । न जपेत् प्रलपन्वाऽपि कृतं निष्फलमुच्यते इति ।। व्यासः – होमः प्रतिग्रहो दानं भोजनाचमने जपः । न बहिर्जानु कार्याणि साङ्गुष्ठानि समाचरेत् ।। उष्णीषी कञ्चुकी नग्नो मुक्तकेशो गलावृतः । चिन्ताव्याकुलचित्तो वा भ्रान्तः क्रुद्धो बुभुक्षितः ।। अनासनः शयानो वा गच्छन्नुद्धत एव वा । रथ्यायामशिवस्थाने न जपेत्तिमिरावृते ।। उपानद्गूढपादो वा यानशय्यागतस्तथा । प्रसार्य न जपेत् पादावुत्कटासन एव वा ।। जपेन्न प्रौढपादश्च नावष्टब्धोऽलसोऽशुचिः। नासंव्यानो ह्यदर्भश्च नाशिखाकच्छबन्धनः इति ।।

**ஸுமந்து:-** வேறு பேச்சுக்கள் பேசிக் கொண்டும், வேறிடத்தில் மனதுடனும், கால் கைகளை மாற்றி வைத்துக் கொண்டும், வீண்வார்த்தை பேசிக் கொண்டும் ஜபிக்கக் கூடாது. அப்படி ஜபித்தல் வீணுகுமெனச் சொல்லப்படுகிறது. **வ்யாஸர்:-** ஹோமம், ப்ரதிக்ரஹம், தானம், போஜனம், ஆசமனம், ஜபம் இவைகளை, முழங்காலுக்கு வெளியில் கைகளை வைத்துக் கொண்டு செய்யக் கூடாது. பெருவிரலைச் சேர்த்துக் கொண்டு செய்ய வேண்டும். தலைப்பாகை தரித்தவனும், சட்டை

அணிந்தவனும், வஸ்த்ரம் இல்லாதவனும், அவிழ்ந்த மயிருடையவனும், கழுத்தை வஸ்த்ரத்தால் சுற்றிக் கொண்டு, சிந்தையால் கலக்க முடையவனும், ப்ராந்தனும், கோபம் உடையவனும், பசியுள்ளவனும், ஆஸனமில்லாதவனும், படுத்தவனும், நடப்பவனும், விரைப்புடையவனுமாய் ஜபிக்கக் கூடாது. வீதியிலும் அசுத்த ஸ்தலத்திலும் இருட்டுள்ள விடத்திலும் ஜபிக்கக் கூடாது. பாதரக்ஷை தரித்தவனும், வாஹனம், படுக்கை இவைகளில் இருப்பவனும், கால்களை நீட்டியவனும், உயர்ந்த ஆஸனம் உடையவனும், கால்களைத் தூக்கிக் காட்டுபவனும், தூண் முதலியதில் சாய்ந்து கொண்டும், சோம்பலுடையவனும், அசுத்தனும், உத்தரீயம் இல்லாதவனும், தர்ப்பம் தரியாதவனும், குடுமி கச்சம் இவைகளைக் கட்டாதவனுமாய் ஜபிக்கக் கூடாது.

भरद्वाजः – निष्ठीवजृम्भणे क्रोधनिद्रालस्यक्षुधो मदः । पतितश्वान्त्यजालोका दशैते जपवैरिणः इति ।। शाण्डिल्यः – प्रदक्षिणे प्रणामे च पूजायां हवने जपे । न कण्ठावृतवस्त्रस्स्यात् दर्शने गुरुदेवयोः ।। आचार्यं भगवद्भक्तं भगवन्मन्दिरं जलम् । अश्वत्थमग्निमर्कं च पृष्ठीकृत्य जपेन्न तु ।। आर्द्रवासास्तु यः कुर्यात् जपं होमं प्रतिग्रहम् । सर्वं तद्राक्षसं विद्यात् बहिर्जानु च यत्कृतम् इति ।। आर्द्रवासा इति स्थलविषयम् ।। यदाह व्यासः – यदि स्यात् क्लिन्नवासा वै वारिमध्यगतो जपेत् । अन्यथा तु शुचौ भूम्यां दर्भेषु सुसमाहितः ।। न क्लिन्नवासाः स्थलगो जपादीनाचरेत् बुधः । व्रतादिके नार्द्रवासा आचरेन्नैकवाससा ।। न जीर्णेन न नीलेन परिक्लिष्टेन वा जपेत् इति ।। यदि स्यात् क्लिन्नवासा इति चापद्विषयम्, गायत्रीजपव्यतिरिक्तविषयं वा । मतिमान् न कदाचित्तु गायत्रीमुदके जपेत् । गायत्र्यग्निमुखी प्रोक्ता तस्मादुत्तीर्य तां जपेत् इति गोभिलस्मरणात्।।

பரத்வாஜர்:- துப்புதல், கொட்டாவி, கோபம், நித்ரை, சோம்பல், பசி, மதம், பதிதனைப் பார்ப்பது, நாயைப் பார்ப்பது, சண்டாளனைப் பார்ப்பது என்ற இந்தப் பத்தும் ஜபத்திற்கு விரோதிகளாம். சாண்டில்யர்:- ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், பூஜை, ஹோமம், ஜபம், குருதர்சனம், தேவதர்சனம் இவைகளில் கழுத்தில் வஸ்த்ரத்தைச் சுற்றிக் கொண்டிருக்கக் கூடாது. ஆசார்யன், பகவத் பக்தன், பகவதாலயம், ஜலம், அச்வத்த வ்ருக்ஷம், அக்னி, ஸூர்யன் இவர்களைப் பின்புறத்தில் இருக்கச் செய்து ஜபிக்கலாகாது. ஈரவஸ்த்ரத்துடன் ஜபம், ஹோமம், ப்ரதிக்ரஹம் இவைகளைச் செய்தால் அது முழுவதும் ராக்ஷஸர்களைச் சேர்ந்ததாகும். முழங்கால்களுக்கு வெளியில் கைகளை வைத்துக் கொண்டு செய்வதும் ராக்ஷஸமாகும். இங்கு ஈரவஸ்த்துரத்துடன் என்றது ஸ்தலத்தில் செய்யும் ஜபத்தை நிஷேதிப்பதாம். ஏனெனில், வ்யாஸர்:- ஈரவஸ்த்ரத்துடன் இருப்பவனாகில் ஜலத்தின் நடுவில் இருந்து ஜபிக்க வேண்டும். உலர்ந்த வஸ்த்ரம் உடையவனாகில் ஸ்தலத்தில், தர்ப்பத்தின் மேல், கவனமுடையவனாய் ஜபிக்க வேண்டும். அறிஞன் ஈரவஸ்த்ரம் உடையவனாய் ஸ்தலத்திலிருந்து ஜபம் முதலியவைகளைச் செய்யக் கூடாது. வ்ரதம் முதலியதிலும் ஈரவஸ்த்ரத்துடன் ஒன்றும் செய்யக் கூடாது. ஒரு வஸ்த்ரத்துடனும், ஜீர்ணமானதும், கறுப்பானதும், கசங்கியதுமான வஸ்த்ரத்துடனும் ஜபிக்கக் கூடாது. 'ஈரவஸ்த்ரத்துடன் உடனிருந்தால் ஜலத்திலிருந்து ஜபிக்க வேண்டும்' என்ற வ்யாஸ வசனம் ஆபத் விஷயம், அல்லது காயத்ரீ ஜபம் தவிர்த்த மற்ற மந்த்ர ஜப விஷயமாகவாவது ஆகலாம். ஏனெனில், ''அறிவுடையவன் ஒருகாலும் ஜலத்திலிருந்து காயத்ரியை ஜபிக்கக் கூடாது. காயத்ரியை 'அக்னிமுகி' என்று சொல்லுகிறார்கள். ஆகையால் ஜலத்திலிருந்து வெளியேறி ஸ்தலத்தில் காயத்ரியை ஜபிக்க வேண்டும்'' என்று கோபிலர் சொல்லிகிறார்.

सुमन्तुः – खण्डवस्त्रावृतस्यैव वस्त्रार्धालम्बिनस्तथा । उत्तरीयव्यतीतस्य समस्ता निष्फलाः क्रियाः ।। सङ्ख्या चैवोपवीतेन जपहोमादि निष्फलम् इति ।। गौतमः – गच्छतस्तिष्ठतो वाऽपि स्वेच्छया कर्म कुर्वतः । अशुचेर्वा विना सङ्ख्यां तत्सर्वं निष्फलं भवेत् इति ।। तिष्ठत इति वचनं गायत्रीव्यतिरिक्तमन्त्रविषयम् ।।

ஸுமந்து:- துண்டு வஸ்த்ரத்தைத் தரித்தவனும், பாதி வஸ்த்ரம் தரித்தவனும், உத்தரீயம் தரியாதவனும் செய்யும் கர்மங்களெல்லாம் பலனற்றவை ஆகும். பூணூலினுல் கணக்குச் செய்து கொண்டு செய்யும் ஜபம் ஹோமம் முதலியதும் நிஷ்பலமாகும். கௌதமர்:- தன்னிஷ்டப்படி நடந்து கொண்டும், நின்று கொண்டும், அசுத்தனுயும், கணக்கில்லாமலும் கர்மத்தை அனுஷ்டிப்பவனின் கர்மம் முழுவதும் நிஷ்பலமாகும். இங்கு நிற்பதை நிஷேதித்தது காயத்ரியை தவிர்த்த மந்த்ரங்களின் ஜபத்தைப் பற்றியதாம்.

जपाङ्गभूतामक्षमालामाह हारीतः ।। शङ्खरूप्यमयी माला काञ्चनी निम्बजैः फलैः । पद्माक्षजैश्च रुद्राक्षैः विद्रुमैर्मणिमौक्तिकैः ।। रजतेन्द्राक्षकैर्माला तथैवाङ्गुलिपर्वभिः । पुत्रजीवमयी माला शस्ता वै जपकर्मणि इति ।। योगयाज्ञवल्क्यः – स्फटिकेन्द्राक्षरुद्राक्षैः पुत्रजीवसमुद्भवैः । अक्षमाला तु कर्तव्या ह्युत्तमा ह्युत्तरोत्तरा इति ।। चन्द्रिकायाम् – अक्षसूत्रं तु कर्तव्यं मुक्तामणिमयं शुभम् । सौवर्णं राजतं ताम्रं स्फाटिकं वाऽथ कारयेत् इति ।।

ஜபத்திற்கு அங்கமான அக்ஷமாலையைப் பற்றி ஹாரீதர்:- சங்கு, வெள்ளி, பொன், வேம்பின் கொட்டை, தாமரைக் கொட்டை, ருத்ராக்ஷம், பவளம், ரத்னம், முத்து, வெள்ளி, இந்த்ராக்ஷம், புத்ர ஜீவம் இவைகளாலுள்ள மாலை ஜபத்திற்குச் சிறந்ததாம். விரல்களின் ரேகைகளாலும் ஜபிக்கலாம். யோக யாக்ஞவல்க்யர்:-

ஸ்படிகம், இந்த்ராக்ஷம், ருத்ராக்ஷம், புத்ர ஜீவம் இவைகளால் ஜபமாலே செய்து கொள்ளலாம். இவைகளில் முந்தியதைவிடப் பிந்தியது ச்லாக்யமாகும். **சந்த்ரிகையில்:-** முத்துக்களால் ஜபமாலே செய்ய வேண்டும். அல்லது பொன், வெள்ளி, தாம்ரம், ஸ்படிகம் இவைகளிலொன்றிஞல் செய்யலாம்.

स्मृत्यर्थसारेऽपि – हस्तेनावर्तयेद्देवीमक्षसूत्रैरथापि वा। सौवर्णै राजतैस्ताम्रैः स्फाटिकै रत्नजैस्तथा ।। अरिष्टैः पुत्रजीवोत्थैरिन्द्राक्षैः शङ्खसम्भवैः। रुद्राक्षैरपि पद्माक्षैः कुशग्रन्थिभिरेव वा ।। मणिभिस्त्वक्षसूत्रं स्यात् तदष्टशतसङ्ख्यया। चतुःपञ्चाशता वाऽपि सप्तविंशतिरेव वा इति ।। प्रजापतिरपि – अष्टोत्तरशतं कुर्याच्चतुःपञ्चाशतं तथा। सप्तविंशतिका कार्या ततो न्यूनान्न कारयेत् इति ।। स्मृत्यन्तरेऽपि – अष्टोत्तरशतैर्माला पञ्चाशच्चतुरुत्तरैः। सप्तविंशतिभिः कार्या सर्वसाधारणे जपे ।। अष्टोत्तरशतैर्माला ह्युत्तमा परिकीर्तिता। चतुःपञ्चाशता माला मध्यमा परिकीर्तिता ।। अधमा प्रोच्यते माला सप्तविंशतिसङ्ख्यया इति ।।

**ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலும்:-** கையிஞல் எண்ணி, காயத்ரியை ஜபிக்க வேண்டும். அல்லது ஜபமாலேயிஞல் ஜபிக்கலாம். பொன், வெள்ளி, தாம்ரம், ஸ்படிகம், ரத்னம், வேம்பு, புத்ர ஜீவம், இந்த்ராக்ஷம், சங்கு, ருத்ராக்ஷம், பத்மாக்ஷம், குசமுடிப்பு, மணி இவைகளிலொன்றிஞல் ஜபமாலே செய்ய வேண்டும். 108- அல்லது 54- அல்லது 27- மணிகளால் செய்யலாம். **ப்ரஜாபதியும்:-** 108- மணிகளால் ஜபமாலே செய்யலாம். அல்லது 54, 27-க்குக் குறைத்துக் செய்யக் கூடாது. **வேறு ஸ்ம்ருதியில்:-** எல்லா மந்த்ரங்களுக்கும் பொதுவான ஜபத்தில் ஜபமாலேயை 108, 54, 27 மணிகளால் செய்யலாம். 108- உத்தமம். 54- மத்யமம், 27- அதமமாம்.

गौतमः – अङ्गुल्या जपसङ्ख्यानमेकमेकमुदाहृतम् । रेखयाऽष्टगुणं पुत्रजीवैर्दशगुणाधिकम् ॥ शतं स्याच्छङ्खमणिभिः प्रवालैश्च सहस्रकम् । स्फटिकैर्दशसाहस्रं मौक्तिकैर्लक्षमुच्यते ॥ पद्माक्षैर्दशलक्षं तु सौवर्णैः कोटिरुच्यते । कुशग्रन्थ्या च रुद्राक्षैरनन्तफलमश्नुते ॥ तुलसीकाष्ठघटितैर्मणिभिर्जपमालिका । सर्वकर्मणि सर्वेषामीप्सितार्थफलप्रदा ॥ तत्राङ्गुलिजपं कुर्वन् साङ्गुष्ठाङ्गुलिभिर्जपेत् । अङ्गुष्ठेन विना कर्म कृतं तदफलं यतः ॥ अङ्गुलीर्न नियुञ्जीत किञ्चिदाकुञ्चिते तले। अङ्गुलीनां नियोगात्तु छिद्रेषु स्रवते जपः इति ॥

கௌதமர்:- விரலால் எண்ணிச் செய்யும் ஜபம் ஒரு பங்கு பலனைக் கொடுக்குமெனச் சொல்லப்பட்டிருக்கிறது. ரேகைகளால் எண்ணிச் செய்பவன் எட்டு மடங்கு, புத்ர ஜீவங்களால் பத்து மடங்கு, சங்கு மணிகளால் நூறு மடங்கு, பவழங்களால் ஆயிர மடங்கு, ஸ்படிகங்களால் பதினாயிரம் மடங்கு, முத்துக்களால் லக்ஷம் மடங்கு, பத்மாக்ஷங்களால் பத்து லக்ஷம் மடங்கு, ஸ்வர்ண மணிகளால் கோடி மடங்கு, குசக்ரந்தி, ருத்ராக்ஷம் இவைகளால் அளவற்ற பலனை அடைகின்றான். துளசிக் கட்டையால் செய்யப்பட்ட மணிகளால் செய்த ஜபமாலை, எல்லோருக்கும் ஸகல ஜபத்திலும் இஷ்ட பலத்தைக் கொடுப்பதாகும், அவைகளுள் விரல்களால் ஜபிப்பவன் பெருவிரலுடன் கூடிய விரல்களால் ஜபிக்க வேண்டும். ஏனெனில், பெருவிரல் உடனில்லாமல் செய்த கர்மம் நிஷ்பலமாகும். கொஞ்சம் குவிக்கப்பட்ட உள்ளங்கையில் மற்ற விரல்களைப் பிரிக்கக் கூடாது. பிரித்தால் விரல்களின் சந்துக்களின் வழியே ஜபம் ஒழுகிவிடும்.

हारीतोऽपि – शङ्खैश्शतगुणं जप्यं रौप्यैश्चैव सहस्रकम् । जप्यं शतगुणं प्रोक्तं निम्बारिष्टकमालया ॥ इन्द्राक्षैर्लक्षगुणितं विद्रुमैर्दशलक्षकम् । मौक्तिकैः स्फाटिकैश्चैव कोटि कोटिगुणोत्तरम् ॥

परिसङ्ख्या न विज्ञेया रुद्राक्षाङ्गुलिपर्वभिः । पद्मजैः पुत्रजीवैश्च परिसङ्ख्या न विद्यते ॥

ஹாரீதரும்:- சங்கு மணிகளால் செய்யும் ஜபம் நூறு மடங்கு ஆகும். வெள்ளி மணிகளால் ஆயிரம் மடங்காகும். வேப்பங் கொட்டை, அரிஷ்டம் இந்த மாலையால் பதினாயிரம் மடங்காகும். இந்த்ராக்ஷங்களால் லக்ஷம் மடங்காகும். பவழங்களால் பத்து லக்ஷம் மடங்கு ஆகும். முத்துக்கள், ஸ்படிகங்கள் இவைகளால் செய்யும் ஜபம் கோடி கோடி மடங்கு பலனைக் கொடுப்பதாகும். ருத்ராக்ஷங்கள் விரல்ரேகைகள் இவைகளாலும், பத்மாக்ஷம், புத்ரஜீவம் இவைகளாலும் செய்யும் ஜபத்தின் பலத்திற்குக் கணக்கேயில்லை.

मणिमेकैकमादाय श्वेतसूत्रे प्रयोजयेत् । मुखं मुखेन संयोज्य पृष्ठं पृष्ठेन योजयेत् ॥ प्रोक्तसङ्ख्यान्यमेकाक्षं मेरुत्वेनाग्रतो न्यसेत् । एकैकमणिमध्ये तु ग्रन्थिबन्धं प्रकल्पयेत् ॥ जपमालां विधायेत्थं ततस्संस्कारमारभेत् । क्षालयेत् पञ्चगव्यैस्तां सद्योजातेन वै जलैः ॥ चन्दनागरुगन्धाद्यैर्वामदेवेन घर्षयेत् । धूपयेत्तामघोरेण लिंपेत्तत्पुरुषेण तु ॥ मन्त्रेण शतवारं तु पञ्चमेनाभिमन्त्रयेत् । मेरुं च पञ्चमेनैव तथा मन्त्रेण मन्त्रयेत् ॥ जप्यमन्त्रेण तां मालामभिमन्त्र्य सुगोपयेत् । मध्यमायां न्यस्तमालां ज्येष्ठयाऽऽवर्तयेत् क्रमात् ॥ अपि वाऽङ्गुष्ठमध्यस्थां चालयेन्मध्यमाग्रतः । न स्पृशेद्वामहस्तेन करभ्रष्टां न कारयेत् । तर्जन्या न स्पृशेत् सूत्रं कम्पयेन्न विधूनयेत् । प्रमादात् पतिते हस्तात् शतमष्टोत्तरं जपेत् । जीर्णे सूत्रे पुनः सूत्रं ग्रन्थयित्वा शतं जपेत् । भुक्तिमुक्तिप्रदः सोऽयं मालिकागणनक्रमः इति ॥

ஜபமாலை செய்யும் ப்ரகாரம்:- ஒவ்வொரு மணியாய் எடுத்து வெண்மையான கயிற்றில் கோக்க வேண்டும். ஒவ்வொரு மணியின் முன்புறத்தோடு முன்புறத்தையும் பின் புறத்தோடு பின்புறத்தையும் சேர்க்க வேண்டும்.

இவ்விதம் கோர்த்த பிறகு, சொல்லிய கணக்குக்கு அதிகமாக ஒரு மணியை மேருவென்பதாய் முனையில் சேர்க்க வேண்டும். ஒவ்வொரு மணிக்கும் நடுவில் முடி போட வேண்டும். இவ்விதம் ஜபமாலையைச் செய்து, பிறகு ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும். அதாவது - ஸத்யோஜாத மந்த்ரத்தால் அந்த மாலையைப் பஞ்சகவ்யத்தாலும் ஜலத்தாலும் அலம்ப வேண்டும். வாமதேவ மந்த்ரத்தால், சந்தனம், அகருகந்தம் முதலியதைப் பூசவேண்டும். அகோர மந்த்ரத்தால் தூபத்துடன் சேர்க்க வேண்டும். தத்புருஷ மந்த்ரத்தால் பூசவேண்டும். ஈசான மந்த்ரத்தை நூறு தடவை ஜபித்து அபிமந்த்ரிக்க வேண்டும். மேருவான மணியையும் ஈசான மந்த்ரத்தால் அபிமந்த்ரிக்க வேண்டும். ஜபிக்க வேண்டிய மந்த்ரத்தாலும் அந்த மாலையை அபிமந்த்ரித்து மறைவாய் வைக்க வேண்டும். ஜபிக்கும் போது, மாலையை நடுவிரலில் வைத்துக் கொண்டு பெருவிரலால் க்ரமமாய்ச் சுற்ற வேண்டும். அல்லது, பெருவிரல் நடுவில் வைத்துக் கொண்டு நடுவிரலால் சுற்ற வேண்டும். இடது கையால் தொடக் கூடாது. கையிலிருந்து நழுவ விடக்கூடாது. ஆள்காட்டி விரலால் தொடக் கூடாது. ஆட்டக் கூடாது. உதறக் கூடாது. கவனமின்மையால் கையிலிருந்து விழுந்து விட்டால் 108- முறை மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். நூல் ஜீர்ணமானால் மறுபடி வேறு நூலைச் சேர்த்து முடித்து 100 - முறை ஜபிக்க வேண்டும். இவ்வித நியமத்துடனுள்ள ஜபமாலிகையால் எண்ணிச் செய்யப்படும் ஜபக்ரமம் புக்தியையும் முக்தியையும் அளிக்கக் கூடியதாம்.

गौतमः — अङ्गुष्ठं मोक्षदं विद्यात्तर्जनी शत्रुनाशिनी। मध्यमा धनकामायानामिका पौष्टिकी तथा।। कनिष्ठा रक्षणी प्रोक्ता जपकर्मणि शोभना। अङ्गुष्ठेन विना जप्यं कृतं तदफलं भवेत्।। उल्लङ्घिते तथा मेरौ पतिते चाक्षसूत्रके। प्राणायामत्रयं कृत्वा घृतप्राशनमाचरेत् इति।।

கௌதமர்:- பெருவிரல் மோக்ஷத்தை அளிக்கும். தர்ஜனீ சத்ருக்களை நாசம் செய்யும். நடுவிரல் தனத்தை அளிக்கும். அனாமிகை புஷ்டியைக் கொடுக்கும். சுண்டுவிரல் ரக்ஷிக்கும், ஜபத்தில் சுபமானது. பெருவிரலை விட்டு ஜபம் செய்வது வீணாகும். மேருவைத் தாண்டினாலும், ஜபமாலை விழுந்தாலும் மூன்று ப்ராணாயாமங்கள் செய்து, நெய்யை அருந்த வேண்டும்.

रुद्राक्षं प्रकृत्य स्कान्दपुराणे– लक्षकोटिसहस्रस्य लक्षकोटिशतस्य च । जपे च लभते पुण्यं नात्र कार्या विचारणा ॥ उच्छिष्टो वा विकर्मस्थः संयुक्तः सर्वपातकैः । लिप्यते न स पापेन रुद्राक्षस्य तु धारणात् ॥ कण्ठे रुद्राक्षमाधाय यश्चापि म्रियते यदि । सोऽपि रुद्रत्वमाप्नोति किं पुनर्मानुषादयः इति ॥ यः कुर्यात् तुलसीकाष्ठै रक्षमालां सुरूपिणीम् । कण्ठमालां च यत्नेन कृतं तस्याक्षयं भवेत् इत्यादिवचनं भाक्तमिति प्राहुः ॥ अत एव स्मृतिरत्नावल्यां स्मृतिरत्नेन च धारणनिषेधः उक्तः – तुलसीकाष्ठसम्भूतां स्कन्धे मालां बिभर्ति यः । स शूद्रवत् बहिष्कार्यः सर्वस्मात् द्विजकर्मणः ॥ स्कन्धे कण्ठे शिखायां वा यस्तु धारयते मणीन् । दैवे कर्मणि पित्र्ये च तं विप्रं दूरतस्त्यजेत् इति ॥

ருத்ராக்ஷத்தைத் துவக்கி ஸ்காந்த புராணத்தில்- ஆயிரலக்ஷ கோடியும், நூறுலக்ஷகோடியும் சேர்ந்த முறை ஜபிப்பதால் உண்டாகும் புண்யத்தை ருத்ராக்ஷமாலா ஜபத்தாலடைகிறான். அசுத்தனாயினும், நிஷித்த கர்மங்களை அனுஷ்டிப்பவனாயினும், எல்லாப் பாபகர்மங்களுடனும் கூடியவனாயினும், ருத்ராக்ஷம் தரித்தவனாகில் அவன் பாபத்துடன் ஸம்பந்திப்பதில்லை. எந்த ப்ராணியாகினும் கழுத்தில் ருத்ராக்ஷம் தரித்து அத்துடன் இறந்தால் அதுவும் ருத்ரத்தன்மையை அடைகிறது. மனிதன் முதலியவர்களைப் பற்றிச் சொல்வதேன்? "எவனொருவன் துளசிக்கட்டையினால்

அழகிய ஜபமாலையைச் செய்து கொள்கிருனே. கண்டத்திலும் மாலையைத் தரிக்கின்ருனே, அவன் செய்யும் ஜபாதி கார்யம் அழிவற்ற பலனையுடைதாய் ஆகிறது'' என்பது முதலான வசனங்கள் பக்தர் விஷயம் எனப் பெரியோர்கள் சொல்கின்றனர். ஆகையால்தான் ஸ்ம்ருதிரத்னவளியிலும் ஸ்ம்ருதிரத்தினத்திலும் துளஸீமணி தாரணத்திற்கு நிஷேதம் சொல்லப் பட்டிருக்கிறது. '' துளஸிக்கட்டையால் உண்டாகிய மாலையை எவன் தோளில் தரிக்கின்ருனே அவன் சூத்ரனைப் போல் ஸகல ப்ராம்ஹண கர்மங்களினின்றும் வெளியேற்றத் தகுந்தவன். எவன் தோளிலாவது, கழுத்திலாவது, குடுமியிலாவது மணிகளைத் தரிக்கின்ருனே, அவனை தேவகர்மத்திலும், பித்ரு கர்மத்திலும் தூரத்தில் பரிஹரிக்க வேண்டும் என்று''

विष्णुः – आवर्त्य गणयेन्मन्त्रं जपेच्चाङ्गुलिपर्वभिः । जपस्यावृत्तिगणने पुण्यसङ्ख्या न विद्यते इति ।। रत्नावल्याम् – पर्वभिश्च जपः कार्यो नाङ्गुलीनां निपातनैः । तन्निपातैस्तु यज्जप्तं सर्वं विद्यात्तदासुरम् इति ।। रेखागणनप्रकारमाह शङ्खः– अथाङ्गुलीनां रेखाभिर्जपमन्वहमाचरेत् । प्रारभ्यानामिकायास्तु मध्यमे पर्वणि क्रमात् ।। तर्जनीमूल पर्यन्तं जपेद्दशसु पर्वसु । मध्माङ्गुलिमूले तु यत् पर्वद्वितयं भवेत् ।। तं वै मेरुं विजानीयात् जपे तं नातिलङ्घयेत् ।। अनामिकामूलपर्व प्रारभ्यापि क्रमेण तु । मध्यमामूलपर्यन्तं जपेद्दशसु पर्वसु ।। मध्याङ्गुलेर्मध्यरेखां समारभ्य प्रदक्षिणम् । मध्यमा मूलपर्यन्त मङ्गुष्ठेन यथाक्रमम् ।। स्पृष्ट्वा द्वादश सङ्ख्या स्यादेकवारेण तन्नव । वामहस्तेन सङ्ख्यातं शतमष्टोत्तरं स्मृतम् इति ।। अत्र पक्षत्रये यथोपदेशं विकल्प इत्याहुः ।।

விஷ்ணு:- மந்த்ரத்தை ஆவ்ருத்தி செய்து எண்ண வேண்டும். விரல்களின் ரேகைகளால் ஜபிக்க வேண்டும். ஜபத்தின் ஆவ்ருத்தியை எண்ணிச் செய்தால்

அப்புண்யத்திற்கு அளவேயில்லை. ரத்னாவளியில்:- விரல்களின் ரேகைகளால் கணக்கிட்டு ஜபிக்க வேண்டும். விரல்களை மடக்கிக் கணக்கிட்டு ஜபிக்கக் கூடாது. விரல்களை மடக்கி ஜபித்தால் அது முழுவதும் அஸுரர்களைச் சேர்ந்ததென அறியவேண்டும். ரேகைகளால் எண்ணுகிற ப்ரகாரத்தைச் சொல்லுகிறார். சங்கர்:- பிறகு விரல்களின் ரேகைகளால் ப்ரதிதினமும் ஜபம் செய்ய வேண்டும். பவித்ரவிரலின் நடுரேகையில் ஆரம்பித்து க்ரமமாய், தர்ஜனீ விரலின் அடிரேகை வரையில் 10 ரேகைகளிலும் கணக்கிட்டு ஜபிக்க வேண்டும். நடுவிரலின் அடியிலுள்ள இரண்டு ரேகைகளை மேருவென்று அறியவும். ஜபத்தில் அதைத் தாண்டக் கூடாது. அல்லது, பவித்ரவிரலின் அடிரேகையில் ஆரம்பித்து க்ரமமாய் நடுவிரலின் அடிரேகை வரையில் உள்ள 10 ரேகைகளில் கணக்கிட்டு ஜபிக்கலாம். அல்லது நடுவிரலின் நடுரேகையில் ஆரம்பித்து ப்ரதக்ஷிணமாய், க்ரமமாய் நடுவிரலின் அடிரேகை வரையிலுள்ள ரேகைகளில் பெரு விரலால் தொட்டு ஜபித்தால் ஒரு தடவைக்குப் பன்னிரண்டு ஆகும். இவ்விதம் ஒன்பது தடவை இடது கையால் எண்ணினால் 108 முறை ஜபக் கணக்காகும். இங்குள்ள மூன்று பக்ஷங்களிலும் ஸமவிகல்பமானதால் அவரவர் குருபதேசப்படி ஜபிக்கலாம் என்கின்றனர் பெரியோர்கள்.

रत्नावल्याम्— पर्वभिस्तु जपेद्देवीमन्यत्रानियमः स्मृतः । गायत्र्या वेदमूलत्वात् वेदः पर्वसु गीयते इति ॥ तदेतद्रुद्राक्षकुशग्रन्थ्योरप्युपलक्षणम् । यदाह प्रजापतिः— ब्राह्मैरानन्त्यमाप्नोति रौद्रैश्च मणिभिर्बुधः । ब्राह्मः कुशमयो रौद्रो रुद्राक्षः पापनाशनः ॥ सावित्र्यास्तु जपस्ताभ्या मेकोऽप्यानन्त्यमृच्छति । गायत्र्या वेदबीजत्वात् पर्वभिश्च जपः स्मृतः इति ॥

ரத்னவளியில்:- காயத்ரியை ரேகைகளாலேயே (கணக்கிட்டு) ஜபிக்க வேண்டும். காயத்ரீ வேத மூலமானது. வேதத்தை ரேகைகளில் (ஸ்வரத்தைக் காட்டி) அத்யயனம் செய்வர். மற்ற மந்த்ரங்களின் ஜபத்தில் இந்த நியமமில்லை. இவ்விதம் சொல்லியது, ருத்ராக்ஷம், குசக்ரந்தி இவைகளையும் சொல்வதாகும். ஏனெனில் - ப்ரஜாபதி - ''ப்ராம்ஹங்களாலும், ரௌத்ரமணிகளாலும் ஜபித்தால் அளவற்ற பலனை அடைகிறான். ப்ராம்ஹம் என்பது குசக்ரந்தியாம். ரௌத்ரமணி என்பது பாபத்தைப் போக்கும் ருத்ராக்ஷமணியாம். அவ்விரண்டுகளாலும் செய்யப்பட்ட காயத்ரீ ஜபம் ஒன்றாகிலும் அளவற்றதாகிறது. காயத்ரீ வேத மூலமாகியதால் விரல்களின் ரேகைகளாலும் ஜபம் விதிக்கப்பட்டுள்ளது.

गौतमः—अनेन विधिना नित्यं जपं कुर्यात् प्रयत्नतः। प्रपन्नो विपुलान् लोकान् भुक्तिं मुक्तिं च विन्दति इति ॥ पितामहः – एवं जप्त्वा यथाशक्ति ह्युदिते तु दिवाकरे ॥ उत्तमेत्यनुवाकेन उद्वास्य तु यथागतम्। उत्तमेत्यनुवाकस्य वामदेव ऋषिः स्मृतः। अनुष्टुप् च तथा छन्दो गायत्री देवता स्मृता इति ॥ व्यासः – अथोपतिष्ठेदादित्य-मुदयन्तं समाहितः। मन्त्रैस्तु विविधैस्सौरैः ऋग्यजुस्सामसम्भवैः इति। उपस्थानं तु स्वशाखाधीतैर्मन्त्रैः कार्यम्। उपस्थानं स्वकैर्मन्त्रैरादित्यस्य तु कारयेत् इति वसिष्ठस्मरणात्॥

கௌதமர்:- இந்த விதிப்படி ப்ரதிதினமும் ப்ரயத்னத்துடன் ஜபம் செய்ய வேண்டும். செய்பவன் சிறந்த உலகங்களை அடைந்து, புக்தியையும், முக்தியையுமடைகிறான். பிதாமஹர்:- இவ்விதம் சக்திக்கியன்றவரை ஜபித்து, ஸூர்யன் உதித்த பிறகு 'உத்தமே' என்ற அனுவாகத்தால் உத்வாஸனம் செய்ய வேண்டும். அந்த அனுவாகத்திற்கு வாமதேவர் ருஷி, அனுஷ்டுப் சந்தஸ், காயத்ரீ தேவதையாம். வ்யாஸர்:-

பிறகு கவனம் உடையவனுய் உதிக்கும் ஸூர்யனை நோக்கி ருக் யஜுஸ் ஸாமவேதங்களில் உள்ளதும், ஸூர்யனைப் பற்றியதுமான பல மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்ய வேண்டும். உபஸ்தானத்தை அவரவர் சாகையில் படிக்கப்பட்ட மந்த்ரங்களால் செய்ய வேண்டும். ''ஸூர்யோபஸ்தானத்தை அவரவர் சாகையிலுள்ள மந்த்ரங்களால் செய்ய வேண்டும்'' என்று வஸிஷ்டர் சொல்லியிருக்கிறுர்.

चन्द्रिकायाम् – यजुश्शाखिनां मित्रस्य, मित्रोजनान्, प्रसमित्रेति तिसृभि रुपस्थानम्। तासां प्रथमा गायत्री। उत्तमे त्रिष्टभौ। विश्वेदेवा ऋषयः। मित्रो देवता। सूर्योपस्थाने विनियोगः इति॥ पितामहः – मित्रस्येति त्र्यृचस्येह विश्वामित्र ऋषिः स्मृतः। हिरुग्गायत्रमादिस्तु त्रिष्टुभावथ पश्चिमौ। देवता चैव मित्रः स्यादित्युवाच बृहस्पतिः। एताभिः प्राञ्जलिस्सम्यग्विस्पष्टोदित-मण्डलम्॥ भगवन्तं सहस्रांशु मुपतिष्ठेत भास्करम् इति॥

சந்த்ரிகையில்:- யஜுச்சாகிகளுக்கு 'மித்ரஸ்ய' 'மித்ரோ ஜநான், 'ப்ரஸமித்ர' என்ற மூன்று ருக்குகளால் உபஸ்தானம். அவைகளுள் முதல் மந்த்ரத்திற்கு காயத்ரீ சந்தஸ். மற்றவைக்கு த்ரிஷ்டுப் சந்தஸ், விச்வேதேவர் ருஷிகள், மித்ரன் தேவதை, ஸூர்யனின் உபஸ்தானத்தில் விநியோகமாம். பிதாமஹர்:- 'மித்ரஸ்ய' என்பது முதலான மூன்று ருக்குகளுக்கும் விச்வாமித்ரர் ருஷி, முதல் மந்த்ரத்திற்கு ஹிருக்காயத்ரம் சந்தஸ், கடைசி இரண்டு மந்த்ரங்களுக்கும் த்ரிஷ்டுப் சந்தஸ், மூன்றுக்கும் மித்ரன் தேவதை, என்றுர் பிருஹஸ்பதி. இம்மூன்று ருக்குகளாலும், ஸ்பஷ்டமாய் உதித்த மண்டலமுடைய ஸூர்ய பகவானை நோக்கி அஞ்சலியுடன் உபஸ்தானம் செய்ய வேண்டும்.

सायंसन्ध्याया मुपस्थाने मन्त्रविशेषमाह नारायणः – वारुणीभिरादित्यमुपस्थाय प्रदक्षिणं कुर्वन् दिशो नमस्कुर्यात् इति॥

वारुण्यश्च इमं मे वरुण श्रुधीभवमित्याद्याः । यद्यपि वारुणीभिर्वरुणस्यैवोपस्थानं लिङ्गवशात् प्रोक्तम्, तथाऽपि श्रुतेः प्राबल्यात् तया लिङ्गं बाधित्वा आदित्योपस्थान एव मन्त्रो विनियुज्यते ॥ पितामहः – इमं म इति गायत्रीं तत्त्वायामीति त्रिष्टुभम् । यच्चिद्धित इति गायत्रीं यत्किञ्च त्रैष्टुभं विदुः ॥ कितवास इति त्रिष्टुब् देवता वरुणः स्मृतः । तिसृणां तु शुनःशेफश्चतुर्थ्या वसिष्ठ उच्यते । पञ्चम्या अत्रिरित्येव मृषयः परिकीर्तिताः इति ॥

ஸாயங்காலத்தில் உபஸ்தானத்திலுள்ள மந்த்ர விசேஷத்தைச் சொல்லுகிறார் நாராயணர்:- வாருணமந்த்ரங்களால் ஸூர்யோபஸ்தானம் செய்து ப்ரதக்ஷிணம் செய்து கொண்டு திக்குகளை நமஸ்கரிக்க வேண்டும். இங்கு வாருணமந்த்ரங்களால் வருணனுக்கே உபஸ்தானம் லிங்கபலத்தால் ப்ராப்தமாகிறது. அப்படியாகினும், ச்ருதி ப்ரபலமானதால், ச்ருதியினால் லிங்கத்தைப் பாதித்து, ஸூர்யோபஸ்தானத்திலேயே மந்த்ரம் உபயோகிக்கப்படுகிறது. பிதாமஹர்:- 'இமம்மே' என்ற மந்த்ரத்திற்கு காயத்ரியும், 'தத்வாயாமி' என்பதற்கு த்ரிஷ்டுப்பும், 'யச்சித்திதே' என்பதற்குக் காயத்ரியும், 'யத்கிம்சேதம்' என்பதற்கு த்ரிஷ்டுப்பும், 'கிதவாஸ:' என்பதற்கு த்ரிஷ்டுப்பும் சந்தஸ்ஸுகளாம். எல்லாவற்றிற்கும் வருணன் தேவதை. முதல் மூன்று மந்த்ரங்களுக்கும் சுனச்சேபர் ருஷி. நாலாவது மந்த்ரத்திற்கு வஸிஷ்டர் ருஷி. ஐந்தாவதற்கு அத்ரி ருஷி எனச் சொல்லப்பட்டிருக்கின்றன.

बोधायनः – वारुणीभ्यां रात्रिमुपतिष्ठत इमं मे वरुण तत्त्वायामीति द्वाभ्यामेवमेव प्रातः प्राङ्मुखस्तिष्ठन् मैत्रीभ्या महरुपतिष्ठते मित्रस्य चर्षणीधृतो मित्रोजनान् यातयतीति द्वाभ्याम् । यदुपस्थकृतं पापं पद्भ्यां वा यत् कृतं भवेत् । बाहुभ्यां मनसा वाऽपि वाचा वा यत् कृतं भवेत् । सायं सन्ध्यामुपस्थाय तेन तस्मात् प्रमुच्यते ॥

रात्र्या चापि सन्धीयते न चैनं वरुणो गृह्णात्येवं प्रातरुपस्थाय रात्रिकृतात् पापात् प्रमुच्यतेऽह्ना चापि सन्धीयते मित्रश्चैनं गोपायत्यादित्यश्चैनं स्वर्गं लोकं नयति स एवमेवाहरहर होरात्रयोस्सन्धिषूपतिष्ठमानो ब्राह्मणो ब्रह्मलोकमभिजयति इति ॥

**போதாயனர்;-** வருண தேவதாகமான 'இமம்மே வருண', 'தத்வாயாமி' என்ற இரண்டு மந்த்ரங்களால் ராத்ரிக்கு உபஸ்தானம் செய்ய வேண்டும். இவ்விதமே காலையில் கிழக்கு முகமாய் நின்று கொண்டு, மித்ரதேவதாகமான 'மித்ரஸ்ய சர்ஷணீத்ருத:' 'மித்ரோ ஜநான் யாதயதி' என்ற இரண்டு மந்த்ரங்களால பகலுக்கு உபஸ்தானம் செய்ய வேண்டும். உபஸ்தத்தாலும், கால்களாலும், கைகளாலும், மனதினாலும், வாக்கினாலும் செய்த பாபத்தினின்றும், ஸாயங்கால ஸந்த்யோப ஸ்தானத்தால் விடுபடுகிறான். ராத்ரிதேவதையுடனும் சேருகிறான். வருணன் இவனைப் பீடிக்கமாட்டான். இவ்விதம் காலையில் உபஸ்தானம் செய்தால் ராத்ரியில் செய்த பாபத்தினின்றும் விடுபடுகிறான், பகல் தேவதையுடனும் சேருகிறான். மித்ரனும் இவனைக் காக்கிறான், ஆதித்யனுமிவனை ஸ்வர்க்கத்தை அடைவிக்கிறான். இவ்விதமே ப்ரதிதினமும் இரண்டு ஸந்திகளிலும் உபஸ்தானம் செய்யும் ப்ராம்ஹணன் ப்ரம்ஹலோகத்தை ஜயிக்கிறான்.

मध्यन्दिनोपस्थानमाह स एव – दर्भेष्वासीनो दर्भान् धारयमाणः प्राङ्मुखः सावित्रीं सहस्रकृत्व आवर्तयेत् शतकृत्वोऽपरिमितकृत्वो वा दशावरामथादित्यमुपतिष्ठत आसत्येनोद्वयं तमसस्पर्युदुत्यं चित्रं तच्चक्षुर्देवहितं य उदगादिति इति ॥ नारायणोऽपि – आसत्येनोद्वयं तम उदुत्यं चित्रमित्यपि । तच्चक्षुर्देव इति हंसः शुचिषदित्यपि ॥ एतज्जपेदूर्ध्व बाहुस्सूर्यं पश्यन् समाहितः इति ॥

மத்யாஹ்ன காலத்திலுபஸ்தானத்தைச் சொல்லுகிறார்- போதாயனரே:- தர்ப்பங்களில் உட்கார்ந்து தர்ப்பங்களைத் தரித்து கிழக்கு முகமாயிருந்து காயத்ரியை ஆயிரம் தடவை ஜபிக்க வேண்டும். அல்லது நூறு தடவை, அதிகக் கணக்கிலாவது ஜபிக்க வேண்டும். பத்துத் தடவை ஜபிப்பது கடைசி பக்ஷம். பிறகு, 'ஆஸத்யேந, உத்வயம் தமஸஸ்பரி, உதுத்யம், சித்ரம், தச்சக்ஷுர் தேவஹிதம், ய உதகாத் என்ற மந்த்ரங்களால் ஆதித்யோபஸ்தானம் செய்ய வேண்டும். நாராயணரும்:- ஆஸத்யேந, உத்வயம், உதுத்யம், சித்ரம், தச்சக்ஷுர்தேவ, ஹம்ஸச்சுசிஷத் என்ற இந்த மந்த்ரங்களைக் கவனமுள்ளவனாய், கைகளை உயரத் தூக்கியவனாய், ஸூர்யனைப் பார்ப்பவனாய் ஜபிக்க வேண்டும்.

शौनकस्तु विशेषमाह – उत्तमेत्यनुवाकेन चोद्वास्य परमां शुभाम्। सायं प्रातरुपस्थाय जातवेदस इत्यृचा ॥ इमं मे वरुण तत्त्वेति सायङ्काले विशेषतः । मित्रस्यचर्षणी धृतद्वाभ्यां प्रातः समाहितः ॥ पिशङ्गभृष्टि मित्यृचा मुखं स्पृष्ट्वा प्रदक्षिणम्। भद्रं कर्णेत्यृचैकया कर्णं स्पृष्ट्वा प्रदक्षिणम् ॥ केश्याग्निमित्यृचा पश्चात् शिखां स्पृष्ट्वा प्रदक्षिणम्। सन्ध्याकाले च सावित्रीं सर्वान् देवान् प्रणम्य च ॥ दिशश्च साधिपान्नत्वा गुरूनप्यभिवादयेत्। मध्याह्ने मण्डलं पश्यन्नुपतिष्ठेत भास्करम् ॥ कृताञ्जलिः पठेत् सूक्त मुदुत्यं जातवेदसम्। एवमादीनि सौर्याणि जपन्नीक्षेत भास्करम् इति ॥

சௌனகர்:- விசேஷம் சொல்லுகிறார் :- 'உத்தமே' என்னும் அனுவாகத்தால் காயத்ரியை உத்வாஸனம் செய்து, 'ஜாதவேதஸே' என்ற ருக்கினால் காலை மாலைகளில் உபஸ்தானம் செய்ய வேண்டும். இமம் மே வருண, தத்வாயாமி என்ற இரண்டு மந்த்ரங்கள் மாலையிலும், மித்ரஸ்ய சர்ஷணீ த்ருத: என்ற இரண்டு மந்த்ரங்கள் காலையிலுமாம். 'பிசங்கப்ருஷ்டிம்' என்ற ருக்கினால் முகத்தை ப்ரதக்ஷிணமாய்த் தொட்டு, 'பத்ரம்

கர்ணேபி:' என்ற ஒரு ருக்கினால் காதையும் ப்ரதக்ஷிணமாய்த் தொட்டு, 'கேச்யாக்னிம்' என்ற ருக்கினால் சிகையை ப்ரதக்ஷிணமாய்த் தொட்டு, ஸந்த்யா காலத்தில் ஸாவித்ரியையும், ஸகல தேவர்களையும் நமஸ்கரித்து, திக்குகளையும் திக்தேவதைகளையும் நமஸ்கரித்து குருக்களையும் நமஸ்கரிக்க வேண்டும். மத்யாஹ்னத்தில் மண்டலத்தைப் பார்த்துக் கொண்டு ஸூர்யோபஸ்தானம் செய்ய வேண்டும். அஞ்ஜலியுடன் 'உதுத்யம்' என்ற ஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். இது முதலான ஸூர்ய ஸூக்தங்களை ஜபித்துக் கொண்டு ஸூர்யனைப் பார்க்க வேண்டும்.

स्मृत्यर्थसारे – जपान्ते प्रातः सौरैर्मन्त्रैः सूर्यमुपतिष्ठते सायं वारुणैर्यद्वोभयत्र जातवेदसेन वैष्णवै रौद्रैर्वोपतिष्ठेत दिग्भ्यो देवताभ्यो नमस्कृत्य सन्ध्यायै सावित्र्यै गायत्र्यै सरस्वत्यै सर्वाभ्यो देवताभ्यो नमो नम इत्यादि यथास्वाचारं कुर्यात् इति ॥

ஸ்ம்ருத்யர்த் ஸாரத்தில்:- ஜபத்தின் முடிவில், காலையில் ஸூர்யதேவதாகமான மந்த்ரங்களால் ஸூர்யோபஸ்தானம் செய்ய வேண்டும். ஸாயங்காலத்தில் வாருண மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்ய வேண்டும். அல்லது, இரண்டு காலத்திலும், 'ஜாதவேதஸ' மந்த்ரம், விஷ்ணுதேவதாகமான மந்த்ரங்கள், ரௌத்ர மந்த்ரங்கள் இவைகளாலாவது உபஸ்தானம் செய்ய வேண்டும். திக்தேவதைகளையும் நமஸ்கரித்து, ஸந்த்யை, ஸாவித்ரீ, காயத்ரீ, ஸரஸ்வதீ, ஸகல தேவதைகள் இவர்களையும் அவரவர்களுக்குள்ள ஆசாரப்படி நமஸ்கரிக்க வேண்டும்.

भरद्वाजः – उपस्थाय नमस्कुर्यात् चतुस्सन्ध्यादिदेवताः । सन्ध्या पुरस्तात् सावित्री गायत्री च सरस्वती । एताः सन्ध्यादयः प्रोक्ताश्चतस्रो देवताः क्रमात् ॥ स्वस्वनाम चतुर्थ्यन्तं प्रणवादि नमोन्तकम् । मन्त्रमासामिह प्रोक्तं प्रणमेत् स्वस्वमन्त्रतः ॥ केचित्तु

मुनयः प्राहुः प्रतिमन्त्रं प्रदक्षिणम् ।। सर्वाभ्यो देवताभ्यश्च एतत् प्रणवसंपुटम् । उक्त्वा नमो नम इति प्रणमेत् सर्वदेवताः ।। कामोऽकार्षीन्मन्युरकार्षीन्नमोनम इत्यपि । उक्त्वा प्रदक्षिणेनैव देवीं विप्रोऽभिवादयेत् ।। कर्णयुग्मं स्वहस्ताभ्यां स्पृष्ट्वा जानुद्वयादिकम् ।। चरणाङ्गुष्ठपर्यन्तं संमृज्य तु शनैः शनैः । अभिवाद्य च गायत्रीं नमस्कुर्याद्दिशस्तथा ।। प्राची च दक्षिणा चैव प्रतीची चोत्तरोर्ध्वका । अधरा चान्तरिक्षं च भूमिश्चाष्टोदिता दिशः ।। एताः प्रदक्षिणेनैव प्रणमेत् स्वस्वमन्त्रतः ।। यमविष्णुविरूपाक्षसवितॄणामुपस्थितिम् । कुर्यात्तल्लिङ्गकैर्मन्त्रैः द्विजो याम्यादिदिङ्मुखः ।। एवं सन्ध्यामुपास्याथ पितरावग्रजान् गुरून् । त्रिवर्षपूर्वान् शिष्टांश्च पार्श्वस्थानभिवादयेत् इति ।

**பரத்வாஜர்:-** உபஸ்தானம் செய்த பிறகு ஸந்த்யை முதலிய நாலு தேவதைகளேயும் நமஸ்கரிக்க வேண்டும். ஸந்த்யை முதலில், பிறகு காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்வதீ, இவர்கள் முறையே நாலு தேவதைகள். அவரவரின் நாமத்தை நான்காவது வேற்றுமை முடிவிலுடையதாய் ப்ரணவத்தை முதலிலும் நம: என்பதை முடிவிலுடையதுமாய்ச் செய்து அந்த மந்த்ரங்களால் அவர்களே நமஸ்கரிக்க வேண்டும். (ஓம் காயத்ர்யை நம: என்றவாறு) சில முனிகள் எல்லா மந்த்ரங்களிலும் ப்ரதக்ஷிணம் சொல்கின்றனர். 'ஸர்வாப்யோ தேவதாப்ய:' என்ற மந்த்ரத்தை இருபுறமும் ப்ரணவத்துடன் சேர்த்து 'நமோ நம:' என்று சொல்லி ஸகல தேவதைகளேயும் நமஸ்கரிக்க வேண்டும், 'காமோ கார்ஷீன்மன்யுரகார்ஷீத்' என்று சொல்லியும் ப்ரதக்ஷிணமாய்த் தேவியை நமஸ்கரிக்க வேண்டும். தன் காதுகளேயும் கைகளால் தொட்டுப் பிறகு முழங்கால் முதல் கால் பெருவிரல் வரையில் மெதுவாய்த் துடைத்து அபிவாதனம் செய்ய வேண்டும். பிறகு திக்குகளே நமஸ்கரிக்க வேண்டும்.

கிழக்கு, தெற்கு, மேற்கு வடக்கு, மேல், கீழ், அந்தரிக்ஷம், பூமி என, திக்குகள் எட்டு என்று சொல்லப்பட்டுள்ளன. இவைகளையும் அவரவர் நாம மந்த்ரத்தால் ப்ரதக்ஷிணமாய் நமஸ்கரிக்க வேண்டும். யமன், விஷ்ணு, விரூபாக்ஷன், ஸவிதா இவர்களுக்கும் அவரவர் மந்த்ரத்தால் தெற்கு முதலான திக்குகளுக்கு எதிராய் இருந்து உபஸ்தானம் செய்ய வேண்டும். இவ்விதம் ஸந்த்யையை உபாஸித்துப் பிறகு மாதா பிதாக்கள், ஜ்யேஷ்ட ப்ராதாக்கள், குருக்கள், மூன்று வயது பெரியோராயும் சிஷ்டராயுமுள்ள பக்கத்திலிருப்பவரையும் நமஸ்கரிக்க வேண்டும்.

चन्द्रिकायाम् – आत्मपादौ तथा भूमिं सन्ध्याकालेऽभिवादयेत्। आयुर्विद्यां धनारोग्ये प्राप्नोति पुरुषस्सदा इति ॥ स्मृत्यर्थसारे – सावित्र्यादिक्रियाः सर्वा आदित्याभिमुखश्चरेत्। देवालयसमीपे तु तमेवाभिमुखश्चरेत्॥ जपस्थानान्न निर्गच्छेत् देवतासन्निधौ क्वचित्। प्रदक्षिणं नमस्कारं न कुर्याद्देवतालये इति॥ हारीतः – आर्द्रवासा जले कुर्यात् तर्पणाचमनं जपम्। उपस्थातुं न निर्गच्छेत् वर्जयेच्च प्रदक्षिणम् इति॥

சந்த்ரிகையில்:- தன் பாதங்களையும், பூமியையும், ஸந்த்யா காலத்தில் அபிவாதனம் செய்ய வேண்டும். இவ்விதம் செய்பவன் ஆயுள், வித்யை, தனம், ஆரோக்யம் இவைகளை எப்பொழுதுமடைகிறான். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- காயத்ரீ ஜபம் முதலிய க்ரியைகளை ஸூர்யனுக்கு அபிமுகமாய்ச் செய்ய வேண்டும். தேவாலய ஸமீபத்தில் செய்தால் அதற்கு அபிமுகமாகவே செய்ய வேண்டும். தேவதாஸன்னிதியில் செய்தால் ஜபஸ்தானத்தினின்றும் ஒருகாலும் வெளியேறக் கூடாது. ப்ரதக்ஷிணம் நமஸ்காரம் இவைகளையும் தேவாலயத்திற்குள் செய்யக் கூடாது. ஹாரீதர்:- ஈரவஸ்த்ரத்துடனிருப்பவன் தர்ப்பணம், ஆசமனம், ஜபம் இவைகளை ஜலத்திலேயே செய்ய வேண்டும்.

உபஸ்தானம் செய்வதற்காக வெளியேற வேண்டியதில்லை. ப்ரதக்ஷிணமும் செய்யக் கூடாது.

मन्त्रार्थस्तु –उत्तमे शिखरे ।। देवी - देवनशीला । विभक्तिव्यत्ययः । देवनशीले हे देवि ! भूम्यामागत्य ब्राह्मणेभ्यः अस्मभ्यमनुज्ञानं कृत्वा उत्तमे उत्कृष्टतमे शिखरे - सर्वस्मात् उच्छ्रिते पर्वतस्य सुमेरोर्मूर्ध्नि ब्रह्मलोके स्वस्थाने यथासुखं गच्छ ।।

**உபஸ்தான மந்த்ரார்த்தமோவெனில்:-** 'உத்தமே சிகரே' 'தேவீ - ப்ரகாசிப்பவள். வேற்றுமை மாறுதல். ஓ தேவியே! பூமியில் வந்து, ப்ராம்ஹணர்களாகிய எங்களுக்கு அனுக்ஞை கொடுத்து, எல்லாவற்றிலும் உயர்ந்ததான ஸுமேரு பர்வதத்தின் உச்சியில் ப்ரம்ஹ லோகமாகிய உன் ஸ்தானத்தில் ஸுகமாய்ச் செல்.

मित्रस्येत्यादि । मित्रस्य - सूर्यस्य । चर्षणयः - मनुष्याः । तान् धारयति वृष्टिप्रदानद्वारेति चर्षणीधृत् तस्य । श्रव इति दीप्तिनाम । तदिहोपचारात् तद्वति मण्डले वर्तते । देवस्य - प्रकाशमानस्य । सानसिं मण्डलविशेषणमेतत् । षण सम्भक्तावित्यस्य असुन् प्रत्ययान्तस्य छान्दसमेतद्रूपम् । योगिभिः सम्भजनीयमित्यर्थः । सत्यं - परमार्थभूतम् । चित्रश्रवस्तमम् - चित्राणि श्रवांसि तेजांसि येषामग्न्यादीनां त इमे चित्रश्रवसः । तेषां मध्ये उत्कृष्टम् । एवं भूतं वयं वन्दामहे इति वाक्यशेषः ।

**மித்ரஸ்ய முதலியது:-** *மித்ரஸ்ய* - ஸூர்யனுடைய, *சர்ஷணீத் ருத:-* மழையைக் கொடுப்பதால் மனிதர்களைப் போஷிப்பவரான, 'ச்ரவ:' என்பது ப்ரகாசத்திற்குப் பெயர். அது இங்கு உபசாரத்தால் ப்ரகாசமுள்ள மண்டலத்தைச் சொல்லுகிறது. தேவஸ்ய - ப்ரகாசிப்பவனுடைய. ஸாநஸிம் - இது மண்டலத்திற்கு விசேஷணம். 'ஷண' என்ற தாதுவின் பேரில் வந்த சாந்தஸரூபம். யோகிகளால் உபாஸிக்கக் கூடியதென்பது பொருள். ஸத்யம் -

பரமார்த்தமாயிருப்பது. சித்ரச்ரவஸ்தமம் - ஆச்சர்யமான தேஜஸ்ஸுகளையுடைய அக்னி முதலியவர்களுக்குள் சிறந்தது. இவ்விதமாகியதை 'நாங்கள் நமஸ்கரிக்கின்றோம்' என்று வாக்ய சேஷம், மனிதர்களைப் போஷிப்பவரும், ப்ரகாசிப்பவருமான மித்ரனுடையதும் எல்லோராலும் உபாஸிக்கக் கூடியதும், ஸத்யமானதும், ஸகல தேஜஸ்ஸுகளிலும் சிறந்ததுமான மண்டலத்தை நாம் நமஸ்கரிக்கின்றோம் என்பது பொருள்.

मित्रो जनान् - सर्वमिदं करतलामलकवत् प्रजानन् - पश्यन् मित्रः - सूर्यः जनान् यातयति - व्यापारवतः करोति। मित्रो दाधार - मित्र एव वृष्टिप्रदानेन धारयति। पृथिवीं - पृथिवीस्थं प्राणिजातम्। उत द्यां - दिवमपि। उपलक्षणञ्चैतत्सकलभुवनानाम्। किञ्च मित्रः कृष्टीः। कृष्टयो मनुष्याः। तान् पुण्यपापयोर्वर्तमानान्, अनिमिषा। सुपां सुलुगित्याकारः। अनिमिषेण दिव्येन चक्षुषा अभिचष्टे - आभिमुख्येन पश्यति यस्तस्मै सत्याय - नित्यरूपाय मित्राय हव्यं चरुपुरोडाशादि। घृतवत् - घृतसिक्तम्। विधेम - दद्म इत्यर्थः।

மித்ரோஜநான்:- காணப்படும் எல்லாவற்றையும். உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல், ப்ரஜாநன் - பார்க்கின்ற, மித்ர: - ஸூர்யன், ஜநான் = ஜனங்களை, யாதயதி - வ்யாபாரம் உள்ளவர்களாக்குகிறான். மித்ரோ தாதார - மித்ரனே மழையைக் கொடுப்பதால் போஷிக்கின்றான். ப்ருதிவீம் - பூமியிலுள்ள ப்ராணி ஸமூஹத்தை, உத த்யாம் - ஸ்வர்க்கத்தையும், ஸகல லோகங்களுக்கும் உபலக்ஷணமிது. இன்னும் - மித்ர:= மித்ரன், க்ருஷ்டீ: - க்ருஷ்டி சப்தம் மனிதர்களைச் சொல்லுகின்றது. புண்ய பாப கர்மங்களைச் செய்யும் மனிதர்களை, அனிமிஷா= இமையில்லாத திவ்ய நேத்ரத்தால் அபிசஷ்டே - நேராகப் பார்க்கிறான். எவன் இவ்வித மிருக்கின்றானோ அந்த, ஸத்யாய = நித்ய ரூபனான, மித்ராய - ஸூர்யனின் பொருட்டு, ஹவ்யம் =

சருபுரோடாசம் முதலியதை, க்ருதவத் - நெய்யுடன் கூடியதாய், விதேம - கொடுக்கின்றோம் என்று பொருள்.

प्रसमित्र मर्तो अस्तु। हे मित्र। सः मर्तः - मर्त्यः प्रास्तु भवतु। कीदृशः? प्रयस्वान् - प्रय इत्यन्ननाम तद्वान्। भूम्नि मतुप् प्रत्ययः। बह्वन्नो भवतु। कोऽसौ? यो यजमानः ते तुभ्यम् आदित्य-अदितेः पुत्र! शिक्षति ददाति। व्रतमिति कर्मनाम। व्रतेन यागाख्यकर्मणा। प्रकृतत्वात् घृतवद्धविरिति सम्बध्यते। कर्मणि यो हविर्ददाति, सः प्रयस्वान् भवत्विति यावत्॥

ப்ரஸமித்ர மர்த்தோ அஸ்து:- ஹேமித்ர - ஓ ஸூர்யனே! ஸ: மர்த்த:- அந்த மனிதன், ப்ராஸ்து - ச்ரேயஸ்ஸுடனிருக்க வேண்டும். எவ்விதமாகியவனாய்? ப்ரயஸ்வான - ப்ரய: என்பது அன்னத்திற்குப் பெயர். அன்னத்தை உடையவனாய். 'மதுப்' ப்ரத்யயத்தால், அதிக அன்னமுள்ளவனாய் இருக்க வேண்டும் என்பதாம். எந்த மனிதன்? ய:- எந்த யஜமானன், தே= உனக்கு, ஆதித்ய - அதிதியின் புத்ரனே? சிக்ஷதி - கொடுக்கின்றானோ. 'வ்ரதம்' என்னும் பதம் கர்மத்தைச் சொல்லும், வ்ரதேந - யாகமெனும் கர்மத்தினால், ப்ரக்ருதமானதால் 'நெய்யுடன் கூடிய ஹவிஸ்ஸை' என்பது இங்கு சேர்க்கப்படுகிறது. யாகத்தில் எவன் ஹவிஸ்ஸைக் கொடுக்கின்றானோ அவன் மிகுந்த அன்னம் உடையவனாயிருக்க வேண்டுமென்பது கருத்து.

न केवलमन्नवानेव भवत्विति। किन्तर्हि? न हन्यते मृत्युना। न जीयते। ज्या वयोहानौ। शतवत्सरलक्षणादायुषो न जीयते। त्वोतः - उत इति वेञो रक्षणार्थस्यैतद्रूपम्। त्वया रक्षित इत्यर्थः। नैनम् एनं त्वदाराधनपरम्। अंहः - पापं नाश्नोति - न संबध्नाति। अन्तितः - समीपे इह जन्मनि। दूरात् - पूर्वजन्मनि कृतमित्यर्थः।

இவ்வளவு மட்டுமல்ல. இன்னுமெது? ந ஹன்யதே - ம்ருத்யுவினால் கொல்லப்பட மாட்டான். ந ஜீயதே -

நூறுவயதளவுள்ள ஆயுளினின்றும் குறையமாட்டான். த்வோத:- உன்னால் ரக்ஷிக்கப்பட்டவன். ஏநம் - உன்னை ஆராதிக்குமிவனை, அம்ஹ: - பாபமானது நாச்நோதி - கட்டுப்படுத்துவதில்லை. அந்தித: - ஸமீபத்தில், இந்த ஜன்மத்திலும், தூராத் - முன் ஜன்மத்திலும், செய்யப்பட்டுள்ள பாபம் கட்டுப்படுத்துவதில்லை என்பதாம்.

शुनश्शेपो वरुणं प्रार्थयते - इमं मे वरुणेति। हे वरुण ! मे इमम् - अस्मदीयं हवं - स्तोत्रम्। श्रुधि - शृणु। श्रुत्वा च मामद्यैव मृडय - सुखय । यस्मादहं त्वां अवस्युः रक्षणमात्मन इच्छुस्सन् आचके आभिमुख्ये न प्रार्थयामि। कै गै शब्दे ।।

சுனச்சேபன் வருணனை ப்ரார்த்திக்கின்றான் இமம்மேவருண என்பதால். வருண - ஓ வருணனே! மே - என்னுடைய, இமம் - இந்த, ஹவம் - ஸ்தோத்ரத்தை, ச்ருதி - கேட்கக் கடவாய். கேட்ட பிறகு என்னை, அத்யாச - இப்பொழுதே, ம்ருடய - ஸுகிக்கச் செய். எதனால், நான், த்வாம் - உன்னை, அவஸ்யு:- தனக்கு ரக்ஷணத்தை விரும்பியவனாய், ஆசகே - அபிமுகனாய் ப்ரார்த்திக்கின்றேனோ அதனால் என்னை ஸுகிக்கச் செய்..

तत्त्वा यामि। हे वरुण ब्रह्मणा मन्त्रेण वन्दमानः स्तुवन् अहम्। तत् - तदर्थम् । चतुर्थ्या लुक् । तदर्थमेव त्वां यामि - भजे । यजमानोऽपि सर्वस्तदेवाशास्ते। हविर्भिः - चरुपुरोडाशादिभिः। हे उरुशंस - बहुभिः यजमानैः स्तूयमान? इह - अस्मिन् काले। अस्मदीयां विज्ञापनां अहेडमानः - अक्रुध्यन्, बोधि - बुध्यस्व । छान्दसं रूपम्। किं पुनस्तत् प्रार्थनीयं इत्यत आह मा न इति। नः - अस्माकम्। आयुः - जीवितम्। मा प्रमोषीः - मा प्रहार्षीः ।।

தத்வாயாமி:- ஹே வருண - ஓ வருணனே! ப்ரம்ஹணா - மந்த்ரத்தினால், வந்தமான:- ஸ்துதிக்கின்ற

நான், தத்- அதற்காகவே, த்வா - உன்னை, யாமி - ஸேவிக்கின்றேன், யஜமான:- யஜிப்பவன் எவனும், ததாசாஸ்தே - அதையேதான் வேண்டுகிறான். ஹவிர்ப்பி: - சரு புரோடாசம் முதலியவைகளால். ஹே உருசம்ஸ - அநேக யஜமானர்களால் ஸ்துதிக்கப்படுகின்றவனே! இஹ- இக்காலத்தில், என்னுடைய ப்ரார்த்தனையை, அஹேடமான:- கோபிக்காதவனாய், போதி - அறிந்து கொள்ளும். ப்ரார்த்திக்கத் தகுந்தது என்னவெனில், ந:= எங்களுடைய, ஆயு:= ஆயுளை, மாப்ரமோஷீ:= அபஹரிக்க வேண்டாம்.

यच्छिद्धि ते। चित् हि इति द्वावपि निपातावनर्थकौ। ते तव। व्रतमित्यनेन सम्बध्यते। हे देव वरुण! विशः मनुष्याः विवेकशून्याः यथा विहितं कर्म लुम्पन्ति, तथा वयमपि ते व्रतं - परिचर्याकर्म प्रमिनीमसि - हिंसितवन्तः स्म। द्यविद्यवि - दिनेदिने॥

யச்சித்திதே:- சித், ஹி, என்ற இரண்டுக்கும் அர்த்தமில்லை. 'தே' என்ற பதம் 'வ்ரதம்' என்பதுடன் சேருகிறது. ஹே தேவ - வருண - ஓ தேவனாகிய வருணனே! விச:- மனிதர்கள், யதா - எப்படி, விவேகம் இல்லாதவராய் விஹித கர்மங்களைத் தொலைக் கின்றார்களோ அப்படி நாங்களும் தே - உன்னுடைய, வ்ரதம் - பரிசர்யையை, மிநீமஸி - ஹிம்ஸித்தோம், விடுத்தோம். த்யவித்யவி - ப்ரதிதினமும்.

यत्किञ्चेदं। यत् किञ्च - यत् किञ्चित्। इदं - ईदृशं। हे वरुण! दैव्ये देवसमूहे जने अभिद्रोहं - अपचारं पापरूपम्। मनुष्या वयं चरामसि - कृतवन्तः। अचित्ती - प्रथमाबहुवचनस्य ईकारः। तव, अचित्ताः अज्ञानिनो वयं धर्मा - धर्मं परिचर्यारूपं युयोपिम - विनाशितवन्तः। मेति प्रतिषेधार्थः। नः - अस्मान् तस्मादेनसः - पापात् मा रीरिषः - मा हिंसीरित्यर्थः॥

யத்கிஞ்சேதம்:- யத்கிஞ்ச - எது சிலது, இதம் - இவ்விதமான, ஓ வருண! தைவ்யே ஜநே - தேவ ஸமூஹ ஜனத்தினிடத்தில், அபித்ரோஹம் - பாபரூபமான அபசாரத்தை, மனுஷ்யா:- மனிதராகிய நாங்கள், சராமஸி - செய்தோமோ, அசித்தீ - அஜ்ஞானிகளாகிய நாங்கள், தவ - உன்னுடைய, தர்மா - பரிசர்யாரூபமான தர்மத்தை, யத்யுயோபிம - செய்யாமற் கெடுத்தோமென்பதும் யாதோ, தஸ்மாத் ஏநஸ:- அந்தப் பாபத்தினுல், ந:- எங்களை, மாரீரிஷ:- நீர் ஹிம்ஸிக்க வேண்டாம்.

कितवासः । यदस्मद्विषये कितवासः - कितवाः रिरिपुः - पापमारोपयन्ति । नदीवि - देवनस्थान इव । यद्वाघेति पादरूपेण एवकारार्थे वर्तते । सत्यमेव उत यन्न विद्म - यदपि वयं न जानीमः । यथा कितवाः देवनस्थाने परस्परं सत्यमसत्यं च वदन्ति, तद्वत् सर्वा ता - सर्वाणि तानि विष्य - अपनय । शिथिरेव - शिथिलानीव - अथ - अनन्तरम् । ते - तव प्रियासः स्यामेत्यर्थः ॥

கிதவாஸ:- எங்கள் விஷயத்தில், கிதவாஸ:- சூதாடிகள். யத்ரிரிபு:- எந்தப் பாபத்தைச் சுமத்துகின்றனரோ, நதீவி - சூதாடும் இடத்திற்போல், 'யத்வாகா' என்பது பாதபூரணத்திற்காக. 'ஏவ' என்ற அர்த்தத்தில் இருக்கிறது. ஸத்யமேவ உதயந்நவித்ம - உண்மையாயினும் எதை நாங்களறியோமோ, சூதாடிகள் சூதாடுமிடத்தில் எப்படி மெய்யும் பொய்யும் சொல்லுகிறுர்களோ அதுபோல். ஸர்வாதா - அவை எல்லாவற்றையும், விஷ்ய - நீர் போக்க வேண்டும். சிதிரேவ பலமற்றவைகளைப் போல், ஓ வருண, அத - பிறகு, தே - உமக்கு, ப்ரியாஸ:- ப்ரியர்களாக, ஸ்யாம - ஆகக்கடவோம்.

आसत्येनेत्यादि । सत्येन - सत्सु सतां समूहादिषु तायमानेन रजसा - ज्योतिषा आवर्तमानः । अमृतं मर्त्यं च - अमरणधर्मणो देवान् मरणधर्मणो मनुष्यांश्च निवेशयन् - व्यापारयन् । आदित्यो हि

स्वेन तेजसा सर्वान् व्यापारयति । हिरण्ययेन स्वर्णमयेन रथेन सविता - कर्मप्रसविता अभ्यनुज्ञाता देवः आयाति । भुवना विपश्यन् - भुवनानि साक्षिरूपेण विविधं पश्यन् सन्नित्यर्थः ।

ஆஸத்யேந:- ஸத்யேந - ஸத்துக்களின் ஸமூஹம் முதலியவைகளில் விரிந்துள்ள, தூண் குடம் முதலியவற்றில் ரஜஸா - ஒளியினுல், ஆவர்த்தமான:- வந்து கொண்டிருப்பவனும், அம்ருதம் மர்த்யம்ச - அமரண தர்மிகளான தேவர்களையும், மரண தர்மிகளான மனிதர்களையும், நிவேசயன் - ஏவுகின்றவனுயும், (ஆதித்யனல்லவோ தனது தேஜஸ்ஸினுல் எல்லோரையும் ஏவுகின்ருர்.) ஹிரண்யயேந - ஸ்வர்ணமயமான, ரதேந - தேரினுல், ஸவிதா - கார்யங்களில் உத்தரவளிப்பவனுன, தேவ:- ஸூர்யன் ஆயாதி - வருகிருர். புவநா விபச்யந் - ஸாக்ஷி ரூபத்துடன் உலகங்களைப் பலவிதமாய்ப் பார்ப்பவனுய்க் கொண்டு, என்பது பொருள்.

उद्वयन्तमसस्परि । उत् उत्थितम् । तमसस्परि । परिर्वर्जने । तमो विनाश्योदितमिति यावत् । ज्योतिः - तेजोमयम् । उत्तरं - उत्कृष्टं देवं, देवत्रा - देवानामपि त्रातारं सूर्यं पश्यन्तो वयं उत्तमं ज्योतिरगन्म गमिष्याम इत्यर्थः ।

உத்வயம் தமஸஸ்பரி:- தமஸஸ்பரி - இருளை நாசப்படுத்தி, உத் - எழுந்தவனும், ஜ்யோதி:- தேஜோமயனும், உத்தரம் - சிறந்தவனும், தேவத்ரா - தேவர்களையும் காப்பவனுமாகிய, தேவம் ஸூர்யம் - தேவனுகிய ஸூர்யனை, பச்யந்த:- பார்க்கின்ற நாம், உத்தமம் ஜ்யோதி:- சிறந்த ஜோதியை, அகன்ம - அடையப் போகின்ருேம்.

उदुत्यम् - उ इति निपातोऽवधारणार्थः । त्यं - तं, जातानि भूतानि वेत्तीति जातवेदाः तम् । देवं, केतवः - सहस्रसङ्ख्या दीधितयः उद्वहन्ति - उद्गमयन्ति । किमर्थं? दृशे - दर्शनाय । विश्वाय - विश्वस्य,

सूर्यं - सरणशीलम्।

உதுத்யம்:- த்யம் - அந்த, ஜாதவேதஸம் - உண்டாகிய ப்ராணிகளை அறிபவனுன, தேவம் - தேவனுகிய, ஸுர்யம் - ஸுர்யனை, கேதவ: - ஆயிரக்கணக்கான கிரணங்கள், உத்வஹந்தி - வெளியிடுகின்றன. எதற்கெனில், த்ருசே - தர்சனத்திற்காக, விச்வாய - உலகத்தின்.

चित्रन्देवानाम्। देवानां - अग्न्यादीनां मध्ये, चित्रं - अद्भुतं पूज्यं वा। अनीकशब्दस्सेनावचनः। उदगात्। देवद्विषां अपनोदक इत्यर्थः। मित्रस्य वरुणस्य अग्नेश्च चक्षुः। चक्षुर्देवानां किमुत मनुष्याणामिति श्रुतेः। आप्राः - प्रथमपुरुषस्य स्थाने मध्यमपुरुषः। द्यावापृथिवी अन्तरिक्षं सर्वान् लोकान् स्वेन महिम्ना पूरयति। परीत्य लोकान् परीत्य भूतानि परीत्य सर्वाः प्रदिशो दिशश्चेति श्रुतेः। सूर्य आत्मा, जगतः - जङ्गमस्य मनुष्यादेः, तस्थुषः - स्थावरस्य, सर्वस्यायमेव आत्मरूपेणावस्थितः।

சித்ரம் தேவாநாம்:- தேவாநாம் - அக்னி முதலியவர்களுள், சித்ரம் - ஆச்சரியமான, அனீகம் - சேனை, உதகாத் - வெளியாயிற்று. தேவர்களின் சத்ருக்களைப் போக்குகின்றவனிவன் என்று பொருள். மித்ரஸ்ய - மித்ரனுக்கும், வருணஸ்ய - வருணனுக்கும், அக்னே:- அக்னிக்கும், சக்ஷு:- கண்ணுகிய ஸுர்யன், த்யாவாப்ருதிவீ அந்தரிக்ஷம் - எல்லா உலகங்களையும், தன் மஹிமையினுல், ஆப்ரா:- நிரப்புகிருன், 'பரீத்யலோகான்' என்ற ச்ருதியால். ஸுர்ய:- இவ்விதமான ஸுர்யன், ஜகத:- ஜங்கமமான மனிதர் முதலியதும், தஸ்துஷ: - ஸ்தாவரமாகியதுமான, ஜகத: - உலகத்திற்கு, ஆத்மா - ஆத்ம ரூபியாய் இருக்கின்ருர்.

तच्चक्षुः – तत् - आदित्याख्यं ज्योतिः, चक्षुः - सर्वस्य साक्षिभूतं, देवहितं - अग्निहोत्रादिहविःप्रदानार्थमहोरात्रादि-

कालविभाजकतया देवानां हितकरम्। पुरस्तात् - पूर्वस्यां दिशि, शुक्रं - शुक्लं दीप्तिः, सा यस्यास्तीति मत्वर्थीयोऽच् प्रत्ययः । उच्चरत् - उद्गच्छत्, ज्योतिरादित्याख्यं पश्येम। कियन्तं कालं? शरदः शतम्। जीवेमेति सर्वसम्पद्भिः सह जीवनमाशास्यते, न प्राणधारणमात्रम्। नन्दाम - समृद्धाः स्याम। शृणवाम - प्रियं शृणुवाम। प्रब्रवाम - प्रवक्तारः स्याम । शत्रुभिरजीताः स्याम । ज्योक्च सूर्यं दृशे । दीर्घकालमुक्तलक्षणं सूर्यं दृशे - पश्येम॥

தச்சக்ஷு:- தத் - அந்த ஆதித்யனெனும் ஒளியாகியதும், சக்ஷு:- எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியா யிருப்பதும், தேவஹிதம் - அக்னிஹோத்ராதிகளில் ஹவிஸ்ஸை அளிப்பதற்கு இரவு பகல் முதலிய காலங்களைப் பிரிப்பதால் தேவர்களுக்கு நன்மையைச் செய்வதும், புரஸ்தாத் - கிழக்குத் திக்கில், சுக்ரம், - ப்ரகாசமுள்ளதாய், உச்சரத் - வெளிவருவதுமான, ஆதித்யனெனும் ஒளியைப் பார்க்கக் கடவோம். எவ்வளவு காலம்வரை? எனில், சரதச்சதம் = இடைவிடாது நூறு வருஷங்கள் வரை, ஜீவேம - நூறு வருஷம் பிழைத்திருக்கக் கடவோம். ஸகல ஸம்பத்துக்களுடன் கூடிய பிழைப்பே கோரப்படுகிறது, ப்ராணனைத் தரித்திருப்பது மட்டில் அல்ல. நந்தாம - நிறைந்தவராய் இருப்போம். மோதாம - ஸந்தோஷிப்பவராய் இருப்போம். பவாம - ஐச்வர்யத்திற்குப் பாத்ரமாய் இருப்போம். ச்ருணவாம - ப்ரியத்தையே கேட்போம். ப்ரப்ரவாம - நன்றாய்ப் பேசுகின்றவர்களாய் இருப்போம். அஜீதா: ஸ்யாம - சத்ருக்களால் ஜயிக்கப்படாதவர்களாய் இருப்போம், நூறு வருஷங்களும். ஜ்யோக் - நீண்டகாலம் ஸூர்யம் - முன் சொல்லிய லக்ஷணங்களுடைய ஸூர்யனை, த்ருசே - பார்க்கக் கடவோம்.

य उदगात्। महतः अर्णवात् - समुद्रात् विभ्राजमानः - विराजमानः। सरिरस्य - सलिलस्य मध्यात्। समा वृषभः - श्रेष्ठः

लोहिताक्षः - पङ्कजाक्षः, सूर्यः। विपश्चित् - विशुद्धदृष्टिः, मनसा मां पुनातु शोधयतु स्वपरिग्रहयोग्यं स्वयमेव करोत्वित्यर्थः ॥

ய உதகாத்:- ய:- எவன், மஹத: அர்ணவாத் - பெரிதான ஸமுத்ரத்தினின்றும், ஸரிரஸ்ய மத்யாத் - ஜலத்தின் நடுவினின்றும், விப்ராஜமாந: - நன்ருய் ப்ரகாசிப்பவனுய் உதகாத் - உதித்தாேனு வ்ருஷப: - ச்ரேஷ்டனும், லோஹிதாக்ஷ: - தாமரைக் கண்ணனும், விபச்சித் - விசுத்தக் ஞானமுடையவனுமான, ஸ: ஸூர்ய:- அந்த ஸூர்யன், மா - என்னை, மனஸா - மனதினுல், புநாது = சுத்தனுக்க வேண்டும். தான் ஏற்றுக் கொள்ள யோக்யனுகத் தானே செய்ய வேண்டும் என்று பொருள்.

अन्यान्यपि पापक्षयार्थानि जप्यान्याह यमः – जपेद्वाऽप्यस्यवामीयं पावमानीरथापि वा। कुन्तापं वालखिल्यांश्च निवित्प्रैषं वृषाकपिम्॥ होतॄन् रुद्रान् पितॄन् जप्त्वा मुच्यते सर्वपातकैः। अस्यवामीयं - अस्यवामस्य पलितस्य इति द्विपञ्चाशदृचः। पावमानीः - पवमानः सुवर्जन इत्याद्याः। होतॄन् - चित्तिः स्रुगित्यादीन्। पितॄन् - परेयिवांसं इत्यादीनि ॥ वसिष्ठः – सर्ववेदपवित्राणि वक्ष्याम्यहमतः परम्। येषां जपैस्तु पापौघान्मुच्यते नात्र संशयः॥ अघमर्षणं देवकृतः शुद्धवत्यस्तरत्समाः। कूश्माण्ड्यः पावमान्यश्च दुर्गासावित्र्यथैव च। अभिषङ्गाः पदस्तोभाः सामानि व्याहृतीस्तथा। वारुणानि च सामानि गायत्रं रैवतं तथा॥ अब्लिङ्गा बार्हस्पत्यं च वाक्सूक्तं मध्वृचस्तथा। शतरुद्रीयमथर्वशिरस्त्रिसुपर्णं महाव्रतम्। गोसूक्तमश्वसूक्तं च इन्द्रशुद्धी च सामनी। त्रीण्याज्यदोहाग्निरथन्तराश्च अग्नेर्व्रतं वामदेव्यं बृहच्च। एतानि जप्यानि पुनन्ति जन्तून् जातिस्मरत्वं लभते य इच्छेत् इति॥

பாபத்தைப் போக்குவதற்கு ஜபிக்கக் கூடிய வேறு சிலவற்றையும் சொல்லுகிருர். யமன்:- 'அஸ்யவாமஸ்ய

பலிதஸ்ய' என்பது முதல் 52- ருக்குகளுள்ள 'அஸ்யவாமீயம்' என்கிற ஸூக்தத்தையாவது, 'பவமானஸ்ஸுவர்ஜந:' என்பது முதலிய ருக்குகளையாவது, குந்தாபம், வாலகில்யங்கள், நிவித் ப்ரைஷம், வ்ருஷாகபி, ஹோத்ரு மந்த்ரங்கள், ருத்ரமந்த்ரங்கள், பித்ருமேத மந்த்ரங்கள், இவைகளையாவது ஜபித்தால் ஸகல பாபங்களாலும் விடுபடுகிறான். வஸிஷ்டர்:- ஸகல வேதங்களிலும் பரிசுத்தமான மந்த்ரங்களை இனி நான் சொல்லப் போகிறேன். இவைகளை ஜபித்தால் மிகவான பாபங்களினின்றும் விடுபடுவான். இதில் ஸந்தேஹமில்லை.

अघमर्षणं - ऋतश्चेत्याद्यास्तिस्रः । देवकृतः - देवकृतस्यैन-सोऽवयजनमित्यादयः । शुद्धवत्यः - एतोन्विन्द्रंस्तवा-मेत्यादयस्तिस्रः । तरस्तमाः - तरस्तमन्दीधावतीत्याद्याश्चतस्रः । कूश्माण्ड्यः - यद्देवा देवहेलनमित्यनुवाकत्रयम् । पावमान्यः - स्वादिष्ठया मदिष्ठया, पवमानः सुवर्जन इत्येवमाद्याः ।। दुर्गा - जातवेदसे सुनवाम सोममित्येका ऋक् । सावित्री - तत्सवितुरिति । अभिषङ्गादयो रैवतान्ताः सामविशेषाः । अब्लिङ्गाः - आपोहिष्ठेत्याद्याः । बार्हस्पत्यं - यस्तस्तम्भसहसेत्येकादशार्चम् । वाक्सूक्तम् - अहं रुद्रेभिर्वसुभिरिति त्यृचम् । मध्वृचः - मधुवाता ऋतायत इत्याद्यास्तिस्रः । शतरुद्रीयं - नमस्ते रुद्र मन्यव इत्येकादशानुवाकाः । त्रिसुपर्णम् - ब्रह्ममेतु मामित्याद्यनुवाकत्रयम् । महाव्रतं - राजनं नाम साम । गोसूक्तं - आगावो अग्मन्नित्यष्टर्चम् । अश्वसूक्तं - मानो मित्रो वरुण इति द्वाविंशार्चम् । इन्द्रशुध्यादयो बृहदन्तास्साम विशेषाः ।।

*அகமர்ஷணம், ('ருதம்ச' என்பது முதல் மூன்று ருக்குகள்.) தேவக்ருதம், (தேவக்ருதஸ்யைநஸோவயஜநம்*

என்பது முதலியவை.) சுத்தவதிகள், ('ஏதோந்வித்ரம் ஸ்தவாம முதலிய 3- ருக்குகள்) தரத்ஸமைகள், ('தரத்ஸமந்தீதாவது' என்பது முதல் நான்கு ருக்குகள்.) கூச்மாண்டிகள், ('யத்தேவாதேவஹேளநம், என்பது முதல் 3 அனுவாகங்கள், பாவமானிகள், ஸ்வாதிஷ்டயா மதிஷ்டயா, பவமானஸ்ஸுவர்ஜன: இது முதலியவைகள், துர்க்கை, (ஜாதவேதஸேஸுநவாமஸோமம் என்று ஒரு ருக்.) ஸாவித்ரீ (தத்ஸவிது: என்ற ருக்,) அபிஷங்கங்கள், பதஸ்தோபங்கள், வ்யாஹ்ருதிகள், வாருணங்கள், காயத்ரம், ரைவதம், (அபிஷங்கம் முதல் ரைவதம் வரையிலுள்ளவை ஸாமபேதங்கள்) அப்லிங்க ருக்குகள் ('ஆபோஹிஷ்டா' முதலியவைகள்.) பார்ஹஸ்பத்யம் ('யஸ்தஸ்தம்பஸஹஸா' என்பது முதலான 11- ருக்குகளுள்ள் ஸூக்தம்) வாக்ஸூக்தம் ('அஹம்ருத்ரேபிர்வஸுபி:' என்பது முதல் 3-ருக்குகளுள்ள ஸூக்தம்) மத்வ்ருச: ('மதுவாதா') என்பது முதல் 3-ருக்குகள்) சதருத்ரீயம் ('நமஸ்தே ருத்ரமன்யவே' என்பது முதல் 11- அனுவாகங்கள்.) அதர்வசிரஸ், த்ரிஸுபர்ணம் ('ப்ரம்ஹமேதுமாம்' என்பது முதல் 3- அனுவாகங்கள். மஹாவ்ரதம் = (ராஜனம் என்னும் ஸாம) கோஸூக்தம் ('ஆகாவோ அக்மன்' என்பது முதல் 8- ருக்குகளுள்ள ஸூக்தம்.) அச்வஸூக்தம் ('மாநோமித்ரோவருண:' என்பது முதல் 22 - ருக்குகளுள்ள ஸூக்தம்.) இந்த்ரசுத்திகள், மூன்று ஆஜ்யதோஹங்கள், அக்னி, ரதந்தரம், அஸ்தீரீ வ்ரதம், வாமதேவ்யம், ப்ரஹத் (இந்த்ரசுத்தி முதல் ப்ருஹத் வரை உள்ளவைகள் ஸாமவிசேஷங்கள்) இவைகள் ஜபிக்கக் கூடிய ஸூக்தங்கள். இவைகள் ஜபிக்கின்றவர்களை சுத்தர்களாக்குகின்றன. இவைகளை ஜபிக்கும் மனிதன் ஜன்மாந்தரக் ஞானத்தையடைகிறான், விரும்புவானாகில்.

चतुर्विंशतिमते – अग्रेर्मन्वेनुवाकं तु जपेदेनमनुत्तमम्। सिंहो मे मन्युरित्येतमनुवाकं जपेद्द्विजः। जप्त्वा पापैः प्रमुच्येत बोधायनवचो

यथा। त्रिमधु त्रिसुपर्णं च नाचिकेतत्रयं तथा ।। नारायणं जपेत् सर्वं मुच्यते ब्रह्महत्यया। यत् किञ्चित् पातकं कुर्यात् यत्किञ्चेदमृचं जपेत्।। हंसः शुचिषदित्येतां जपेद्वाऽपि त्रियम्बकम्। ब्राह्मणानि च कल्पांश्च षडङ्गानि तथैव च।। आख्यातानि तथाऽन्यानि जप्त्वा पापैः प्रमुच्यते। इतिहासपुराणानि देवतास्तवनानि च।। देवव्रताज्यदोहानि आज्यानि च रथन्तरम् । घर्मसामानि रौद्राणि जप्त्वा पापैः प्रमुच्यते ।। यज्ञायज्ञियमादित्यं ज्येष्ठसाम च राजनम् । गारु (भारुं)डानि च सामानि जप्त्वा मुच्येत किल्बिषात् इति ।।

**சதுர்விம்சதி மதத்தில்:-** அக்னேர்மன்வே' என்னும் சிறந்த இந்த அனுவாகத்தை ஜபிக்க வேண்டும் 'ஸிம்ஹேமேமன்யு:' என்னுமிந்த அனுவாகத்தை ஜபித்தால் பாபங்களால் விடுபடுகிறான், இவ்விதம் போதாயனரின் வசனம், த்ரிமது, த்ரிஸுபர்ணம், நாசிகேதத்ரயம், நாராயணம் முழுவதும் ஜபிக்க வேண்டும். ஜபிப்பவன் ப்ரம்ஹ ஹத்யாதி தோஷத்தினுலும் விடுபடுகிறான். ஏதாவது பாதகம் செய்தால், 'யத் கிஞ்சேதம்' என்னும் ருக்கை ஜபிக்க வேண்டும். 'ஹம்ஸச்சுசிஷத்' என்ற ருக்கையாவது ஜபிக்கலாம். அல்லது 'த்ரயம்பகம்' என்னும் ருக்கையாவது, ப்ராம்ஹணங்கள், கல்பங்கள், ஆறு அங்கங்கள், வேறு ஆக்யானங்கள் இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுகிறான். இதிஹாஸங்கள், புராணங்கள், தேவதா ஸ்தோத்ரங்கள், தேவவ்ரதம், ஆஜ்யதோஹங்கள், ஆஜ்யஸாமங்கள், ரதந்தரஸாமம், கர்மஸாமங்கள், ரௌத்ரங்கள் இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுவான். யக்ஞாயக்ஞியம், ஆதித்யம், ஜ்யேஷ்டஸாம, ராஜனம், காருடஸாமங்கள் இவைகளை ஜபித்தால் பாபத்தினின்றும் விடுபடுவான்.

याज्ञवल्क्यः - जपयज्ञो हि कर्तव्यः सर्ववेदप्रणीतकैः । पवित्रैर्विविधैश्चान्यैर्गुह्योपनिषदां तथा ।। अध्यात्मविद्या विविधा

जप्यास्तु जपसिद्धये। अन्यैश्च विविधैर्मन्त्रैः देवतास्तवनादिभिः ॥ शुक्रियारण्यकजपो गायत्र्याश्च विशेषतः । सर्वपापहरा ह्येते रुद्रैकादशिनी तथा इति ॥ बोधायनः – उपनिषदो वेदादयो वेदान्ताः सर्वछन्दस्सु संहिता मधून्यघमर्षणमथर्वशिरो रुद्राः पुरुष सूक्तं राजनरौहिणे सामनी बृहद्रथन्तरे पुरुषगतिर्महानाम्न्यो महावैराज महादिवाकीर्त्य ज्येष्ठसाम्नामन्यतमं बहिष्पवमानानि कूश्माण्ड्यः पावमान्यः सावित्री चेति पावनानि इति। स एव – अघमर्षणं देवकृतं शुद्धवत्यस्तरत्समाः । कूश्माण्ड्यः पावमान्यश्च विरजा मृत्युलाङ्गलम्। दुर्गाव्याहृतयो रुद्रा महापातकनाशनाः इति ॥

யாக்ஞவல்க்யர்:- ஸகல வேதங்களிலுமுள்ள மந்த்ரங்களாலும் க்ருஹ்யங்கள், உபநிஷத்துக்கள் இவைகளின் சுத்தமான பலவித மந்த்ரங்களாலும் ஜபயக்ஞம் செய்யலாம். ப்ரம்ஹவித்யைகள் பலவற்றை ஜபிக்கலாம். தேவதாஸ்துதிகளான பல மந்த்ரங்களையும் ஜபிக்கலாம். சுக்ரியம், ஆரண்யம், காயத்ரீ, ருத்ரைகாதசினீ இவைகள் ஸகல பாபஹரங்களாம். போதாயனர்:- உபநிஷத்துக்கள், வேதாதிகள், வேதாந்தங்கள், எல்லா வேதங்களிலும் ஸம்ஹிதைகள், மதுக்கள், அகமர்ஷணம், அதர்வசிரஸ், ருத்ரங்கள், புருஷ ஸூக்தம், ராஜன - ரௌஹிணஸாமங்கள், ப்ருஹத்ரதந்தர ஸாமங்கள், புருஷகதி, மஹாநாம்னிகள், மஹாவைராஜ - மஹாதிவாகீர்த்ய - ஜ்யேஷ்டஸாமங்களிலொன்று, பஹிஷ்பவமானங்கள், கூச்மாண்டிகள், பாவமானிகள், ஸாவித்ரீ என்ற இவைகள் சுத்திகரங்களாம். போதாயனரே:- அகமர்ஷணம், தேவக்ருதம், சுத்தவதிகள், தரத்ஸமங்கள், கூச்மாண்டிகள், பாவமானிகள், விரஜங்கள், ம்ருத்யுலாங்கலம், துர்க்கா, வ்யாஹ்ருதிகள், ருத்ரங்கள் இவைகள் மஹாபாதக நாசகங்களாகும்.

गौतमः – पङ्क्तिपावनाष्षडङ्गविज्ज्येष्ठसामिकस्त्रिनाचिकेत स्त्रिमधुस्त्रिसुपर्णः पञ्चाग्निः स्नातको मन्त्रब्राह्मणविद्धर्मज्ञो

ब्रह्मदेयानुसन्तानः इति ।। ब्रह्मदेयानुसन्तानः - ब्राह्मविवाहोढापुत्रः । आपस्तम्बः – अपाङ्क्त्यैर्हता पङ्क्तिः पाव्यते यैर्द्विजोत्तमैः । तान्निबोधत कार्त्स्न्येन द्विजाग्र्यान् पङ्क्तिपावनान् ।। त्रिनाचिकेतः पञ्चाग्निः त्रिसुपर्णः षडङ्गवित् । ब्रह्मदेयानुसन्तानः छन्दोगो ज्येष्ठसामगः ।। वेदार्थवित् प्रवक्ता च ब्रह्मचारी सहस्रदः । शतायुश्चैव यज्वा च विज्ञेयाः पङ्क्तिपावनाः इति ।।

கௌதமர்:- மேலே சொல்லப்படுகிறவர்கள் பங்க்திபாவனர்கள் எனப்படுகின்றனர். ஆறு அங்கங்களுடன் வேதமறிந்தவன், ஜ்யேஷ்டஸாமம் அறிந்தவன், த்ரிநாசிகேதன், த்ரிமது, த்ரிஸுபர்ணன், பஞ்சாக்னி, ஸ்நாதகன், மந்த்ர ப்ராம்ஹணங்களை அறிந்தவன், ப்ரம்ஹக்ஞன், ப்ராம்ஹ விவாஹ விதிப்படி விவாஹமானவளிடம் பிறந்தவன் என்பவர்கள். ஆபஸ்தம்பர்:- பங்க்திக்கு அர்ஹமல்லாதவரால் கெடுக்கப்பட்ட பங்க்தியும் எவர்களால் பரிசுத்தமாகின்றதோ, அந்த பங்க்தி பாவனர்களான ப்ராம்ஹணர்களை முழுவதும் தெரிந்து கொள்ளுங்கள், த்ரிநாசிகேதன், பஞ்சாக்னி, த்ரிஸுபர்ணன், ஷடங்கவேதம் அறிந்தவன், ப்ராம்ஹ விவாஹப்படி மணக்கப்பட்டவளிடம் பிறந்தவன், ஸாமவேத மறிந்தவன், ஜ்யேஷ்டஸாமம் அறிந்தவன், வேதார்த்தம் அறிந்தவன், ப்ரவசனம் செய்பவன், ப்ரம்ஹசாரீ, ஆயிரம் பொருளைக் கொடுத்தவன், நூறுவயதுடையவன், விதிப்படி யாகம் செய்தவன் இவர்கள் பங்க்தி பாவனர்களாம்.

आश्वलायनः – कुन्तापं वालखिल्यं च जप्त्वा पापैः प्रमुच्यते । ब्रह्महत्यादिपापेभ्यः पावमानात् प्रमुच्यते ।। उपपातकसङ्घाता लीयन्ते नात्र संशयः । तस्मात् सर्वप्रयत्नेन पावमानं जपेद्बुधः इति ।। शौनकः – अपनः शोशुचदिति जपन्मुच्येत चांहसः । विष्णोर्नुकं जपेत्सूक्तं

विष्णुभक्तिर्भविष्यति ॥ ज्ञानोदये ततः पश्चात् विष्णुसायुज्यमाप्नुयात्। अस्यवामस्य सूक्तं वै जले वाऽन्यत्र वा जपेत् । ब्रह्महत्यादिकं दग्ध्वा विष्णुलोकं च गच्छति ॥ कयेति वामदेव्येन कुर्यात् स्वस्त्ययनं निशि। जपेद्वा सन्धिवेलायां ब्रह्मैतत्पापनाशनम्॥ तमुष्टुहीति मन्त्रं च एकादश दिनेदिने। श्रीरुद्रस्य तु यत् पुण्यं तत् पुण्यं विन्दते जपात्। स्वस्त्यात्रेयं जपेन्नित्यं प्रातः प्रातर्दिने दिने। श्रीरुद्रस्य तु यत् पुण्यं सर्वकल्मषनाशनम् ॥ सोमारौद्रं जपेत् सूक्तं कृत्स्नमेनो व्यपोहति। तच्छय्योरा वृणीमह इत्येतत् स्वस्त्ययनं भवेत् इति ॥

**ஆச்வலாயனர்:-** குந்தாபம், வாலகில்யம் இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுகிறான். பாவமான மந்த்ரங்களை ஜபித்தால் ப்ரம்ஹஹத்யாதி பாபங்களினின்றும் விலகுவான். உபபாதகங்களும் நசிக்கும். ஆகையால் முழு முயற்சியுடன் அந்தப் பாவமான மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். **சௌனகர்:-** 'அபநச்சோசுசத்' என்ற மந்த்ரத்தை ஜபித்தவன் பாபத்தினின்றும் விடுபடுவான். 'விஷ்ணோர் நுகம்' என்ற ஸூக்தத்தை ஜபித்தால் விஷ்ணுபக்தி உண்டாகும். பிறகு ஞானமுண்டாகி, விஷ்ணுவின் ஸாயுஜ்யத்தை அடைவான். 'அஸ்யவாமஸ்ய' என்ற ஸூக்தத்தை ஜலத்தில், அல்லது ஸ்தலத்திலிருந்து ஜபிக்க வேண்டும். ப்ரம்ஹஹத்யை முதலிய பாபத்தை எரித்து விஷ்ணு லோகமடைவான். 'கயாந:' என்ற வாமதேவ்ய மந்த்ரத்தால் ராத்ரியில் ரக்ஷை செய்து கொள்ளலாம். அல்லது ஸந்த்யா காலத்தில் ஜபிக்கலாம். இது பாபத்தை யகற்றுவதாகும். 'தமுஷ்டுஹி' என்ற மந்த்ரத்தை ப்ரதிதினமும் பதினொரு தடவை ஜபித்தால் ஸ்ரீருத்ர ஜபத்தாலாகும் புண்யத்தை அடைவான். 'ஸ்வஸ்த்யாத்ரேயம்' என்னும் ஸூக்தத்தை ப்ரதிதினமும் காலையில் ஜபிக்க வேண்டும். இது க்ஷேமத்தையும் புண்யத்தையும் அளிக்கும். ஸகல பாபத்தையும் விலக்கும்.

'ஸோமாரௌத்ரம்' என்ற ஸூக்தத்தை ஜபித்தால் ஸகல பாபத்தையும் போக்குகிறான். 'தச்சம்யோராவ்ருணீமஹே' என்ற இந்த மந்த்ரம் மங்களத்தைக் கொடுப்பதாகும்.

बोधायनः – पवित्रैर्मार्जनं कुर्वन् रुद्रैकादशिनीं जपन्। मुच्यते सर्वपापेभ्यो महतः पातकादृते इति ॥ अत्र्यङ्गिरसौ – एकादशगुणान्वाऽपि रुद्रानावर्त्य धर्मवित्। महापापैरपि स्पृष्टो मुच्यते नात्र संशयः इति ॥

போதாயனர்:- சுத்திகரமான மந்த்ரங்களால் மார்ஜனம் செய்து கொண்டு, 'ருத்ரைகாதசினியை' ஜபிப்பவன் மஹாபாதகம் தவிர மற்றப் பாபங்களினின்றும் விடுபடுவான். அத்ரியும் அங்கிரஸ்ஸும்:- தர்மமறிந்தவன், ருத்ரமந்த்ரங்களைப் பதினொரு தடவை ஜபித்தால், மஹா பாபங்களுடன் கூடியவனாயினும், பாபங்களினின்றும் விடுபடுவான். இதில் ஸம்சயமில்லை.

व्यासः – पृथ्वीं ससागरां यो हि कृत्स्नां शैलवनान्विताम्। दद्यात् काञ्चनसंपूर्णां हैमीमोषधिसंयुताम् । तस्याधिकफलं नूनं रुद्रजापी सकृद्द्विजः ॥ लभत इति शेषः ॥ तपस्तप्यति वाऽत्यर्थं सहस्राब्दानि संयमी। न स तत्फलमाप्नोति यत् सकृद्रुद्रजापकः ॥ गवां कोटिप्रदानं यः करोति विधिवद्गुरौ । न स तत्फलमाप्नोति यत् सकृद्रुद्रजापकः ॥ यज्ञास्तपांसि दानानि तीर्थानि विविधानि च । एतानि रुद्रजापस्य कलां नार्हन्ति षोडशीम् इति ॥

வ்யாஸர்:- ஸமுத்ரங்களுடன் கூடியதும், மலைகள் காடுகளுடன் கூடியதும், தங்கத்தால் நிறைந்ததும், ஓஷதிகளுடன் கூடியதுமான பூமி முழுவதையும் எவன் தானம் செய்கின்றானோ அவனுடைய புண்யத்தை விட அதிகமான பலத்தை ஒரு தடவை ருத்ர ஜபம் செய்பவன் அடைகிறான், நிச்சயம். எவன் இந்த்ரியங்களை அடக்கியவனாய் ஆயிரம் வருஷம் தபஸ் செய்கின்றானோ

அவனும், ஒருமுறை ருத்ரம் ஜபிப்பவன் அடையும் பலனை அடைவதில்லை. எவன் கோடி பசுக்களை விதிப்படி ஆசார்யனுக்குத் தானம் செய்கின்றானோ அவனும் ஒருமுறை ருத்ரம் ஜபிப்பவன் அடையும் பலனை அடைவதில்லை. யாகங்கள், தபஸ்ஸுகள், தானங்கள், பலவிதமான தீர்த்தங்கள் இவைகள், ஒருமுறை ருத்ர ஜபத்தின் கலைக்கு (16- ல் ஒருபங்கு) ஸமமாவதில்லை.

याज्ञवल्क्यः – सुरापः स्वर्णहारी च रुद्रजापी जले स्थितः । सहस्रशीर्षाजापी च मुच्यते सर्वकिल्बिषैः ॥ वेदमेक गुणं जप्त्वा यथाऽह्नैव विशुध्यति । रुद्रैकादशिनीं जप्त्वा तथाऽह्नैव विशुध्यति इति । शातातपः – सुरां पीत्वा ब्रह्महत्यां च कृत्वा स्तेयं कृत्वा गुरुदारांश्च गत्वा । भस्मच्छन्नो भस्मशय्याशयानो रुद्राध्यायी मुच्यते सर्वपापैः । ममभावं समुत्सृज्य यश्च रुद्रं जपेत् सदा । स तेनैव च देहेन रुद्रः सञ्जायते ध्रुवम् ॥ नमकं चमकं चैव पुरुषसूक्तं तथैव च । नित्यं त्रयं प्रयुञ्जानो ब्रह्मलोके महीयते ॥ नमकं चमकं चैव जपन्तं पुरुषं सदा । प्रविशेत् स महादेवो गृहं गृहपतिर्यथा इति ॥

யாக்ஞவல்க்யர்:- மத்யபானம் செய்தவனும், ஸ்வர்ணத்தைத் திருடியவனும் ஜலத்தில் நின்று ருத்ரத்தை ஜபித்தாலும், 'ஸஹஸ்ர சீர்ஷா' என்ற அனுவாகத்தை ஜபித்தாலும் ஸகல பாபங்களாலும் விடப்படுகிறான். வேதத்தை ஒருநாளில் ஒருமுறை ஜபித்தால் சுத்தனாவதுபோல், ஒருநாளில் ருத்ரத்தைப் பதினொரு முறை ஜபித்தால் சுத்தனாகிறான். (பாபமற்றவனாகிறான்.) சாதாதபர்:- ஸுராபானம், ப்ரம்ஹ ஹத்யை, ஸ்வர்ணஸ்தேயம், குருதாரகமனம் செய்தாலும், விபூதிப்படுக்கையில் படுத்தவனாய் விபூதியினால் மூடப்பட்டவனாய் ருத்ரத்தை ஜபிப்பவன் ஸகல பாபங்களாலும் விடுபடுகிறான். எவன் மமகாரத்தை விட்டு, எப்பொழுதும் ருத்ரத்தை ஜபிக்கின்றானோ அவன் அந்தச் சரீரத்துடனேயே ருத்ரனாகிறான். இது நிச்சயம்.

நமகம், சமகம், புருஷஸூக்தம் இம்மூன்றையும், ப்ரதிதினம் ஜபிப்பவன் ப்ரம்ஹலோகத்தில் சிறப்புறுகிறான். நமகம், சமகம், (புருஷஸூக்தம்) இவைகளை எப்பொழுதம் ஜபிப்பவனிடம், வீட்டிற்குடையவன் வீட்டிற்புகுவது போல் அந்த மஹாதேவன் ப்ரவேசிக்கின்றார்.

कैवल्यश्रुतौ – यः शतरुद्रीयमधीते सोऽग्निपूतो भवति सुरापानात् पूतो भवति ब्रह्महत्यायाः पूतो भवति कृत्याकृत्यात् पूतो भवति तस्मादविमुक्तमाश्रितो भवत्यत्याश्रमी स सर्वदा सकृद्वा जपेदनेन ज्ञानमाप्नोति संसारार्णवनाशनम् इति ॥ जाबालश्रुतौ च – अथ हैनं ब्रह्मचारिण ऊचुः, किं जप्येनामृतत्वं ब्रूहीति सहोवाच याज्ञवल्क्यः शतरुद्रीयेणेत्येतानि हवा अमृतनामधेयान्येतैर्हवा अमृतो भवति इति ॥

கைவல்யச்ருதியில்:- எவன் ருத்ரத்தை ஜபிக்கின்றானோ அவன் அக்னியால் சுத்தனாகிறான், ஸுராபானத்தினின்றும் சுத்தனாகிறான், ப்ரம்ஹஹத்யையினின்றும் சுத்தனாகிறான், விஹிதகர்மங்களைச் செய்யாத தோஷத்தினின்றும் சுத்தனாகிறான், அவிமுக்தத்தை ஆச்ரயித்தவனாகிறான், அவன் அத்யாச்ரமியாய் ஆகிறான். எப்பொழுதும் ஜபிக்க வேண்டும். ஒருமுறையாவது ஜபிக்க வேண்டும். இதனால் ஸம்ஸாரஸாகரத்தை வெல்லும் ஞானத்தை அடைகிறான். ஜாபாலச்ருதியிலும்:- பிறகு ப்ரம்ஹசாரிகள் யாக்ஞவல்க்யரை, எதை ஜபிப்பதால் அம்ருதத்தன்மை உண்டாகுமென்று கேட்டனர். அந்த யாக்ஞவல்க்யர் சதருத்ரீயத்தை ஜபிப்பதால் அம்ருதத்வம் உண்டாகுமென்றும், இதிலுள்ள நாமங்களே அம்ருதத்தின் நாமதேயங்கள். இவைகளாலேயே அம்ருதனாகிறான் என்றும் சொன்னார்.

शौनकः – श्रुतिषु प्रबला मन्त्रास्तेष्वप्यध्यात्मवादिनः । तत्रापि पौरुषं सूक्तं न तस्माद्विद्यते परम् ।। प्रायश्चित्ते जपे चैव विष्णोराराधनेऽपि च। मोक्षे वश्येऽग्न्युपस्थाने सुपुत्रप्रापणे तथा ।। सर्वकर्मफलाप्राप्तावारोग्ये मृत्युनाशने । एतेष्वर्थेष्विदं सूक्तं मुनयो विनियुञ्जते इति ।। वाधूलः – यत्र यत्र कर्मभ्रेषो यज्ञभ्रेषो वा, तत्र तत्र पुरुषं ध्यायन् पुरुषसूक्तमुच्चरेत् पूर्णत्वात् पुरुष इति विज्ञायते इति। रहस्यप्रायश्चित्ते व्यासः - योऽनूचानं द्विजं मर्त्यो हतवानर्थलोभतः । स जपेत्पौरुषं सूक्तं जलस्थश्चिन्तयन् हरिम् । तदैव ब्रह्महत्याया मुच्यते नात्र संशयः इति ।।

சௌனகர்:- வேதங்களிலுள்ள மந்த்ரங்கள் சிறந்தவை. அவைகளிலும் ப்ரம்ஹப்ரதி பாதகமந்த்ரங்கள் சிறந்தவை. அவைகளிலும் புருஷஸூக்தம் சிறந்தது. அதைவிடச் சிறந்தது வேறில்லை. ப்ராயச் சித்தம், ஜபம், விஷ்ணுவினுராதனம், மோக்ஷம், வச்யம், அக்னியினுபஸ்தானம், நல்ல புத்திரனை அடைதல், ஸகல கர்மங்களின் பலத்தையடைதல், ஆரோக்யம், ம்ருத்யுவைப் போக்குதல் என்ற விஷயங்களில் இந்தப் புருஷஸூக்தத்தை முனிவர் விநியோகிக்கின்றனர். வாதூலர்:- எந்தெந்தக் காலத்தில் கர்மங்களுக்குத் தவறுதலோ, யாகத்திற்குச் தவறுதலோ ஏற்படுகின்றதோ அக்காலங்களில் புருஷனை த்யானித்துக் கொண்டு புருஷஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். பூர்ணனுய் (எங்கும் நிறைந்தவனுய்) இருப்பதால் புருஷனெனப்படுகிறுர். ஆகையால் குறையுள்ள கர்மமும் பூர்ணமாகிறதென்பதாம். ரஹஸ்ய ப்ராயச்சித்தம் சொல்லுமிடத்தில் வ்யாஸர்:- எந்த மனிதன் பணத்தாசையால் ஸாங்க வேதாத்யயனம் செய்த ப்ராம்ஹணனைக் கொன்றுனே அவன், ஜலத்திலிருந்து விஷ்ணுவை த்யானிப்பவனுய், புருஷஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். அப்பொழுதே ப்ரம்ஹஹத்யையினின்றும் விடுபடுகிறுன். இதில் ஸந்தேஹமில்லை.

मनुरपि – सकृज्जप्त्वाऽस्यवामीयं शिवसङ्कल्पमेव च । हविर्द्धानीयमभ्यस्य न तमंह इतीति च ।। जप्त्वा तु पौरुषं सूक्तं मुच्यते गुरुतल्पगः ।। ब्रह्मयज्ञे जपन् सूक्तं पौरुषं चिन्तयन् हरिम् । स सर्वांस्तु जपेद्वेदान् साङ्गोपाङ्गान् द्विजोत्तमः इति ।। बोधायनोऽपि – मातृदुहितृस्नुषास्वसृसवर्णाविधवागमनं कृत्वा यः पुरुषसूक्तं त्रिरुच्चारयेत् तदानीमेव पूतो भवति इति ।। विष्णुरपि – स्नातः पवित्रपाणिर्यथाशक्ति जपेद्विशेषतः सावित्रीं पुरुषसूक्तं च नैताभ्यां सदृशमस्ति इति ।।

**மனுவும்**:- அஸ்யவாமீயம் என்ற ஸூக்தத்தையும், சிவஸங்கல்பத்தையும், ஹவிர்தாநீயத்தையும், நதமம்ஹ: என்பதையும், புருஷஸூக்தத்தையும் ஒரு தடவை ஜபித்தாலும் குருதாரகமனம் செய்தவனும் சுத்தனுகிறான். ப்ரம்ஹயக்ஞத்தில், ஹரியைத் தியானித்துப் புருஷ ஸூக்தத்தை ஜபித்தால் அங்கங்களுடனும் உபாங்கங்களுடனும் கூடிய ஸகல வேதங்களையும் ஜபித்த பலனையடைகிறான். **போதாயனரும்**:- தாய், பெண், நாட்டுப்பெண், பகினீ, ஸவர்ணஸ்த்ரீ, விதவை இவர்களைச் சேர்ந்த பாபியானுலும் புருஷ ஸூக்தத்தை மூன்று தடவை ஜபித்தால் உடனே சுத்தனுகிறான். **விஷ்ணுவும்**:- ஸ்நானம் செய்து பவித்ரம் தரித்தவனுய். சக்திக்குத் தகுந்தபடியோ விசேஷமாகவோ காயத்ரீ, புருஷஸூக்தம் இவைகளை ஜபிக்க வேண்டும். இவைகளுக்கு ஸமமானது வேறு ஒன்றில்லை.

यमः – विरजा द्विगुणं जप्त्वा तदहैव विशुध्यति । पौरुषं सूक्तमावर्त्य मुच्यते सर्वकिल्बिषात् इति ।। संवर्तः – षड्मासं पञ्चमासं वा नियतो नियताशनः । जप्त्वा तु पौरुषं सूक्तं मुच्यते सर्वपातकैः इति ।। चतुर्विंशतिमते – पावमानीस्तथा रौद्रं पौरुषं सूक्तमेव च । जप्त्वा पापैः प्रमुच्येत माधुच्छन्दसमेव च इति ।।

योगवासिष्ठे – संसारान्मोक्षमिच्छन् यः स सन्त्यज्यैषणात्रयम् । सर्वदा पौरुषं सूक्तं मनसैव जपेच्छुचिः इति ।। शौनकः – पुरुषस्य हरेः सूक्तं सर्वपापप्रणाशनम् । यस्तु पौरुषसूक्तस्य जानात्यर्थं यथातथम् ।। स जन्मनीह मुक्तस्स्यात् पुरुषेषु च दर्शनात् । विष्णुः पुरुषसूक्तार्थः पुरुषोऽध्यवसीयते इति ।।

**யமன்:-** விரஜாமந்த்ரங்களை இருமுறை ஜபித்தால் அன்றே சுத்தனாகிறான். புருஷ ஸூக்தத்தை இருமுறை ஜபித்தால் ஸகல பாபங்களாலும் விடுபடுகிறான். **ஸம்வர்த்தர்:-** நியமத்துடனும், ஆஹார நியமத்துடனும், ஆறு, அல்லது ஐந்து மாஸங்கள் புருஷ ஸூக்தத்தை ஜபித்தால் ஸகல பாபங்களாலும் விடுபடுகிறான். **சதுர்விம்சதி மதத்தில்:-** பாவமான மந்த்ரங்கள், ருத்ரம், புருஷஸூக்தம், மாதுச்சந்தஸம் இவைகளை ஜபித்தால் பாபங்களால் விடுபடுவான். **யோகவாஸிஷ்டத்தில்:-** ஸம்ஸாரத்தினின்றும் மோக்ஷத்தை விரும்பியவன் மூன்று ஏஷணைகளையும் விட்டு, சுத்தனாய் எப்பொழுதும் புருஷஸூக்தத்தை மனதினாலேயே ஜபிக்க வேண்டும். **சௌனகர்:-** புருஷனெனும் ஹரியின் ஸூக்தம் ஸகல பாபங்களையுமகற்றக் கூடியது. புருஷஸூக்தத்தின் பொருளை எவன் நன்கு அறிகின்றானோ அவன் இந்த ஜன்மத்திலேயே முக்தனாகிறான். புருஷர்களுள் காணப்படுவதால் விஷ்ணுவே புருஷஸூக்தத்தின் பொருளான புருஷனென நிச்சயிக்கப்படுகிறது.

## काम्यानि जप्यानि

अथ काम्यानि जप्यानि ।। तत्र पुलस्त्यः – "कामः कामप्रदः कान्तः कामपालस्तथा हरिः । आनन्दो माधवश्चैव कामसंसिद्धये जपेत् ।। एतानि नामानीत्यर्थः ।। रामः परशुरामश्च नृसिंहो विष्णुरेव च । त्रिविक्रमश्चेत्येतानि जप्यान्यरिजिगीषुभिः ।। विद्यामभ्यस्यता नित्यं जप्तव्यः पुरुषोत्तमः । दामोदरं बन्धगतः नित्यमेव जपेन्नरः ।।

केशवं पुण्डरीकाक्षमनिशं हि तथा जपेत्। नेत्रबाधासु सर्वासु हृषीकेशं भयेषु च ।। अच्युतं चामृतं चैव स्मरेदौषधकर्मणि । सङ्ग्रामाभिमुखो नित्यं संस्मरेदपराजितम्। नित्यं संस्मरेदपराजितम्।। चक्रिणं गदिनं चैव शार्ङ्गिणं खड्गिनं तथा । क्षेमार्थी प्रवसन्नित्यं दिक्षु प्राच्यादिषु स्मरेत् ।। अजितं चाधिपं चैव सर्वं सर्वेश्वरं तथा । संस्मरेत् पुरुषो भक्त्या व्यवहारेषु सर्वदा ।।

### காம்ய ஜப்யங்கள்

இனி காம்ய ஜப்யங்கள் சொல்லப்படுகின்றன. **புலஸ்த்யர்:-** காமன், காமப்ரதன், காந்தன், காமபாலன், ஹரி, ஆனந்தன், மாதவன் என்ற நாமங்களை விருப்பம் ஸித்திப்பதின் பொருட்டு ஜபிக்க வேண்டும். ராமன், பரசுராமன், ந்ருஸிம்ஹன், விஷ்ணு, த்ரிவிக்ரமன் என்ற நாமங்களைச் சத்ருஜயத்தை விரும்பியவர்கள் ஜபிக்க வேண்டும். புருஷோத்தமன் என்ற நாமத்தை, வித்யையை அப்யஸிப்பவன் எப்பொழுதும் ஜபிக்கவேண்டும். தாமோதரன் என்ற நாமத்தைக் கட்டிலிருப்பவன் ஜபிக்க வேண்டும். கண்களில் தொந்தரைகளில், கேசவன், புண்டரீகாக்ஷன் என்பவற்றையும், பயகாலங்களில் ஹ்ருஷீகேசனையும், ஔஷதஸேவையில் அச்யுதன், அம்ருதன் என்பதையும், யுத்தத்தை நோக்கியவன் அபராஜிதன் என்பதையும் ஜபிக்க வேண்டும். தூரதேசம் செல்பவன் க்ஷேமத்தை விரும்பி, கிழக்கு முதலிய நான்கு திசைகளிலும், முறையே சக்ரீ, கதீ, சார்ங்கி, கட்கீ என்ற நாமங்களை ஸ்மரிக்க வேண்டும். வ்யவஹாரங்கள் எல்லாவற்றிலும் அஜிதன் அதிபன், ஸர்வன், ஸர்வேச்வரன் என்ற நாமங்களைப் பக்தியுடன் எப்பொழுதும் ஸ்மரிக்க வேண்டும்.

नारायणं सर्वकालं क्षुतप्रस्खलनादिषु । ग्रहनक्षत्रपीडासु देवबाधासु सर्वदा । दस्युवैर्यादिरोधेषु व्याघ्रसिंहादिसङ्कटे। अन्धकारे महाघोरे नरसिंहमनुस्मरेत् ।। तत्यखिलदुर्गाणि तापार्तो

जलशायिनम् । गरुडध्वजानुस्मरणात् विषवीर्यं प्रशाम्यति ॥ स्नाने देवार्चने होमे प्रणिपाते प्रदक्षिणे । कीर्तयेद्भगवन्नाम वासुदेवेति तत्परः । स्थापने वित्तधान्यादेरपध्याने च दृष्टिजे । कुर्वीत तन्मना भूत्वा अनन्ताच्युतकीर्तनम् ॥ नारायणं शार्ङ्गधरं श्रीधरं पुरुषोत्तमम् । वामनं खड्गिनश्चैव दुःस्वप्नेषु सदा स्मरेत् ॥ एकार्णवादौ पर्यङ्कशायिनं च सदा स्मरेत् । बलभद्रं समृद्ध्यर्थी सीरकर्मणि कीर्तयेत् ॥ जगत्पतिं त्वपत्यार्थी स्तुवन् भक्त्या न सीदति । श्रीशं सर्वाभ्युदयिके कर्मण्याशु प्रकीर्तयेत् ॥ अरिष्टेष्वप्यशेषेषु विशोकं च सदा जपेत् ॥ मरुत् प्रवाताग्निजलबन्धनादिषु मृत्युषु ॥ स्वतन्त्रपरतन्त्रेषु वासुदेवं जपेद्बुधः । सर्वार्थशक्तियुक्तस्य देवदेवस्य चक्रिणः । यद्वाऽभिरोचते नाम तत् सर्वार्थेषु कीर्तयेत् ॥ सर्वार्थ सिद्धिमाप्नोति नाम्ना सर्वार्थदायिनः इति ।

தும்மல், கால்தடுக்குதல் இவைகளில் நாராயணனை ஸ்மரிக்க வேண்டும். நவக்ரஹ நக்ஷத்ர பீடைகளிலும், தேவர்களின் பாதைகளிலும், திருடர், சத்ரு இவர்களால் தடைகளிலும், புலி, சிங்கம் முதலியவற்றால் ஸங்கடத்திலும், பயங்கரமான இருளிலும் நரஸிம்ஹனை ஸ்மரிக்க வேண்டும். தாபத்தால் வருந்தியவன் ஜலசாயியை ஸ்மரிக்க வேண்டும். ஸகல கஷ்டங்களையும் தாண்டுவான். கருடத்வஜனை ஸ்மரிப்பதால் விஷத்தின் வீர்யம் நசிக்கும். ஸ்நானம், தேவார்ச்சனம், ஹோமம், நமஸ்காரம், ப்ரதக்ஷிணம் இவைகளில் வாஸுதேவன் என்னும் பகவந்நாமத்தைப் பக்தியுடன் உச்சரிக்க வேண்டும். தனம், தான்யம் இவைகளை ஸ்தாபித்தலிலும், த்ருஷ்டி தோஷத்தால் உண்டாகும் கெடுதியிலும், அனந்த அச்யுத நாமங்களை சலிக்காத மனதுடையவனாய் ஜபிக்க வேண்டும். நாராயணன், சார்ங்கதரன், ஸ்ரீ தரன், புருஷோத்தமன், வாமனன், கட்கீ என்ற நாமங்களை துஷ்டஸ்வப்னங்களில் எப்பொழுதும் ஸ்மரிக்க

வேண்டும். கடலில் பர்யங்கசாயீ என்ற நாமத்தை ஜபிக்க வேண்டும். கலப்பையாலுழும் கார்யத்தில் வ்ருத்தியை விரும்பியவன் பலபத்ரனின் நாமத்தை ஜபிக்க வேண்டும். குழந்தையை விரும்பியவன் பக்தியுடன் ஜகத்பதி என்ற நாமத்தால் ஸ்துதித்தால் குறைவை அடையான். நன்மையளிக்கும் எல்லாக் கர்மத்திலும் ஸ்ரீசன் என்ற நாமத்தை உச்சரிக்க வேண்டும். எவ்விதமான அமங்களங்கள் நேர்ந்தாலும் விசோகன் என்ற நாமத்தை ஜபிக்க வேண்டும். காற்று, புயல், நெருப்பு, ஜலம், கட்டுதல், ஸ்வாதீனமாயும், பராதீனமாயுமுள்ள மரணகாரணங்கள் இவைகளில் வாஸுதேவ நாமத்தை ஜபிக்க வேண்டும். ஸகல விஷயஸாதன சக்தியுடன் கூடியவனும், தேவர்களுக்குத் தேவனுமான சக்ராயுதனின் நாமங்களுள் இஷ்டமான எந்த நாமத்தையாவது எந்தக் கார்யத்திலும் ஜபிக்கலாம். ஸகல புருஷார்த்தங்களை அளிக்கும் ஹரியின் நாமத்தால் ஸர்வ கார்யஸித்தியையும் அடைவான்.

जाबालिः – हरेर्नाम परं जप्यं ध्येयं गेयं निरन्तरम्। कीर्तनीयं च सततं निर्वृतिं बहुधेच्छता इति ।। विश्वामित्रः – विश्रुतानि बहून्येव तीर्थानि विविधानि च। कोट्यंशेनापि तुल्यानि हरिनामजपेन वै ।। श्रीरामनाम नियतं परिचिन्तनीयं वृत्तं हि निष्ठितमिदं सततं द्विजेषु। जन्मार्जितानि विविधान्यपहाय दुःखान्यत्यन्त धर्मनिचयं हरिलोकमेति इति ।। बोधायनः – इष्टापूर्तानि कर्माणि सुबहूनि कृतान्यपि। भवहेतूनि तान्येव हरेर्नाम तु मुक्तिदम् इति ।। कात्यायनः – अर्थवादं हरेर्नाम्नि संभावयति यो नरः । स पापिष्ठो मनुष्याणां नरके पतति ध्रुवम् इति ।।

ஜாபாலி:- ஹரியின் நாமம் சிறந்தது. பலவிதமாயும் ஸந்தோஷத்தை விரும்பிகின்றவனால் அது ஜபிக்கத் தகுந்தது, த்யானிக்கத் தகுந்தது, பாடத்தகுந்தது, இடைவிடாது கீர்த்தனம் செய்யத் தகுந்தது. விச்வாமித்ரர்:-

பலவிதங்களான அநேக தீர்த்தங்கள் ப்ரஸித்தங்களாகவேயுள்ளன. அவைகளெல்லாம், ஹரிநாம ஜபத்தின் கோடியிலொரு பாகத்துடனும் ஸமமாகாது. ஸ்ரீ ராமநாமத்தை அவச்யம் சிந்திக்க வேண்டும். இந்த ஆசாரம் ப்ராம்ஹணர்களிடத்தில் எப்பொழுதுமுள்ளது. ஜபிப்பவன் இப்பிறப்பில் செய்யப்பட்டுள்ள ஸகல (துக்க) பாபங்களையும் விடுத்து, விசேஷ புண்யங்களாலடையக் கூடிய விஷ்ணுலோகத்தை அடைவான். போதாயனர்:- இஷ்டங்களையும் (யாகங்கள்) பூர்த்தங்களையும் (குளம் வெட்டுவது முதலியவை) வெகுவாய்ச் செய்தாலும் அவையெல்லாம் ஸம்ஸாரத்திற்குக் காரணங்களேயாம். ஹரிநாமமே தான் முக்தியைக் கொடுப்பதாகும். காத்யாயனர்:- எந்த மனிதன் ஹரிநாமத்தில் அர்த்தவாதத்தைச் சங்கிக்கின்றானோ அவன் மனிதர்களுள் மஹாபாபியாவான். அவச்யம் நரகத்தில் விழுவான்.

वसिष्ठः — हित्वा सकलपापानि लब्ध्वा सुकृतसञ्चयम्। सुपूतो जायते धीमान् मुरजिन्नामकीर्तनात्। कृष्ण कृष्णेति रामेति सञ्जपन् हरितत्परः । राजसूयसहस्राणां फलं प्राप्नोति मानवः । नित्यकर्माविरुद्धेषु कालेषु जप इष्यते इति ।। भृगुः — कोटिशो मनुजानां वै भीतिदं समुपस्थितम्। राम रामेति सङ्कीर्त्य तन्नाशयति मानवः इति । गालवः — सर्वक्लेशयुतो वाऽपि सर्वरोगादिसंयुतः । सर्वपापयुतो यस्तु नृहरेर्नामकीर्तनम्।। कृत्वा विमुच्य दुःखानि याति ब्रह्म सनातनम् इति ।। च्यवनः — श्रुतिस्मृतिपुराणेषु रामनाम समीरितम् । तन्नामकीर्तनं भूयस्तापत्रयविनाशनम् ।। सर्वेषामेव पापानां प्रायश्चित्तमिदं स्मृतम्। नातः परतरं पुण्यं त्रिषु लोकेषु विद्यते इति ।।

வஸிஷ்டர்:- புத்திமான் விஷ்ணு நாமங்களை உச்சரிப்பானாகில், ஸகல பாபங்களையும் விட்டு, மிகுந்த புண்யத்தையடைந்து மிகப் பரிசுத்தனாகிறான். மனிதன்

ஹரிபக்தனாய், க்ருஷ்ண க்ருஷ்ண என்றும் ராம என்றும் நன்றாய் ஜபித்தால் ஆயிரம் ராஜஸூய யாகங்கள் செய்த புண்யத்தை அடைவான். நித்ய கர்மங்களுக்கு விரோதமில்லாத காலங்களில் பகவந் நாமஜபம் விதிக்கப்படுகிறது. ப்ருகு:- மனிதர்களுக்குப் பயத்தைக் கொடுக்கும் காரணம் கோடிக்கணக்காய் ஸமீபத்திலேயே இருக்கிறது. மனிதன் ராம ராம என்று நன்றாய் ஜபித்தால் அதைப் போக்கிக் கொள்வான். காலவர்:- ஸகல கஷ்டங்களுடன் கூடியவனாயினும், ஸர்வ ரோகங்களுடன் கூடியவனாயினும், ஸகல பாபங்களுடன் கூடியவனாயினும், நரஸிம்ஹனின் நாமத்தை ஜபித்தால் துக்கங்களை விட்டு, சாச்வதமான ப்ரம்ஹத்தை அடைகிறான். ச்யவனர்:- வேதங்கள், ஸ்ம்ருதிகள், புராணங்கள் இவைகளில் ராமநாமம் சொல்லப்பட்டுள்ளது. அந்த ராமநாம கீர்த்தனம் மூன்று தாபங்களையும் போக்கக் கூடியது. இது ஸகல பாபங்களுக்கும் ப்ராயச் சித்தமாக விதிக்கப்பட்டுள்ளது. இதைவிடச் சிறந்த புண்யமாகியது மூன்று உலகங்களிலுமில்லை.

माण्डव्यः — सुरापो ब्रह्महा स्तेयी रोगी भग्नव्रतोऽशुचिः । स्वाध्यायवर्जितः पापो लुब्धो नैकृतिकश्शठः ॥ सोऽपि मुक्तिमवाप्नोति विष्णुनामजपाद्ध्रुवम् इति । योगयाज्ञवल्क्यः – न तावत् पापमेधीत यन्नाम्ना न हतं हरेः । अतिरेकभयादाहुः प्रायश्चित्तान्तरं वृथा इति ॥ वसिष्ठः – हरिपूजापरो यस्तु हरिनामपरायणः । स स्नातः सर्वतीर्थेषु सर्वयज्ञेषु दीक्षितः ॥ श्रीशब्दपूर्वं जयशब्दमध्यं जयद्वयादुत्तरतस्तथैव । त्रिः सप्तकृत्वो रघुनाथनाम जप्तं विहन्याद्द्विजकोटिहत्याम् इति ॥ श्री शब्दः पूर्वः यस्य रघुनाथनाम्नः रामशब्दस्य सम्बुध्यन्तस्य, सः श्रीशब्दपूर्वः श्रीरामेति शब्दः । ततः मध्ये जयशब्दः यस्य रामशब्दस्य, सः जयरामशब्दः । ततो जयजयेति शब्दः । ततो रामेति । 'श्रीराम जयराम जयजयराम' इति त्रयोदशाक्षरः ।

மாண்டவ்யர்:- மத்யபானம் செய்தவன், ப்ராம்ஹணவதம் செய்தவன், ஸ்வர்ணத்தைத் திருடியவன், விசேஷ ரோகமுள்ளவன், வ்ரதங்களை விட்டவன், அசுத்தன், வேதாத்யயனம் இல்லாதவன், பாபி, லோபி, வஞ்சகன், சடன், இவர்களுள் யாராயினும் விஷ்ணுநாமத்தை ஜபித்தால், நிச்சயமாய் முக்தியை அடைவான். யோகயாக்ஞவல்க்யர்:- ஹரியின் நாமத்தால் போக்கப்படாமல் உள்ள பாபமெதுவும் இல்லை. ஒருகால் இருக்குமோவென்ற பயத்தால் (முன்னோர்கள்) வேறு ப்ராயச் சித்தங்களை வீணாய்ச் சொல்லுகின்றனர். வஸிஷ்டர்:- எவன் ஹரிபூஜையிலும், ஹரிநாம கீர்த்தனத்திலும் ஈடுபட்டுள்ளவனோ அவன் ஸகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தவனும், ஸகல யாகங்களிலும் தீக்ஷிதனுமாகிறான். 'ஸ்ரீ ராம ஜயராம ஜயஜயராம' என்ற பதின்மூன்று அக்ஷரங்களுள்ள மந்த்ரத்தை இருபத்தொருமுறை ஜபித்தால் அது கோடி ப்ரம்ஹஹத்யா தோஷத்தையும் போக்கக் கூடியது.

पैठीनसिः — सर्वपापप्रसक्तोऽपि ध्यायन्निमिषमच्युतम् । पुनस्तपस्वी भवति पङ्क्तिपावनपावनः ।। यस्येदं जन्म पाश्चात्यं यो भवेच्छङ्करः स्वयम् । तेनैषा लभ्यते विद्या श्रीमत्पञ्चदशाक्षरी ।। आदौ तु शिवरामेति गोविन्देति ततः परम् । नारायण महादेवेत्येषा पञ्चदशाक्षरी ।। महादेव महादेव महादेवेति यो वदेत् । एकेनैव लभेन्मुक्तिं द्वाभ्यां शम्भुः ऋणी भवेत् इति ।।

பைடீநஸி:- எல்லாப் பாபங்களுடனும் கூடியவனாயினும், ஒரு நிமிஷம் அச்யுதனை த்யானித்தால், அவன் மிகுந்த தபஸ்ஸுடையவனாகவும், பங்க்தி பாவனர்களுக்கும் பாவனனாகவும் ஆகிறான். எவனுக்கு இந்த ஜன்மமே கடைசி ஜன்மமோ. எவன் தான் ஈச்வரனாக இருக்கக்கூடுமோ அவனே, மேல் சொல்லப் போகும் பதினைந்து அக்ஷரங்களுடைய மந்த்ரத்தை அடையக்கூடும். ஆதியில் சிவ ராம என்றும், பிறகு கோவிந்த என்றும், பிறகு

நாராயண மஹாதேவ என்றும் பதினைந்து அக்ஷரங்கள் கூடிய இது பஞ்சதசாக்ஷரீ மந்த்ரமாம். (சிவராம கோவிந்த நாராயண மஹாதேவ என்பதாம்) மஹாதேவ மஹாதேவ என்று உச்சரிப்பானாகில், அவனுக்கு ஒரு பதத்தாலேயே மோக்ஷமுண்டாகும். பாக்கியமான இரண்டு பதங்களுக்கு பலனிக்க முடியாததால் ஈச்வரன் கடனாளியாகிறார்.

नारदः —— महादेव विरूपाक्ष गङ्गाधर मृडाव्यय। इतीरयन्ति ये नित्यं ते कृतार्था न संशयः ।। गोसहस्रप्रदानस्य त्वश्वमेधक्रतोरपि। फलं यद्विद्यते तद्धि प्रोक्तं रुद्रेति कीर्तनात् इति ।। ब्रह्मकैवर्ते — महापातकयुक्तोऽपि कीर्तयन्ननिशं हरम्। शुद्धान्तःकरणो भूत्वा जायते पङ्क्तिपावनः इत्यादीनि वचनानि हरिहरनामवैभवप्रतिपादकानि स्मृतिपुराणेषु सहस्रशस्सन्ति । तानीह ग्रन्थविस्तरभीत्या न लिख्यन्ते।

நாரதர்:- மஹாதேவ, விரூபாக்ஷ, கங்காதர, ம்ருட, அவ்யய என்ற நாமங்களை எவர் நித்யமும் ஜபிக்கின்றனரோ அவர்கள் க்ருதார்த்தர்கள், ஸம்சயமில்லை. 'ருத்ர' என்று ஜபிப்பதால், ஆயிரம் கோதானத்திற்கும், அச்வமேத யாகத்திற்கும் எந்தப் பலனோ அந்தப் பலனுண்டாகுமெனச் சொல்லப்பட்டுள்ளது. ப்ரம்ஹகைவர்த்தத்தில்:- மஹா பாபங்களுடன் கூடியவனாயினும் எப்பொழுதும் ஹர என்ற நாமத்தை ஜபித்தால், அவன் சுத்தமான மனமுடையவனாகி, பங்க்தி பாவனனாகிறான். இது முதலாகிய வசனங்கள் விஷ்ணு சிவ நாமங்களில் மேன்மையைச் சொல்லுகின்றனவாய் ஸ்ம்ருதிகளிலும் புராணங்களிலும் ஆயிரக்கணக்காய் இருக்கின்றன. அவைகளை முழுவதும் எழுதுவதானால் க்ரந்தம் விரிவையடையும் என்ற பீதியால் இங்கு எழுதவில்லை.

—*—

## जपयज्ञप्रशंसा

जपयज्ञप्रशंसामाह वसिष्ठः— ये पाकयज्ञाश्चत्वारो विधियज्ञसमन्विताः । सर्वे ते जपयज्ञस्य कलां नार्हन्ति षोडशीम् ।। पाकयज्ञाः - देवयज्ञादयः । विधियज्ञः - ज्योतिष्टोमादिः । यथाऽग्निर्वायुना धूतो हविषा चैव दीप्यते । एवं जप्यपरो नित्यं मन्त्रयुक्तः सदा द्विजः इति ।। मनुरपि – विधियज्ञात् जपयज्ञो विशिष्टो दशभिर्गुणैः । उपांशुः स्याच्छतगुणः सहस्रो मानसः स्मृतः ।। जप्येनैव तु संसिध्येद्ब्राह्मणो नात्र संशयः । कुर्यादन्यन्न वा कुर्यान्मैत्रो ब्राह्मण उच्यते इति ।। सर्वानुकूल्यं मैत्री । तस्मान्मैत्रत्वेन हिंसानुबन्धिनो विधियज्ञात् जपयज्ञो ब्राह्मणस्य विशिष्टतर इत्यर्थः ।। हारीतः – जपेन देवता नित्यं स्तूयमाना प्रसीदति । प्रसन्ने विपुलान् भोगान् प्राप्नुवन्ति मनीषिणः ।। यक्षरक्षःपिशाचाश्च ग्रहाः सर्वे विभीषणाः । जापिनं नोपसर्पन्ति दूरादेवापयान्ति ते इति ।।

### ஜபயக்ஞப்ரசம்ஸை

ஜபயக்ஞத்தின் ப்ரசம்ஸையைச் சொல்லுகின்றார். **வஸிஷ்டர்:-** தேவயக்ஞம் முதலிய நான்கு பாகயக்ஞங்களும், ஜ்யோதிஷ்டோமம் முதலிய விதியக்ஞங்களும், ஜபயக்ஞத்தின் பதினாறிலொரு பாகத்திற்குச் சமமாவதில்லை. அக்னியானது எப்படி காற்றினால் வீசப்பட்டு, நெய் முதலிய ஹவிஸ்ஸினால் ஜ்வலிக்கின்றதோ அவ்விதமே மந்த்ரத்துடன் கூடிய ப்ராம்ஹணன் ஜபயக்ஞத்தால் விசேஷமாய் ப்ரகாசிக்கின்றான். **மனுவும்:-** விதியக்ஞத்தை (தர்ச பௌர்ணமாஸாதிகளை) விட ஜபயக்ஞம் பத்துமடங்கு சிறந்ததாகும். உபாம்சு ஜபம் நூறு மடங்கு சிறந்தது. மானஸ ஜபம் ஆயிரம் மடங்கு சிறந்தது. (ஸமீபத்தில் இருப்பவனும் கேட்க முடியாமல் ஜபிப்பது உபாம்சு ஜபம். நாக்கும் உதடுகளும் அசையாமல் ஜபிப்பது மானஸ ஜபம்.)

ப்ராம்ஹணன் ஜபயக்ஞத்திலேயே ஸித்தியை (மோக்ஷத்தை) அடைகிறான், மற்ற யாகம் முதலியதைச் செய்தாலும் செய்யா விடினும், எல்லோருக்கும் மித்ரனாயிருப்பவன் ப்ரம்ஹ ஸம்பத்தியையடைகிறானென்று (வேதங்களில்) சொல்லப்படுகிறது. (எல்லோருக்கும் அனுகூலமாயிருத்தல் மைத்ரீ. ஆகையால் ஜபயக்ஞம் செய்பவன் எல்லோருக்கும் மித்ரனாயிருப்பதால், பசு பீஜாதி ஹிம்ஸையுடன் கூடிய விதியக்ஞத்தைவிட ஜப்யக்ஞம் ப்ராம்ஹணனுக்கு மிகச் சிறந்ததென்பது பொருளாம்.) ஹாரீதர்:- ப்ரதிதினமும் ஜபத்தினால் ஸ்துதிக்கப்படும் தேவதை ப்ரஸன்னமாகிறது. தேவதை ப்ரஸன்னமானால் பக்தர்கள் மிகுந்த போகங்களை அடைகின்றனர். பயங்கரர்களான யக்ஷர், ராக்ஷஸர், பிசாசர், க்ரஹங்கள் இவர்களெல்லோரும் ஜபசீலனுக்குச் சமீபத்திற்கூட வருவதில்லை. தூரத்திலேயே போய்விடுகிறார்கள்.

—*—

## अभ्युक्षणाहरणविधिः

अथाभ्युक्षणाहरणविधिः ।। तत्र शाट्यायनिः – ततः सूर्यमुपस्थाय सम्यगाचम्य च स्वयम् । अभ्युक्षणं समादाय संयतात्मा गृहं व्रजेत् इति ।। आचम्य द्विरिति शेषः ।। तथा च वृद्धमनुः – ततः सम्यग्द्विराचम्य अभ्युक्षणमुदाहरेत् । न विनाऽभ्युक्षणं जातु विधिज्ञः किञ्चिदाचरेत् ।। अभ्युक्षणं - प्रोक्षणार्थं जलम् । तद्विना अप्रोक्षिते गृहे न किञ्चित् कर्माचरेदिति यावत् ।। स एव – नाहरेदेकवस्त्रस्तु नाव्रतो न च कन्यका । न पाणिना न वस्त्रेण तोयमभ्युक्षणाय वै ।। प्रोक्षणग्रहणं पात्रं निदधद्गृहमागतः । अकृत्वाऽऽचमनं (भूमौ) पूर्वमाचान्तः प्रयतो भवेत् इति ।। पुलस्त्यः – तेन द्रव्याण्यशेषाणि प्रोक्ष्याचम्य पुनर्गृहे । ततः कर्माणि कुर्वीत सत्क्रियाश्च द्विजोत्तमः इति ।

## அப்யுக்ஷணம் (ப்ரோக்ஷணத்திற்குரிய ஜலம்) கொண்டுவருவதின் விதி

இனி ப்ரோக்ஷண ஜலம் கொண்டு வரும் விதி சொல்லப்படுகிறது. அதில் சாட்யாயனி:- பிறகு ஸூர்யோபஸ்தானம் செய்து விதிப்படி ஆசமனமும் செய்து, தானே ப்ரோக்ஷண ஜலத்தை எடுத்துக் கொண்டு, சுத்தனாய் வீட்டிற்குச் செல்ல வேண்டும். இங்கு ஆசமனம் என்றதில் இருமுறை என்று சேர்க்க வேண்டும். அவ்விதமே வ்ருத்தமனு:- பிறகு விதிப்படி இருமுறை ஆசமனம் செய்து அப்யுக்ஷண ஜலத்தைக் கொண்டு போகவேண்டும். விதியை அறிந்தவன் அந்த ஜலமின்றி, ஒருபொழுதும், எக்கர்மத்தையும் செய்யக் கூடாது. (அந்த ஜலத்தினால் ப்ரோக்ஷிக்கப்படாத க்ருஹத்தில் ஒரு கர்மாவையும் செய்யக்கூடாதென்பது பொருள்.) வ்ருத்தமனு:- ஒரு வஸ்த்ரத்துடன் இருப்பவனும், அனுபநீதனும், விவாஹமாகாத பெண்ணும், அப்யுக்ஷணம் கொண்டு வரக்கூடாது. கையினாலும், வஸ்த்ரத்தினாலும் கொண்டு வரக்கூடாது. ப்ரோக்ஷண ஜல பாத்ரத்தைக் கொண்டு வந்து வீட்டில் வைப்பதற்கு முன் ஆசமனம் செய்யாவிடில், பிறகு ஆசமனம் செய்து சுத்தனாகிறான். புலஸ்த்யர்:- அந்த ஜலத்தினால் வீட்டில் ஸகல த்ரவ்யங்களையும் ப்ரோக்ஷித்து மறுபடி ஆசமனம் செய்து, பிறகு வீட்டிற்குரிய கார்யங்களையும் நற்கார்யங்களையும் செய்ய வேண்டும்.

प्रचेताः — सङ्गृह्याभ्युक्षणं यायात् सोपानत्को गृहं प्रति । तदत्यक्त्वा गृहं प्राप्य आचामेत् परिचारकात् इति ।। गार्ग्यायणिः – सोपानत्कः सदर्भश्च पात्रस्थं सदशोत्तरः इति । जलमाहरेदिति शेषः । सदशमुत्तरीयं यस्य स तथोक्तः ।। प्रचेताः – नाहरेदेकजातिस्तु न शिशुर्न च कन्यका । नानुपेतो नैकवस्त्रस्तोयमभ्युक्षणाय वै इति ।। यमः – पात्राद्विरहितं तोय मुद्धृतं सव्यपाणिना । न तेन प्रोक्षणं कुर्याद्वस्त्रनिष्पीडितेन च इति ।। शाट्यायनिः – (आभ्मं अब्जं

हिरण्मयं रौप्यं दारवं मृन्मयं दृढम्। ताम्रं पत्रपुटं रम्यं पात्रमभ्युक्षणाय वै इति ॥

ப்ரசேதஸ்:- அப்யுக்ஷணத்தை எடுத்துக் கொண்டு பாதரக்ஷையுடன் வீட்டிற்குச் செல்ல வேண்டும். அந்த ஜலபாத்ரத்தைக் கீழே வைக்காமல், அன்யனால் கொடுக்கப்பட்ட ஜலத்தால் ஆசமனம் செய்ய வேண்டும். கார்க்யாயணீ:- பாதரக்ஷை தரித்தவனும், தர்ப்பை தரித்தவனும், தலைப்புடன் கூடிய உத்தரீயம் தரித்தவனுமாய், பாத்ரத்திலுள்ள ஜலத்தைக் கொண்டு வரவேண்டும். ப்ரசேதஸ்:- சூத்ரன், குழந்தை, விவாஹமாகாத பெண், அனுபநீதன், ஒரு வஸ்த்ரமுடையவன் இவர்கள் ப்ரோக்ஷணத்திற்குரிய ஜலத்தைக் கொண்டு வரக்கூடாது. யமன்:- பாத்ரமில்லாமல் கொண்டு வந்ததும், இடது கையினாலெடுக்கப்பட்டதும், வஸ்த்ரத்தைப் பிழிந்தெடுக்கப்பட்டதுமான ஜலத்தினால் ப்ரோக்ஷணம் செய்யக் கூடாது. சாட்யாயனி:- (கல்) ஜலத்தில் உண்டாகும் சங்கு முதலியது, தங்கம், வெள்ளி, மரம், மண், தாம்ரம், இலை இவைகளிலொன்றினால் ஏற்பட்ட பாத்ரம், ப்ரோக்ஷண ஜலம் கொண்டு வருவதற்குரியதாகும்.

योगयाज्ञवल्क्यः – सौवर्णं राजतं ताम्रं मुख्यं पात्रं प्रकीर्तितम्। तदलाभे स्मृतं पात्रं स्रवते यन्न दारितम् इति ॥ शातातपः – शैवालतृणपर्णाद्यैरसंस्काराम्बुभाजनैः । सिकतावल्कले(T)पेन न कुर्यात् प्रोक्षणं बुधः इति ॥ आपस्तम्बः – नालिकाभिन्नपात्रेण कांस्यपात्रेण चैव हि। प्राण्यङ्गफलजेनापि कुर्यान्नाभ्युक्षणं द्विजः ॥ शैवालवालुकादूर्वातृणपर्यायसैरपि । अभ्युक्षणं न गृह्णीयादापस्तम्बोऽब्रवीन्मुनिः इति ॥ नालिका - वेणुमयी । प्राण्यङ्गं - शङ्खशुक्त्यादि। फलजं - नालिकेरादि ॥

யோகயாக்ஞவல்க்யர்:- பொன், வெள்ளி, தாம்ரம் இவைகளால் உண்டாகிய பாத்ரம் முக்யமாகும். அது கிடைக்காவிடில், பிளவையில்லாததும், ஒழுகாததுமான பாத்ரம் எதையாவது உபயோகிக்கலாமென விதிக்கப்பட்டுள்ளது. சாதாதபர்:- நீர்ப்பாசி, புல், இலை இவைகளாலும், சுத்தியில்லாத ஜல பாத்ரங்களாலும் கொண்டு வந்ததும், மணலுடனுள்ளதும், வஸ்த்ர ஸம்பந்தமுள்ளதுமான ஜலத்தினால் ப்ரோக்ஷணம் செய்யக் கூடாது. (இங்கு 'லோபேன' என்று பாடபேதங்கொண்டு, சிலர் மணமில்லாமலும், உத்தரீயமில்லாமலும் ப்ரோக்ஷணம் கூடாதென்கின்றனர்.) ஆபஸ்தம்பர்:- மூங்கில் பாத்ரம், உடைந்த பாத்ரம், வெண்கலப் பாத்ரம், ஜந்துவின் அங்கமாகிய சங்கு முதலியது, தேங்காய் ஓடு முதலிய பழங்களின் அவயவங்கள், நீர்ப்பாசி, மணல், அறுகு, புல், இலை, இரும்பு இவைகளால் ப்ரோக்ஷண ஜலம் கொண்டு வரக்கூடாதென்று ஆபஸ்தம்பமுனி விதித்தார்.

गर्गः – त्रिसन्ध्यं वाग्यतो वारि गुप्तमाहृत्य शोधयेत्। आहृत्य वारिणा प्रोक्ष्य द्रव्यं शोध्यं च शोधयेत् इति ।। उशना – तेनोदकेन द्रव्याणि प्रोक्ष्याचम्य पुनर्गृहे। ततः कर्माणि कुर्वीत नित्यं वैतानिकानि च इति ।।

கர்கர்:- கொண்டு வந்த ஜலத்தை மறைத்து வைத்து, அதனால் மூன்று ஸந்த்யைகளிலும் ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும். சுத்தம் செய்ய வேண்டிய த்ரவ்யங்களையும் சுத்தி செய்ய வேண்டும். உசநா:- அந்த ஜலத்தால் த்ரவ்யங்களை ப்ரோக்ஷித்து, மறுபடி ஆசமனம் செய்து, பிறகு வீட்டில் கார்யங்களையும், நித்ய கர்மங்களையும், ச்ரௌத கர்மங்களையும் செய்ய வேண்டும்.

अभ्युक्षणाहरणासमर्थं प्रत्याह शाट्यायनिः – नद्यादौ सम्यगाचान्तः संयतो गृहमागतः । उद्धृत्य मणिकात्तोयं तथाऽभ्युक्षणमाचरेत्।। आत्मीयं प्रथमं प्रोक्तं विप्रहस्ताद्द्वितीयकम्।

तृतीयमुदकस्थानात् चतुर्थं मणिकात्स्मृतम् ।। मणिके सर्वतीर्थानि वह्नौ वै सर्वदेवताः । मन्त्राश्च प्रणवे सर्वे सर्वं सत्ये प्रतिष्ठितम् ।। बृहज्जलभाण्डं - मणिकः । गृहे वा समुपस्पृश्य कृत्वा स्वर्णकुशोदकम् । कृत्वाऽऽचमनमाचान्तः पुनः प्रोक्षणामाचरेत् इति ।। प्रचेताः – वैश्वानरेण यत् किञ्चित् कुरुते प्रोक्षणं द्विजः । गङ्गातोयसमं सर्वे वदन्ति ब्रह्मवादिनः इति ।। वैश्वानरेण - वैश्वानरोऽजीजनदिति मन्त्रेण ।। स्मृत्यर्थसारे – गुप्तमग्र्याम्बु नीत्वाऽथ होमं कुर्याद्यथाविधि इति ।।

அப்யுக்ஷணம் கொண்டு வரச் சக்தியற்றவனைப் பற்றி, சாட்யாயனி:- நதி முதலியதில் விதிப்படி ஆசமனம் செய்து, சுத்தனாய் வீட்டையடைந்து, மணிகத்தினின்றும் ஜலத்தை எடுத்து, அதனால் ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும். தன்னால் கொண்டு வரப்பட்ட ஜலம் முதன்மையாகும். ப்ராம்ஹணன் கையிலிருந்து வாங்கியது இரண்டாவதாகும். ஜலமிருக்கும் இடத்திலிருந்து எடுக்கப்பட்டது மூன்றாவதாகும். மணிகத்திலிருந்து எடுக்கப்பட்டது நான்காவதாகும். மணிகத்தில் ஸகல தீர்த்தங்களும், அக்னியில் ஸகல தேவர்களும், ப்ரணவத்தில் ஸகல மந்த்ரங்களும், ஸத்யத்தில் ஸகலமும் நிலைபெற்றுள்ள. (பெரிய ஜலபாத்ரம் (குடம் - தோண்டி) மணிகமெனப் படுகிறது.) அல்லது வீட்டில் ஆசமனம் செய்து, ஸ்வர்ணத்துடனும் குசத்துடனும் சேர்ந்த ஜலத்தை க்ரஹித்து, இருமுறை ஆசமனம் செய்து புரோக்ஷணம் செய்ய வேண்டும். ப்ரசேதஸ்:- 'வைச்வாநர' மந்த்ரத்தினால், ப்ராம்ஹணன் ப்ரோக்ஷணம் செய்தால், அது எந்த ஜலமாயினும் கங்காஜல ஸமமென்று வேதமறிந்த எல்லோரும் சொல்லுகின்றனர். வைச்வாநர மந்த்ரமென்பது 'வைச்வாநரோஜீஜநத்' என்பதை முதலாகவுடைய மந்த்ரம். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- அக்ர்யோதகத்தை (ப்ரோக்ஷண ஜலத்தை) மறைத்து வீடுசேர்த்துப் பிறகு விதிப்படி ஹோமம் செய்ய வேண்டும்.

—*—

## होमविधिः

अथ होमविधिः ॥ तत्र व्यासः — अथागम्य गृहं विप्रः समाचम्य यथाविधि । प्रज्वाल्य वह्निं विधिवत् जुहुयात् जातवेदसम् इति ॥ दक्षः – सन्ध्याकर्मावसाने तु स्वयं होमो विधीयते । स्वयं होमे फलं यत् स्यात् तदन्येन न लभ्यते इति ॥ हारीतः – उपास्य विधिवत् सन्ध्यामुपस्थाय दिवाकरम् । सायं प्रातरुपासीत विवाहाग्निं द्विजोत्तमः इति ।

### ஹோமவிதி

இனி ஹோமவிதி சொல்லப்படுகிறது. அதில், வ்யாஸர்:- பிறகு ப்ராம்ஹணன் வீட்டிற்கு வந்து விதிப்படி ஆசமனம் செய்து, அக்னியை வளர்த்து, விதிப்படி ஹோமம் செய்ய வேண்டும். தக்ஷர்:- ஸந்த்யா வந்தனம் செய்த பிறகு, ஹோமத்தைத் தானே செய்ய வேண்டும். தான் ஹோமம் செய்வதாலுண்டாகும் பலன் பிறர் செய்வதால் அடையப்படுவதில்லை. ஹாரீதர்:- ப்ராம்ஹணன், விதிப்படி ஸந்த்யா வந்தனம் உபஸ்தானம் இவைகளைச் செய்து ஔபாஸனாக்னியில் காலையிலும் மாலையிலும் ஹோமம் செய்ய வேண்டும்.

आपस्तम्बः – सायंप्रातरत ऊर्ध्वं हस्तेनैते आहुती तण्डुलैर्यवैर्वा जुहुयात् स्थालीपाकवद्दैवतं सौरी पूर्वाहुतिः प्रातरित्येके, उभयतः परिषेचनं यथा पुरस्तात् इति ॥ स एव – यत्र क्वचाग्निमुपसमाधास्यन् स्यात्तत्र प्राचीरुदीचीश्च तिस्रस्तिस्रो रेखा लिखित्वाऽद्भिरवोक्ष्याग्नि-मुपसमिन्ध्या दुत्सिच्यैतदुदक मुत्तरेण पूर्वेण वाऽन्यदुपदध्यात् इति । स्मृत्यन्तरे च – प्राचीः पूर्वमुदक्संस्थं दक्षिणारम्भमालिखेत् । अथोदीचीः पुरस्संस्थं पश्चिमारम्भमालिखेत् ॥ अवोक्ष्याग्निं प्रतिष्ठाप्य ज्वलयेदग्निमिन्धनैः । उत्सिच्यावोक्षणाच्छिष्टं पूर्वत्रोत्तरतोऽपि वा । पात्रस्थमन्यदुदकमग्नेः पूर्वत्र निक्षिपेत् इति ॥

ஆபஸ்தம்பர்:- ஆக்னேய ஸ்தாலீ பாகத்திற்குப் பிறகு இந்த இரண்டு ஆஹுதிகளையும் அரிசியாலாவது, யவையாலாவது கையினால் ஹோமம் செய்ய வேண்டும். ஸ்தாலீ பாகத்திற் போல் தேவதைகள். காலையிலும் முதலாஹுதி ஸூர்யனைக்குறித்தென்று சிலர். ஆஹுதிகளுக்கு முன்னும் பின்னும் பரிஷேசனம், முன் சொல்லியது போல். ஆபஸ்தம்பரே:- எந்தக் கர்மத்திலாலவது, எந்த இடத்தில் அக்னியை ப்ரதிஷ்டை செய்யப் போகின்றானோ அந்த இடத்தில், கிழக்கில் முடிவதும் வடக்கில் முடிவதுமான மூன்று மூன்று கோடுகளைக்கீறி, ஜலத்தால் ப்ரோக்ஷித்து, அவ்விடத்தில் அக்னியை வைத்து ஜ்வலிக்கச் செய்ய வேண்டும். ப்ரோக்ஷித்த ஜலத்தின் மீதியை அக்னிக்கு வடக்கில் அல்லது கிழக்கில் கொட்டிவிட்டு, அந்த இடத்தில் வேறு ஜலத்தை வைக்க வேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஆரம்பத்தில் கிழக்கில் முடியும் மூன்று ரேகைகளைத் தெற்கிலாரம்பித்து வடக்கில் முடியும்படி கீறவேண்டும். பிறகு வடக்கில் முடியும் மூன்று ரேகைகளை மேற்கிலாரம்பித்து கிழக்கில் முடியும்படி கீறவேண்டும். அந்த இடத்தை ப்ரோக்ஷித்து, அதில் அக்னிப்ரதிஷ்டை செய்து சகலங்களால் ஜ்வலிக்கச் செய்ய வேண்டும். ப்ரோக்ஷித்த மீதி ஜலத்தைக் கிழக்கிலாவது வடக்கிலாவது கொட்டிவிட்டு, பாத்ரத்திலுள்ள வேறு ஜலத்தை அக்னிக்குக் கிழக்கில் வைக்க வேண்டும்.

बोधायनः — यस्मिन्नग्नावुपनयनं तस्मिन् ब्रह्मचर्यं तस्मिन् व्रतचर्या, तस्मिन् समावर्तनं, तस्मिन् पाणिग्रहणं, तस्मिन् गार्ह्याणि कर्माणि क्रियन्ते, तस्मिन् काम्यानि तस्मिन् प्रजासंस्कारा इत्येके। स एष उपनयनप्रभृति व्याहृतीभिः समिद्भिर्हूयत आसमावर्तनात्। समावर्तनप्रभृत्याज्येन व्याहृतीभिरेव हूयत आपाणिग्रहणात्। पाणिग्रहणप्रभृति व्रीहिभिर्यवैर्वा हस्तेनैते आहुती जुहोति इति ॥ हिरण्यकेशी – पाणिग्रहणादिरग्निस्तमौपासनमित्याचक्षते तस्मिन् गार्ह्याणि कर्माणि इति ॥

போதாயனர்:- எந்த அக்னியில் உபநயன ஹோமம் செய்யப்பட்டதோ அதில் ப்ரம்ஹசர்யம், அதில் வ்ரதானுஷ்டானம், அதில் ஸமாவர்த்தனம், அதில் விவாஹம், அதில் க்ருஹயத்தில் சொல்லிய கர்மங்கள், அதில் காம்ய கர்மங்கள் செய்யப்பட வேண்டும். தன் ப்ரஜையின் உபநயனுதி ஸம்ஸ்காரங்களும் அதிலேயே எனச் சிலர் சொல்லுகின்றனர். அவ்விதமான இந்த அக்னியில், உபநயனம் முதல் ஸமாவர்த்தனம் வரையில் வ்யாஹ்ருதிகளால் ஸமித்துகளால் ஹோமம் செய்ய வேண்டும். ஸமாவர்த்தனம் முதல் விவாஹம் வரையில் வ்யாஹ்ருதிகளாலேயே ஆஜ்யத்தால் ஹோமம் செய்யப்பட வேண்டும். விவாஹம் முதல் நெல் அல்லது யவைகளால், கையில் இந்த இரண்டு ஆஹுதிகளைச் செய்ய வேண்டும். ஹிரண்யகேசீ:- விவாஹம் முதலாக உள்ள அக்னியை ஔபாஸனமென்று சொல்லுகிறுர்கள். க்ருஹ்யத்தில் சொல்லிய கர்மங்களெல்லாம் அந்த ஔபாஸனுக்னியிலேயே செய்யப்பட வேண்டும்.

गौतमस्तु — भार्यादिरग्निर्दायादिर्वा तस्मिन् गृह्याणि इति ।। भार्याशब्देन विवाहो लक्ष्यते। तदाऽग्निपरिग्रहः । यदा पित्रा भ्रातृभिर्वा विभक्तः, तदा वाऽग्निपरिग्रह इत्यर्थः ।। याज्ञवल्क्योऽपि – कर्म स्मार्तं विवाहाग्नौ कुर्वीत प्रत्यहं गृही । दायकालाहृते वाऽपि श्रौतं वैतानिकाग्निषु इति । स्मार्तं - औपासनादि । अपिशब्दात् प्रेते वा गृहपतावाहृते संस्कृत एव । ततश्च कालत्रयव्यतिक्रमे प्रायश्चित्तीयते इति विज्ञानेश्वरः ।। शौनकः – स्मार्तोऽग्निर्द्विविधो ज्ञेयो गृह्यः पौरुष इत्यपि । यस्मिन् विवाहः क्रियते सोऽपि गृह्यो हुताशनः ।। जातकर्मादिसिद्ध्यर्थं यश्चाहुतिभिराहुतः । सोऽग्निः पौरुष इत्युक्तः शालाग्निर्लौकिकः स्मृतः ।। केचिद्वैश्यस्य भवनादाहृतो जातकः स्मृतः इति ।।

கௌதமராணுல்:- விவாஹம் முதல் அக்னியைப் பரிக்ஹித்து ஹோமம் செய்ய வேண்டும். அல்லது பிதாவுடனே, ப்ராதாவுடனே விபாகம் செய்து கொள்வது முதல் அக்னியைப் பரிக்ஹித்து ஹோமம் செய்து வரவேண்டும். அந்த அக்னியில் க்ருஹ்யத்திற் சொல்லிய கர்மங்களேச் செய்ய வேண்டும். யாக்ஞவல்க்யர்:- க்ருஹஸ்தன் ப்ரதிதினமும் ஸ்மார்த்த கர்மங்களே விவாஹர்க்னியில் செய்ய வேண்டும். குடும்பத்தில் விபாகமான காலம் முதல் பரிக்ஹித்த அக்னியிலாவது செய்ய வேண்டும். ச்ரௌதகர்மங்களே த்ரேதாக்னியில் செய்ய வேண்டும். இங்கு ஸ்மார்த்தம் என்பதற்கு ஔபாஸன ஹோமம் முதலியவை என்பது பொருள். 'அபி' என்ற சப்தத்தால் க்ருஹஸ்தன் இறந்து விட்டால் ஆஹ்ருதமான அக்னிக்கு ஸம்ஸ்காரம் செய்து அதில் கார்யத்தைச் செய்ய வேண்டும். மூன்று காலம் தாண்டி விட்டால் ப்ராயச் சித்தம் செய்ய வேண்டும் என்கிருர் விஜ்ஞானேச்வரர். சௌனகர்:- ஸ்மார்த்தாக்னி, க்ருஹ்யம். பௌருஷம் என இரண்டு விதமுள்ளது. எந்த அக்னியில் விவாஹம் செய்யப்படுகிறதோ அது 'க்ருஹ்யாக்னி' எனப்படும். ஜாதகர்மம் முதலியவை ஸித்திப்பதற்காக எதில் ஹோமம் செய்யப்பட்டதோ அது 'பௌருஷம்' எனப்படும். வீட்டில் உள்ள அக்னி லௌகிகம் எனப்படும். வைச்யனுடைய க்ருஹத்திலிருந்து கொண்டு வந்த அக்னியை 'ஜாதகாக்னி' எனச் சிலர் சொல்லுகின்றனர்.

सङ्ग्रहे — आत्मार्थमपि दारार्थ मुभयार्थं सुतार्थकम् । इत्येषां कर्मणां होमचातुर्विध्यं प्रचक्षते ।। आत्मार्थं सान्ध्यकर्मादि सीमन्तादिक्रियाः स्त्रियाः । पार्वणाद्युभयार्थं स्यात् जातकादि सुतार्थकम् ।। सुतार्थकर्मणां होमो लौकिकाग्नौ विधीयते । इतरेषां त्रयाणां तु नित्याग्नाविति निश्चयः ।। भार्याद्वयं यस्य भवेत्तु तस्य संसृष्टवह्नौ सुवनं तु कुर्यात् । तत्रैव सीमन्तमपि प्रशस्तं वदन्ति वह्नेर्न विभाग इष्टः इति ।

ஸங்க்ரஹத்தில்:- தனக்கும், பத்னிக்கும், இருவருக்கும், புத்ரர்களுக்கும் எனக் கர்மங்களை நான்கு விதமாய்ச் சொல்லுகின்றனர். ஸந்த்யா கர்மம் முதலியது தன்னுடைய கர்மம். ஸீமந்தம் முதலியது பத்னியினுடையது. ஸ்தாலீபாகம் முதலியது இருவருடையது. ஜாதகர்மம் முதலியது புத்ரர்களுடையது. புத்ரனைச் சேர்ந்த ஜாதகர்மாதி ஹோமங்களை லௌகிகாக்னியில் செய்ய வேண்டும். மற்ற மூன்று விதமான கர்மங்களின் ஹோமங்களை நித்யாக்னியில் செய்ய வேண்டும் என்பது நிர்ணயம். ஒருவனுக்கு இரண்டு பார்யைகளிருந்தால், அவர்களுள் ஒருத்திக்குப் பும்ஸவனம் செய்ய வேண்டுமானால், முன் ஸம்ஸர்க்கம் செய்யப்பட்ட அக்னியிலேயே பும்ஸவனத்தைச் செய்ய வேண்டும். அதிலேயே ஸீமந்தமும் செய்வது ப்ரசஸ்தமெனச் சொல்லுகின்றனர். ஸம்ஸ்ருஷ்டமான அக்னியைப் பிரிப்பதென்பது சாஸ்த்ரகாரர்களுக்கு இஷ்டமல்ல. ஆகையால் ஸம்ஸர்க்கமாகாமலிருந்தால் கர்ப்பிணியின் ஔபாஸனத்திலேயே பும்ஸவன ஸீமந்தங்களைச் செய்ய வேண்டும். அக்காலத்தில் ஸம்ஸர்க்கம் செய்து அதில் செய்ய வேண்டுமென்பதில்லை. விவாஹ காலத்திலோ பிறகோ ஸம்ஸர்க்கமாயிருந்தால் இதற்காக விபாகம் செய்ய வேண்டாமென்பது பொருள்.

विष्णुः — स्मार्तमौपासने कुर्यात् श्रौतं वैतानिके गृही । लौकिके विधुराणां तु विधिरेष पुरातनः ॥ बहवो यत्र होतारः शान्तिके पौष्टिके तथा । लौकिकेऽग्नौ तदा कुर्यात् गृह्याग्नौ न कदाचन ॥ चौलजातकगोदानस्नानोपनयनादिषु । लाजहोमे समित्कार्ये लौकिकोऽग्निर्विधीयते । होमं वैतानिकं हुत्वा स्मार्तं कुर्याद्विचक्षणः । स्मृतीनां वेदमूलत्वात् स्मार्तं केचित् पुरा विदुः इति ।

விஷ்ணு:- க்ருஹஸ்தன் ஸ்மார்த்தகர்மங்களை ஔபாஸனாக்னியில் செய்ய வேண்டும். ச்ரௌத கர்மங்களை த்ரேதாக்னிகளில் செய்ய வேண்டும். விதுரர்கள்

(பத்னியில்லாதவர்) லௌகிகாக்னியில் செய்ய வேண்டும். இந்த விதி புராதனமாகியது. சாந்திகம் அல்லது பௌஷ்டிகமான கர்மத்தில் அநேகம் ருத்விக்குகள் ஹோமம் செய்வதாயிருந்தால், அதை லௌகிகாக்னியில் செய்ய வேண்டும். ஔபாஸனுக்னியில் ஒருகாலும் செய்யக் கூடாது. சௌளம், ஜாதகர்மம். கோதானம், ஸ்நானம், உபநயனம் முதலியவைகளிலும், லாஜஹோமம், ஸமிதாதானம் இவைகளிலும் லௌகிகாக்னி விதிக்கப்படுகிறது. ச்ரௌத ஹோமத்தை முன்பு செய்து பிறகு ஸ்மார்த்த ஹோமத்தைச் செய்ய வேண்டும். ஸ்ம்ருதிகளுக்கு வேதம் மூலமாகியதால். சிலரோவெனில் ஸ்மார்த்தத்தை முந்திச் செய்ய வேண்டுமென்கின்றனர்.

सत्यां वैदिकानुष्ठानशक्तौ न स्मार्तमात्रेण परितुष्येत्। तदाह गर्गः – यो वैदिकमनादृत्य कर्म स्मार्तेतिहासिकम् । मोहात्समाचरेद्विप्रो न स पुण्येन युज्यते ।। श्रौतं कर्म न चेच्छक्तः कर्तुं स्मार्तं समाचरेत्। अत्राप्यशक्तः करणे सद(म)ाचारं लभेद्बुधः इति। मनुः – वेदोदितं स्वकं कर्म नित्यं कुर्यादतन्द्रितः । तद्धि कुर्वन् यथाशक्ति प्राप्नोति परमां गतिम् ।। अग्निहोत्रं च जुहुयात् आद्यन्ते द्युनिशोस्सदा। दर्शेन चार्धमासान्ते पौर्णमासेन चैव हि इति ।।

வைதிக கர்மங்களை அனுஷ்டிக்கச் சக்தியிருக்கும் பொழுது ஸ்மார்த்த கர்மங்களை மட்டிலனுஷ்டிப்பதால் ஸந்தோஷிக்கக் கூடாது. அதைச் சொல்லுகிறுர் கர்கர்:- எவன் வைதிக கர்மங்களை ஆதரியாமல் ஸ்ம்ருதிகளிலும் இதிஹாஸங்களிலும் சொல்லப்பட்டுள்ள கர்மங்களை மட்டில் அறியாமையால் அனுஷ்டிக்கின்ருனே அவன் புண்யத்துடன் சேருவதில்லை. ச்ரௌத கர்மத்தை அனுஷ்டிக்கச் சக்தனுகாவிடில் ஸ்மார்த்த கர்மத்தை யனுஷ்டிக்க வேண்டும். ஸ்மார்த்த கர்மத்தைச் செய்வதிலும் சக்தியற்றவன் (ஸ்நான ஸந்த்யாதி)

ஸதாசாரத்தை அனுஷ்டிக்க வேண்டும். மனு:- வேதத்தினால் சொல்லப்பட்டதும் தன்னுடையதுமான கர்மத்தைச் சோம்பலற்றவனாய் நித்யமும் செய்ய வேண்டும். சக்திக்கியன்றபடி அதைச் செய்பவன் சிறந்த உலகத்தை (மோக்ஷத்தை) அடைகிறான். பகலின் ஆரம்பத்திலும் ராத்ரியின் ஆரம்பத்திலும் அக்னிஹோத்ர ஹோமத்தைச் செய்ய வேண்டும். (இது உதிதஹோமிகளுக்கு) அல்லது பகலின் முடிவிலும் ராத்ரியின் முடிவிலும் செய்ய வேண்டும். (இது அனுதிதஹோமிகளுக்கு) க்ருஷ்ணபக்ஷத்தின் முடிவில் தர்சேஷ்டியையும், சுக்லபக்ஷத்தின் முடிவில் பௌர்ணமாஸேஷ்டியையும் செய்ய வேண்டும்.

दक्षः— होमे च फलमुद्दिष्टं जुह्वतः स्वयमेव तु । हूयमानं तदन्येन फलमर्धं प्रपद्यते ।। ऋत्विक्पुत्रो गुरुर्भ्राता भागिनेयोऽथ विट्पतिः । एतैरपि हुतं यत् स्यात् तद्धुतं स्वयमेव तु इति ।। विट्पतिः - जामाता ।। स्वयं होम एव मुख्यः । तदभावे ऋत्विगादिहोमः । तत्र विशेषो व्यासेन दर्शितः – 'ऋत्विक्पुत्रोऽथ वा पत्नी शिष्यो वाऽपि सहोदरः । प्राप्यानुज्ञां विशेषेण जुहुयाद्वा यथाविधि ।। पवित्रपाणिः पूतात्मा शुक्लाम्बरधरो नरः । अनन्यमानसो वह्निं जुहुयात् संयतेन्द्रियः इति ।।

தக்ஷர்:- தானாகவே ஹோமம் செய்பவனுக்குப் பூர்ணமான பலம் சொல்லப்பட்டுள்ளது. பிறனால் ஹோமம் செய்யப்பட்டால் பாதிபலனென்று சொல்லப்பட்டுள்ளது. ருத்விக், புத்ரன், குரு, ப்ராதா, மருமான், மாப்பிள்ளை இவர்களால் செய்யப்பட்ட ஹோமம் தன்னால் செய்யப்பட்டதாகவே ஆகின்றது. தானாகவே ஹோமம் செய்வது முக்யபக்ஷம். அதில்லாவிடில் ருத்விக்கு முதலியவர்கள் ஹோமம் செய்யலாம். இதில் விசேஷத்தைத் தெரிவிக்கின்றார். வ்யாஸர்:- ருத்விக், அல்லது, புத்ரன், பத்னீ, சிஷ்யன், ஸஹோதரன் யாராவது,

யஜமானனின் உத்தரவுபெற்று, விதிப்படி, பவித்ரம் கையிலுடையவனாய், சுத்தனாய், வெளுப்பு வஸ்த்ரம் தரித்தவனாய், வேறிடத்தில் மனமில்லாதவனாய், புலன்களை அடக்கியவனாய் ஹோமம் செய்ய வேண்டும்.

शौनकः—पाणिग्रहणादि गृह्यं परिचरेत् स्वयं पत्न्यपि वा पुत्रः कुर्यादन्तेवासी वा इति ॥ ऋत्विगाद्यभावे गोभिलः – गृह्याग्नौ जुहुयात् पत्नी सायं प्रातश्च होमयोः इति ॥ मनुः – अग्निहोत्रस्य शुश्रूषा सन्ध्येपासनमेव च । कार्यं पत्न्या प्रतिदिनं बलिकर्म च नैत्यकम् इति । सन्ध्यौपासनं - सायं प्रातर्होमः ॥ स्मृत्यर्थसारे – होमे मुख्यो यजमानः पत्नी पुत्रश्च कन्यका । ऋत्विक्छिष्यो गुरुर्भ्राता भागिनेयः सुतापतिः ॥ एतैरेव हुतं यत्तु तद्धुतं स्वयमेव तु । पर्युक्षणं विना पत्नी जुहुयात् कन्यकाऽपि वा इति ॥

சௌனகர்:- விவாஹம் முதல் ஔபாஸனாக்னியில் தானே ஹோமம் செய்ய வேண்டும். அல்லது பத்னீ, புத்ரன், சிஷ்யன் இவர்களுள் யாராவது செய்யலாம். ருத்விக் முதலியவர் இல்லாவிடில் கோபிலர்:- ஔபாஸனாக்னியில் காலை மாலைகளில் பத்னீ ஹோமம் செய்யலாம். மனு:- அக்னிஹோத்ரத்திற்குரிய பணிவிடை, காலை மாலைகளில் ஹோமம், ப்ரதிதினமும் செய்ய வேண்டிய பலிதானம் இவைகளைப் பத்னீ ஒவ்வொரு நாளும் செய்ய வேண்டும். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- ஹோமத்தில் யஜமானன் முக்யன், பிறகு பத்னீ, புத்ரன், பெண், ருத்விக், சிஷ்யன், குரு, ப்ராதா, மருமான், மாப்பிள்ளை இவர்களுள் யார் செய்தாலும் யஜமானன் தான் செய்தது போலாகும். பத்னீ, பெண் இவர்கள் செய்தால் பரிஷேசனமின்றிச் செய்ய வேண்டும்.

भारद्वाजः—अपि वा स्त्री जुहुयान्मन्त्रवर्जम् इति ॥ गौतमः – पत्नी जुहुयादित्येके इति ॥ मनुः – नैव कन्या न युवतिर्नाल्पविद्यो न बालिशः । होता स्या दग्निहोत्रस्य नार्तो नासंस्कृतस्तथा । नरके हि

पतन्त्येते जुह्वतः स च यस्य तत् । तस्माद्वैतानकुशलो होता स्याद्वेदपारगः इति ॥ शातातपः – श्रौतं यत्तत् स्वयं कुर्यादन्योऽपि स्मार्तमाचरेत् । अशक्तौ श्रौतमप्यन्यः कुर्यादाचमनं ततः इति ॥ याज्ञवल्क्यः – दुहित्रा स्नुषया वाऽपि विहारो न विरुध्यते । निर्णेजनं च पात्राणामुपलेपनमर्चनम् इति ।

பரத்வாஜர்:- அல்லது பத்னீ, மந்த்ரமில்லாமல் ஹோமம் செய்யலாம். கௌதமர்:- பத்னீ, ஹோமம் செய்யலாமென்றனர் சிலர். மனு:- கன்னிகை, யுவதி, அல்பவித்யையுடையவன், மூர்க்கன், வ்யாதியுள்ளவன், (உபநயனம் முதலிய) ஸம்ஸ்காரமில்லாதவன் இவர்கள் அக்னிஹோத்ர ஹோமத்தைச் செய்யக் கூடாது. செய்தால் நரகத்தில் விழுவார்கள். அந்த யஜமானனும் நரகத்தில் விழுவான். ஆகையால் ச்ரௌத கர்மங்களில் ஸமர்த்தனும், வேதத்தின் முடிவை அடைந்தவனுமாகியவனே ருத்விக்காக இருக்க வேண்டும். சாதாதபர்:- ச்ரௌத கார்யமெதுவோ அதை யஜமானன் தானே செய்ய வேண்டும். ஸ்மார்த்த கர்மத்தைப் பிறனும் செய்யலாம். சக்தி இல்லாவிடில் ச்ரௌத கர்மத்தையும் பிறன் செய்யலாம். முடிவில் யஜமானன் ஆசமனம் செய்ய வேண்டும். யாக்ஞவல்க்யர் பெண், அல்லது நாட்டுப் பெண் ப்ரணயனம் செய்வதும், பாத்ரங்களைச் சுத்தம் செய்வதும், மெழுகுவதும், அக்னிகளைப் பூஜிப்பதும் சாஸ்த்ர விருத்தமாகாது.

आपस्तम्बः— अहरहर्यजमानः स्वयमग्निहोत्रं जुहुयात् पर्वणि वा । ब्रह्मचारी वा जुहुयात् । ब्रह्मणा हि स परिक्रीतो भवति । क्षीरहोता वा जुहुयाद्धनेन हि स परिक्रीतो भवतीति बह्वृचब्राह्मणं, पर्वण्यपीत्यपरम् इति । ब्रह्मचार्यत्र अन्तेवासी । ब्रह्मणा हि स परिक्रीत इति लिङ्गात् । यः अग्न्याधेये ऋत्विक्त्वेन परिगृहीतः सः क्षीरहोता । धनेन हि स परिक्रीत इति लिङ्गात्, योऽस्याग्नीनाधत्ते स क्षीरहोता इति

हारीतस्मरणाच्च ॥ आश्वलायनोऽपि – स्वयं पर्वणि जुहुयादृत्विजामेक इतरं काल मन्तेवासी वा इति। ऋत्विजामेक इति यः कर्मणि कर्मणि व्रियते, यश्च कुले परम्पराप्राप्तः, यश्चैकस्य पुरुषस्य सर्वकर्माणि कर्तुं व्रियते, तेषां त्रिविधानां ऋत्विजां मध्ये एक इत्यर्थः ॥ बोधायनः – पुत्रोऽन्तेवासी इति।

ஆபஸ்தம்பர்:- யஜமானன் ப்ரதிதினம் தானாகவே அக்னி ஹோத்ர ஹோமம் செய்ய வேண்டும். பர்வகாலத்திலாவது தானாகவே செய்ய வேண்டும். மற்றக் காலத்தில் ப்ரம்ஹசாரியாவது (சிஷ்யன்) செய்யலாம். வேதத்தினால் அவன் வாங்கப்பட்ட வனாகிறானல்லவா. க்ஷீரஹோதாவாவது செய்யலாம். தனத்தினாலவன் வாங்கப்பட்டவனாகிறானல்லவா என்று பஹ்வ்ருச ப்ராம்ஹணம். பர்வகாலத்திலும் இவர் செய்யலாமென்று சிலர் மதம். 'ப்ரம்ஹசாரி' யென்பதற்கு தன்னிடம் அத்யயனம் செய்யும் சிஷ்யன் என்பது பொருள். அடுத்த வாக்யம் அவனைக் குறிப்பதால் க்ஷீரஹோதா என்பதற்கு அக்ன்யாதான காலத்தில் ருத்விக்காய் க்ரஹிக்கப்பட்டவன் என்று பொருள். அடுத்த வாக்யம் அவனைக் குறிக்கிறது. 'இவனுடைய அக்னிகளை ஆதானம் செய்பவன் க்ஷீரஹோதா எனப்படுவான்' என்று ஹாரீதர் சொல்லி இருக்கிறார். ஆச்வலாயனரும்:- யஜமானன் பர்வகாலங்களில் தானே ஹோமம் செய்ய வேண்டும். மற்றக் காலத்தில் ருத்விக்குகளுள் ஒருவனாவது, அந்தேவாஸி (சிஷ்யன்) யாவது செய்யலாம். 'ருத்விக்குகளுக்குள் ஒருவன்' என்பதற்கு, எவன் ஒவ்வொரு கர்மத்திலும் வரிக்கப்படுகிறானோ, எவன் குலத்தில் பரம்பரையாய் ருத்விக்காய் வந்தவனோ, எவன் ஒரு புருஷனுடைய எல்லாக் கர்மங்களிலும் வரிக்கப்படுகின்றானோ, அந்த மூன்று விதமான ருத்விக்குகளுக்குள் ஒருவன் என்பது பொருள். போதாயனர்:- புத்ரன், அல்லது அந்தேவாஸி செய்யலாம்.

होतृतारतम्यं दर्शयति छान्दोग्यश्रुतिः — अन्यैश्शतहुताद्धोमात् एकः शिष्यहुतो वरम्। शिष्यैः शतहुताद्धोमा देकः पुत्रहुतो वरम्॥ पुत्रैः शतहुताद्धोमा देको ह्यात्महुतो वरम्। स्वयं होता स्वयं दोही स्वयमेवोपतिष्ठेताग्निहोत्रं होमशेषं दक्षिणा सर्वैर्हवा एतस्य यज्ञक्रतुभिरिष्टं भवति य एवं विद्वानग्निहोत्रं जुहोति इति ॥

ஹோமம் செய்பவர்களுடைய தாரதம்யத்தைச் சொல்லுகிறது சாந்தோக்யச்ருதி:- பிறர் நூறு தடவை செய்யும் ஹோமத்தை விட, சிஷ்யன் ஒரு தடவை செய்யும் ஹோமம் சிறந்ததாகும். சிஷ்யர்கள் நூறு தடவை செய்யும் ஹோமத்தைவிட, தன் புத்ரன் ஒருதடவை செய்யும் ஹோமம் சிறந்ததாகும். புத்ரர்கள் நூறு தடவை செய்யும் ஹோமத்தைவிட, தான் ஒரு தடவை செய்யும் ஹோமம் சிறந்ததாகும். தானே ஹோமம் செய்ய வேண்டும். தானே பசுவைக் கறக்க வேண்டும். தானே உபஸ்தானம் செய்ய வேண்டும். மீதியுள்ள ஹோமத்ரவ்யம் தக்ஷிணையாம். எவன் இவ்விதமறிந்து அக்னிஹோத்ர ஹோமம் செய்கின்றானோ அவன் ஸகலமான யக்ஞக்ரதுக்களைச் செய்தவனாகிறான்.

ऋत्विगादिहोमे विशेषमाह कात्यायनः — असमक्षं तु दम्पत्योर्होतव्यं नर्त्विगादिना । द्वयोरप्यसमक्षं तु भवेद्धुतमनर्थकम् इति । तयोः सन्निधानं मुख्यम्। तदभावे त्वन्यतरसन्निधानेनापि होतुं शक्यम्। तथा च स एवाह – निक्षिप्याग्निं स्वदारेषु परिकल्प्यर्त्विजं तथा। प्रवसेत् कार्यवान् विप्रो वृथैव न चिरं वसेत् इति। पैठीनसिः – प्रस्खलीकृतधर्मस्य पीड्यमानस्य शत्रुभिः । मासद्वयं प्रवासोऽस्ति परतोऽनाहिताग्निवत् इति ॥ विष्णुः – श्रौतं स्मार्तं च यत् किञ्चिद्विधानं सर्वमादरात्। गृहे निवसता कार्यं मन्यथा दोषमृच्छति इति।

ருத்விக்கு முதலியவர் ஹோமம் செய்யும் விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார் காத்யாயனர்:- தம்பதிகள் எதிரிலில்லாவிடில், ருத்விக்கு முதலியவர்கள் ஹோமம் செய்யக் கூடாது. இருவரும் எதிரிலில்லாத பொழுது செய்த ஹோமம் பயனற்றதாகும். தம்பதிகளிருவரும் எதிரிலிருப்பது முக்யம். அதில்லாவிடில், ஒருவர் எதிரிலிருந்தாலும் ஹோமம் செய்யலாம். அவ்விதம், காத்யாயனரே சொல்லுகிறார்:- ப்ராம்ஹணன் இதர தேசத்தில் கார்யமுள்ளவனாகில், தன் பத்னியிடம் அக்னியை வைத்து விட்டு, ஹோமம் செய்யும் ருத்விக்கையும் ஏற்படுத்திவிட்டு அயல் தேசத்திற்குப் போகலாம். அங்கு (கார்யமில்லாமல்) வீணாக வெகுகாலம் வஸிக்கக் கூடாது. பைடீநஸி:- தர்மானுஷ்டானம் தவறியிருப்பவனுக்கும், சத்ருக்களால் பீடிக்கப் படுகிறவனுக்கும் இரண்டு மாதம் முழுவதும் ப்ரவாஸமுண்டு. அதற்கு மேல் தங்கினால் அனாஹிதாக்னி போல் ஆவான். விஷ்ணு:- வேதத்திலும் ஸ்ம்ருதியிலும் சொல்லப்படும் கர்மங்களெல்லாவற்றையும் வீட்டில் வஸிக்கும் க்ருஹஸ்தன் ஆதரவுடன் செய்ய வேண்டும். செய்யாவிடில் பதிதனாவான்.

अग्नेरपरित्यागमाह गर्गः — कृतदारो न वै तिष्ठेत् क्षणमप्यग्निना विना। तिष्ठेत चेद्द्विजो व्रात्यः तथा च पतितो भवेत्॥ यथा स्नानं यथा भार्या वेदस्याध्यायनं यथा। तथैवौपासनं दृष्टं न तिष्ठेत् तद्वियोगतः इति॥ व्यासः – यो हि हित्वा विवाहाग्निं गृहस्थ इति मन्यते । अन्नं तस्य न भोक्तव्यं वृथापाको हि स स्मृतः इति । याज्ञवल्क्यः – द्वादशाहमनग्निस्तु सन्ध्याहीनस्तथैव च । शूद्र एव भवेत् द्विप्रश्चतुर्वेदेषु पारगः इति॥

அக்னியை விடக்கூடாதென்பதைச் சொல்லுகிறார். கர்கர்:- விவாஹமாகியவன் ஔபாஸனம் இல்லாமல் ஒருக்ஷணம் கூட இருக்கக் கூடாது. இருப்பானாகில் அவன்

வ்ராத்யன், பதிதனுவான், ஸ்நானம் போலும், பார்யை போலும், வேதாத்யயனம் போலும் ஔபாஸனம் நித்யமென விதிக்கப்பட்டிருக்கிறது. அதை விட்டு இருக்கக் கூடாது. வ்யாஸர்:- எவன் ஔபாஸனுக்னியை விட்டு, க்ருஹஸ்தனென்று தன்னை நினைக்கின்றானோ அவன் அன்னத்தை (ஸாதுக்கள்) புஜிக்கக் கூடாது. அவன் 'வ்ருதாபாகன்' எனப்படுகிறான். (அவன் அன்னத்தைத் தேவர்களும் பித்ருக்களும் க்ரஹிப்பதில்லை என்பர்.) யாக்ஞவல்க்யர்:- பன்னிரண்டு நாள் ஔபாஸன மில்லாமலும் ஸந்த்யா வந்தனம் இல்லாமலிருக்கும் ப்ராம்ஹணன், நான்கு வேதங்களை முழுவதும் அறிந்தவனாகினும் சூத்ரனாகவேயாவான்.

स्मृतिरत्ने— हतं वित्तमदानेन हता नारी निरङ्कुशा। ब्रह्मस्वेन हतो राजा निरग्निर्ब्राह्मणो हतः ।। देशान्तर गतो वाऽपि मृतपत्नीक एव वा। वैवाहिकाग्नौ जुहुयात् सायंप्रातर्यथाविधि इति ।। बृहस्पतिः – सूतके मृतके चैव अशक्तौ श्राद्धभोजने। प्रवासादिनिमित्तेषु हावयेन्न तु हापयेत् इति ।। शाट्यायनिः – यावत्कालमहोमी स्यात् तावद्द्रव्यं त्वशेषतः। तद्दानं चैव विप्रेभ्यो यथा होमस्तथैव तत् ।। यावन्त्यब्दान्यतीतानि निरग्नर्विप्रजन्मनः। तावन्ति कृच्छ्राणि चरेत् होम्यं दद्यात्तथैव इति ।। –

ஸ்ம்ருதிரத்னத்தில்:- தானமில்லாத பணம் அழிந்து விடும். அடக்கு வாரில்லாத ஸ்த்ரீ அழிவாள். ப்ராம்ஹணன் தனத்தை அபஹரித்தால் அரசன் அழிவான். ஔபாஸனத்தை விட்டால் ப்ராம்ஹணன் அழிவான். தேசாந்தரத்தில் இருப்பவனும், பத்னியை இழந்தவனும், ஔபாஸனுக்னியில் காலையிலும் மாலையிலும் விதிப்படி ஹோமம் செய்ய வேண்டும். (தேசாந்தரத்தில் இருப்பவன் அன்யனால் ஹோமம் செய்விக்க வேண்டும். பத்னியில்லாதவன் அக்னி விபாகம் செய்து கொண்டிருந்தால் விபக்தாக்னியில் ஹோமம் செய்ய வேண்டும்.) ப்ருஹஸ்பதி:- ஜனனசௌசம்,

ம்ருதாசௌசம், சக்தியின்மை, ச்ராத்த போஜனம், ப்ரவாஸம் முதலிய காரணங்களில் அன்யனால் ஹோமம் செய்விக்க வேண்டும். விடக்கூடாது. சாட்யாயனி:- எவ்வளவு காலம்வரை ஹோமம் செய்யாமல் இருந்தானே அவ்வளவு காலம் வரையிலுள்ள ஹோமத்ரவ்யம் முழுவதையும் ப்ராம்ஹணர்களுக்குத் தானம் செய்ய வேண்டும். அது ஹோமம் செய்வது போலவேயாகும். ப்ராம்ஹணனுக்கு ஔபாஸன ஹோமமில்லாமல் எவ்வளவு வருஷங்கள் சென்றனவோ அவ்வளவு க்ருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டும். அவ்வளவு ஹோமத்ரவ்யத்தையும் ப்ராம்ஹணர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

व्यासः – यदि मासमहोमी स्यात् विप्राय गुणशालिने। पञ्चप्रस्थं प्रदद्यात्तु यावत्तण्डुलमेव च इति ।। कात्यायनः - षष्टिप्रस्थमितं धान्यं त्रिप्रस्थप्रमितं घृतम्। औपासनाग्नौ नष्टे तु वत्सरस्य विधीयते इति ।। मनुः — अग्निहोत्र्यपविध्याग्नीन् ब्राह्मणः कामकारतः । चान्द्रायणं चरेन्मासं वीरहत्यासमं हि तत् इति ।। शातातपः — अग्न्युत्सादी कृच्छ्राब्देन शुध्यति इति ।। स्मृत्यर्थसारे — सन्निधौ यजमानः स्यादुद्देशत्यागकारकः। असन्निधौ तत्पत्नी स्यात् पुत्रादिस्तदनुज्ञया ।। उन्मादे प्रसवे चर्तौ कुर्वीतानुज्ञया विना । सर्वथा यजमानो वा त्यजेत्तद्दिङ्मुखः शुचिः ।। प्रवासी नोपवासी स्यात् पत्नी धारयते व्रतम् इति ।।

வ்யாஸர்:- ஒருமாஸம் முழுவதும் ஹோமம் செய்யாமல் இருந்தால், ஐந்து படி அளவுள்ள அரிசியை, நற்குணமுள்ள ப்ராம்ஹணனுக்குத் தானம் செய்ய வேண்டும். காத்யாயனர்:- ஒருவருஷ காலம்வரை ஔபாஸனாக்னி ஹோமம் இல்லாமல் இருந்தால், அறுபதுபடி அளவுள்ள தான்யமும். மூன்றுபடி அளவுள்ள நெய்யும் கொடுக்கப்பட வேண்டுமென்று

விதிக்கப்படுகிறது. மனு:- அக்னிஹோத்ரியான ப்ராம்ஹணன் ஸ்வேச்சையாய் அக்னிகளை விட்டுவிட்டால் ஒருமாதம் முழுவதும் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஏனெனில், அப்படி அக்னிகளை விடுவது வீரனை (புத்ரனை) க்கொல்வதற்கு ஸமமாகும். சாதாதபர்:- அக்னிகளை விட்டவன் முப்பது க்ருச்ரங்களால் சுத்தனுகிருன். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- ஸன்னிதியில் யஜமானன் உத்தேச த்யாகம் செய்து கொண்டிருக்க வேண்டும். யஜமானன் இல்லாவிடில் அவன் பத்னீ இருக்க வேண்டும். புத்ரன் முதலியவர் அவர்களின் உத்தரவிஞல் ஹோமம் செய்ய வேண்டும். உன்மாதத்திலும் (சித்தம் ஸ்வாதீனமில்லாத காலத்திலும்) ப்ரஸவ காலத்திலும், ருது காலத்திலும் உத்தரவில்லாமலே செய்யலாம். எவ்விதத்திலும் யஜமானன் அந்தத் திக்கை நோக்கியவனுய், சுத்தனுயிருந்து உத்தேசத்யாகம் சொல்ல வேண்டும். வேறு தேசத்தில் இருப்பவன் உபவாஸம் இருக்க வேண்டியதில்லை. வீட்டிலிருக்கும் பத்னீ நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும்.

## होमकालः

अथ होमकालः ।। तत्र विहरणकालमाहापस्तम्बः — अधिवृक्षसूर्य आविस्सूर्ये वा इति ।। समुच्चयार्थो वा शब्दः ।। सूर्यशब्देनोभयत्रापि रश्मिलक्षणा। सायं भूमेरुत्थिता रश्मयोऽधिवृक्षमेव निविशन्ते यस्मिन् काले सोऽधिवृक्षसूर्यः । तथा प्रातः प्राच्यां दिशि रश्मय आविर्भूता यस्मिन् काले स आविः सूर्यः । तस्मिन् काले प्रणयनमित्यर्थः ।।

## ஹோமகாலம்

இனி ஹோமகாலம் சொல்லப்படுகிறது. அதில், ப்ரணயன காலத்தைச் சொல்லுகிருர், ஆபஸ்தம்பர்:- 'அதிவ்ருக்ஷஸூர்யே ஆவிஸ்ஸூர்யே வா' என்பது ஸூத்ரம். இதிலுள்ள 'வா' என்பது ஸமுச்சயத்தைச்

சொல்லுகிறது. இரண்டு இடத்திலுமுள்ள 'ஸூர்ய' சப்தம் ஸூர்யகிரணங்களைச் சொல்லுகிறது. மாலையில் பூமியினின்றும் மேலே கிளம்பிய ஸூர்யகிரணங்கள் வ்ருக்ஷங்களின் மேல் நிற்கின்ற காலமெதுவோ அது 'அதிவ்ருக்ஷஸூர்ய:' எனப்படுகிறது. அவ்விதமே காலையில் கிழக்கில் ஸூர்யகிரணங்கள் ப்ரகாசமாகும் காலமெதுவோ அது 'ஆவிஸ்ஸூர்ய:' எனப்படுகிறது. அந்தக் காலத்தில் ப்ரணயனம் செய்ய வேண்டும் என்பது பொருள்.

कात्यायनोऽपि — सूर्येऽस्तशैलमप्राप्ते षट्त्रिंशद्भिरिवाङ्गुलैः । प्रादुष्करणमग्नीनां प्रातर्भासां च दर्शने इति ।। आश्वलायनस्तु — अपराह्णे प्रातर्व्युष्टायाम् इति ।। सायं होमार्थमपराह्णे - अह्नश्चतुर्थभागे, प्रातरुदयात् पूर्वं विहरेत् इति वृत्तौ ।। गृह्यपरिशिष्टे — अनस्तमित आदित्ये सायमग्नेः प्रादुष्करण मनुदिते प्रातः इति ।। संवर्तः — कपालैर्भिन्नपात्रैर्वा आयसैर्गोमयेन वा । नाग्निप्रणयनं कुर्याद्यजमान-भयावहम् इति ।। स्मृतिरत्ने — शरावे भिन्नपात्रे च कपाले चोल्मुके च वा । नाग्निप्रणयनं कुर्यात् व्याधिहानिभयावहम् ।। अग्नौ न प्रक्षिपेदग्निमद्भिर्न शमयेत्तथा इति ।।

**காத்யாயனர்:-** மாலையில் ஸூர்யன் அஸ்தமய பர்வதத்தை அடையாமல் இருக்கும் போது அஸ்தமயத்திற்கு 36- அங்குலம் போல் இடைவெளி இருக்கும் போது அக்னிகளை ப்ரணயனம் செய்ய வேண்டும். காலையில் ஸூர்யகிரண ப்ரகாசத்தின் போதே ப்ரணயனம் செய்ய வேண்டும். **ஆச்வலாயனர்:-** மாலையில் அபராஹ்ணத்திலும், காலையில் விடிந்த பிறகும் ப்ரணயனம் செய்ய வேண்டும். இதற்கு வ்ருத்தி என்னும் க்ரந்தத்தில் ''மாலை ஹோமத்திற்காக அபராஹ்ணத்தில் பகலின் நான்காவது பாகத்திலும், காலையில் ஸூர்யோதயத்திற்கு முன்பும் ப்ரணயனம் செய்ய வேண்டும்'' என்ற அர்த்தம் சொல்லப்பட்டுள்ளது. க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:-

மாலையில் ஸூர்யன் அஸ்தமிக்காத போதும், காலையில் உதிக்காமல் இருக்கும் போதும் அக்னிப்ரணயனம் செய்ய வேண்டும். ஸம்வர்த்தர்:- ஓடுகளாலும், உடைந்த பாத்ரங்களாலும், இரும்புப் பாத்ரங்களாலும், கோமயத்தாலும், (பசுவின் சாணம்) ப்ரணயனம் செய்யக் கூடாது. இவைகளால் செய்வது யஜமானனுக்குப் பயத்தைச் செய்வதாயாகும். ஸ்ம்ருதிரத்னத்தில்:- வாணையிலும், உடைந்த பாத்ரத்திலும், ஓட்டிலும், கொள்ளிக் கட்டையிலும் (எடுத்து) அக்னி ப்ரணயனம் செய்யக் கூடாது. செய்வது, வ்யாதி, குறைவு, பயம் இவைகளைக் கொடுக்கக் கூடியதாம். அக்னியில் மற்றொரு அக்னியைப் போடக் கூடாது. அக்னியை ஜலத்தால் அணைக்கக் கூடாது.

होमकालमाहापस्तम्बः — समुद्रो वा एष यदहोरात्रस्तस्यैते गाधे तीर्थे यत् सन्धी तस्मात्सन्धौ होतव्यमिति शैलालिब्राह्मणं भवति नक्षत्रं दृष्ट्वा प्रदोषे निशायां वा सायम् इति ।। समुद्रत्वेन निरूपितस्याहोरात्रस्य सन्धिद्वयं सुप्रवेशं तीर्थद्वयम्। तस्मात्सन्धौ होमो मुख्यः । नक्षत्रदर्शनादयस्त्रयः कालाः सन्धिना सह विकल्प्यन्ते । एकनक्षत्रोदयो नत्रक्षंदर्शनम् । प्रदोषः - प्रथमयामः । निशा - निद्राकालः ।

ஹோமகாலத்தைச் சொல்லுகிறார், ஆபஸ்தம்பர்:- அஹோராத்ர (பகலும் ராத்ரியும்) மென்பது ஸமுத்ரமாம். அந்த ஸமுத்ரத்தின் அதிக ஜலமில்லாத இரண்டு துறைகளாம். இரண்டு ஸந்த்யைகளும். ஆகையால் ஸந்த்யைகளில் ஹோமம் செய்ய வேண்டுமென்று சைலாலிப்ராம்ஹணம் இருக்கிறது. நக்ஷத்ரம் தெரிந்தவுடன், அல்லது ப்ரதோஷத்தில், அல்லது நிசையில் ஸாயங்கால ஹோமம் செய்ய வேண்டும். ஸமுத்ரத் தன்மையுடன் சொல்லப்பட்ட அஹோராத்ரத்திற்கு இரண்டு ஸந்த்யைகளும் ஸுகமாய்

இறங்கக் கூடிய இரண்டு துறைகளாம். ஆகையால் ஸந்த்யைகளில் ஹோமம் முக்யம். நக்ஷத்ரதர்சனம் முதலிய மூன்று காலங்கள் ஸந்தியுடன் விகல்பிக்கப்படுகின்றன. ஒரு நக்ஷத்ரத்தின் உதயம் நக்ஷத்ரதர்சனம் எனப்படும். ப்ரதோஷமென்பது முதல்யாமம். நிசையென்பது நித்ராகாலம்.

प्रातर्होमकालोऽपि चतुर्विधस्तेनैव दर्शितः— उषस्युपोदयं समयाविषित उदिते वा प्रातः इति ।। उषसि - प्राच्यां प्राप्तप्रकाशायाम् । उपोदयं - उदयात् पूर्वस्मिन् समये । समयाविषिते - ईषदाविर्मण्डले । प्रातः उदिते वा सूर्य इत्यर्थः ।।

காலையில் நான்கு விதமாக ஹோமகாலம் ஆபஸ்தம்பராலேயே தெரிவிக்கப்பட்டுள்ளது - உஷ:காலத்தில், அல்லது உபோதய காலத்தில், ஸமயாவிஷித காலத்தில், உதயத்திற்குப் பிறகும் காலை ஹோமத்தைச் செய்யலாம். உஷ:காலத்தில் என்பதற்குக் கிழக்குத் திக்குப்ரகாசமான பிறகு என்றும், உபோதயம் என்பதற்கு உதயத்திற்கு முந்திய ஸமயத்திலென்றும், ஸமயாவிஷிதமென்பதற்குக் கொஞ்சம் ஸூர்யமண்டலம் ப்ரகாசிக்கும் பொழுது என்றும், ப்ராத: என்பதற்கு ஸூர்யோதயத்திற்கு பிறகு என்றும் பொருள்.

मनुस्तु प्रथमद्वितीयावेकीकृत्य कालत्रयमाह — उदितेऽनुदिते चैव समयाविषिते तथा । सर्वथा वर्तते यज्ञ इतीयं वैदिकी श्रुतिः इति ।। एतेषां लक्षणमाह व्यासः — रात्रेष्षोडशमे भागे ग्रहनक्षत्रभूषिते । काले त्वनुदितं प्राहुर्होमं कुर्याद्विचक्षणः ।। तथा प्रभातसमये नष्टे नक्षत्रमण्डले । रविर्यावन्न दृश्येत समयाविषितस्तु सः ।। रेखामात्रस्तु दृश्येत रश्मिभिस्तु समन्वितः । उदितं तं विजानीयात् तत्र होमं प्रकल्पयेत् इति । सङ्ग्रहोऽपि — ग्रहर्क्षयुक्तोऽनुदितो नक्षत्रार्कविवर्जितः । समयाविषितस्सार्क उदितस्त्रिषु होमयेत् इति ।।

மனு:- முதல் இரண்டாவது காலங்களை ஒன்ருக்கி மூன்று காலங்களைச் சொல்லுகிருர் - உதித காலத்திலும், அனுதித காலத்திலும், ஸமயாவிஷித காலத்திலும் ஹோமம் விகல்பமாய் விதிக்கப்படுகிறது என்றது வேதத்தின் வாக்யமாம். இவைகளுக்கு லக்ஷணத்தைச் சொல்லுகிருர். வ்யாஸர்:- ராத்ரியின் 16 - ஆவது பாகம், க்ரஹங்கள் நக்ஷத்ரங்கள் இவைகளுடன் ப்ரகாசிக்கும்பொழுது அக்காலத்தை அனுதிதமென்பர். அப்பொழுது ஹோமம் செய்ய வேண்டும். அவ்விதமே விடியற் காலத்தில் நக்ஷத்ரங்களெல்லாம் மறைந்த பிறகு, ஸூர்யன் புலப்படாமலிருக்கும் காலம் ஸமயாவிஷிதமென்பதாம். பிறகு கோடு அளவுற்றவனுய், கிரணங்களுடன் கூடியவனுய் ஸூர்யன் காணப்படும் காலம் உஷிதமாம். அப்பொழுது ஹோமம் செய்ய வேண்டும். ஸங்க்ரஹத்திலும்:- க்ரஹங்களும் நக்ஷத்ரங்களும் கூடியகாலம் அனுதிதமாம். நக்ஷத்ரங்களும் ஸூர்யனுமில்லாத காலம் ஸமயாவிஷிதமாம். ஸூர்யனுடன் கூடியகாலம் உதிதமாம். இம்மூன்று காலங்களிலும் ஹோமம் செய்யலாம்.

मरीचिः — द्विरश्मिमत्यां सन्ध्यायां सूर्यनक्षत्ररश्मिभिः । होमकालः स विज्ञेयो ह्यग्निगर्भा तदा मही इति ।। कात्यायनः — यावत्सम्यङ्ग भाव्यन्ते नभस्यृक्षाणि सर्वतः । लोहितत्वं च नापैति तावत् सायं तु हूयते ।। हस्तादूर्ध्वं रविर्यावत् भुवं हित्वा न गच्छति ।। तावद्धोम विधिः पूज्यो नान्यो ह्युदितहोमिनाम् इति ।। उशनाः — अर्धमण्डलसंप्राप्ते भानावनुदिते हुतम् । तस्मिन्नस्तं गते होमो भवेदुदितहोमिनः इति ।। हुतं - होमः ।। आश्वलायनः — प्रदोषान्तो होमकालः सङ्गवान्तः प्रातः इति ।।

மரீசி:- ஸூர்யகிரணங்களுடனும், நக்ஷத்ர கிரணங்களுடனும் கூடிய ஸந்த்யையில் ஹோமகாலமென அறியவேண்டும். அப்பொழுது பூமி, அக்னியை

கர்ப்பத்தில் உடையதாயிருக்கின்றது. காத்யாயனர்:- எதற்குள் ஆகாயத்தில் எல்லாவிடத்திலும் நக்ஷத்ரங்கள் நன்ருய்க் காணப்படவில்லையோ, ஆகாயத்திலுள்ள சிவப்பு நிறமும் மறையவில்லையோ அக்காலத்திற்குள் ஸாயங்காலத்திய ஹோமம் செய்ய வேண்டும். காலையில், உதித்த ஸூர்யன் பூமியை விட்டு ஒரு முழத்திற்கு மேல் போகாமலிருக்கும் காலத்திற்குள் காலையில் ஹோமம் செய்வது சிறந்தது. உதிதஹோமிகளுக்கு வேறு விதியில்லை. உசநஸ்:- காலையில் ஸூர்யன் பாதிமண்டலம் உதித்தும் பாதிமண்டலம் தெரியாமலுமிருக்கும் பொழுது ஹோமம் செய்ய வேண்டும். மாலையில் ஸூர்யன் அஸ்மித்த பிறகு ஹோமம் செய்ய வேண்டும். இது உதிதஹோமியின் விஷயம். ஆச்வலாயனர்:- மாலையில் ஹோமகாலம் ப்ரதோஷம் வரை. காலையில் ஸங்கவம் வரை.

स्मृत्यर्थसारे — प्रातर्होमे सङ्गवान्तः कालस्तूदितहोमिनः । सायमस्तमिते होमकालस्तु नवनाडिकाः इति ।। स्मृतिसारसमुच्चये — मुहूर्ते चतुरर्धे तु प्रातर्होमो विधीयते । सायङ्काले तथैव स्यात् भानोरस्तमयात् परम् इति ।। प्रदीपिकायाम् — निशायां तु व्यतीतायां सायं होमोऽतिपद्यते । तथैव सङ्गवेऽतीते प्रातर्होमोऽप्यनापदि इति ।। सङ्ग्रहोऽपि — निशा व्यतीयाद्यदि सङ्गवो वा सङ्कल्पितो वा समयो न चापदि इति ।। यद्यनापदि नवनाडिकाभ्यन्तरे सायंहोमो न क्रियते, द्वादशनाडिकाभ्यन्तरे यदि प्रातर्होमो न क्रियते, सङ्कल्पिते वा सन्ध्यादिकाले यद्युभयत्र न क्रियते, तदा कालातिपत्तिप्रायश्चित्तं कर्तव्यम् । आपदि तु वक्ष्यमाणगौणकालेऽपि न प्रायश्चित्तमित्यर्थः ।। भास्करः — कालातिपत्तिर्नवनाडिकोर्ध्वं सङ्कल्पिते वा समये व्यतीते । कालात्ययः सङ्गवतः परस्तात् सङ्कल्पिते वा समये व्यतीते इति ।।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- உதிதஹோமிக்குக் காலையில் ஹோமகாலம் ஸங்கவம் முடியும்வரை. மாலையில் ஸூர்யாஸ்தமயத்திற்குப் பிறகு ஒன்பது நாழிகை

'பத்னியில்லாதவன் யக்ஞத்திற்கர்ஹனல்லாதவன்' 'க்ருஹஸ்தர்களுக்கு ப்ரதிதினமும் ஐந்து மஹாயக்ஞங்கள் விதிக்கப்பட்டுள்ளன' 'க்ருஹஸ்தனுக்கு ஒவ்வொரு நாளும் ஐந்து ஹிம்ஸைகள் ஏற்படுகின்றன, அவைகளைப் போக்குவதற்காக ஐந்து யக்ஞங்கள் விதிக்கப்பட்டுள்ளன' என்பது முதலிய வசனங்களால், ஐந்து மஹாயக்ஞங்களுக்குள்ளான ப்ரம்ஹயக்ஞத்திற்கு க்ருஹஸ்தனே அதிகாரி என்று தெரிந்தாலும் ப்ரம்ஹசாரிகளும் ப்ரம்ஹயக்ஞத்தை அனுஷ்டிக்க வேண்டும். 'ப்ரம்ஹசாரியாகியவன் ஜிதேந்த்ரியனாய் யதாசக்தி மாலை காலைகளில் அக்னிகார்யம், ப்ரம்ஹயக்ஞம், தர்ப்பணம் இவைகளை ப்ரதிதினம் செய்ய வேண்டும்' என்று ஸ்ம்ருதி இருப்பதால்.

वसिष्ठः – ऋक्सामाथर्ववेदोक्तान् जपेन्मन्त्रान् यजूंषि च । जपित्वैवं ततः कुर्यात् देवर्षिपितृतर्पणम् इति ।। तर्पणं तु यथास्वशाखं द्रष्टव्यम् । तच्चाग्रे वक्ष्यते ।।

வஸிஷ்டர்:- ருக்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம் இவைகளில் சொல்லப்பட்ட மந்த்ரங்களையும், யஜுர்வேதத்திலுள்ள யஜுஸ்ஸுகளையும் ஜபிக்க வேண்டும். இவ்விதம் ஜபித்த பிறகு தேவர்ஷி பித்ரு தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும். தர்ப்பணத்தை மேலே சொல்லப் போகிறோம்.

अह्नो द्वितीयभागकृत्यम् – अथ अष्टधा विभक्तस्य दिवसस्य प्रथमभागकृत्यमुक्त्वा द्वितीयभागकृत्यमाह, दक्षः – द्वितीये तु तथा भागे वेदाभ्यासो विधीयते इति । कूर्मपुराणेऽपि – वेदाभ्यासं ततः कुर्यात् प्रयत्नाच्छक्तितो द्विजः । जपेदध्यापयेच्छिष्यान् धारयेद्वै विचारयेत् ।। अवेक्षेत च शास्त्राणि मन्वादीनि द्विजोत्तमः । वैदिकांश्चापि निगमान् वेदाङ्गानि च सर्वशः इति ।।

**பகலில் இரண்டாவது பாகத்தில் செய்ய வேண்டியவை**

இனி, எட்டுப் பாகமாய் பிரிக்கப்பட்ட பகலின் முதல் பாகத்தில் அனுஷ்டிக்க வேண்டிய கார்யத்தைச் சொல்லி இரண்டாவது பாகத்தில் அனுஷ்டிக்க வேண்டிய கார்யத்தைச் சொல்லுகிறுர் தக்ஷர்:- பகலில் இரண்டாவது பாகத்தில் வேதாப்யாஸம் விதிக்கப்படுகிறது. கூர்ம புராணத்திலும்:- பிறகு ப்ராம்ஹணன் யதாசக்தி ப்ரயத்னத்துடன் வேதாப்யாஸம் செய்ய வேண்டும். வேதத்தை ஜபிக்க வேண்டும், சிஷ்யர்களை அத்யயனம் செய்விக்க வேண்டும். மறக்காமல் தரிக்க வேண்டும், அர்த்தத்தையும் விசாரிக்க வேண்டும். மனுதர்மசாஸ்த்ரம் முதலிய சாஸ்த்ரங்களையும் பார்க்க வேண்டும். எல்லா வைதிகாகமங்களையும், வேதாங்கங்களையும் பார்க்க வேண்டும்.

व्यासः – नान्यतो ज्ञायते धर्मो वेदादेवैष निर्बभौ । तस्मात्सर्वप्रयत्नेन धर्मार्थं वेदमाश्रयेत् इति ।। याज्ञवल्क्यः – हुत्वाऽग्नीन् सूर्यदैवत्यान् जपेन्मन्त्रान् समाहितः । वेदार्थानधिगच्छेच्च शास्त्राणि विविधानि च इति ।। तस्मिन्नेव भागे कृत्यान्तरमाह दक्षः – समित्पुष्पकुशादीनां स कालस्समुदाहृतः इति ।। चन्द्रिकायाम् – सन्ध्यासावित्रीहोमाश्च पूर्वस्मिन् भाग एव तु । वेदाभ्यासो द्वितीयेंऽशे समित्पुष्पकुशाहृतिः इति ।। स्मृत्यन्तरे – तथाऽऽयुष्यहितार्थाय स्वाध्यायं किञ्चिदाचरेत् । कुशपुष्पेन्धनादीनि गत्वा दूरं समाहरेत् इति ।

**வ்யாஸர்:-** தர்மம் வேதத்தினின்றுமே வெளியாயிற்று, மற்றதிலிருந்து அறியப்படுகிறதில்லை. ஆகையால் தர்மத்தை அறிவதற்கு எவ்விதத்தாலும் வேதத்தை ஆச்ரயிக்க வேண்டும் யாக்ஞவல்க்யர்:- அக்னியில் ஹோமம் செய்து, ஸூர்ய தேவதாகமான மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். வேதங்களினர்த்

தங்களையும் பலவிதமான சாஸ்த்ரங்களையும் அறியவேண்டும். அதே பாகத்தில் மற்றொரு கார்யத்தைச் சொல்லுகிறார் - தக்ஷர்:- ஸமித், புஷ்பம், குசம் முதலியதைச் சம்பாதிப்பதற்கு அதுவே காலமாய்ச் சொல்லப்பட்டுள்ளது. சந்த்ரிகையில்:- ஸந்த்யாவந்தனம், காயத்ரீ ஜபம், ஹோமம் இவை முதல் பாகத்தில், இரண்டாவது பாகத்தில் வேதாப்யாஸமும், ஸமித், புஷ்பம், குசம் இவைகளைச் சம்பாதிப்பதுமாம். மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஆயுளின் நன்மைக்காகச் சிறிது வேதாப்யாஸம் செய்ய வேண்டும். குசம், புஷ்பம், ஸமித் இவை முதலியதைத் தூரத்திற் சென்று கொண்டு வரவேண்டும்.

संवर्तः — समित्पुष्पकुशादीनि श्रोत्रियः स्वयमाहरेत् इति ।। सङ्ग्रहः — शूद्राहृतानि पुष्पाणि क्रयक्रीतानि यानि च । पारक्याणि च पुष्पाणि लब्धान्यर्हाणि नार्चने ।। उत्तमं स्वार्जितं पुष्पं मध्यमं वन्यमुच्यते । अधमं तु क्रयक्रीतं पारक्यं त्वधमाधमम् ।। त्याज्यं पर्युषितं जन्तुदूषितं पादलङ्घितम् । म्लानं स्पृष्टं तथाऽस्पृश्यैर्नीतं च प्रतिलोमजैः ।। हस्तानीतं पटानीतं स्वयंपतितमेव वा । देवारामोद्भवं पुष्पं गृहदेवाय नार्चयेत् इति ।। आश्वमेधिके — अर्कपुष्पाणि चान्यानि अर्कपत्रस्थितानि च । निर्गन्धानि च पुष्पाणि सर्वाण्येतानि वर्जयेत् ।। केशकीटापविद्धानि शीर्णपर्युषितानि च । स्वयंपतितपुष्पाणि त्यजेदुपहतानि च इति ।।

ஸம்வர்த்தர்:- ஸமித், புஷ்பம், குசம் முதலியதை ச்ரோத்ரியன் தானுகவே கொண்டு வரவேண்டும். ஸங்க்ரஹத்தில்:- சூத்ரர்களால் கொண்டு வரப்பட்டதும், விலைக்கு வாங்கியதும், பிறருடையதுமான புஷ்பங்கள் தேவ பூஜைக்கு யோக்யங்களல்ல. தன்னுல் ஸம்பாதிக்கப் பட்ட புஷ்பம் உத்தமம், காட்டிலுண்டாகியது மத்யமம். விலைக்கு வாங்கியது அதமம். பிறருடையது அதமாதமம்.

பழைய புஷ்பம் வர்ஜிக்கத் தகுந்தது. ஜந்துக்களால் கெடுக்கப்பட்டதும், கால்களால் தாண்டப்பட்டதுள், வாடியதும், தொடக்கூடாதவர்களால் தொடப்பட்டதும், ப்ரதிலோம ஜாதீயர்களால் கொண்டு வரப்பட்டதும், கையால் கொண்டு வரப்பட்டதும், துணியால் கொண்டு வரப்பட்டதும், தானாக உதிர்ந்ததுமான புஷ்பம் வர்ஜிக்கத் தகுந்ததாகும். தேவதையின் பூந்தோட்டத்தில் உண்டாகிய புஷ்பத்தை வீட்டிலுள்ள தேவதையின் பூஜையில் உபயோகிக்கக் கூடாது. ஆச்வமேதிகத்தில்:- எருக்கின் புஷ்பங்கள், எருக்கின் இலையில் வைக்கப்பட்டவை, வாஸனையில்லாதவை, இந்தப் புஷ்பங்களை வர்ஜிக்க வேண்டும். மயிர், புழு இவைகளால் தூஷிக்கப்பட்டதும், சிதறியதும், பழையதும், தானாக உதிர்ந்ததும், அசுத்தமுமான புஷ்பங்களை வர்ஜிக்க வேண்டும்.

स्मृतिरत्ने — जलजानां च सर्वेषां पत्राणामहतस्य च । कुशपुष्पस्य रजतसुवर्णकृतयोरपि ।। न पर्युषितदोषोऽस्ति तीर्थतोयस्य चैव हि इति ।। मौद्गल्यः - अवालुकायुतं तोयमस्नेहाक्तं तथौदनम् । असूत्रग्रथितं पुष्पं सर्वं पर्युषितं भवेत् ।। वर्ज्यं पर्युषितं चान्नं वर्ज्यं पर्युषितं जलम् । न वर्ज्यं जाह्नवीतोयं न वर्ज्यं तुलसीदलम् ।। आरवारे च शौक्रे च मन्वादिषु युगादिषु । नाहरेत्तुलसीपत्रं मध्याह्नात् परतोऽहनि ।। सङ्क्रान्त्यां पक्षयोरन्ते द्वादश्यां निशि सन्ध्ययोः । तुलसीं ये विचन्वन्ति ते कृन्तन्ति हरेः शिरः इति ।।

ஸ்ம்ருதிரத்னத்தில்:- ஜலத்தில் உண்டாகும் எல்லாப் புஷ்பங்களுக்கும், பில்வம் முதலிய இலைகளுக்கும், அஹதமான வஸ்த்ரத்திற்கும், குச புஷ்பத்திற்கும், வெள்ளி தங்கமிவைகளால் செய்யப்பட்ட புஷ்பத்திற்கும், புண்யதீர்த்த ஜலத்திற்கும் பழைமையால் தோஷமில்லை. மௌத்கல்யர்:- மணலுடன் கூடாத ஜலம், எண்ணெய்யுடன் கூடாத அன்னம், தொடுக்கப்படாத புஷ்பம் இவையெல்லாம் பழைமையுடையதாகும்.

பழைமையுள்ள அன்னம் வர்ஜிக்கத் தகுந்தது. பழைமையுள்ள ஜலம் வர்ஜிக்கத் தகுந்தது. ஆனால், கங்கா ஜலம் வர்ஜிக்கத் தகுந்ததல்ல. துளஸியின் இலையும் வர்ஜிக்கத் தகுந்தல்ல. பௌமவாரம், சுக்ரவாரம், மன்வாதிகள், யுகாதிகள், மத்யாஹ்னத்திற்குப் பிறகான பகல் இக்காலங்களில் துளஸீ பத்ரத்தை க்ரஹிக்கக் கூடாது. ஸங்க்ரமணம், அமா, பூர்ணிமா, த்வாதசீ, ராத்ரி, ஸந்த்யை இக்காலங்களில் துளஸீ பத்ரத்தை க்ரஹிப்பவர் எவரோ அவர் விஷ்ணுவின் சிரஸ்ஸைச் சேதிக்கின்றனர்.

भारते — तुलसीपत्रमादाय मद्भक्तो गतवान् यतः । तमेवानुगमिष्यामि यथा गौर्वत्सला तथा ।। तुलस्याहरणमन्त्रः - तुलस्यमृतसंभूते सदा त्वं केशवप्रिया । केशवार्थं लुनामि त्वां वरदा भव शोभने ।। मोक्षैक हेतो धरणिप्रसूते विष्णोस्समस्तस्य गुरोः प्रिये ते । आराधनार्थं पुरुषोत्तमस्य लुनामि पत्रं तुलसि क्षमस्व ।। प्रसीद मम देवेशि प्रसीद हरिवल्लभे । क्षीरोदमथनोद्भूते तुलसि त्वं प्रसीद मे इति ।। कुशोत्पाटनविधिः प्रसङ्गात् पूर्वमेवोक्तः ।।

**பாரதத்தில்:-** துளஸீபத்ரத்தை எடுத்துக் கொண்டு என் பக்தன் எங்கு செல்கின்றானோ அங்கு, அவனை நான், அன்புள்ள பசு தன் கன்றை எவ்விதம் பின் தொடருகிறதோ அவ்விதம் பின் தொடருகிறேன். துளஸியை க்ரஹிக்கும் **மந்த்ரம்:-** அம்ருதத்தினின்றும் உண்டாகிய துளஸியே! நீ எப்பொழுதும் கேசவனுக்குப் பிரியமானவள். உன்னைக் கேசவனுக்காகக் கிள்ளுகிறேன். ஓ சுபமாகியவளே! நீ வரனை அளிப்பவளாயாக வேண்டும். மோக்ஷத்திற்கு முக்ய காரணமாகியவளே! பூமியில் உண்டாகியவளே! புருஷோத்தமனின் பூஜைக்காக உனது இலையைச் சேதிக்கின்றேன். பொறுக்க வேண்டும். தேவர்களுக்கும் ஈச்வரியே! அனுக்ரஹிக்க வேண்டும். ஹரியின் வல்லபே! அனுக்ரஹிக்க வேண்டும். பாற்கடலைக் கடைந்ததால் உண்டாகியவளே! ஓ துளசி! எனக்கு நீ அனுக்ரஹம் செய்ய

வேண்டும். ''குசத்தை க்ரஹிக்கும் விதி ப்ரஸங்கத்தால் முன்பே சொல்லப்பட்டுள்ளது.

तृतीयभागकृत्यम् — अथ तृतीयभागकृत्यमाह दक्षः — तृतीये च तथा भागे पोष्यवर्गार्थसाधनम् इति ॥ व्यासोऽपि — उपेयादीश्वरं चाथ योगक्षेमार्थसिद्धये । साधयेद्विततानर्थान् कुटुम्बार्थं द्विजोत्तमः इति ॥ ईश्वरं - राजानम् । अलब्धलाभो योगः । लब्धपरिपालनं क्षेमः ॥ हारीतः – सञ्चिन्त्य पोष्यवर्गस्य भरणार्थं विचक्षणः । ईश्वरं चैव कार्यार्थमभिगच्छेद्द्विजोत्तमः इति ॥ गौतमोऽपि – योगक्षेमार्थमीश्वरमधिगच्छेन्नान्यमन्यत्र देवगुरुधार्मिकेभ्यः इति ॥ मनुः - यात्रामात्रप्रसिद्ध्यर्थं स्वैः कर्मभिरगर्हितैः । अक्लेशेन शरीरस्य कुर्वीत धनसञ्चयम् इति ॥

மூன்றாவது பாகத்தின் கார்யம் :- மூன்றாவது பாகத்தின் கார்யத்தைச் சொல்லுகிறார் தக்ஷர்:- மூன்றாவது பாகத்தில், தன்னால் போஷிக்கத் தகுந்தவர்களைப் போஷிப்பதற்காகப் பணத்தை ஸம்பாதிக்க வேண்டும். வ்யாஸரும்:- பிறகு யோகக்ஷேமங்கள் ஸித்திப்பதற்காக ஈச்வரனை அடையவேண்டும். ஈச்வரன் - அரசன். இல்லாத பொருளை அடைவது யோகம். கிடைத்த பொருளைப் பரிபாலிப்பது க்ஷேமம். ஹாரீதர்:- அறிவுள்ள ப்ராம்ஹணன் போஷிக்கத் தகுந்தவர்களைப் போஷிப்ப தற்காக ஆலோசித்து, கார்ய நிமித்தமாய் அரசனை அடைய வேண்டும். கௌதமரும்:- யோகக்ஷேமத்திற்காக ராஜாவை அடைய வேண்டும். தேவதைகள், குருக்கள், தார்மிகர்கள் இவர்களைத் தவிர்த்து மற்றவனை அடையக் கூடாது. மனு:- குடும்பரக்ஷணம், நித்ய கர்மானுஷ்டான மிவையுடன் தன் ப்ராணனை ரக்ஷிப்பதற்காக மட்டும், சாஸ்த்ர விஹிதமானதும், இழிவில்லாததுமான தனது கர்மங்களால் சரீரத்திற்கு க்லேசமில்லாமல் பணத்தைச் சேர்க்க வேண்டும்.

स्मृतिरत्ने — अह्नोऽष्टधा विभक्तस्य भागे चैव तृतीयके। पोष्यवर्गार्थसिद्ध्यर्थं धनमिच्छेत्तु बुद्धिमान् इति ॥ पोष्यवर्गो दक्षेण दर्शितः — माता पिता गुरुर्भार्या प्रजा दासः समाश्रितः। अभ्यागतोऽतिथिश्चाग्निः पोष्यवर्ग उदाहृतः ॥ ज्ञातिर्बन्धुजनः क्षीणस्तथाऽनाथः समाश्रितः। अन्योऽपि धनहीनस्तु पोष्यवर्ग उदाहृतः ॥ भरणं पोष्यवर्गस्य प्रशस्तं स्वर्गसाधनम्। नारकं पीडनं तस्य तस्माद्यत्नेन तान् भरेत् ॥ स जीवति य एवैको बन्धुभिश्चोपभुज्यते। जीवन्तोऽपि मृतास्त्वन्ये पुरुषाः स्वोदरम्भराः इति ॥

ஸ்ம்ருதிரத்னத்தில்:- எட்டுப் பாகமாய் பிரிக்கப்பட்ட பகலின் மூன்ருவது பாகத்தில் போஷ்யர்களின் போஷணத்திற்காக, புத்தியுள்ளவன் பணத்தை ஸம்பாதிக்க வேண்டும். போஷ்ய வர்க்கமென்பது தக்ஷரால் தெரிவிக்கப்பட்டுள்ளது. தாய், தந்தை, குரு, பார்யை, குழந்தை, தாஸன், ஆச்ரிதன், அப்யாகதன், அதிதி, அக்னி இவர்கள் போஷ்யர்கள். ஜ்ஞாதி, பந்து, தரித்ரன், அநாதன், அண்டியவன், பணமில்லாத மற்றவன் இவர்களும் போஷ்யர்களாம். போஷ்யர்களைத்தாங்குவது சிறந்த ஸ்வர்க்கஸாதனமாம். அவர்களைப் பீடிப்பது நரகப்ரதமாம். ஆகையால் ப்ரயத்னத்துடன் அவர்களைப் போஷிக்க வேண்டும். எவனைப் பந்துக்கள் அண்டிப் பிழைக்கின்றனரோ, அவனொருவனே பிழைத்திருக்கிறான். தன் வயிற்றை மட்டும் வளர்க்கும் மற்ற மனிதர்கள் பிழைத்திருந்தாலும் இறந்தவர்களேயாம்.

चतुर्थभागकृत्यम् — अथ चतुर्थभागकृत्यमाह दक्षः - चतुर्थे तु तथा भागे स्नानार्थं मृदमाहरेत्। तिलपुष्पकुशादीनि स्नानं चाकृत्रिमे जले इति ॥ मध्याह्नस्नानविधिस्तु प्रसङ्गात् पूर्वमेव निरूपितः ॥ मध्याह्नसन्ध्याविधिमाह शङ्खः - प्रातः सन्ध्यां सनक्षत्रां मध्यमां स्नानकर्मणि। सादित्यां पश्चिमां सन्ध्यामुपासीत यथाविधि ॥

आपोहिष्ठेति सम्प्रोक्ष्य त्र्यृचेनाब्दैवतेन तु । आपः पुनन्तुमन्त्रेण पीत्वाऽपो मार्जयेत् पुनः ।। दधिक्रावृण्ण इति च आपोहिष्ठादिभिस्तथा। प्रदक्षिणं परिषिच्य त्वारभेच्छ्रुतिचोदितम्।। अर्घ्यमेकं प्रदातव्यं मध्याह्ने भास्करं प्रति। पाणिना जलमादाय सकृत् कुर्यात् प्रदक्षिणम्।। दर्भान् धारयमाणः सन्नात्मनो ध्यानमाचरेत्। आदित्यादीन् ग्रहांस्तत्र तर्पयेत् सुसमाहितः।। अथ मध्यमसन्ध्याया मासीनः प्राङ्मुखो जपेत्। स्थितो जपेत् सदाकालमादित्याभिमुखो द्विजः।। यदि स्यात् क्लिन्नवासा वै वारिमध्यस्थितो जपेत्। सहस्रपरमां देवीं शतमध्यां दशावराम्।। गायत्रीं तु यथाशक्ति जपेदव्यग्रमानसः। स्वशाखाविहितैर्मन्त्रैरादित्यमुपतिष्ठति ।। प्रदर्शयन् व्योममुद्रा मासत्येनेति मन्त्रकम्। स्थितो जपेदूर्ध्वबाहुः सूर्यं पश्यन् समाहितः इति।।

நான்காவது பாக க்ருத்யம் :- நான்காவது பாகத்தின் கார்யத்தைச் சொல்லுகிறுர்- தக்ஷர்:- பகலில் நான்காவது பாகத்தில் ஸ்நானத்திற்காக மண்ணைக் கொண்டு வரவேண்டும். எள், புஷ்பம், குசம் முதலியதையும் கொண்டு வரவேண்டும். மனிதர்களால் செய்யப்பட்ட தடாகம் முதலியதல்லாத தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். மத்யாஹ்ன ஸ்நாநவிதியை ப்ரஸக்தியால் முன்பே சொல்லி விட்டோம். மாத்யாஹ்னிக ஸந்த்யாவிதியைச் சொல்லுகிறுர். சங்கர்:- நக்ஷத்ரங்களுடன் கூடிய காலத்தில் ப்ராதஸ் ஸந்த்யையையும், மத்யாஹ்ன ஸ்நானகாலத்தில் மத்யாஹ்ன ஸந்த்யையையும், ஸூர்யனுடன் கூடிய காலத்தில் ஸாயம் ஸந்த்யையையும் விதிப்படி உபாஸிக்க வேண்டும். ஜலதேவதாகமான ஆபோஹிஷ்டா முதலிய மூன்று ருக்குகளால் ப்ரோக்ஷித்து, 'ஆப:புநந்து' என்ற மந்த்ரத்தால் ஜலத்தைப் பருகி, மறுபடி 'ததிக்ராவ்ண்ண:,' 'ஆபோஹிஷ்டா' முதலிய மந்த்ரங்களால் ப்ரோக்ஷித்து,

ப்ரதக்ஷிணமாய் ஜலத்தால் தன்னைச் சுற்றி, வேதம் சொல்லியதை ஆரம்பிக்க வேண்டும். மத்யாஹ்னத்தில் ஸூர்யனைக் குறித்து ஒரு அர்க்யம் கொடுக்க வேண்டும். கையினால் ஜலத்தை எடுத்துக் கொண்டு ஒரு முறை ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். தர்ப்பங்களைத் தரித்தவனாய்ப் பிரம்மாத்மாவை த்யானிக்க வேண்டும். கவன முடையவனாய் ஸூர்யன் முதலிய க்ரஹங்களைத் தர்ப்பிக்க வேண்டும். பிறகு கிழக்கு முகமாய் உட்கார்ந்தவனாய், காயத்ரியை ஜபிக்க வேண்டும். ஈரவஸ்த்ரத்துடனிருந்தால் ஜலத்தின் நடுவிலிருந்து ஜபிக்க வேண்டும். யதாசக்தி காயத்ரியை ஜபிக்க வேண்டும். ஆயிரமுறை ஜபிப்பது உத்தமம்; நூறு மத்யமம்; பத்து அதமம். ஏகாக்ரனாய் ஜபிக்க வேண்டும். தன் சாகையில் விதிக்கப்பட்டுள்ள மந்த்ரங்களால் ஸூர்யோப ஸ்தானம் செய்ய வேண்டும். ஆகாச முத்ரையைக் காண்பிவிப்பவனாய், 'ஆஸத்யேந' என்ற மந்த்ரத்தை, நின்று கொண்டு, ஸூர்யனைப் பார்த்துக் கொண்டு, கவனமுடையவனாய் ஜபிக்க வேண்டும்.

योगयाज्ञवल्क्यः - आसत्यर्क्षु च पूर्वे द्वे त्रिष्टुभौ कवयोविदुः । गायत्री तु तृतीया स्याच्चतुर्थी जगती मता ।। उष्णिक् तच्चक्षुराद्यस्य छन्द इत्युच्यते बुधैः । हिरण्यस्तूप इत्येष ऋषिर्देवोऽत्र भास्करः इति ।। भरद्वाजः – उपस्थाय नमस्कुर्याच्चतुः सन्ध्यादिदेवताः । दिशश्च साधिपा नत्वा गुरूनप्यभिवादयेत् इति ।। प्रातर्होमानन्तरं ब्रह्मयज्ञाकरणे माध्याह्निकजपानन्तरं तर्पणात् प्राक् ब्रह्मयज्ञः कार्यः । स चार्वक् तर्पणात् कार्यः इति स्मृतेः ।।

யோகயாக்ஞவல்க்யர்:- 'ஆஸத்யேந' முதலிய ருக்குகளுள் முந்திய இரண்டு ருக்குகளுக்கு த்ரிஷ்டுப் சந்தஸ். மூன்றுவது ருக்குக்கு காயத்ரீ சந்தஸ். நான்காவதற்கு ஜகதீசந்தஸ், 'தச்சக்ஷு:' முதலியதற்கு உஷ்ணிக்சந்தஸ். ஹிரண்யஸ்தூபர் ருஷி, பாஸ்கரன்

தேவதையாம். பரத்வாஜர்:- ஸூர்யோப ஸ்தானம் செய்த பிறகு, ஸந்த்யை முதலிய நான்கு தேவதைகளையும் நமஸ்கரிக்க வேண்டும். பாலகர்களுடன் கூடிய திக்குகளையும் நமஸ்கரித்து, குருக்களையும் நமஸ்கரிக்க வேண்டும். ப்ராதர் ஹோமத்திற்குப் பிறகு ப்ரம்ஹயக்ஞம் செய்யா விடில் மாத்யாஹ்னிக ஜபத்திற்குப் பிறகு, தர்ப்பணத்திற்குமுன் ப்ரம்ஹயக்ஞம் செய்யப்பட வேண்டும். 'அந்த ப்ரம்ஹயக்ஞத்தைத் தர்ப்பணத்திற்கு முன் செய்ய வேண்டும்' என்று ஸ்ம்ருதி உள்ளது. மத்யாஹ்னத்தில் ப்ரம்ஹயக்ஞத்திற்குப் பிறகு தர்ப்பணம் செய்யப்பட வேண்டும்.

मध्याह्ने ब्रह्मयज्ञानन्तरं तर्पणं कार्यम् ।। तथा च व्यासः - आचम्य च यथाशास्त्रं शक्त्या स्वाध्यायमाचरेत् । ततः सन्तर्पयेद्देवान् पितॄनृषिगणांस्तथा ।। आदावोङ्कारमुच्चार्य नामान्ते तर्पयामि च । देवान् ब्रह्मऋषींश्चैव तर्पये दक्षतोदकैः ।। तिलोदकैः पितॄन् भक्त्या स्वसूत्रोक्तविधानतः । यज्ञोपवीती देवानां निवीती ऋषितर्पणे । प्राचीनावीती पित्र्ये तु स्वेन तीर्थेन भावितः इति ।। चन्द्रिकायाम् – सार्धयामादूर्ध्वं मध्याह्नः । तत्र माध्याह्निकानन्तरं नित्यतर्पणं कुर्यात् । तच्च देवर्षिपितृतर्पणम् इति ।। माधवीये - प्रागग्रेषु सुरांस्तर्पयेत् मनुष्यांश्चैव मध्यतः । पितॄंस्तु दक्षिणाग्रेषु चैकद्वित्रिजलाञ्जलीन् इति ।। व्यासः – एकैकमञ्जलिं देवा द्वौ द्वौ तु सनकादयः । अश्नन्ति पितरस्त्रीं स्त्रीन् स्त्रियश्चैकैकमञ्जलिम् इति ।। विष्णुपुराणे – त्रिरपः प्रीणनार्थाय देवानामपवर्जयेत् । तथार्षीणां यथान्यायं सकृच्चापि प्रजापतेः ।। पितॄणां प्रीणनार्थाय त्रिरपः पृथिवीपते इति ।।

அவ்விதமே, வ்யாஸர்:- ஆசமனம் செய்து, யதாசக்தி, சாஸ்த்ரப்படி ப்ரம்ஹயக்ஞாத்யயனம் செய்ய வேண்டும். பிறகு தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் ருஷிகணங்களுக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

முதலில் 'ஓம்' என்று சொல்லி நாமத்தைச் சொல்லிப் பிறகு தர்ப்பயாமி என்று சொல்லி, தேவர்களையும் ப்ரம்ஹர்ஷிகளையும், அக்ஷதையுடன் கூடிய ஜலங்களால் தர்ப்பிக்க வேண்டும். திலத்துடன் கூடிய ஜலங்களால் பித்ருக்களையும், தன் ஸூத்ரத்திலுள்ள விதிப்படி பக்தியுடன் தர்ப்பிக்க வேண்டும். உபவீதியாய், தேவர்களையும், நிவீதியாய் ருஷிகளையும், ப்ராசீனாவீதியாய் பித்ருக்களையும் அவரவர் தீர்த்தத்தால் கவனமாய், தர்ப்பிக்க வேண்டும். சந்த்ரிகையில்:- உதயாதி ஒன்றரை யாமத்திற்கு மேல் மத்யாஹ்னம். அக்காலத்தில் மாத்யாஹ்னிகத்திற்குப் பிறகு நித்ய தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும். அது தேவர்ஷி தர்ப்பணம் எனப்படுகிறது. மாதவீயத்தில்:- கிழக்கு நுனியான தர்ப்பங்களில் தேவர்களையும், நடுவில் மனுஷ்யர்களையும், தெற்கு நுனியாயுள்ள தர்ப்பங்களில் பித்ருக்களையும் முறையே ஒன்று, இரண்டு, மூன்று அஞ்ஜலிகளால் தர்ப்பிக்க வேண்டும். வ்யாஸர்:- தேவர்கள் ஒவ்வொரு அஞ்ஜலியையும், ருஷிகள் இரண்டு இரண்டு அஞ்ஜலிகளையும், பித்ருக்கள் மூன்று மூன்றஞ்ஜலிகளையும், ஸ்த்ரீகள் ஒவ்வொரு அஞ்ஜலியையும் ஸ்வீகரிக்கின்றனர். விஷ்ணு புராணத்தில்:- ஓ அரசனே! தேவர்களுக்கு மூன்று தடவையும், ருஷிகளுக்கும் மூன்று தடவையும், ப்ரஜாபதிக்கு ஒரு தடவையும், பித்ருக்களுக்கு மூன்று தடவையும் ஜலாஞ்ஜலிகளைக் கொடுக்க வேண்டும்.

अत्र अञ्जलिसङ्ख्या यथाशाखं व्यवतिष्ठते । यत्र शाखायां न सङ्ख्यानियमः श्रुतः, तत्र विकल्पः इति माधवीये ।। शङ्खलिखितौ - उभाभ्यामपि हस्ताभ्यां प्राङ्मुखो यज्ञोपवीती प्रागग्रैः कुशैर्देवतातर्पणं देवतीर्थेन कुर्यात् इति ।। विष्णुरपि — ततः कृत्वा निवीतं तु यज्ञसूत्रमतन्द्रितः । प्राजापत्येन तीर्थेन मनुष्यांस्तर्पयेद्व्रती ।। प्राचीनावीती पित्र्येण पितॄंस्तीर्थेन तर्पयेत् इति ।। पैठीनसिः -

अपसव्यं ततः कृत्वा स्थित्वा च पितृदिङ्मुखः । पितॄन् दिव्यानदिव्यांश्च पितृतीर्थेन तर्पयेत् इति ।।

இங்கு அஞ்ஜலி ஸங்க்யை அவரவர் சாகைப்படி வ்யவஸ்தையையடைகின்றது. எந்தச் சாகையில் வ்யவஸ்தை சொல்லப்பட்டவில்லையோ அங்கு விகல்பம் என்று மாதவீயத்தில் சொல்லப்பட்டுள்ளது. **சங்கலிகிதர்கள்:-** கிழக்கு நோக்கியவனாய் உபவீதியாய், கிழக்கு நுனியாயுள்ள தர்ப்பங்களால் இருகைகளாலும் தேவதீர்த்தத்தால் தேவதர்ப்பணம் செய்ய வேண்டும். **விஷ்ணுவும்:-** பிறகு உபவீதத்தை நிவீதமாய்ச் செய்து கொண்டு, ப்ராஜாபத்ய தீர்த்தத்தால் மனுஷ்ய தர்ப்பணம் செய்ய வேண்டும். ப்ராசீனாவீதியாய், பித்ருதீர்த்தத்தால் பித்ருக்களைத் தர்ப்பிக்க வேண்டும். **பைடீநஸி:-** பிறகு ப்ராசீனாவீதம் செய்து கொண்டு, தெற்கு முகமாயிருந்து, திவ்யபித்ருக்களையும், அதிவ்யபித்ருக்களையும், பித்ருதீர்த்தத்தால் தர்ப்பிக்க வேண்டும். திவ்ய பித்ருக்கள் - வஸுருத்ர ஆதித்யர்கள். அதிவ்யபித்ருக்கள் = பித்ருபிதாமஹ ப்ரபிதாமஹாதிகள்.

हारीतः — वसित्वा वसनं शुक्लं (ष्कं) स्थले विस्तीर्णबर्हिषि । विधिज्ञस्तर्पणं कुर्यान्न पात्रेषु कदाचन ।। पात्राद्वा जलमादाय शुभे पात्रान्तरे क्षिपेत् । जलपूर्णेऽथवा गर्ते न स्थले हीनबर्हिषि ।। केशभस्मतुषाङ्गारकीटकास्थिसमाकुलम् । भवेन्महीतलं यस्मात् बर्हिषास्तरणं ततः इति ।। स्थलस्थो नोदके कुर्यात् ।। तदाह गोभिलः - नोदकेषु न पात्रेषु न क्रुद्धो नैकपाणिना । नोपतिष्ठति तत्तोयं यन्न भूमौ प्रदीयते इति ।। विष्णुः - स्थले स्थित्वा जले यस्तु प्रयच्छेदुदकं नरः । नोपतिष्ठति तत्तोयं यन्न भूमौ प्रदीयते इति ।।

**ஹாரீதர்:-** விதியை அறிந்தவன் உலர்ந்த வஸ்த்ரத்தைத் தரித்து, தர்ப்பங்கள் பரப்பியுள்ள ஸ்தலத்தில் தர்ப்பணம் செய்ய வேண்டும். பாத்ரங்களில்

செய்யக் கூடாது. அல்லது, ஒரு பாத்ரத்தினின்றும், ஜலத்தை எடுத்து சுத்தமான மற்றொரு பாத்ரத்தில் விடவேண்டும். அல்லது ஜலம் நிறைந்துள்ள பள்ளத்திலாவது விடலாம். தர்ப்பையில்லாத ஸ்தலத்தில் விடக்கூடாது. மயிர், சாம்பல், கரி, புழு, எலும்பு இவைகளால் பூமி வ்யாபிக்கப்பட்டு இருக்கக் கூடுமாகையால் தர்ப்பைகளால் தர்ப்பண ஸ்தலத்தைப் பரப்ப வேண்டும். ஸ்தலத்திலிருந்து கொண்டு ஜலத்தில் தர்ப்பணம் செய்யக் கூடாது. அதைச் சொல்லுகிறார். கோபிலர்:- ஜலத்தில் செய்யக் கூடாது. பாத்ரங்களில் செய்யக் கூடாது. கோபமுடையவனாய்ச் செய்யக் கூடாது. ஒரு கையினால் செய்யக் கூடாது. பூமியில் கொடுக்கப்படாத ஜலம் பித்ருக்களைச் சேருவதில்லை. விஷ்ணு:- ஸ்தலத்திலிருந்து ஜலத்தில் தர்ப்பணம் செய்பவனின் ஜலம் பித்ருக்களை அடைவதில்லை. பூமியில் கொடுக்கப்படாததால்.

यत्तु कार्ष्णाजिनिनोक्तम् — देवतानां पितॄणां च जले दद्याज्जलाञ्जलिम् इति तदशुद्धस्थलविषयं स्नानाङ्गतर्पणविषयं च ॥ तदाह विष्णुः - यत्राशुचि स्थलं वा स्यादुदके देवताः पितॄन् । तर्पयेत्तु यथाकाममप्सु सर्वं प्रतिष्ठितम् इति ॥ स एव — स्नातश्चार्द्रवासा देवर्षिपितृतर्पणमम्भस्थ एव कुर्वीत इति ॥ पितामहः - पात्राद्वा जलमादाय शुभे पात्रान्तरे क्षिपेत् । हेमरूप्यमयं पात्रं ताम्रकांस्यसमुद्भवम् ॥ पितॄणां तर्पणे पात्रं मृन्मयं तु परित्यजेत् इति ।

ஆனால், கார்ஷ்ணாஜினியால்:- 'தேவதைகளுக்கும், பித்ருக்களுக்கும், தர்ப்பண ஜலாஞ்ஜலியை ஜலத்தில் கொடுக்க வேண்டும்' என்று சொல்லப்பட்டுள்ளதே எனில், அது அசுத்த ஸ்தலவிஷயமும், ஸ்நானாங்க தர்ப்பண விஷயமுமாம். அதைச் சொல்லுகிறார், விஷ்ணு:- எங்கு ஸ்தலம் அசுத்தமாயுள்ளதோ அங்கு தேவபித்ரு தர்ப்பணத்தை இஷ்டப்படி ஜலத்தில் செய்யலாம்.

உலகமெலாம் ஜலத்தில் தான் வைக்கப்பட்டுள்ளது. விஷ்ணுவே:- ஸ்நானம் செய்தவன் ஈரவஸ்த்ரத்துடன் தேவர்ஷி பித்ருதர்ப்பணத்தை ஜலத்திலிருந்தே செய்ய வேண்டும். பிதாமஹர்:- ஒரு பாத்ரத்திலிருந்து ஜலத்தை எடுத்து, சுத்தமான மற்றொரு பாத்ரத்தில் விடவேண்டும். தங்கம், வெள்ளி, தாம்ரம், வெண்கலம் இவைகளில் ஒன்றினாலாகிய பாத்ரம் பித்ரு தர்ப்பண விஷயத்தில் ச்லாக்யம். மண்பாத்ரத்தை வர்ஜிக்க வேண்டும்.

मरीचिः — सौवर्णेन च पात्रेण ताम्ररूप्यमयेन वा । औदुम्बरेण खड्गेन पितॄणां दत्तमक्षयम् इति ।। माधवीये — खड्गमौक्तिकहस्तेन कर्तव्यं पितृतर्पणम् । मणिकाञ्चनदर्भैर्वा नाशुद्धेन कदाचन इति ।। मरीचिः - विना रूप्यसुवर्णेन विना ताम्रतिलैस्तथा । विना मन्त्रैश्च दर्भैश्च पितॄणां नोपतिष्ठते ।। तिलानामप्यभावे तु सुवर्णरजतान्वितम् । तदभावे निषिञ्चेत्तु दर्भैर्मन्त्रेण वा पुनः इति ।। तिलग्रहणे विशेषमाह योगयाज्ञवल्क्यः - यद्युद्धृतान्निषिञ्चेत्तु तिलान् संमिश्रयेज्जले । अतोऽन्यथा तु सव्येन तिला ग्राह्या विचक्षणैः इति ।। एतदलोमकप्रदेशाभिप्रायम् ।।

மரீசி:- தங்கம், தாம்ரம், வெள்ளி, அத்தி, கட்க (காண்டா) ம்ருகத்தின் கொம்பு இவைகளில் ஒன்றினால் உண்டாகிய பாத்ரத்தால் பித்ருக்களுக்குக் கொடுக்கப் படும் ஜலம் குறைவற்றதாகும். மாதவீயத்தில்:- கட்கம், முத்து, ரத்னம், தங்கம், தர்ப்பை இவைகளில் ஒன்றைக் கையில் தரித்துக் தர்ப்பணம் செய்ய வேண்டும். அவ்விதம் இல்லாமல் அசுத்தனாய்ச் செய்யக் கூடாது. மரீசி:- தங்கம், வெள்ளி இல்லாமலும், தாம்ரம், திலமில்லாமலும், மந்த்ரங்கள், தர்ப்பங்களில்லாமலும் தர்ப்பிக்கப்பட்டது பித்ருக்களை அடைவதில்லை. திலங்கள் கிடைக்காவிடில் பொன், வெள்ளி இவைகளுடன் தர்ப்பிக்க வேண்டும். அவைகளும் கிடைக்காவிடில் தர்ப்பங்களுடன், அவையில்லா விடில் மந்த்ரங்களுடன் ஜலத்தைக்

கொடுக்க வேண்டும். எள்ளை க்ரஹிப்பதில் விசேஷத்தைச் சொல்லுகிறார். யோகயாக்ஞவல்க்யர்:- எடுத்த ஜலத்தால் தர்ப்பணம் செய்தால் பாத்ரத்திலுள்ள ஜலத்தில் எள்ளைக் கலக்க வேண்டும். இதைவிட வேறு ப்ரகாரத்தால் செய்வதானால் அறிந்தவர்கள் இடது கையினால் திலத்தை க்ரஹிக்க வேண்டும். இது ரோமமில்லாத ப்ரதேசத்தைச் சொல்லுவதில் அபிப்பிராய முள்ளதாம்.

तथा च देवलः - अङ्गुष्ठमूलदेशे तु वामहस्तस्य निक्षिपेत् । तत्तिलं पूतपुण्यं स्यात् तत्तोयममृतं भवेत् ।। शिलातले पटे पात्रे रोमस्थानेषु कुत्रचित् ।। तत्तिलं कृमितुल्यं स्यात्तत्तोयं रुधिरं भवेत् ।। रोमसंस्थांस्तिलान् कृत्वा यस्तु तर्पयते पितॄन् । पितरस्तर्पितास्तेन रुधिरेण मलेन च इति ।। तिलग्रहणे तर्जन्यङ्गुष्ठयोगं वर्जयेत् । दक्षिणाङ्गुष्ठेनैव अञ्जलौ तिलान् प्रक्षिपेत् ।। तथा स एव — तर्जन्यङ्गुष्ठसंयोगे राक्षसी मुद्रिका स्मृता । तया तिलान्न गृह्णीयात् दक्षाङ्गुष्ठेन निक्षिपेत् इति ।। शुक्लैस्तु तर्पयेद्देवान् मनुष्यान् शबलैस्तिलैः । पितॄन्सन्तर्पयेत्कृष्णैः देवर्षीनपि वाऽक्षतैरिति ।

தேவலர்:- இடதுகையின் பெருவிரலின் அடியில் திலத்தை வைத்துக் கொள்ள வேண்டும். அந்தத் திலம் பரிசுத்தமும் புண்யமுமாகும். அந்த ஜலம் அம்ருதமயமாகும். பாராங்கல், வஸ்த்ரம், இலை, ரோமமுள்ள ஸ்தானம் இவைகளில் திலத்தை வைத்துக் கொண்டால், அத்திலம் புழுவுக்குச் சமமாயாகின்றது. அந்த ஜலம் ரக்தமாயாகின்றது. எவன் எள்ளை ரோமஸ்தானத்தில் வைத்துக் கொண்டு பித்ரு தர்ப்பணம் செய்கின்றானோ அவன் ரக்தத்தாலும், மலத்தாலும் பித்ருக்களைத் தர்ப்பித்தவனாகிறான். திலத்தை எடுக்கும் பொழுது தர்ஜனீ விரல், பெருவிரல் இவைகளைச் சேர்க்கக் கூடாது. வலது கையின் பெருவிரலாலேயே அஞ்சலியில் திலங்களைப் போடவேண்டும். தர்ஜினீ விரலும், பெருவிரலும் சேர்ந்தால் ராக்ஷஸ முத்ரை எனப்படும்.

அதனால் எள்ளை க்ரஹிக்கக் கூடாது. வலதுகையின் பெருவிரலால் எள்ளைப் போடவேண்டும். தேவலரே! ''வெண்ணிறமான எள்ளால் தேவர்களையும், பல வர்ணங்களுள்ள திலங்களால் மனுஷ்யர்களையும், கறுப்பு எள்ளால் பித்ருக்களையும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

तिथ्यादिविशेषे तिलतर्पणं निषेधति स एव। सप्तम्यां रविवारे च गृहे जन्मदिने तथा। भृत्यपुत्रकलत्रार्थी न कुर्यात्तिलतर्पणम् इति। सङ्ग्रहे - अर्कशुक्लत्रयोदश्यां अष्टम्यां च त्रिजन्मसु। तर्पयेद्यस्तिलैर्मिश्रं तत्तोयं रुधिरं भवेत्। पक्षयोरुभयोश्चैव सप्तम्यां निशि सन्ध्ययोः। विद्यापुत्रकलत्रार्थी तिलान् पञ्चसु वर्जयेदिति। बोधायनः - सप्तम्यां रविवारे च जन्मर्क्षदिवसेषु च। गृहे निषिद्धं सतिलं तर्पणं तद्बहिर्भवेत्। यद्यशक्तो गृहे कुर्यात् तर्पणं सतिलं तदा। तिलान् प्रक्षिप्य पात्रस्थे जले व्यामिश्रितैस्तिलैः॥ पात्रान्तरे क्षिपेदत्र मृन्मयं तु विवर्जयेत्॥ विवाहे चोपनयने चौले सति यथाक्रमम्। वर्षमर्धं तदर्धं च नैत्यके तिलतर्पणम्। तिथितीर्थविशेषेषु कार्यं प्रेतेषु सर्वथा॥ तीर्थे तिथिविशेषे च प्रेतस्नाने तथैव च। निषिद्धेऽपि तथा कुर्यात्तण्डुलैः सहतर्पणम्॥ न जीवपितृकः कृष्णैस्तिलैस्तर्पणमाचरेत् इति॥

சில திதி வாராதிகளில் தில தர்பணத்தை நிஷேதிக்கிறார். தேவலர் - ஸப்தமியிலும் பானுவாரத்திலும் வீட்டிலும் பிறந்த நாளிலும் வேலைக்காரர் புத்ரன், பெண்சாதி, இவர்களை விரும்பியவன் திலதர்பணத்தைச் செய்யக் கூடாது. ஸங்க்ரஹத்தில் பானுவாரம், சுக்ரவாரம், த்ரயோதசீ, அஷ்டமீ, த்ரிஜன்மங்கள், இவைகளில் திலத்துடன் தர்ப்பணம் செய்தால் அந்த ஜலம் ரத்தமாகும். இரண்டு பக்ஷங்களின் ஸப்தமிகளிலும் ராத்ரியிலும், ஸந்த்யைகளிலும் இந்த ஐந்து காலங்களிலும் வித்யை, புத்ரன், பார்யை, இவர்களை விரும்பியவன் திலங்களை வர்ஜிக்க வேண்டும். போதாயனர் - ஸப்தமீ, பானுவாரம்,

ஜந்ம நக்ஷத்ர தினங்கள் இவற்றில் வீட்டில் தில தர்ப்பணம் கூடாது. அதை வீட்டிற்கு வெளியிற் செய்ய வேண்டும். சக்தியற்றவன் வீட்டில் செய்துவதானால், பாத்ரத்திலுள்ள ஜலத்தில் திலத்தைப் போட்டு, திலத்துடன் சேர்ந்த ஜலத்தை மற்றொரு பாத்ரத்தில் விடவேண்டும். இதில் மண்பாத்ரம் கூடாது. விவாஹம், உபநயனம், சௌளம் இவைகள் செய்த பிறகு, முறையே ஒரு வருஷம், ஆறுமாதம், மூன்று மாதம் வரையில் நித்ய தர்ப்பணத்தில் திலதர்ப்பணம் கூடாது. (திலமில்லாமல் செய்ய வேண்டும்.) திதி விசேஷங்கள், தீர்த்த விசேஷங்கள், ப்ரேதகார்யங்கள் இவைகளில் அவச்யம் செய்ய வேண்டும். முன்சொல்லிய தீர்த்த திதி விசேஷங்களிலும், ப்ரேத கார்யங்களிலும், நிஷித்த தினத்திலும் அரிசியுடன் கூடிய திலங்களால் தர்ப்பணம் செய்ய வேணடும். பிதா ஜீவித்திருக்கும் பொழுது கறுப்பு எள்ளால் தர்ப்பணம் செய்யக் கூடாது.

सत्यव्रतः - कृतोपवीती देवेभ्यो निवीती च भवेत्ततः । मनुष्यांस्तर्पयेद्भक्त्या ब्रह्मपुत्रानृषींस्तथा ।। अपसव्यं ततः कृत्वा सव्यं जान्वाच्य भूतले । दर्भपाणिस्तु विधिना पितॄन् सन्तर्पयेत्ततः इति ।। योगयाज्ञवल्क्योऽपि — ब्रह्माणं तर्पयेत् पूर्वं विष्णु रुद्रं प्रजापतिम् । वेदांश्छन्दांसि देवांश्च ऋषींश्चैव तपोधनान् । आचार्यांश्चैव गन्धर्वानाचार्यतनयांस्तथा । संवत्सरं सावयवं देवीरप्सरसस्तथा ।। देवानुगानपि तथा सनागान् पर्वतानपि । सरितोऽथ मनुष्यांश्च यक्षान् रक्षांसि चैव हि ।। पिशाचांश्च सुपर्णांश्च भूतान्यथ पशूंस्तथा । वनस्पतीनोषधीश्च भूतग्रामांश्चतुर्विधान् ।। सव्यं जानु ततोऽन्वाच्य पाणिभ्यां दक्षिणामुखः । तल्लिङ्गैस्तर्पयेन्मन्त्रैः सर्वान् पितृगणांस्तथा ।। मातामहांश्च सततं श्रद्धया तर्पयेद्द्विजः इति ।।

ஸத்யவ்ரதர்:- உபவீதியாய் தேவர்களுக்கும், நிவீதியாய் மனுஷ்யர்களுக்கும், ப்ரம்ஹபுத்ரர்களான

ருஷிகளுக்கும், ப்ராசீனவீதியாய் இடது முழங்காலைப் பூமியில் வைத்து, தர்ப்பபாணியாய் விதியுடன் பித்ருக்களுக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும். யோகயாக்ஞவல்க்யரும்:- ஆதியில் ப்ரம்ஹாவையும், பிறகு விஷ்ணு, ருத்ரன், ப்ரஜாபதி, வேதங்கள், சந்தஸ்ஸுகள், தேவர்கள், ருஷிகள், தபோதனர்கள், ஆசார்யர்கள், கந்தர்வர்கள், ஆசார்யபுத்ரர்கள், அவயவங்களுடன் கூடிய ஸம்வத்ஸரம், தேவிகளான அப்ஸரஸ்ஸுகள், தேவானுகர்கள், நாகங்கள், பர்வதங்கள், நதிகள், மனுஷ்யர்கள், யக்ஷர்கள், ரக்ஷஸ்ஸுகள், பிசாசர்கள், ஸுபர்ணர்கள், பூதங்கள், பசுக்கள், வனஸ்பதிகள், ஓஷதிகள், நான்கு விதமான பூதக்ராமங்கள் இவர்களையும் தர்ப்பித்து, பிறகு இடது முழங்காலைக் கீழேவைத்து, தெற்கு முகமாய் அவர்களைச் சொல்லும் மந்த்ரங்களால் எல்லாப் பித்ருகணங்களையும், கைகளால் தர்ப்பிக்க வேண்டும். மாதாமஹர்களையும் ச்ரத்தையுடன் நித்யமும் தர்ப்பிக்க வேண்டும்.

यजुश्शाखिनां तु काण्डर्षितर्पणमुक्तं माधवीये - अथ काण्डऋषीनेतानुदकाञ्जलिभिः शुचिः । अन्यग्रस्तर्पयेन्नित्यं मन्त्रैरेव स्वनामभिः इति ।। गृह्यवृत्तौ - पवित्रपाणिः नवऋषींस्तर्पयति । प्रजापतिं काण्डऋषिं तर्पयामि । सोमं काण्डऋषिं तर्पयामि । अग्निं काण्डऋषिं तर्पयामि । विश्वान्देवान् काण्डऋषींस्तर्पयामि । सांहितीर्देवता उपनिषदस्तर्पयामि । याज्ञिकीर्देवता उपनिषदस्तर्पयामि । वारुणीर्देवता उपनिषदस्तर्पयामि । ब्रह्माणं स्वयंभुवं तर्पयामि । सदसस्पतिं तर्पयामि इति ।।

யஜுச்சாகிகளுக்கோவெனில் காண்டருஷி தர்ப்பணம் சொல்லப்பட்டுள்ளது. மாதவீயத்தில்:- பிறகு இந்தக் காண்ட ருஷிகளை, கவனமுள்ளவனாய், சுத்தனாய், அவரவர் நாம மந்த்ரங்களால் ஜலாஞ்ஜலிகளால் தர்ப்பிக்க வேண்டும். க்ருஹ்யவ்ருத்தியில்:- பவித்ரம் தரித்தவனாய்

ஒன்பது ருஷிகளைத் தர்ப்பிக்க வேண்டும். ப்ரஜாபதிம் காண்டருஷிம் தர்ப்பயாமி என்பது முதலான ஒன்பது மந்த்ரங்களால். (மந்த்ரங்கள் மூலத்தில்)

शौनकोऽपि — अग्निर्विष्णुः प्रजापतिः इत्यादि ॥ योगयाज्ञवल्क्यः — वसून् रुद्रांस्तथाऽऽदित्यान् नमस्कारसमन्वितम् इति ॥ तर्पयेदिति शेषः ॥ वस्वादीनां नामानि पैठीनसिना दर्शितानि — ध्रुवो धर्मश्च सोमश्च आपश्चैवानिलोऽनलः । प्रत्यूषश्च प्रभासश्च वसवोऽष्टौ प्रकीर्तिताः ॥ अजैकपादहिर्बुध्न्यो विरूपाक्षोऽथ भैरवः । हरश्च बहुरूपश्च त्र्यम्बकश्च सुरेश्वरः ॥ सावित्रश्च जयन्तश्च पिनाकी चापराजितः । एते रुद्राः समाख्याता एकादश सुरोत्तमाः ॥ इन्द्रो धाता भगः पूषा मित्रोऽथ वरुणोऽर्यमा । अर्चिर्विवस्वांस्त्वष्टा च सविता विष्णुरेव च ॥ एते वै द्वादशादित्या देवानां प्रवरास्तथा । एते च दिव्याः पितरः पूज्यास्सर्वे प्रयत्नतः इति ॥

சௌனகரும்:- அக்னி, விஷ்ணு, ப்ரஜாபதி என்பது முதலாக. யோகயாக்ஞவல்க்யர்:- வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள் இவர்களை நமச்சப்தத்துடன் தர்ப்பிக்க வேண்டும். வஸு முதலியவர்களின் பெயர்கள் பைடீநஸியினால் காண்பிக்கப்பட்டிருக்கின்றன - த்ருவன், தர்மன், ஸோமன், ஆபன், அனிலன், அனலன், ப்ரத்யூஷன், ப்ரபாஸன் என்ற இவர்கள் எட்டு வஸுக்களெனப்படுவர். அஜைகபாத், அஹிர்புத்ன்யன், விரூபாக்ஷன், பைரவன், ஹரன், பஹுரூபன், த்ரயம்பகன், ஸுரேச்வரன், ஸாவித்ரன், ஜயந்தன், பிநாகி அபராஜிதன் என்ற இவர் பதினொரு ருத்ரர்களெனப்படுவர். இந்த்ரன், தாதா, பகன், பூஷா, மித்ரன், வருணன், அர்யமா, அர்ச்சிஸ், விவஸ்வான், த்வஷ்டா, ஸவிதா, விஷ்ணு என்ற இவர் பன்னிரண்டு ஆதித்யர் எனப்படுவர். இவர்கள் திவ்யபித்ருக்கள், இவர்களெல்லோரையும் யத்னத்துடன் பூஜிக்க வேண்டும்.

योगयाज्ञवल्क्यः — सवर्णेभ्यो जलं देयं असवर्णेभ्य एव च। गोत्रनामस्वधाकारैस्तर्पयेदनुपूर्वशः इति ।। नामग्रहणे विशेषमाह बोधायनः – शर्मान्तं ब्राह्मणस्योक्तं वर्मान्तं क्षत्रियस्य तु। गुप्तान्तं चैव वैश्यस्य दासान्तं शूद्रजन्मनः इति ।। सत्यव्रतः – पितृभ्यः प्रत्यहं दद्यात्ततो मातृभ्य एव च। ततो मातामहानां च पितृव्यस्यासुतस्य च इति ।। हारीतोऽपि – पित्रादीन् मात्रादीन् मातामहादीन् पितृव्यांस्तत्पत्नीर्ज्येष्ठभ्रातॄंस्तत्पत्नीर्मातुलं तत्पत्नीं गुर्वाचार्योपाध्यायान् सुहृत्सम्बन्धि बान्धव द्रव्यान्नदातृपोषकरिक्थिनस्तत्पत्नीश्च तर्पयेत् इति ।।

**யோகயாக்ஞவல்க்யர்:-** ஸவர்ணர்களுக்கு ஜலத்தைக் கொடுக்க வேண்டும். அஸவர்ணர்களுக்கும் கொடுக்க வேண்டும். அவரவர் கோத்ரம், பெயர் இவைகளைச் சொல்லி ஸ்வதா சப்தத்துடன் க்ரமமாய்த் தர்ப்பிக்க வேண்டும். பெயர் சொல்லுவதில் விசேஷத்தைச் சொல்லுகிறார், **போதாயனர்:-** ப்ராம்ஹணனின் பெயர் 'சர்ம' என்பதை முடிவிலுடையதாயும், க்ஷத்ரியனின் பெயர் 'வர்ம' என்பதை முடிவிலுடையதாயும், வைச்யனின் பெயர் 'குப்த' என்பதை முடிவிலுடைய தாயும், சூத்ரனின் பெயர் 'தாஸ' என்பதை முடிவிலுடையதாயும் இருக்க வேண்டும். **ஸத்யவ்ரதர்:-** ப்ரதிதினமும், பித்ருக்கள், மாதாக்கள், மாதாமஹர்கள், பிள்ளையில்லாத பித்ருவ்யன் இவர்களுக்கு ஜலத்தைக் கொடுக்க வேண்டும். **ஹாரீதரும்:-** பிதா, முதலியவர், மாதா முதலியவர், மாதாமஹன் முதலியவர், பித்ருவ்யர்கள், அவர் பத்னிகள், ஜ்யேஷ்ட ப்ராதாக்கள், அவர் பத்னிகள், அம்மான், அவன் பத்னீ, குரு, ஆசார்யன், உபாத்யாயன், ஸுஹ்ருத், ஸம்பந்தீ, பாந்தவன், த்ரவ்ய 'தாதா' அன்ன 'தாதா' போஷகன், பணமுடையவன், அவர் பத்னீகள் என்ற இவர்களுக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

बोधायनः — अग्निः प्रजापतिस्सोमो रुद्रोऽदिति बृहस्पतिस्सर्पा इत्येतानि प्राग्द्वाराणि दैवतानि सनक्षत्राणि सग्रहाणि साहोरात्राणि समुहूर्तानि तर्पयामि । वसूंस्तर्पयामि । पितरोऽर्यमा भगस्सविता त्वष्टा वायुरिन्द्राग्नी इत्येतानि दक्षिणद्वाराणि दैवतानि सनक्षत्राणि सग्रहाणि साहोरात्राणि समुहूर्तानि तर्पयामि । रुद्रांश्च तर्पयामि । मित्र इन्द्रो महापितंर आपो विश्वेदेवा ब्रह्मा विष्णुरित्येतानि प्रत्यग्द्वाराणि दैवतानि सनक्षत्राणि सग्रहाणि साहोरात्राणि समुहूर्तानि तर्पयामि । आदित्यांश्च तर्पयामि । वसवो वरुणोऽज एकपादहिर्बुध्न्यः पूषाऽश्विनौ यम इत्येतानि उदग्द्वाराणि दैवतानि स नक्षत्राणि सग्रहाणि साहोरात्राणि समुहूर्तानि तर्पयामि । साध्यांश्च तर्पयामि । ब्रह्माणं तर्पयामि । प्रजापतिम् । परमेष्ठिनम् । हिरण्यगर्भम् । चतुर्मुखम् । स्वयंभुवम् । ब्रह्मपारिषदान् । ब्रह्मपारिषदीः । अग्निम् । वायुम् । वरुणम् । सोमम् । सूर्यम् । चन्द्रमसम् । नक्षत्राणि । सद्योजातम् । ओं भूः पुरुषम् । ओं भुवः पुरुषम् । ओं सुवः पुरुषम् । ओं भूर्भुवः सुवः पुरुषम् । ओं भूः । ओं भुवः । ओं सुवः । ओं महः । ओं जनः । ओं तपः । ओं सत्यम् । भवं देवम् । शर्वं देवम् । ईशानन्देवम् । पशुपतिं देवम् । रुद्रं देवम् । उग्रं देवम् । भीमं देवम् । महान्तं देवम् । भवस्य देवस्य पत्नीम् । शर्वस्य देवस्य पत्नीम् । ईशानस्य देवस्य पत्नीम् । पशुपतेर्देवस्य पत्नीम् । रुद्रस्य देवस्य पत्नीम् । उग्रस्य देवस्य पत्नीम् । भीमस्य देवस्य पत्नीम् । महतो देवस्य पत्नीम् । भवस्य देवस्य सुतम् । शर्वस्य देवस्य सुतम् । ईशानस्य देवस्य सुतम् । पशुपतेर्देवस्य सुतम् । रुद्रस्य देवस्य सुतम् । उग्रस्य देवस्य सुतम् । भीमस्य देवस्य सुतम् । महतो देवस्य सुतम् । रुद्रान् । रुद्रपारिषदान् । रुद्रपारिषदीः । सनत्कुमारम् । स्कन्दम् । इन्द्रम् । जयन्तम् । षण्मुखम् । विशाखम् । महासेनम् । स्कन्दपारिषदान् । स्कन्दपारिषदीः । विघ्नम् ।

विनायकम्। वीरम्। शूरम्। वरदम्। हस्तिमुखम्। वक्रतुण्डम्। लम्बोदरम्। एकदन्तम्। विघ्नपारिषदान्। विघ्नपारिषदीः। केशवम्। नारायणम्। माधवम्। गोविन्दम्। विष्णुम्। मधुसूदनम्। त्रिविक्रमम्। वामनम्। श्रीधरम्। हृषीकेशम्। पद्मनाभम्। दामोदरम्। श्रियं देवीम्। पुष्टिं देवीम्। तुष्टिं देवीम्। सरस्वतीं देवीम्। विष्णुपारिषदान्। विष्णुपारिषदीः। वैनतेयम्। कालम्। नीलम्। मृत्युम्। अन्तकम्। यमम्। यमराजम्। धर्मम्। धर्मराजम्। चित्रम्। चित्रगुप्तम्। वैवस्वतम्। वैवस्वतपारिषदान्। वैवस्वतपारिषदीः। भरद्वाजम्। गौतमम्। अत्रिम्। आङ्गिरसम्। विद्याम्। दुर्गाम्। ज्येष्ठाम्। धन्वन्तरिम्। धन्वन्तरिपारिषदान्। धन्वन्तरिपारिषदीस्तर्पयामि॥

अथ निवीती भूत्वा, ऋषीन्। महर्षीन्। परमऋषीन्। ब्रह्मर्षीन्। देवर्षीन्। राजर्षीन्। वैश्यर्षीन्। सुतर्षीन्। श्रुतर्षीन्। जनर्षीन्। तपऋषीन्। सत्यर्षीन्। सप्तर्षीन्। काण्डर्षीन्। ऋषीन्। ऋषिपत्नीः। ऋषिपुत्रान्। ऋषिपौत्रान्। कण्वं। बोधायनं। आपस्तम्बं, सूत्रकारं। सत्याषाढम्। हिरण्यकेशिनम्। वाजसनेयिनम्। याज्ञवल्क्यम्। आश्वलायनम्। शौनकम्। व्यासम्। वसिष्ठम्। प्रणवम्। व्याहृतीः। सावित्रीम्। गायत्रीम्। छन्दांसि। ऋग्वेदम्। यजुर्वेदम्। सामवेदम्। अथर्वणवेदम्। अथर्वाङ्गिरसः। इतिहासपुराणानि। सर्वदेवजनान्। सर्वभूतानि। अथ प्राचीनावीती, पितॄन् स्वधा नमस्तर्पयामि। पितामहान्। प्रपितामहान्। मातॄः। पितामहीः। प्रपितामहीः। मातामहान्। मातुः पितामहान्। मातुः प्रपितामहान्। मातामहीः। मातुः पितामहीः। मातुः प्रपितामहीः। आचार्यान्। आचार्यपत्नीः। गुरून्। गुरुपत्नीः। सखीन्। सखिपत्नीः। ज्ञातीन्। ज्ञातिपत्नीः। अमात्यान्। अमात्यपत्नीः। सर्वान्। सर्वाः। इति पितृतर्पणम्। अनुतीर्थमप उत्सिञ्चत्यूर्जं वहन्तीरमृतं घृतं पयः कीलालं परिस्रुतं

स्वधास्थ तर्पयत मे पितॄंस्तृप्यत तृप्यत तृप्यतेति। नार्द्रवासा नैकवस्त्रो दैवानि कर्माण्यनुसञ्चरेत् पितृसंयुक्तानि चेत्यकेषाम् इति॥

**போதாயனர்:-** அக்னி, ப்ரஜாபதி என்று தொடங்கி, தன்வந்தரி பாரிஷதீகள், வரையில் தேவதர்ப்பணமும், பிறகு நிவீதியாய் ருஷி, மஹர்ஷிகளைத் தொடங்கி, ஸர்வபூதங்கள் வரையில் ருஷி தர்ப்பணமும், பிறகு ப்ராசீனாவீதியாய், பித்ருக்கள் முதல் தொடங்கி ஸர்வா: என்ற வரையில் பித்ருதர்ப்பணமும் செய்து ஊர்ஜம்: என்ற மந்த்ரத்தால் ஜலக்கரையில் ஜலாஞ்ஜலியை விடவேண்டும். ஈரவஸ்த்ரத்துடனும் ஒரு வஸ்த்ரத்துடனும் தேவகர்மங்களைச் செய்யக் கூடாது. பித்ரு கர்மங்களையுமென்று சிலரின் மதம் என்றார்.

जीवपितृतर्पणे विशेषमाह योगयाज्ञवल्क्यः – कव्यवाहोऽनलः सोमो यमश्चैवार्यमा तथा। अग्निष्वात्ताः सोमपाश्च तथा बर्हिषदोऽपि च॥ यदि स्याज्जीवपितृकस्तान् विद्याच्च तथा पितॄन्। एतांश्चैव प्रमीतांश्च प्रमीतपितृको द्विजः इति॥

ஜீவபித்ருகன் செய்யும் தர்ப்பணத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார். **யோகயாக்ஞவல்க்யர்:-** ஜீவபித்ருகன் பித்ரு தர்ப்பணத்தில், கவ்யவாஹன், அனலன், ஸோமன், யமன், அர்யமா, அக்னிஷ் வாத்தர்கள், ஸோமபர்கள், பர்ஹிஷத்துகள் என்ற இந்தப் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும். ஜீவபித்ருகனல்லாதவன் இவர்களுக்கும் தனது பிதா முதலியவர்க்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

विष्णुपुराणे — दद्यात् पित्र्येण तीर्थेन काम्यं चान्यच्छृणुष्व मे। मात्रे प्रमात्रे तन्मात्रे गुरुपत्न्यै तथा नृप॥ गुरूणां मातुलादीनां स्निग्धमित्राय भूभुजे। इदं चापि जपन्नम्बु दद्यादात्मेच्छया नृप॥ उपकाराय भूतानां कृतं देवादितर्पणम्। देवासुरास्तथा यक्षाः

नागगन्धर्वराक्षसाः ।। पिशाचा गुह्यकाः सिद्धाः कूश्माण्डाः पशवः खगाः । जलेचरा भूनिलया वाय्वाहाराश्च जन्तवः ।। तृप्तिमेतेन यान्त्वाशु मद्दत्तेनाम्बुनाऽखिलाः । नरकेषु समस्तेषु यातनासु च संस्थिताः । तेषामाप्यायनायैतद्दीयते सलिलं मया । ये बान्धवाबान्धवा ये येऽन्यजन्मनि बान्धवाः । ते तृप्तिमखिला यान्तु यश्चास्मत्तोऽभिवाञ्छति । दत्वा काम्योदकं सम्यगेतेभ्यः श्रद्धयाऽन्वितः ।। जगदाप्यायनोद्भूतं पुण्यमाप्नोति मानवः इति ।।

**விஷ்ணு புராணத்தில்:**- பித்ரு தீர்த்தத்தால் மற்ருெரு காம்யோதகதானமும் செய்ய வேண்டும். நான் சொல்வதைக் கேள். மாதா, அவளின் மாதா, அவளின் மாதா, குருபத்னீ, குருக்கள், மாதுலன் முதலியவர், ஸ்னிக்தன், மித்ரன், அரசன் இவர்களுக்கும் ஜலதானம் செய்ய வேண்டும். சொல்லப் போகும் மந்த்ரத்தை ஜபிப்பவனுய் இச்சையிருந்தால் செய்யலாம். 'உபகாராய பூதாநாம்' என்பது முதல் 'அபிவாஞ்சதி' என்பது வரையில் மந்த்ரம். அதன் பொருள்- 'பூதங்களின் உபகாரத்திற்காகத் தேவர் முதலியவர்க்குத் தர்ப்பணம் செய்யப்பட்டது. தேவர், அஸுரர், யக்ஷர், நாகர், கந்தவர், ராக்ஷஸர், பிசாசர், குஹ்யகர், ஸித்தர், கூச்மாண்டர், பசுக்கள், பக்ஷிகள், ஜலசரங்கள், பூமியில் இருப்பவை, வாயுவை ஆஹாரமாய்க் கொள்ளும் ஜந்துக்கள் இவர்களெல்லோரும் நான் கொடுத்த இந்த ஜலத்தால் த்ருப்தியை அடையக் கடவர். ஸகல நரகங்களிலும், யாதனைகளிலுமெவரிருக்கின்றரோ, அவரின் த்ருப்திக்காக என்னுல் இந்த ஜலம் கொடுக்கப்படுகிறது. எவர் எனது பந்துக்களோ, எவர் பந்துக்களல்லாதவரோ, எவர் முன் ஜன்மத்தில் பந்துக்களோ, எவர் என்னிடமிருந்து விரும்புகின்ருரோ, அவரெல்லோரும் த்ருப்தியை அடையக்கடவர்' என்பது. இவ்விதம் இவர்களுக்குக் காம்யோதகத்தை ச்ரத்தையுடன் கொடுத்தால் மனிதன் உலகத்தை த்ருப்தி செய்வித்த புண்யத்தை அடைகிருன்.

माधवीये — यत्र क्वचन संस्थानां क्षुत्तृष्णोपहतात्मनाम्। तेषां तु दत्तमक्षय्यमिदमस्तु तिलोदकम् ॥ ये मे कुले लुप्तपिण्डाः पुत्रदारविवर्जिताः। तेषां तु दत्तमक्षय्यमिदमस्तु तिलोदकम् इति ॥ अवसानाञ्जलिमाह कात्यायनः – पितृवंश्या मातृवंश्या ये चान्ये मत्त उदकमर्हन्ति तांस्तर्पयामि इति ॥ विस्तरेण कर्तुमसमर्थस्य संक्षेपेण तर्पण मुक्तं माधवीये— आब्रह्मस्तम्बपर्यन्तं जगत्तृप्यत्विति ब्रुवन्। क्षिपेत्पयोऽञ्जलींस्त्रींस्तु कुर्यात्संक्षेपतर्पणम् इति ॥

**மாதவீயத்தில்:-** எந்த இடத்தில் இருப்பவராயினும் பசி தாகங்களால் பீடிக்கப்படுமவருக்கு என்னுல் கொடுக்கப்பட்ட திலோதகம் அக்ஷயமாய் இருக்க வேண்டும். என் குலத்திலெவர் பிள்ளை பெண்டிரில்லாமல் பிண்டதானம் இல்லாதவராய் உள்ளனரோ. அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட இந்தத் திலோதகம் அக்ஷயமாய் இருக்க வேண்டும். கடைசியில் செய்யும் ஜலாஞ்ஜலியைச் சொல்லுகிருர் காத்யாயனர்:- பித்ரு வம்சத்தில் பிறந்தவரோ, மாத்ருவம்சத்தில் பிறந்தவரோ, மற்றவரோ, எவர் என்னிடமிருந்து உதகத்தை க்ரஹிக்க அர்ஹரோ அவர்களைத் தர்ப்பிக்கின்றேன். விரிவாய்ச் செய்யச் சக்தியற்றவனுக்குச் சுருக்கமாய்த் தர்ப்பணம் சொல்லப்பட்டுள்ளது **மாதவீயத்தில்:-** 'ப்ரம்ஹாமுதல் ஸ்தம்பம் (புல்-பூண்டு) வரையுள்ள உலகம் த்ருப்தியை அடைய வேண்டும்' என்று சொல்பவனுய் மூன்று ஜலாஞ்ஜலிகளை விடவேண்டும். இவ்விதம் ஸம்க்ஷேப தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும்.

## तर्पणप्रशंसा

दर्शिता तत्रैव– एवं यस्सर्वभूतानि तर्पयेदन्वहं द्विजः । स गच्छेत् परमं स्थानं तेजोमूर्तिरनामयम् इति ॥ अकरणे प्रत्यवायोऽपि तत्रैव दर्शितः – देवांश्चैव पितृंश्चैव मुनीन् यो वै न तर्पयेत्। देवादीना मृणी भूत्वा नरकं स व्रजत्यधः इति ॥ कात्यायनोऽपि – छायां

यथेच्छेच्छरदातपार्तः पयः पिपासुः क्षुधितोऽलमन्नम्। बालो जनित्रीं जननी च बालां योषित् पुमांसं पुरुषश्च योषाम्। तथा सर्वाणि भूतानि चराणि स्थावराणि च। विप्रादुदकमिच्छन्ति सर्वे ह्युदककांक्षिणः। तस्मात्सदैव कर्तव्यं अकुर्वन्महतैनसा । युज्यते ब्राह्मणः कुर्वन् विश्वमेतद्बिभर्ति हि । हारीतोऽपि – देवताः पितरश्चैव कांक्षन्ति सलिलाञ्जलिम्। अदत्ते तु निराशास्ते प्रतियान्ति यथागतम् इति।

தர்ப்பண ப்ரசம்ஸை :- சொல்லப்பட்டுள்ளது மாதவீயத்திலேயே:- எந்த ப்ராம்ஹணன் ப்ரதி தினமும் இவ்விதமாய் ஸகல ப்ராணிகளையும் தர்ப்பிக்கின்றானோ அவன், தேஜ: சரீரமுடையவனாய் அழிவற்ற பரமபதத்தை அடைவான். தர்ப்பணம் செய்யாவிடில் தோஷமும் மாதவீயத்திலேயே சொல்லப்பட்டுள்ளது. தேவர்களையும், பித்ருக்களையும், ருஷிகளையும் எவன் தர்ப்பிக்கவில்லையோ அவன் தேவருஷி பித்ருக்களுக்குக் கடன்காரனாகி நரகத்தை அடைவான். காத்யாயனரும்:- சரத்கால வெயிலினால் வருந்தியவன் நிழலையும், தாகமுற்றவன் ஜலத்தையும், மிகப் பசியுள்ளவன் அன்னத்தையும், குழந்தை தாயையும், தாய் குழந்தையையும், பார்யை கணவனையும், கணவன் பார்யையையும் விரும்புவது போல், ஸ்தாவரமாயும், ஜங்கமமாயுள்ள ஸகல ப்ராணிகளும் ஜலத்தை விரும்பியவைகளாய் ப்ராம்ஹணனிடமிருந்து ஜலத்தை விரும்புகின்றன. ஆகையால் ப்ரதிதினமும் தர்ப்பணம் செய்ய வேண்டும். செய்யாதவன் மஹாபாபத்துடன் சேருகிறான், செய்யும் ப்ராம்ஹணன் இவ்வுலகத்தையே போஷிக்கின்றான். ஹாரீதரும்:- தேவர்களும், பித்ருக்களும் ஜலாஞ்ஜலியை விரும்புகின்றனர், அது கொடுக்கப்படாவிடில் அவர்கள் ஆசையற்று வந்தது போல் திரும்பிச் செல்லுகின்றனர்.

अत्र पितृगाथा – अपि नः स कुले भूयाद्यो नो दद्याज्जलाञ्जलिम्। नदीषु बहुतोयासु शीतलासु विशेषतः इति ॥ योगयाज्ञवल्क्योऽपि –

नास्तिक्यभावाद्यस्तांस्तु न तर्पयति वै पितॄन्। पिबन्ति देहनिस्रावं पितरोऽस्य जलार्थिनः इति ॥ तर्पणातिक्रमे प्रायश्चित्तमुक्तं स्मृतिरत्ने – अकृत्वा तर्पणं विप्रो यो भुङ्क्ते निरपत्रपः। स्नात्वा सन्तर्पयेद्विप्रानिति शातातपोऽब्रवीत् इति।

இவ்விஷயத்தில் பித்ருக்களின் காதை. (உரையாடல், இவ்விதமிருக்கிறது.) இவன் நம்குலத்தில் பிறப்பானோ? இவன் அதிக ஜலமுள்ளதும், மிகச்சீதளமுமான நதிகளில் ஜலாஞ்ஜலியை நமக்குக் கொடுப்பானோ. என்று. யோகயாக்ஞவல்க்யர்:- எவன் நாஸ்திகத் தன்மையால் அந்தப் பித்ருக்களைத் தர்ப்பிக்கவில்லையோ அவனது பித்ருக்கள் ஜலத்தை விரும்பியவராய், அவன் தேஹத்தின் வியர்வை ஜலத்தைப் பருகுகின்றனர். தர்ப்பணம் செய்யாவிடில் ப்ராயச்சித்தம் சொல்லப் பட்டுள்ளது ஸ்ம்ருதிரத்னத்தில்:- எந்த ப்ராம்ஹணன் தர்ப்பணம் செய்யாமல் லஜ்ஜையற்றுப் போஜனம் செய்கின்றானோ. அவன் ஸ்நானம் செய்து ப்ராம்ஹணர்களைத் திருப்தி செய்விக்க வேண்டும், என்று சாதாதபர் சொன்னார்.

यमतर्पणं वृद्धमनुनोक्तम् – दीपोत्सवचतुर्दश्यां कार्यं तु यमतर्पणम्। कृष्णाङ्गारचतुर्दश्यामपि कार्यं सदैव वा। यमाय धर्मराजाय मृत्यवे चान्तकाय च। वैवस्वताय कालाय सर्वभूतक्षयाय च। औदुम्बराय दध्नाय नीलाय परमेष्ठिने। वृकोदराय चित्राय चित्रगुप्ताय वै नमः इति। मनुः – चतुर्दशैते मन्त्राः स्युः प्रत्येकं तु नमोऽन्विताः। एकैकस्य तिलैर्मिश्रांस्त्रींस्त्रीन् कृत्वा जलाञ्जलीन्। यावज्जीवकृतं पापं तत्क्षणादेव नाशयेत् इति ॥ चन्द्रिकायाम् – कृष्णपक्षे चतुर्दश्यामङ्गारकदिनं यदा। तदा स्नात्वा शुभे तोये कुर्वीत यमतर्पणम् इति। दक्षः - कृष्णपक्षे चतुर्दश्यां यां काञ्चित्सरितं प्रति। यमुनायां विशेषेण नियतस्तर्पयेद्यमम् इति ॥

யமதர்ப்பணம் சொல்லப்பட்டுள்ளது, வ்ருத்தமனுவினால் :- நரகசதுர்தசியில் யமதர்ப்பணம் செய்ய வேண்டும். க்ருஷ்ணாங்காரக சதுர்தசியிலும் செய்ய வேண்டும். அல்லது எப்பொழுதுமே செய்யலாம். யமாயதர்ம ராஜாய என்பது முதல் 14- மந்த்ரங்கள். மனு:- இவை பதினான்கும் மந்த்ரங்களாகும். ஒவ்வொன்றிற்கும், நமச்சப்தத்தைச் சேர்க்க வேண்டும். ஒவ்வொன்றிற்கும். எள்ளுடன் கூடிய ஜலாஞ்ஜலிகளை மும்மூன்று தடவை கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்யப்பட்ட தர்ப்பணம், பிறந்தது முதல் செய்யப்பட்டுள்ள பாபத்தை அந்த க்ஷணத்திலேயே போக்கும். சந்த்ரிகையில்:- எப்பொழுது க்ருஷ்ணபக்ஷத்தில் சதுர்தசியில் செவ்வாய் கிழமை சேருகின்றதோ அப்பொழுது சுத்தமான ஜலத்தில் ஸ்நானம் செய்து யமதர்ப்பணத்தைச் செய்ய வேண்டும். தக்ஷர்:- க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியில் ஏதாவது ஒரு நதியில் ஸ்நானம் செய்து நியமத்துடன் யமதர்ப்பணம் செய்ய வேண்டும். யமுனையில் செய்வது விசேஷமாம்.

नियमस्तु स्कन्दपुराणे निरूपितः – दक्षिणाभिमुखो भूत्वा तिलैस्सव्यं समाहितः। देवतीर्थेन देवत्वात्तिलैः प्रेताधिपो यतः इति। स्मृतिसारे – यज्ञोपवीतिना कार्यं प्राचीनावीतिनाऽथवा। देवत्वं च पितृत्वं च यमस्यास्ति द्विरूपता इति ॥ तर्पणानन्तरं जप्यमन्त्रोऽप्युक्तः – यमो निहन्तो पितृधर्मराजो वैवस्वतो दण्डधरश्च कालः । प्रेताधिपो दत्तकृतानुसारी कृतान्त एतद्दशकृज्जपन्ति ॥ नीलपर्वतसङ्काशो रुद्रकोपसमुद्भवः। कालो दण्डधरो देवो वैवस्वत नमोऽस्तु ते इति। एवं कुर्वतः फलमाह यमः – यत्र क्वचन नद्यां हि स्नात्वा कृष्णचतुर्दशीम्। सन्तर्प्य धर्मराजं तु मुच्यते सर्वकिल्बिषैः इति।

நியமம் சொல்லப்பட்டுள்ளது ஸ்கந்த புராணத்தில் :- தெற்கு நோக்கியவனாய், கவனமுடன், திலங்களால்,

உபவீதியாய், தேவனுனதால் தேவதீர்த்தத்தாலும், ப்ரேதாதிபனுனதால் திலங்களாலும் தர்ப்பணம் செய்ய வேண்டும். ஸ்ம்ருதிஸாரத்தில்:- உபவீதியாகவாவது, ப்ராசீனுவீதியாகவாவது செய்யலாம். யமனுக்குத் தேவத்தன்மை, பித்ருத்தன்மை என்ற இரண்டும் இருக்கின்றது. தர்ப்பணத்திற்குப் பிறகு ஜபிக்க வேண்டிய மந்த்ரமும் சொல்லப்பட்டுள்ளது. 'யமோநிஹந்தா + ஜபந்தி' என்பது. இந்த நாமங்களைப் பத்து முறை ஜபித்துப் பிறகு, 'நீலபர்வத + நமோஸ்துதே' என்பதால் நமஸ்கரிக்க வேண்டும். இவ்விதம் செய்பவனுக்குப் பலனைச் சொல்லுகிறுர் யமன்:- ஏதாவதொரு நதியில் க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியில் ஸ்நானம் செய்து தர்மராஜனுக்குத் தர்ப்பணம் செய்தால் ஸகல பாபங்களாலும் விடப்படுகிறுன்.

माघशुक्लाष्टम्यां भीष्मतर्पणमाह व्यासः – शुक्लाष्टम्यां तु माघस्य दद्याद्भीष्माय योऽञ्जलिम् । संवत्सरकृतं पापं तत्क्षणादेव नश्यति ।। वैयाघ्रपादगोत्राय साङ्कृतिप्रवराय च । गङ्गापुत्राय भीष्माय प्रदास्येऽहं तिलोदकम् ।। अपुत्राय दद्याम्येतत् सलिलं भीष्मवर्मणे इति ।

மாகசுக்லாஷ்டமியில் பீஷ்ம தர்ப்பணத்தைச் சொல்லுகிறுர், வயாஸர்:- மாகசுக்லாஷ்டமியில் எவன் பீஷ்மரின் பொருட்டு ஜலாஞ்ஜலியைக் கொடுக்கின்றுனே, அவனது ஒரு வருஷத்திய பாபம் அப்பொழுதே நசிக்கின்றது. அதற்கு மந்த்ரம் 'வையாக்ர பாத+ பீஷ்மவர்மணே' என்பதாம்.

मन्वादौ तर्पणमुक्तं कालादर्शे – मन्वाद्यासु युगाद्यासु प्रदत्तः सलिलाञ्जलिः । सहस्रवार्षिकीं तृप्तिं पितॄणामावहेत् पराम् इति ।। मत्स्यपुराणे– पानीयमप्यत्र तिलैर्विमिश्रं दद्यात् पितॄणां प्रयतो मनुष्यः । श्राद्धं कृतं तेन समाः सहस्रं रहस्यमेतत् पितरो वदन्ति इति ।।

மன்வாதிகளில் தர்ப்பணம் சொல்லப்பட்டுள்ளது காலாதர்சத்தில்:- மன்வாதிகளிலும், யுகாதிகளிலும் கொடுக்கப்பட்ட ஜலாஞ்ஜலி, பித்ருக்களுக்கு ஆயிரம் வருஷத்திலுண்டாகும் சிறந்த த்ருப்தியை செய்யும். மத்ஸ்ய புராணத்தில்:- இந்த மன்வாதிகளிலும், யுகாதிகளிலும், மனிதன் சுத்தனாய், பித்ருக்களின் பொருட்டுத் திலங்களுடன் கூடிய ஜலத்தையாவது கொடுக்க வேண்டும். கொடுத்தவன் ஆயிரம் வருஷம் ச்ராத்தம் செய்தவனாகிறான். இந்த ரஹஸ்யத்தைப் பித்ருக்கள் சொல்லுகின்றனர்.

बृहन्मनुः – आषाढीमवधिं कृत्वा पञ्चमं पक्षमाश्रिताः । काङ्क्षन्ति पितरः क्लिष्टा अन्नमप्यन्वहं जलम् ।। तस्मात्तत्रैव दातव्यं दत्तमन्यत्र निष्फलम् ।। अमाष्टकासु सङ्क्रान्तौ पातादिग्रहणेषु च । स्नात्वोदकाञ्जलीन् दत्वा ततः श्राद्धं समाचरेत् ।। यस्तर्पयेत् पितॄन् प्रातः श्राद्धं कृत्वा परेऽहनि । पितरस्तस्य तृप्यन्ति न चेत् कुप्यन्ति वै भृशम् ।। एको वा बहवो वाऽपि पुत्राः पित्रोर्यथाविधि । कृत्वाऽऽब्दिकं तु तैः कार्यं परेऽहनि तिलोदकम् ।। आब्दिकं - प्रत्याब्दिकम् ।। ब्राह्मे परेद्युरुत्थाय स्नात्वा दत्वोदकाञ्जलीन् । पुनः स्नात्वा ह्याब्दिककृत् कर्माणि कुरुते द्विजः ।। वृद्धिश्राद्धे तु सापिण्ड्ये प्रेतश्राद्धेऽनुमासिके । संवत्सरविमोके च न कुर्यात् तिलतर्पणम् इति ।। अनुमासिकम् - सापिण्ड्यात् परं स्वस्वकाले कर्तव्यमासिकम् । संवत्सरविमोकश्राद्धं - प्रथमाब्दिकम् । तत्र तिलतर्पणं नेत्यर्थः ।।

ப்ருஹன்மனு:- ஆஷாட சுக்லபூர்ணிமையில் இருந்து ஐந்தாவது பக்ஷத்தை அடைந்து பித்ருக்கள் வருந்தியவராய், ப்ரதிதினம் அன்னத்தையும் ஜலத்தையும் விரும்புகின்றனர். ஆகையால் அந்தப் பக்ஷத்திலேயே கொடுக்க வேண்டும். மற்றக் காலத்தில் கொடுத்தது நிஷ்பலமாகும். அமா, அஷ்டகைகள், ஸங்க்ராந்தி வ்யதீபாதம் முதலியவை, க்ரஹணம் இவைகளில்

ஸ்நானம் செய்து ஜலாஞ்ஜலியைக் கொடுத்துப் பிறகு ச்ராத்தம் செய்ய வேண்டும். எவன் ச்ராத்தம் செய்து மறுநாள் காலையில் பித்ருக்களைத் தர்ப்பிக்கின்றானோ அவனது பித்ருக்கள் த்ருப்தர்களாகின்றனர். இல்லாவிடில் மிகவும் கோபிக்கின்றனர். ஒரு புத்ரனாயினும், பல புத்ரர்களாயினும், மாதா பிதாக்களுக்கு ஆப்திகம் செய்து மறுநாளில் அவர்கள் தர்ப்பணம் செய்ய வேண்டும். இங்கு ஆப்திகம் என்பதற்கு ப்ரத்யாப்திகமென்று பொருள். ப்ரத்யாப்திகம் செய்த ப்ராம்ஹணன் மறுநாளில் ப்ராம்ஹ முஹூர்த்தத்தில் எழுந்து ஸ்நானம் செய்து, தர்ப்பணம் செய்து மறுபடி ஸ்நானம் செய்து நித்யகர்மங்களைச் செய்ய வேண்டும். நாந்தீ ச்ராத்தம், ஸாபிண்ட்ய ச்ராத்தம், ப்ரேத ச்ராத்தம், அனுமாஸிகம், ஸம்வத்ஸரவிமோக ச்ராத்தம் இவைகளில் திலதர்ப்பணம் செய்யக் கூடாது. அனுமாஸிகம் - ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு அந்தந்தக் காலத்தில் செய்ய வேண்டிய மாஸிகம். ஸம்வத்ஸரவிமோக ச்ராத்தம் - முதலாப்திகம் அவைகளில் திலதர்ப்பணமில்லை என்பது பொருள்.

स्मृत्यन्तरे — एकोद्दिष्टेषु सर्वेषु सपिण्डीकरणे तथा । मासिकेष्वाब्दिके चैव न कुर्यात् तिलतर्पणम् ।। दर्शे तिलोदकं पूर्वं पश्चात् कुर्यान्महालये । प्रत्यब्दे तु कृते श्राद्धे परेऽहनि तिलोदकम् इति ।। सङ्ग्रहे — प्रत्यब्दं प्रतिमासं च परेऽहनि तिलोदकम् । पक्षे महालये श्राद्धे तर्पणं तु दिने दिने ।। सकृन्महालयश्राद्धे परेऽहनि तिलोदकम् ।। पूर्वेद्युः श्राद्धकृद्विप्रः प्रातः स्नात्वा परेऽहनि । सन्तर्पये दार्द्रवासास्तिलैरात्मपितॄंस्तथा इति ।।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஏகோத்திஷ்டம் எல்லாவற்றிலும், ஸபிண்டீகரணத்திலும், மாஸிகங்களிலும், ஆப்திகத்திலும் திலதர்ப்பணம் செய்யக் கூடாது. தர்ச ச்ராத்தத்தில் தர்ப்பணத்தை முந்தியும், மஹாளய ச்ராத்தத்தில் தர்ப்பணத்தைப் பிந்தியும் செய்ய வேண்டும்.

ப்ரத்யாப்திக ச்ராத்தம் செய்த பிறகு மறுநாளில் தர்ப்பணம் செய்ய வேண்டும். ஸங்க்ரஹத்தில்:- ப்ரதிவர்ஷம் செய்யும் ச்ராத்தத்திலும், ப்ரதிமாஸம் செய்யும் ச்ராத்தத்திலும், மறுநாளில் தர்ப்பணம் செய்ய வேண்டும். மஹாளயபக்ஷத்தில் ப்ரதிதினமும் ச்ராத்தம் செய்தால் அன்றன்றைக்கே தர்ப்பணம் செய்ய வேண்டும். ஒரு நாள் மட்டில் மஹாளய ச்ராத்தம் செய்தால் மறுநாளில் தர்ப்பணம் செய்ய வேண்டும். முதல் நாளில் ச்ராத்தம் செய்த ப்ராம்ஹணன் மறுநாளில் காலையில் ஸ்நானம் செய்து, ஈரவஸ்த்ரத்துடன் திலங்களுடன் தனது பித்ருக்களைத் தர்ப்பிக்க வேண்டும்.

स्मृत्यन्तरे — महालयं चाब्दिकं च यद्दिने तु समापयेत्। तद्दिने तिलतोयं तु कुर्यात् चेत् पितृघातकः ।। तस्मात् परेद्युः कर्तव्यं तिलदानं तथोदकैः ।। स्नात्वा तीरं समागम्य उपविश्य कुशासने। श्राद्धाङ्गतर्पणं कृत्वा पश्चात्सन्ध्यामुपाचरेत् ।। परेद्युः श्राद्धकृन्मर्त्यो यो न तर्पयते पितॄन्। पितृहन्ता स विज्ञेयः कल्पान्तं नरकं व्रजेत् ।। क्षेत्रेष्वपि तथा दत्वा हिरण्येन तिलैश्च वा । श्राद्धान्ते पिण्डदानं च कृत्वा दद्यात्तिलाञ्जलीन् इति ।। स्मृत्यन्तरे — हिरण्ये तूदकं पश्चान्मृतेऽहनि परेऽहनि इति ।।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- மஹாளயத்தையும், ப்ரத்யாப்திகத்தையும் என்று செய்தானோ அன்றையே தர்ப்பணம் செய்தால் அவன் பித்ருக்களைக் கொன்றவனாவான். ஆகையால் மறுநாளில் திலோதகதானம் செய்ய வேண்டும். ஸ்நானம் செய்து கரையில் வந்து குசாஸனத்தில் உட்கார்ந்து ச்ராத்தாங்கமான தர்ப்பணத்தைச் செய்து பிறகு ஸந்த்யா வந்தனம் செய்ய வேண்டும். எந்த மனிதன் ச்ராத்தம் செய்து மறுநாளில் பித்ருக்களைத் தர்ப்பிக்கவில்லையோ அவனைப் பித்ருக்களைக் கொன்றவன் என்றறியவும். அவன் கல்பம் முடியும் வரை நரகத்தையடைவான். க்ஷேத்ரங்களிலும்

அவ்விதமே. ஹிரண்யத்துடனும், திலங்களுடனும் கொடுத்து, ச்ராத்தாந்தத்தில் பிண்டதானம் செய்து திலாஞ்ஜலிகளைக் கொடுக்க வேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஹிரண்ய ச்ராத்தத்தில் தர்ப்பணத்தைப் பிந்திச் செய்ய வேண்டும். ப்ரத்யாப்திக ச்ராத்தத்தில் மறுநாளில் திலோதகதானம் செய்ய வேண்டும்.

अन्यत्रापि — सपिण्डीकरणादूर्ध्वममासङ्क्रमणादिषु । पुत्रस्तिलोदकं दद्यात् क्षेत्रपिण्डांस्तथाऽऽचरेत् इति ॥ सपिण्डीकरणादूर्ध्वं वर्षं वर्षार्धमेव वा । दर्शादिकं न कुर्वीत ह्यष्टका न विहन्यते इति दर्शादिश्राद्धनिषेधस्मरणं भोजनपर्यन्तश्राद्धविषयम् ॥ द्वादशाहादौ सपिण्डीकरणे कृते तत आरभ्य दर्शादौ तिलोदकमात्रं कर्तव्यम् । पुत्रस्तिलोदकं दद्यात् इति विशिष्य विधानात्, सपिण्डीकरणादर्वागामश्राद्धं न कारयेत् । तिलोदकं च नो दद्यात्परतश्चेद्यथाविधि इति स्मृतेश्च ॥

மற்றொரு இடத்தில்:- ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு அமா, ஸங்க்ரமணம் முதலியவைகளில் புத்ரன் திலோதகத்தைக் கொடுக்க வேண்டும். க்ஷேத்ர பிண்ட தானமும் செய்ய வேண்டும். 'ஸபிண்டீகரணத்திற்குப் பிறகு ஒரு வருஷம், அல்லது ஆறு மாதம் வரையில் தர்சம் முதலியதைச் செய்யக் கூடாது. அஷ்டகை நிஷேதிக்கப்படுவதில்லை. என்று தர்சாதி ச்ராத்தங்களை நிஷேதித்திருப்பது போஜனம் வரையிலுள்ள ச்ராத்தத்தைப் பற்றியதாகும், பன்னிரண்டாவது நாள் முதலிய காலத்தில் ஸபிண்டீகரணம் செய்யப்பட்டால் அது முதற்கொண்டு தர்சம் முதலியதில் திலோதகதானம் மட்டில் செய்ய வேண்டும். 'புத்ரன் திலோதகத்தைக் கொடுக்க வேண்டும்' என்று விசேஷித்து விதித்திருக்கிறது, 'ஸபிண்டீகரணத்திற்கு முன் ஆம ச்ராத்தத்தைச் செய்யக் கூடாது, திலோதகதானமும் செய்யக் கூடாது. ஸபிண்டீகரணத்திற்குப் பிறகானால் விதிப்படி செய்யலாம், என்று ஸ்ம்ருதி உள்ளது.

स्मृतिसारे — आब्दिके समनुप्राप्ते दर्शश्चेत् तर्पणं न हि। ब्राह्मणान् भोजयेत् पूर्वं पिण्डात् पूर्वं तु तर्पणम्। अमा पातश्च सङ्क्रान्तिः तथा वैधृतिरेव च। अष्टका चैव मन्वादिर्युगादिश्च महालयः॥ एषूदकाञ्जलीन्दद्यादन्नं च पितृतृप्तये। श्राद्धं त्वहरहः कुर्यादन्नाद्येनोदकेन वा॥ भृग्वादित्यारवारेषु पितृतृप्त्यै ति(ज)लाञ्जलीन्। साक्षतान् सन्दिशेद्धीमान्तत्तद्दर्शादिके दिने इति॥ कवषः — पित्रोः प्रत्याब्दिकश्राद्धं कृत्वा चैव परेऽहनि। निषिद्धेऽपि तिलैः कृष्णैर्विधिना तर्पयेद्विजः इति। वसिष्ठः — सन्तर्पयेन्निषिद्धेऽपि श्राद्धं कृत्वा परेऽहनि। सतिलाञ्जलिभिः शीतैः पितॄणामनृणो भवेत् इति॥

ஸ்ம்ருதிஸாரத்தில்:- ப்ரத்யாப்திக தினத்தில் தர்சச்ராத்தம் அன்னத்தால் செய்வதானால் தர்சச்ராத்தா ரம்பத்தில் தர்ப்பணமில்லை. ப்ராம்ஹணபோஜனத்தை முந்திச் செய்வித்து பிண்ட தானத்திற்கு முன் தர்ப்பணத்தைச் செய்து பிறகு பிண்டதானம் செய்ய வேண்டும். அமா, வியதீபாதம், ஸங்க்ரமணம், வைத்ருதி, அஷ்டகா, மந்வாதி, யுகாதி, மஹாளயம் இவைகளில் ஜலாஞ்ஜலிகளையும், பித்ரு த்ருப்திக்காக அன்னத்தையும் கொடுக்க வேண்டும். அன்னத்தாலோ, ஜலத்தாலோ ப்ரதிதினமும் ச்ராத்தம் செய்ய வேண்டும். வெள்ளிக் கிழமை, பானுவாரம், பௌமவாரம் இவைகளில் தர்சம் முதலியது நேர்ந்தால் பித்ருத்ருப்திக்கான ஜலாஞ்ஜலிகளை அக்ஷதைகளுடன் அறிந்தவன் கொடுக்க வேண்டும். கவஷர்:- மாதாபிதாக்களுக்கு ப்ரத்யாப்திக ச்ராத்தம் செய்து, மறுநாளில் கறுப்பு எள்ளுடன் விதிப்படி தர்ப்பணம் செய்ய வேண்டும். திலத்திற்கு நிஷேதமுள்ள தினமாயினும் திலத்துடன் செய்ய வேண்டும். வஸிஷ்டர்:- ச்ராத்தம் செய்து, திலத்திற்கு நிஷேதமுள்ள தினமாயினும் மறுநாளில் திலத்துடன் கூடிய சீத ஜலாஞ்ஜலிகளால் தர்ப்பணம் செய்ய வேண்டும். செய்பவன் பித்ரு ருணமில்லாதவனாகிறான்.

शङ्खः — अमाश्राद्धं प्रकुर्वीत पूर्वं दद्यात्तिलोदकम् । प्रत्याब्दिके तथा मासिश्राद्धे दद्यात् परेऽहनि इति ।। स्मृत्यन्तरे — प्रथमाब्दिकमारभ्य तर्पणं तु विधीयते । तस्मात् पूर्वं न कर्तव्यमिति शातातपोऽब्रवीत् ।। नान्दीश्राद्धे दर्शे च तद्दिने तर्पणं भवेत् । अनेनैव हि तृप्तिः स्यादिति हारीतभाषितम् ।। तर्पणं तिलसंमिश्रं पितॄनुद्दिश्य वाग्यतः । आसीनः प्राङ्मुखः कुर्यात् दक्षिणाभिमुखः करः इति ।।

*சங்கர்:-* தர்ச ச்ராத்தம் செய்ய வேண்டும். அதற்கு முந்தியே திலதர்ப்பணத்தைச் செய்ய வேண்டும். ப்ரத்யாப்திகம், மாஸிச்ராத்தம் இவைகளுக்கு மறுநாளில் தர்ப்பணத்தைச் செய்ய வேண்டும். மற்றொரு ஸ்ம்ருதியில்:- முதலாவதான ப்ரத்யாப்திகம் முதல் தர்ப்பணம் விதிக்கப்படுகிறது. அதற்கு முன் செய்யக் கூடாதென்று சாதாதபர் சொல்லியிருக்கிறார். நாந்தீ ச்ராத்தத்திலும், தர்ச ச்ராத்தத்திலும் அன்றைக்கே தர்ப்பணம் செய்ய வேண்டும். இதனாலேயே (பித்ருக்களுக்கு) த்ருப்தி உண்டாகுமென்று ஹாரீதரின் வாக்யம். மௌனியாய், உட்கார்ந்தவனாய், பித்ருக்களைக் குறித்துக் கிழக்கு முகமாய் எள்ளுடன் கூடியதாய், தர்ப்பணம் செய்ய வேண்டும். கை தெற்கு முகமாயிருக்க வேண்டும்.

चन्द्रिकायाम् — सव्यं जानु ततोऽन्वाच्य पाणिभ्यां दक्षिणामुखः । तल्लिङ्गैस्तर्पयेन्मन्त्रैः सर्वान् पितृगणांस्तथा इति ।। षट्त्रिंशन्मते — उदिते विमले सूर्ये तत्क्षणादेव तर्पयेत् । नोदयात् पितृतृप्तिः स्यादित्याह भगवान् मनुः इति ।। शातातपः — श्राद्धे कृते तु पूर्वेद्युः परेद्युरुदिते रवौ । उपस्थानस्य परतो होमात् पूर्वं तु तर्पणम् इति ।। विज्ञानेश्वरीये — आब्दिके स्वस्य वर्गस्य तृप्तिरेकस्य शाश्वती । तृप्तिर्वर्गद्वयस्यापि परेऽह्नि स्यात् तिलोदकैः इति ।। स्मृत्यन्तरे — प्रत्याब्दिके तिलं दद्यात् निषिद्धेऽपि परेऽहनि । यस्यैकवर्गस्योद्देश

इतरेषां तु वर्जयेत् इति ॥ अत्र परस्परविरुद्धानां वचनानां शिष्टाचाराद्व्यवस्थाऽवगन्तव्या ॥

சந்த்ரிகையில்:- பிறகு இடது முழங்காலைக் கவிழ்த்துக் கொண்டு தெற்கு முகனாய் எல்லாப் பித்ருகணங்களையும் உத்தேசித்து அவர்களைக் குறிக்கும் மந்த்ரங்களால், இருகைகளாலும் தர்ப்பணம் செய்ய வேண்டும். ஷட்த்ரிசன்மதத்தில்:- ஸூர்யன் உதயாபி முகமாயிருக்கும் போது, அப்பொழுதே தர்ப்பிக்க வேண்டும். உதயத்திற்குப் பிறகு செய்தால் பித்ருக்களுக்கு த்ருப்தியுண்டாகாது என்றார் பகவானாகிய மனு. சாதாதபர்:- முதல்நாளில் ச்ராத்தம் செய்த பிறகு மறுநாளில் ஸூர்யனுதித்த பிறகு, உபஸ்தானத்திற்குப் பிறகு, ஹோமத்திற்கு முன் தர்ப்பணம் செய்ய வேண்டும். விக்ஞானேச்வரீயத்தில்:- ச்ராத்தத்தில் உத்தேச்யமான ஒரு வர்க்கத்திற்கு மட்டில் சாச்வதமான த்ருப்தி உண்டாகிறது. மறுநாளில் திலதர்ப்பணத்தால் இரண்டு வர்க்கத்திற்கும் த்ருப்தி உண்டாகிறது. மற்றொரு ஸ்ம்ருதியில்:- ப்ரத்யாப்திகத்தில், திலத்திற்கு நிஷித்த தினமாயினும், மறுநாளில் திலதர்ப்பணம் செய்ய வேண்டும். ச்ராத்தத்தில் எந்த வர்க்கத்திற்கு உத்தேசமோ அந்த ஒரு வர்க்கத்திற்கே தர்ப்பணம். மற்றவருக்குக் கூடாது. இங்கு ஒன்றுக்கொன்று விரோதமுள்ள வசனங்களுக்கு வ்யவஸ்தையைச் சிஷ்டாசாரத்தால் அறிந்து கொள்ள வேண்டும்.

तर्पणानन्तरं दर्भत्याग उक्तो रत्नावल्याम् — विकिरे पिण्डदाने च तर्पणे स्नानकर्मणि । आचम्यैव प्रकुर्वीत दर्भसन्त्यजनं बुधः इति ॥ दर्भत्यागमन्त्रः तत्रैवोक्तः — येषां न पिता न भ्राता न पुत्रो नान्यगोत्रिणः । ते सर्वे तृप्तिमायान्तु मयोत्सृष्टैः कुशैस्तथा इति ॥

தர்ப்பணத்திற்குப் பிறகு தர்ப்பத்யாகம் சொல்லப்பட்டுள்ளது. ரத்னாவளியில்:- விகிரத்திலும், பிண்டதானத்திலும், தர்ப்பணத்திலும், ஸ்நானத்திலும் அறிந்தவன் ஆசமனம் செய்த பிறகே தர்ப்பத்யாகம் செய்ய வேண்டும். தர்ப்பத்யாக மந்த்ரம் சொல்லப்பட்டுள்ளது, ரத்னாவளியிலேயே:- 'யேஷாம் ந பிதா + குசைஸ்ததா' என்பது மந்த்ரம். 'எவருக்கு பிதா இல்லையோ, ப்ராதா இல்லையோ, புத்ரன் இல்லையோ, அன்ய கோத்ரிகளு மில்லையோ, அவரெல்லோரும் என்னால் விடப்பட்ட குசங்களால் த்ருப்தியடையக் கடவர் என்பது பொருள்.

तर्पणानन्तरं वस्त्रनिष्पीडनं कर्तव्यम्। तदाह योगयाज्ञवल्क्यः — यावद्देवानृषींश्चैव पितॄंश्चापि न तर्पयेत्। तावन्न पीडयेद्वस्त्रं यो हि स्नातो भवेत् द्विजः ।। निष्पीडयति यो वस्त्रमकृत्वा पितृतर्पणम् । निराशाः पितरो यान्ति शापं दत्वा सुदारुणम्।। वस्त्रनिष्पीडितं तोयं श्राद्धे तूच्छिष्टभोजिनाम्। भागधेयं श्रुतिः प्राह तस्मान्निष्पीडयेत् स्थले इति ।। भरद्वाजः — वस्त्रनिष्पीडनं प्रातःकर्मणः प्राग्विशिष्यते । मध्याह्ने ब्रह्मयज्ञान्ते वस्त्रनिष्पीडनं भवेत्।। ये केचास्मत्कुल इति वस्त्रं निष्पीडयेत् स्थले ।। वस्त्रं चतुर्गुणीकृत्य ताडयित्वा जलाद्बहिः । वामप्रकोष्ठे निक्षिप्य द्विराचम्य विशुध्यति इति ।। माधवीये — आचम्य च ततो दद्यात् सूर्याय सलिलाञ्जलिम्। नमो विवस्वते ब्रह्मन् भास्वते विष्णुतेजसे।। जगत्सवित्रे शुचये सवित्रे कर्मदायिने इति ।।

தர்ப்பணத்திற்குப் பிறகு ஸ்நான வஸ்த்ரத்தைப் பிழிய வேண்டும். அதைச் சொல்லுகிறார். யோகயாக்ஞவல்க்யர்:- ஸ்நானம் செய்த ப்ராம்ஹணன், தேவ ருஷி பித்ரு தர்ப்பணம் செய்யாத வரையில் வஸ்த்ரத்தைப் பிழியக்கூடாது. பித்ருதர்ப்பணம் செய்யாமல் எவன் வஸ்த்ரத்தைப் பிழிகின்றானோ, அவன்

பித்ருக்கள் ஆசையற்றவராய், பயங்கரமான சாபத்தைக் கொடுத்துத் திரும்பிச் செல்லுகின்றனர். பிழிந்த வஸ்த்ரத்தின் ஜலத்தை, ச்ராத்தத்திலுச்சிஷ்டபாகியான தாஸாதிகளுக்குப் பாகமென ச்ருதி சொல்லுகின்றது. ஆகையால் கரையில் அதைப் பிழியவேண்டும். பரத்வாஜர்:- காலையில் வஸ்த்ரத்தைப் பிழிவதை ஸந்த்யா வந்தனத்திற்கு முன் செய்ய வேண்டும். மத்யாஹ்னத்தில் ப்ரம்ஹ யக்ஞத்திற்குப் பிறகு செய்ய வேண்டும். 'யேகேச' என்ற மந்த்ரத்தால் கரையில் வஸ்த்ரத்தைப் பிழியவேண்டும். வஸ்த்ரத்தை நான்காய் மடித்து ஜலத்திற்கு வெளியில் பிழிந்து, இடது கையின் மணிக்கட்டுக்கு மேல் வைத்துக் கொண்டு இருமுறை ஆசமனம் செய்து சுத்தனாகிறான். மாதவீயத்தில்:- ஆசமனம் செய்து பிறகு ஸூர்யனுக்கு ஜலாஞ்ஜலியைக் கொடுக்க வேண்டும். அதன் மந்த்ரம் 'நமோவிவஸ்தே' என்பது 'ஓப்ரம்ஹமே! காந்தியால் எல்லாவற்றையும் மறைப்பவனும், காந்தியுடையவனும், வ்யாபிக்கும் தேஜஸ்ஸுடையவனும்; ஜகத்தை ப்ரேரணம் செய்பவனும், சுத்தனும், ஜகத்காரணனும், கர்மபல தாதாவுமான உனக்கு நமஸ்காரம்' என்று பொருள்.

## देवपूजनम्

अथ देवपूजनम् — तच्च प्रातर्होमादनन्तरमिति केचित् । विधेया देवतापूजा प्रातर्होमादनन्तरम् इति मरीचिस्मरणात् ।। तथा चन्द्रिकायाम् — स्वशाखोक्तक्रियां कृत्वा हुत्वा चैवाग्निहोत्रकम् । कुर्यादाराधनं विष्णोर्देवदेवस्य चक्रिणः इति । ब्रह्मयज्ञजप-तर्पणानन्तरमित्यन्ये ।। तथा च हारीतः — कुर्वीत देवतापूजां जपयज्ञादनन्तरम् इति ।। व्यासोऽपि — जलदेवान्नमस्कृत्य ततो गच्छेद्गृहं बुधः । पौरुषेण च सूक्तेन ततो विष्णुं समर्चयेत् इति ।।

याज्ञवल्क्योऽपि — स्नात्वा देवान् पितॄंश्चैव तर्पयेदर्चयेत् तथा इति ॥

## தேவபூஜை

இனி தேவபூஜை சொல்லப்படுகிறது. அதைக் காலையில் ஹோமத்திற்குப் பிறகு செய்யலாமென்று சிலர். 'ப்ராத:கால ஹோமத்திற்குப் பிறகு தேவபூஜையைச் செய்ய வேண்டும்' என்று மரீசி சொல்கிறார். அவ்விதமே. சந்த்ரிகையில்:- தன் சாகையில் சொல்லியுள்ள கர்மத்தை அனுஷ்டித்து, அக்னிஹோத்ர ஹோமமும் செய்து, தேவ தேவனும், சக்ரியுமான விஷ்ணுவின் ஆராதனத்தைச் செய்ய வேண்டும். ப்ரம்ஹயக்ஞஜபம் தர்ப்பணம் இவைகளுக்குப் பிறகு செய்ய வேண்டுமென்று சிலர். அவ்விதமே, ஹாரீதர்:- ப்ரம்ஹயக்ஞத்திற்குப் பிறகு தேவதா பூஜையைச் செய்ய வேண்டும். வ்யாஸரும்:- அறிந்தவன் ஜலாபிமானி தேவதைகளை நமஸ்கரித்துப் பிறகு க்ருஹத்திற்குச் செல்ல வேண்டும். பிறகு புருஷ ஸூக்தத்தால் விஷ்ணுவைப் பூஜிக்க வேண்டும். யாக்ஞவல்க்யரும்:- ஸ்நானம் செய்து தேவ பித்ருகளுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும். தேவபூஜையையும் செய்ய வேண்டும்.

मध्याह्ने तर्पणानन्तरं गन्धकुसुमाक्षतैर्हरिहरहिरण्यगर्भ-प्रभृतीनामन्यतमं यथावासनमृग्यजुःसाममन्त्रैः तत्प्रकाशकैः स्वनामभिर्वा चतुर्थ्यन्तैर्नमस्कारयुक्तैराराधयेत् इति विज्ञानेश्वरः ॥ यमः — गायत्रीं तु जपेत् पूर्वं ब्रह्मयज्ञजपस्ततः । देवादींस्तर्पयेत् पश्चादिष्टं देवं ततोऽर्चयेत् इति । कूर्मपुराणे — निष्पीड्य स्नानवस्त्रं वै समाचम्य च वाग्यतः । स्वैर्मन्त्रैरर्चयेत् देवान् पत्रैः पुष्पैस्तथाऽम्बुभिः । ब्रह्माणं शङ्करं सूर्यं तथैव मधुसूदनम् । अन्यान् स्वाभिमतान् देवान् भक्त्या चाराधयेन्नरः इति ॥ हारीतोऽपि — ततो

देवान्नमस्कृत्य गृहं गच्छेत्ततः पुनः । विधिना पुरुषसूक्तस्य गत्वा विष्णुं समर्चयेत् इति ॥

''மத்யாஹ்னத்தில், தர்ப்பணத்திற்குப் பிறகு, கந்த புஷ்பாக்ஷதங்களால் ஹரி, ஹரன், ப்ரஹ்மா முதலியவருள் ஒருவரைப் பக்திக்குத் தகுந்தபடி ருக், யஜுஸ், ஸாமம் இந்த மந்த்ரங்களாலாவது, தேவதா ப்ரகாசகமும், நான்காவது வேற்றுமையுடனும் நமः என்பதோடும் கூடிய நாம மந்த்ரங்களாலாவது ஆராதிக்க வேண்டும்'' என்றார் விக்ஞானேச்வரர். யமன்:- முதலில் காயத்ரியை ஜபிக்க வேண்டும். பிறகு ப்ரம்ஹயக்ஞத்தை ஜபிக்க வேண்டும். பிறகு தேவர் முதலியவரைத் தர்ப்பிக்க வேண்டும். பிறகு இஷ்டமான தேவதையைப் பூஜிக்க வேண்டும். கூர்ம புராணத்தில்:- ஸ்நான வஸ்த்ரத்தைப் பிழிந்து ஆசமனம் செய்து மௌனியாய் அவரது மந்த்ரங்களால், பத்ரம், புஷ்பம், ஜலம் இவைகளால், ப்ரம்ஹா, சிவன், ஸூர்யன், விஷ்ணு தனக்கிஷ்டமான இதர தேவர்கள் இவர்களைப் பக்தியுடன் பூஜிக்க வேண்டும். ஹாரீதரும்:- பிறகு தேவர்களை நமஸ்கரித்து வீட்டிற்குச் செல்ல வேண்டும். பிறகு புருஷஸூக்த விதானத்தால் விஷ்ணுவைப் பூஜிக்க வேண்டும்.

विष्णुपुराणेऽपि — ततो गृहार्चनं कुर्यादभीष्टसुरपूजनम् । जलाभिषेकं पुष्पाणां धूपादेश्च निवेदनम् इति ॥ योगयाज्ञवल्क्यः — देवानामर्चनं कुर्यात् ब्रह्मादीनाममत्सरः । ब्राह्मवैष्णवरौद्रैश्च सावित्रैरथ वारुणैः ॥ तल्लिङ्गैरर्चयेन्मन्त्रैः सर्वान् देवान् समाहितः इति । मनुः — आदित्यमथवा विष्णुमीशं ब्रह्माणमेव च । अर्चयेद्वैदिकैर्मन्त्रैर्गृहस्थः प्रयतो भवेत् इति ॥ अन्यत्र च — आरोग्यं भास्करादिच्छेत् श्रियमिच्छेद्धुताशनात् । ईश्वरात् ज्ञानमन्विच्छेत् मोक्षमिच्छेज्जनार्दनात् इति ॥

**விஷ்ணு புராணத்திலும்:-** பிறகு க்ருஹ தேவார்ச்சனம் செய்ய வேண்டும். இஷ்டமான தேவர்களைப் பூஜிக்கலாம். ஜலத்தினுல் அபிஷேகத்தையும் புஷ்பம் தூபம் முதலியதையும் ஸமர்ப்பிக்க வேண்டும். **யோகயாக்ஞவல்க்யர்:-** ப்ரம்ஹா முதலிய தேவர்களுக்கு ச்ரத்தையுடன் அர்ச்சனம் செய்ய வேண்டும். ப்ராம்ஹம், வைஷ்ணவம், ரௌத்ரம், ஸாவித்ரம், வாருணம் முதலியதும், அந்தந்தத் தேவதாப்ரகாசமுமுள்ள மந்த்ரங்களால், ஏகாக்ரனுய் எல்லாத் தேவர்களையும் அர்ச்சிக்க வேண்டும். **மனு:-** க்ருஹஸ்தன், ஸூர்யன் அல்லது விஷ்ணு, ஈசன், ப்ரம்ஹா இவர்களை வைதிக மந்த்ரங்களால் அர்சிக்க வேண்டும். சுத்தனுவான். **மற்ருேரிடத்தில்:-** ஸூர்யனிடமிருந்து ஆரோக்யத்தையும், அக்னியினிடமிருந்து ஸம்பத்தையும், ஈச்வரனிடமிருந்து ஞானத்தையும், விஷ்ணுவினிடமிருந்து மோக்ஷத்தையும் விரும்ப வேண்டும்.

गृह्यपरिशिष्टे—अथ गृहस्थो ह्यहरहरिष्टां देवतामिष्ट्वाऽभीष्टानर्थांश्चिनोति। ते च देवा गणपतिर्वा स्कन्दो वा सूर्यो वा सरस्वती वा गौरी वा गौरीपतिर्वा श्रीर्वा श्रीपतिर्वाऽन्यो वाऽभिमतस्त एते यथारुचि समस्ता व्यस्ता वेज्यन्ते इति ।। सङ्ग्रहे — आदित्यमम्बिकां विष्णुं गणनाथं महेश्वरम्। पञ्च यज्ञपरो नित्यं गृहस्थः पञ्च पूजयेत् इति। स्मृत्यर्थसारे — ब्रह्माणमीशं विष्णुं वा सूर्यमग्निं गणाधिपम्। दुर्गां सरस्वतीं लक्ष्मीं गौरीं वा नित्यमर्चयेत् ।। पौरुषेणैव सूक्तेन देवार्चा प्रणवेन वा। तल्लिङ्गैरेव वा मन्त्रैरर्चयेद्गुर्वनुज्ञया ।। स्त्रीशूद्राणां च भवति नाम्नो वै देवतार्चनम्। सर्वे चागममार्गेण कुर्युर्वेदानुसारिणा ।। गुरूक्तेन प्रकारेण वेदबाह्येन नार्चयेत् इति ।।

**க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:-** பிறகு, க்ருஹஸ்தன் ப்ரதி தினமும் இஷ்டமான தேவதையைப் பூஜித்தால் விரும்பிய பொருள்களை அடைவான். அந்தத் தேவர்கள் கணபதியோ,

ஸ்கந்தனோ, ஸூர்யனோ, ஸரஸ்வதியோ, கௌரியோ, சிவனோ, லக்ஷ்மியோ, லக்ஷ்மீபதியோ, இஷ்டமான வேறு தேவனாகவோ இருக்கலாம். இந்தத் தேவர்களை பக்திக்குத் தக்கபடி எல்லோரையும் யஜிக்கலாம். அல்லது தனியாக ஒரு தேவனை யஜிக்கலாம். ஸங்க்ரஹத்தில்:- பஞ்சயக்ஞங்களை யனுஷ்டிக்கும் க்ருஹஸ்தன், ஆதித்யன், அம்பிகை, விஷ்ணு, கணநாதன், மஹேச்வரன் என்ற ஐந்து தேவர்களையும் ப்ரதி தினமும் பூஜிக்க வேண்டும். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- ப்ரம்ஹா, ஈசன், விஷ்ணு, ஸூர்யன், அக்னி, கணாதிபன், துர்க்கை, ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, கௌரி இவர்களுள் யாரையாவது நித்யமும் அர்ச்சிக்க வேண்டும். புருஷஸூக்தத்தினாலோ, ப்ரணவத்தினாலோ தேவதாப்ரகாசகமான மந்த்ரங்களாலோ குருபதேசப்படி தேவபூஜையைச் செய்யலாம். ஸ்த்ரீகள், சூத்ரர்கள் இவரும் நாம மந்த்ரத்தால் தேவதா பூஜையைச் செய்யலாம். எல்லோருமே வேதத்தைத் தழுவியுள்ள ஆகமமார்கத்தால் செய்யலாம். குருவினால் உபதேசிக்கப்பட்ட ப்ரகாரத்தால் அர்ச்சிக்க வேண்டும். வேதபாஹ்யமான மார்க்கத்தால் அர்ச்சிக்கக் கூடாது.

स्मृतिरत्ने — मन्त्रैर्वैष्णवरौद्रैस्तु सावित्रैः शाम्भवैस्तथा । विष्णुं प्रजापतिं वाऽपि शिवं वा भास्करं तथा ।। अन्यांश्चाभिमतान् देवान् भक्त्या चाक्रोधनोऽत्वरः ।। अप्स्वग्नौ हृदये सूर्ये स्थण्डिले प्रतिमासु च। षट्स्वेतेषु हरेस्सम्यगर्चनं मुनिभिः स्मृतम् ।। हविषाऽग्नौ जले पुष्पैः ध्यानेन हृदये हरिम् । अर्चन्ति सूरयो नित्यं जपेन रविमण्डले । सालग्रामे च चक्राङ्के पटे(ट्ट) मुद्रासु देवताः । पूजनीया हिरण्येषु रत्नगोब्राह्मणेषु च ।। यां काञ्चिद्देवतां कश्चि दाराधयितुमिच्छति । स सर्वोपाययत्नेन ब्राह्मणान् गाश्च तोषयेत् इति ।।

ஸ்ம்ருதிரத்னத்தில்:- விஷ்ணு, ருத்ரன், ஸூர்யன், சிவன் இவர்களுடைய மந்த்ரங்களால், விஷ்ணு, அல்லது ப்ரஜாபதி, சிவன், ஸூர்யன் இவரையாவது, வேறு அபிமதமான தேவர்களையாவது பக்தியுடன், கோபமில்லாமல், வேகமில்லாமல் அர்ச்சிக்க வேண்டும். ஜலம், அக்னி, ஹ்ருதயம், ஸூர்யன், ஸ்தண்டிலம், (தரை) பிம்பங்கள் என்ற இந்த ஆறு ஸ்தானங்களில் ஹரிபூஜையை நன்றாய்ச் செய்யலாமென்று முனிவரால் விதிக்கப்பட்டுள்ளது. அக்னியில் ஹவிஸ்ஸாலும், ஜலத்தில் புஷ்பங்களாலும், ஹ்ருதயத்தில் த்யானத்தாலும், ஸூர்ய மண்டலத்தில் ஜபத்தாலும், ப்ரதிதினம் அறிந்தவர்கள் அர்ச்சிக்கின்றனர். சக்ரமுள்ள ஸாளக்ராமம், படம், முத்ரை, தங்கம், ரத்னம், பசு, ப்ராம்ஹணர்கள் என்ற இவர்களிடத்தில் தேவர்களைப் பூஜிக்கலாம். எவனொருவன் ஏதாவதொரு தேவதையைப் பூஜிக்க விரும்புகின்றானோ, அவன் எல்லா உபாயத்தாலும் ப்ரயத்னத்தாலும், ப்ராம்ஹணர்களையும், பசுக்களையும் த்ருப்தராய்ச் செய்ய வேண்டும்.

नारदः — विप्राणां वपुराश्रित्य सर्वास्तिष्ठन्ति देवताः । अतस्तत्रैव ताः पूज्याः अलाभे प्रतिमादिषु ॥ प्रतिमापट्टयन्त्राणां नित्यं स्नानं न कारयेत् । कारयेत् पर्वदिवसे यथा मलनिवारणम् ॥ अग्नौ क्रियावतां देवो दिवि देवो मनीषिणाम् । प्रतिमास्वल्पबुद्धीनां योगिनां हृदये हरिः ॥ तस्य सर्वगतत्वाच्च स्थण्डिले भावितात्मनाम् ॥ सालग्रामशिला यत्र यत्र द्वारवती शिला । उभयोस्सङ्गमो यत्र तत्र मुक्तिर्न संशयः ॥ सालग्रामशिला यत्र पूज्यते भगवन्मयैः । तद्देशे योजनादर्वाङ्मृतो निर्वाणमश्नुते ॥ सालग्रामशिलायास्तु न च सम्प्रोक्षणं स्मृतम् । न प्रतिष्ठा विधातव्या न चैवावाहनादिकम् इति ॥

நாரதர்:- ப்ராம்ஹணர்களின் சரீரத்தையண்டி எல்லாத் தேவர்களும் வஸிக்கின்றனர். ஆகையால் அங்கே அவர்களைப் பூஜிக்க வேண்டும். அவர் கிடைக்காவிடில் பிம்பம் முதலிவற்றில் பூஜிக்க வேண்டும். பிம்பங்கள், படங்கள், யந்த்ரங்கள் இவைகளுக்கு ப்ரதிதினமும் ஸ்நானம் செய்விக்க வேண்டியதில்லை. பர்வதினத்தில், அழுக்கு நிவ்ருத்திக்குமளவு ஸ்நானம் செய்விக்க வேண்டும். ச்ரோத்ரியர்களான கர்மானுஷ்டாயிகளுக்கு அக்னியில் தேவன். ஞானிகளுக்கு வைகுண்டத்தில் தேவன். ஸ்வல்பபுத்திகளுக்கு பிம்பங்களில் தேவன். யோகிகளுக்கு ஹ்ருதயத்தில் தேவன். ஆத்ம பாவனை யுடையவருக்கு ஸ்தண்டிலத்திலேயே (தரையிலேயே) தேவன். அவன் எங்கும் இருப்பவனானதால். ஸாளக்ராம சிலை எங்கிருக்கின்றதோ, த்வாரவதீசிலை எங்கிருக் கின்றதோ, இரண்டும் சேர்ந்து எங்கு இருக்கின்றனவோ அங்கு முக்தியே, ஸம்சயமில்லை. எந்தத் தேசத்தில் ஸாளக்ராமம் பக்தர்களால் பூஜிக்கப்படுகின்றதோ அந்தத் தேசத்தில் ஒரு யோஜனை தூரத்திற்குள் மரித்தவன் மோக்ஷத்தை அடைகிறான். ஸாளக்ராம சிலைக்கு ஸம்ப்ரோக்ஷணம் வேண்டியதில்லை. ப்ரதிஷ்டையும் செய்ய வேண்டியதில்லை. ஆவாஹனம் முதலியதும் செய்ய வேண்டியதில்லை.

विष्णुपूजाप्रकारमाह नारदः - वेदे तु पौरुषं सूक्त मर्चितं गुह्यमुत्तमम् । आनुष्टुभस्य सूक्तस्य त्रिष्टुबन्तस्य देवता ।। पुरुषो यो जगद्बीजमृषिर्नारायणः स्मृतः । छन्दोऽनुष्टुप्च भवति तिसृणां त्रिष्टुबन्ततः इति ।।

விஷ்ணு பூஜாப்ரகாரத்தைச் சொல்லுகிறார் நாரதர்:- வேதத்தில் புருஷஸூக்தம் சிறந்ததும், மிக ரஹஸ்யமுமாகியது. அனுஷ்டுப் சந்தஸ்ஸையுடையது,

த்ரிஷ்டுப் சந்தஸ்ஸை முடிவிலுடையது இந்த ஸூக்தத்திற்கு, ஜகன் மூலமாகிய புருஷன் தேவதை. நாராயணன் ருஷி. அனுஷ்டுப் சந்தஸ். முடிவில் மூன்று ருக்குகளுக்கு த்ரிஷ்டுப் சந்தஸ்ஸாம்.

प्रत्यृचमृषिभेदमाह स एव – बृहस्पतिर्मनुर्दक्षः शौनकोऽत्रिश्च मुद्गलः । शातातपो वसिष्ठश्च याज्ञवल्क्यश्च नारदः ।। गौतमोऽथ भरद्वाजः शुको गर्गोशनाऽङ्गिराः । व्यासः पराशरश्चैव ऋषयोऽष्टादश स्मृताः ।। मत्स्यः कूर्मो वराहश्च नारसिंहश्च वामनः । रामो रामश्च रामश्च कृष्णः कल्कीति ते दश ।। श्रीवल्लभो हरिः शौरिरच्युतो धरणीधरः । जनार्दनो हृषीकेशो माधवश्च तथैव च ।। देवा अष्टादश प्रोक्ताः पूजां वक्ष्ये यथाक्रमम् । आवाहनासनं पाद्यमर्घ्यं माचमनीयकम् ।। मधुपर्कं तथा स्नानं वस्त्रं चैवोपवीतकम् । गन्धं पुष्पं च धूपं च तथा दीपं प्रकल्पयेत् ।। नैवेद्यं चैव ताम्बूलं प्रदक्षिणनमस्कृती । उद्वासनं च क्रमशः कुर्यात् पूजापरायणः इति ।।

ஒவ்வொரு ருக்குக்கும் ருஷி பேதத்தைச் சொல்லுகிறார். நாரதரே:- ப்ரஹஸ்பதி, மனு, தக்ஷர், சௌனகர், அத்ரி, முத்கலர், சாதாதபர், வஸிஷ்டர், யாக்ஞவல்க்யர், நாரதர், கௌதமர், பரத்வாஜர், சுகர், கர்கர், உசநஸ், அங்கிரஸ், வ்யாஸர், பராசரர் என்று பதினெட்டு ருஷிகள் கூறப்பட்டுள்ளனர். மத்ஸ்யர், கூர்மர், வராஹர், நரஸிம்ஹர். வாமனர், ராமர், ராமர், ராமர், க்ருஷ்ணர், கல்கி, ச்ரீவல்லபர், ஹரி, சௌரி, அச்யுதர், தரணீ தரர், ஜநார்த்தனர், ஹ்ருஷீகேசர், மாதவர் என்று பதினெட்டுத் தேவர்களாம். இனி க்ரமப்படி பூஜையைச் சொல்லுகிறேன். ஆவாஹனம், ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனீயம், மதுபர்க்கம், ஸ்நானம், வஸ்த்ரம், உபவீதம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவைத்யம், தாம்பூலம், ப்ரதக்ஷிணம், நமஸ்காரம்,

உத்வாஸனம் இவைகளை க்ரமமாய்ச் செய்ய வேண்டும் பூஜையில் ச்ரத்தையுள்ளவன். (இவ்விதம் 18- உபசாரங்கள் யஜுர்வேத புருஷ ஸூக்தானுஸாரமாய்.)

षोडशर्चेन पूजाप्रकार उक्तश्चन्द्रिकामाधवीयादौ — पौरुषेण तु सूक्तेन ततो विष्णुं समर्चयेत् । ऋग्वेदे पौरुषं सूक्तं षोडशर्चमुदीरितम् । आनुष्टुभस्य सूक्तस्य त्रिष्टुबन्तस्य देवता । पुरुषो यो जगद्बीज मृषिर्नारायणः स्मृतः ॥ प्रथमां विन्यसेद्वामे द्वितीयां दक्षिणे करे । तृतीयां वामपादे तु चतुर्थीं दक्षिणे पदे ॥ पञ्चमीं वामजङ्घायां दक्षिणस्यां तथोत्तराम् । सप्तमीं वामकट्यां तु दक्षिणस्यां तथाऽष्टमीम् । नवमीं नाभिमध्ये तु दशमीं हृदये न्यसेत् । एकादशीं कण्ठदेशे द्वादशीं वामबाहुके ॥ त्रयोदशीं दक्षिणे तु आस्यदेशे चतुर्दशीम् । अक्ष्णोः पञ्चदशीं न्यस्य षोडशीं मूर्ध्नि विन्यसेत् ॥ यथाऽऽत्मनि तथा देवे न्यासकर्म समाचरेत् ॥

பதினாறு ருக்குள்ள ஸூக்தத்தினால் பூஜாப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது சந்த்ரிகா, மாதவீயம்:- முதலியவைகளில். பிறகு புருஷஸூக்தத்தினால் விஷ்ணுவைப் பூஜிக்க வேண்டும். ருக் வேதத்தில் புருஷஸூக்தம் பதினாறு ருக்குகளுடையதாய்ச் சொல்லப்பட்டுள்ளது. அனுஷ்டுப் சந்தஸ்ஸுள்ளதும், த்ரிஷ்டுப் சந்தஸ்ஸை முடிவிலுடையதுமான இதற்குத் தேவதை, ஜகன் மூலமான புருஷனும். நாராயணன் ருஷியாம். (இனி ந்யாஸம்) முதலாவதான ருக்கை இடது கையிலும், இரண்டாவது ருக்கை வலது கையிலும், மூன்றாவதை இடது காலிலும், நான்காவதை வலது காலிலும், ஐந்தாவதை இடது முழங்காலிலும், ஆறாவதை வலது முழங்காலிலும், ஏழாவதை இடது இடுப்பிலும், எட்டாவதை வலது இடுப்பிலும், ஒன்பதாவதை நாபியின் நடுவிலும், பத்தாவதை மார்பிலும், பதினொன்றாவதை

கண்டத்திலும், பன்னிரண்டாவதை இடது கையிலும், பதின்மூன்றாவதை வலது கையிலும், பதினான்காவதை வாயிலும், பதினைந்தாவதைக் கண்களிலும், பதினாறாவது ருக்கைச் சிரஸ்ஸிலும் ந்யஸிக்க வேண்டும். (ருக்கை ஜபித்து அந்தந்த ஸ்தானத்தைத் தொடுவது ந்யாஸம்.) தேஹத்திற்போல் தேவபிம்பத்திலும் ந்யாஸம் செய்ய வேண்டும்.

एवं न्यासं तु कृत्वाऽऽदौ पश्चाद्देवस्य पूजनम् ॥ गन्धमाल्यैरथात्मानमर्चयेत् पीठमेव च। पूर्वयाऽऽवाहयेद्देवमासनं तु द्वितीयया ॥ पाद्यं तृतीयया चैव चतुर्थ्याऽर्घ्यं प्रदापयेत् । पञ्चम्याऽऽचमनं दद्यात् षष्ठ्या स्नानं समाचरेत् ॥ सप्तम्या तु ततो वासोऽप्यष्टम्या चोपवीतकम् । नवम्या गन्धमेवं तु दशम्या पुष्पकं तथा । एकादश्या तथा धूपं द्वादश्या दीपमेव हि। नैवेद्यं तु त्रयोदश्या नमस्कारे चतुर्दशी ॥ प्रदक्षिणे पञ्चदशी वर्जने षोडशी तथा। स्नाने वस्त्रे च नैवेद्ये दद्यादाचमनं तथा ॥

ஆரம்பத்தில் இவ்விதம் ந்யாஸம் செய்து கொண்டு பிறகு தேவபூஜையைச் செய்ய வேண்டும். பிறகு கந்தபுஷ்பங்களால் ஆத்ம பூஜையையும், பிறகு பீட பூஜையையும் செய்ய வேண்டும். முதல் ருக்கினால் தேவனை ஆவாஹனம் செய்ய வேண்டும். இரண்டாவது ருக்கினால் ஆஸனத்தையும், மூன்றாவதால் பாத்யத்தையும், நான்காவதால் அர்க்யத்தையும், ஐந்தாவதால் ஆசமனத்தையும் கொடுக்க வேண்டும். ஆறாவதால் ஸ்நானத்தைச் செய்விக்க வேண்டும். ஏழாவதால் வஸ்த்ரத்தையும், எட்டாவதால் உபவீதத்தையும், ஒன்பதாவதால் கந்தத்தையும், பத்தாவதால் புஷ்பத்தையும், பதினொன்றாவதால் தூபத்தையும், பன்னிரண்டாவதால் தீபத்தையும்,

பதின்மூன்ருவதால் நைவேத்யத்தையும், ஸமர்ப்பிக்க வேண்டும். பதினன்காவதால் நமஸ்கரிக்க வேண்டும். பதினைந்தாவதால் ப்ரதக்ஷிணமும், பதினருவதால் உத்வாஸனமும் செய்ய வேண்டும். ஸ்நானம், வஸ்த்ரம், நைவேத்யம் இவைகளில் ஆசமனத்தையும் கொடுக்க வேண்டும்.

हुत्वा षोडशभिर्मन्त्रैः षोडशान्नस्य चाहुतीः । पुनष्षोडशभिर्मन्त्रैः दद्यात् पुष्पाणि षोडश ।। तच्च सर्वं जपेद्भूयः पौरुषं सूक्तमुत्तमम् । षण्मासात् सिद्धिमाप्नोति ह्येवमेव समर्चयन् ।। संवत्सरेण तेनैव सायुज्यमधिगच्छति ।। ध्येयः सदा सवितृमण्डलमध्यवर्ती नारायणः सरसिजासनसन्निविष्टः । केयूरवान् मकरकुण्डलवान् किरीटी हारी हिरण्मयवपुर्धृत शङ्खचक्रः इति ।।

இந்தப் பதினறு ருக்குகளால் பதினறு அன்னஹுதிகளைச் செய்து, மறுபடி அதே பதினறு மந்த்ரங்களால் பதினறு புஷ்பங்களை ஸமர்ப்பித்து, மறுபடி அதே புருஷஸூக்தத்தை முழுவதும் ஜபிக்க வேண்டும். இவ்விதமே அர்ச்சிப்பவன் ஆறுமாதத்தில் இஷ்ட ஸித்தியை அடைகிருன். ஒருவருஷம் அர்ச்சிப்பவன், அவனுடனே ஸாயுஜ்யத்தை அடைகிருன். ஸூர்ய மண்டலத்தின் நடுவிலிருப்பவனும், தாமரைப் பூவாஸனத்தில் வீற்றிருப்பவனும், கேயூரம், மகரகுண்டலம், கிரீடம், ஹாரம் இவை அணிந்தவனும், ஸ்வர்ணமயமான மேனியுடையவனும், சங்கம், சக்ரம் இவைகளைத் தரித்தவனுமான நாராயணனை த்யானிக்க வேண்டும்.

शौनकः— वक्ष्ये पुरुषसूक्तस्य विधानं त्वर्चनं प्रति । स्नात्वा यथोक्तविधिना प्राङ्मुखः शुद्धमानसः ।। देवस्याभिमुखो भूत्वा विष्ण्वाराधनमारभेत् । नारायण ऋषिः प्रोक्तो ह्यनुष्टुप् छन्द उच्यते ।।

पुरुषो भगवान् देवो विनियोगः स्मृतोऽर्चने ॥ वामाद्यङ्गं करचरणजानूरुयुग्मेषु नाभौ हृत्कण्ठांसद्वितयवदनाक्ष्युत्तमाङ्गेषु मन्त्री। पुंसः सूक्तैर्न्यसतु मनुभिः संहृतौ शीर्षपूर्वं सृष्टौ नाभिप्रभृति हृदयान्तं स्थितौ च क्रमेण ॥ एवं न्यासविधिं कृत्वा पश्चाद्यागं समाचरेत् ॥

சௌனகர்:- புருஷஸூக்தத்தால் அர்ச்சிக்கும் விதியைச் சொல்லுகிறேன். விதிப்படி ஸ்நானம் செய்து, சுத்த மனமுடையவனாய், கிழக்கு நோக்கியவனாய், தேவனுக்கு நேராக இருந்து விஷ்ணுவின் ஆராதனத்தைத் துவக்க வேண்டும். இந்தப் புருஷஸூக்தத்திற்கு நாராயணர் ருஷி. அனுஷ்டுப் சந்தஸ். பகவானாகிய புருஷன் தேவதை. அர்ச்சனத்தில் விநியோகமாம். ந்யாஸம் சொல்லப்படுகிறது. புருஷஸூக்தத்தின் பதினாறு ருக்குகளால் பதினாறு ஸ்தானங்களில் ந்யாஸம் செய்ய வேண்டும். இரட்டையாயுள்ள அங்கங்களில் முதலில் இடது புறத்திலும், பிறகு வலது புறத்திலும் ந்யாஸம் செய்ய வேண்டும். கைகள் இரண்டு, கால்கள் இரண்டு, முழங்கால்கள் இரண்டு, துடைகள் இரண்டு, ஆக-8, நாபி, மார்பு, கழுத்து, தோள்கள் தனியே இரண்டு, முகம், கண்கள், 2-ம் ஒன்று, தலை, ஆக-8, மொத்தம் 16-ஸ்தானங்களில் ந்யாஸம் செய்ய வேண்டும். இந்த க்ரமம் ஸம்ஹ்ருதி ந்யாஸத்தில், ஸ்ருஷ்டி ந்யாஸத்தில் தலை முதலாக இடது கை வரையிலும், ஸ்திதி ந்யாஸத்தில் நாபி முதல் ஹ்ருதயம் வரையிலும் ந்யாஸம் செய்ய வேண்டும். பிறகு யாகம் செய்ய வேண்டும்.

आद्येनावाहयेद्देवं द्वितीयेनासनं तथा । तृतीयेनासने देवमास्यतामिति च ब्रुवन् ॥ चतुर्थ्या पाद्यदानं च आचामं पञ्चमेन तु । षष्ठेन चार्घ्यमादद्यादाचामं पूर्ववत् तथा ॥ समस्तैः स्नापयेद्देवमाचामं पूर्ववत् तथा । दद्याद्गन्धं सप्तमेन पुष्पदानं तथाऽष्टमे ॥ नवमे वस्त्रदानं तु

दशमेनोत्तरीयकम्। एकादशेनोपवीतं पाद्याचामं तु पूर्ववत्।। धूपं तु द्वादशेनैव दीपदानं त्रयोदशे। चतुर्दशे- नाभरणं पाद्याचामं तु पूर्ववत्।। पात्रशुद्धिं चाभिघार मोदनाभिनिवेदनम्। कुर्यात् पञ्चदशेनैव आचामं पूर्ववत् तथा।। दक्षिणां तु यथाशक्ति षोडशेन विसर्जयेत्। दद्यात् पुरुषसूक्तेन यः पुष्पाण्यप एव वा।। अर्चितं तेन वै सर्वं त्रैलोक्यं सचराचरम्। ततः प्रदक्षिणं कृत्वा जपं कुर्यात् समाहितः।। जितं ते पुण्डरीकाक्ष नमस्ते विश्वभावन। नमस्तेऽस्तु हृषीकेश महापुरुष पूर्वज। इत्येवमनया स्तुत्या स्तुत्वा देवं दिनेदिने। किङ्करोऽस्मीति चात्मानं देवायैव निवेदयेत् इति।।

16- ருக்குகளினுலும் முறையே ஆவாஹனம்-1, ஆஸனம்-2, ஆஸ்யதாம் என்று உபசரிப்பது-3, பாத்யம்-4, ஆசமனம்-5, அர்க்யம்-6, ஆசமனம், ஸ்நானம், ஆசமனம், கந்தம்,-7, புஷ்பம்-8, வஸ்த்ரம்-9, உத்தரீயம்-10, உபவீதம்-11, பாத்யம், ஆசமனம், தூபம்-12, தீபம்-13, ஆபரணம்-14, பாத்யம், ஆசமனம், பாத்ரசுத்தி, அபிகாரம், அன்னுதி நிவேதனம்-15, ஆசமனம், தக்ஷிணுதானம், விஸர்ஜனம்-16, இவ்விதம் 16- உபசாரங்களைச் செய்ய வேண்டும். எவன் புருஷஸூக்தத்தால் புஷ்பங்களையாவது, ஜலத்தையாவது கொடுக்கின்ருனே, அவனுல் சராசரங்களுடன் கூடிய இம்மூன்றுலகும் பூஜிக்கப்பட்டதாகும். பிறகு ப்ரதக்ஷிணம் செய்து ஏகாக்ரனுய் ஜபம் செய்ய வேண்டும். 'ஜிதம்தே புண்டரீகாக்ஷ + பூர்வஜ' என்ற ஸ்துதியால் ஸ்துதித்து, ப்ரதி தினமும் 'உமக்குக் கிங்கரனுய் இருக்கின்றேன்' என்று தன்னைத் தேவனுக்கு ஸமர்ப்பிக்க வேண்டும்.

बोधायनोऽपि — अथातो महापुरुषस्याहरहः परिचर्याविधिं व्याख्यास्यामः। स्नातः शुचिश्शुचौ समे देशे गोमयेनोपलिप्य प्रतिकृतिं कृत्वाऽक्षतपुष्पैर्यथालाभमर्चयेत्, सहपुष्पोदकेन महापुरुषमावाहयेत्

ओं भूः पुरुषमावाहयामि, ओं भुवः पुरुषमावाहयमि, ओं सुवः पुरुषमावाहयामि, ओं भूर्भुवः सुवः पुरुषमावाहयामि, आयातु भगवान् महापुरुष इति । अथ स्वागतेनाभिनन्दति स्वागतं भगवते महापुरुषाय एतदासनमुपक्लृप्तमत्रास्यतां भगवान्महापुरुषः इत्यत्र कूर्चं ददाति भगवतोऽयं कूर्चो दर्भमयस्त्रिवृद्धरितस्तं जुषस्वेत्यत्र स्थानानि कल्पयति अग्रतः शङ्खाय कल्पयामि । दक्षिणतो गदायै कल्पयामि । वनमालायै कल्पयामि । पश्चिमतः श्रीवत्साय कल्पयामि । गरुत्मते कल्पयामि । सरस्वत्यै कल्पयामि । तुष्ट्यै कल्पयामि । अथ सावित्र्या पात्रमभिमन्त्र्य प्रक्षाल्य त्रिरपः परिषिच्य तिरः पवित्र मप आनीय पुनस्तेनैवाप्स्वभिमन्त्र्य सह पवित्रेणादित्यं दर्शयेदोमित्यातमितोः प्राणमायच्छेत्त्रीणि पदा विचक्रम इति पाद्यं दद्यादथ व्याहृतिभिर्निर्माल्यमपोह्योत्तरतो विष्वक्सेनाय नम इति इदं विष्णुर्विचक्रम इत्यर्घ्यं दद्यादथैनं स्नापयत्यापोहिष्ठामयोभुव इति । ब्रह्मजज्ञानं वामदेव्यर्चा यजुः पवित्रेणेत्येताभिः षड्भिः स्नापयित्वाऽथाद्भिस्तर्पयति केशवं नारायणं माधवं गोविन्दं विष्णुं मधुसूदनं त्रिविक्रमं वामनं श्रीधरं हृषीकेशं पद्मनाभं दामोदरं तर्पयित्वा व्याहृतिभिः प्रदक्षिणमुदकुम्भं परिषिच्य प्रणवेन वासो ददाति सावित्र्या यज्ञोपवीत माचमनीयमुदकेनेदं विष्णुर्विचक्रम इति गन्धं दद्यात् तद्विष्णोः परमं पदमिति पुष्पमिरावतीत्यक्षतं सावित्र्या धूपमुद्दीप्यस्वेति दीपं देवस्यत्वेति महापुरुषाय जुष्टं निवेदयामीति नैवेद्यमथ केशवादिनामभिर्द्वादश पुष्पाणि दद्यात् । शङ्खाय नमश्चक्राय नमो गदायै नमो वनमालायै नमः श्रीवत्साय नमो गरुत्मते नमः श्रियै नमः सरस्वत्यै नमः पुष्ट्यै नमस्तुष्ट्यै नमः इति । अवशिष्टैर्गन्धमाल्यैर्ब्राह्मणानलङ्कृत्याथैनमृग्यजुःसामाथर्वभिः स्तुवन् विष्णुसूक्तं जपित्वा पुरुषसूक्तं चान्यांश्च वैष्णवान् मन्त्रानित्यके । ओं

भूर्भुवः सुवरों भगवते महापुरुषाय चरुमुद्वासयामीति चरुमुद्वास्य व्याहृतीभिः पुरुषमुद्वासयेत् ओं भूः पुरुषमुद्वासयामि । ओं भुवः पुरुषमुद्वासयामि । ओं सुवः पुरुषमुद्वासयामि । ओं भूर्भुवः सुवः पुरुषमुद्वासयामि इत्युद्वास्य प्रयातु भगवान् महापुरुषोऽनेन हविषा तृप्तो हरिः पुनरागमनाय पुनः सन्दर्शनाय च इति । प्रतिमा-स्थानेष्वावाहनो द्वासनवर्जं सर्वं समानं महत् स्वस्त्ययनमित्याचक्षते महत्स्वस्त्ययनमित्याह भगवान् बोधायनः इति ।

**போதாயனரும்:-** இனி மஹாபுருஷனின் ப்ரதிதின பூஜா விதியைச் சொல்லுகிறேன். ஸ்நானம் செய்து சுத்தனாய், சுத்தமாயும் ஸமமாயுள்ள ப்ரதேசத்தில், கோமயத்தால் மெழுகி மூர்த்தியைக் கல்பித்து அக்ஷத புஷ்பங்களால் கிடைத்த மட்டில் அர்ச்சிக்க வேண்டும். புஷ்பம், ஜலம் இவைகளால் மஹாபுருஷனை ஆவாஹனம் செய்ய வேண்டும். 'ஓம்பூ: புருஷ மாவாஹயாமி + மஹாபுருஷ:, என்ற மந்த்ரத்தால். பிறகு ஸ்வாகதம் செய்து, ஆஸனத்திற்காகக் கூர்ச்சத்தை ஸமர்ப்பித்து, சங்காதிகளுக்கு ஸ்தானங்களைக் கல்பித்து, பாத்யதானம், நிர்மால்ய விஸர்ஜனம், அர்க்யதானம், ஸ்நானம், கேசவாதி நாமங்களால் தர்ப்பணம் இவைகளைச் செய்து, வஸ்த்ரம், உபவீதம், கந்தம், புஷ்பம், அக்ஷதம், தூபம், தீபம், நைவேத்யம் இவைகளை ஸமர்ப்பித்து, கேசவாதிகளான பன்னிரண்டு நாமங்களால் பன்னிரண்டு புஷ்பங்களை ஸமர்ப்பிக்க வேண்டும். 'சங்காய நம:' என்பது முதலிய மந்த்ரங்களால் அர்ச்சித்து மீதியுள்ள கந்த புஷ்பங்களால் ப்ராம்ஹணர்களை அலங்கரித்து, பிறகு ருக், யஜுஸ், ஸாம, அதர்வ வேதங்களால் ஸ்துதித்து, விஷ்ணுஸூக்தம் முதலியதை ஜபித்து, சருவை உத்வாஸனம் செய்து, வ்யாஹ்ருதிகளால் மஹாபுருஷனையும் உத்வாஸனம் செய்ய வேண்டும்.

ப்ரதிமைகளில் ஆவாஹனமும் உத்வாஸனமும் இல்லை. மற்றதெல்லாம் ஸமானம், இது மிகக்ஷேமப்ரதம், என்றார் போதாயனர். (மந்த்ரங்கள் அங்கங்கு மூலத்திலுள்ளதால் இங்கே குறிக்கவில்லை)

आश्वमेधिके — शृणु पाण्डव मत्सर्वमर्चनाक्रममात्मनः । स्थण्डिले पद्मकं कृत्वा चाष्टपत्रं सकर्णिकम् ॥ मल्लिङ्गैर्वैदिकैर्मन्त्रैर्मम सूक्तेन वा पुनः । अष्टाक्षरविधानेन ह्यथवा द्वादशाक्षरैः ॥ स्थापितं मां ततस्तस्मिन्नर्चयेत् तु विचक्षणः । पुरुषं च ततः सत्यमच्युतं च युधिष्ठिर । अनिरुद्धं च मां प्राहुः वैखानसविदो जनाः । अन्ये त्वेवं विजानन्ति मां राजन् पाञ्चरात्रिकाः ॥ वासुदेवं च राजेन्द्र सङ्कर्षणमथापि वा । प्रद्युम्नं चानिरुद्धं च चतुर्मूर्तिं प्रचक्षते ॥ स्वाधिकारानुरूपेण मामेवं चार्चयेद्बुधः इति ॥

ஆச்வமேதிகத்தில்:- ஓ பாண்டவனே! எனது பூஜாக்ரமத்தை முழுவதும் என்னிடமிருந்து கேட்பாயாக. ஸ்தண்டிலத்தில் எட்டு இதழ்களும் கர்ணிகையுமுடைய பத்மத்தைச் செய்து, அதில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள என்னை, என்னைக் குறிக்கும் வைதிக மந்த்ரங்களாலாவது, எனது ஸூக்தத்தாலாவது, அஷ்டாக்ஷரத்தினுலாவது, த்வாதசாக்ஷரத்தினுலாவது வித்வான் அர்ச்சிக்க வேண்டும். வைகானஸ சாஸ்த்ரக்ஞர்கள், புருஷன், ஸத்யன், அச்யுதன், அனிருத்தன், விஷ்ணு என்று சொல்லுகின்றனர். மற்றப் பாஞ்சராத்ரிகர்களோவெனில், வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன், என்று நான்கு ஸ்வரூபமுள்ளவனுய் என்னைச் சொல்லுகின்றனர். அறிந்தவன் தனது அதிகாரத்திற்கு அனுகுணமாய் என்னை அர்சிக்க வேண்டும்.

अपरार्के — अष्टाक्षरेण देवेशं नारसिंहमनामयम् । गन्धपुष्पादिभिर्नित्यमर्चयेदच्युतं नरः ॥ अष्टाक्षरस्य मन्त्रस्य

ऋषिर्नारायणः स्मृतः । छन्दश्च देवी गायत्री परमात्मा च देवता ।। गन्धपुष्पादि सकलमनेनैव निवेदयेत् । अनेनैवार्चितो विष्णुः प्रीतो भवति तत्क्षणात् ।। किं तस्य बहुभिर्मन्त्रैः किं तस्य बहुभिर्मखैः । ओं नमो नारायणायेति मन्त्रः सर्वार्थसाधकः इति ।।

*அபரார்க்கத்தில்:-* தேவேசனும், அழிவற்றவனுமான நரஸிம்ஹனை, அஷ்டாக்ஷர மந்த்ரத்தால் கந்த புஷ்பாதிகளால் ப்ரதி தினமும் பூஜிக்க வேண்டும். அஷ்டாக்ஷர மந்த்ரத்திற்கு நாராயணர் ருஷி. காயத்ரீ சந்தஸ். பரமாத்மா தேவதை. கந்தம், புஷ்பம் முதலிய எல்லாவற்றையும் இந்த மந்த்ரத்தாலேயே ஸமர்ப்பிக்க வேண்டும். இதனுல் அர்ச்சிக்கப்பட்டால் விஷ்ணு அப்பொழுதே ப்ரீதியுடையவராகிறுர். 'ஓம் நமோ நாராயணுய' என்ற மந்த்ரம் எல்லாப் புருஷார்த்தங்களையும் ஸாதிக்கக் கூடியது. இந்த மந்த்ரம் உடையவனுக்கு அநேக மந்த்ரங்களாலும், அநேக யாகங்களாலும் என்ன ப்ரயோஜனம்?

उपचारफलान्याह पुलस्त्यः— दध्यादीनां विकाराणां क्षीरतः सम्भवो यथा । तथैवाशेषकामानां क्षीरस्नापनतो हरेः ।। स्नाप्य दध्ना सकृद्विष्णुं निर्मलं प्रियदर्शनम् । विष्णुलोकमवाप्नोति सेव्यमानः सुरोत्तमैः ।। गवां शतस्य विप्राणां यद्दत्तस्य फलं भवेत् । घृतप्रस्थेन तद्विष्णोः भवेत् स्नानान्न संशयः ।। अयने चोत्तरे प्राप्ते यः स्नापयति केशवम् । घृतप्रस्थेन पापानि सकलानि व्यपोहति इति ।।

உபசாரங்களின் பலத்தைச் சொல்லுகிறுர், *புலஸ்த்யர்:-* பாலிலிருந்து தயிர் முதலியவை உண்டாவது போல், விஷ்ணுவுக்குச் செய்யும் க்ஷீரஸ்நாபனத்திலிருந்து ஸகல காமங்களும் உண்டாகின்றன. நிர்மலமாயும் அழகியதுமான விஷ்ணு பிம்பத்தை தயிரால் ஒரு முறை

ஸ்நானம் செய்விப்பவன், தேவோத்தமர்களால் ஸேவிக்கப்பட்டவனுய் விஷ்ணு லோகத்தை அடைகிருன். ப்ராம்ஹணர்களுக்கு நூறு பசுக்களைத் தானம் செய்வதாலுண்டாகும் பலன், ஒரு படி நெய்யினுல் விஷ்ணு பிம்பத்தை ஸ்நானம் செய்விப்பதால் உண்டாகும். ஸம்சயமில்லை. உத்தராயண காலத்தில் ஒரு படி நெய்யினுல் விஷ்ணுவுக்கு ஸ்நானத்தை எவன் செய்விக்கின்ருனே அவன் ஸகல பாபங்களையும் போக்கிக் கொள்கிருன்.

यमः — कपिलां विप्रमुख्याय दद्यात्यनुदिनं हि यः । घृत स्नानं च देवस्य विष्णोः काले समं हि तत् ॥ देवे मलापनयनं देवागारसमूहनम् । स्नापनं सर्वदेवानां गोप्रदानसमं स्मृतम् इति ॥ स्मृतिरत्ने – कुङ्कुमागरु श्रीकण्ठकर्दमैरच्युताकृतिम् । आलिप्य भक्त्या देवेशं कल्पकोटिं वसेद्दिवि ॥ गन्धेभ्यश्चन्दनं पुण्यं चन्दनादगरुर्वरः । कृष्णागरुस्ततः श्रेष्ठः कुङ्कुमं तु ततो वरम् इति ॥

யமன்:- எவன் ப்ரதிதினமும் சிறந்த ப்ராம்ஹணனுக்குக் காராம் பசுவைத் தானம் செய்கின்ருனே, எவன் விஷ்ணுவுக்குக் காலத்தில் நெய்யினுல் ஸ்நானம் செய்விக்கின்ருனே, அவ்விருவரின் புண்யம் ஸமமாகும். தேவதாபிம்பத்தின் அழுக்கைப் போக்குவதும், தேவாலயத்தைச் சுத்தி செய்வதும், எல்லாத் தேவர்களையும் ஸ்நானம் செய்விப்பதும் கோதானத்திற்குச் சமமாகும். ஸ்ம்ருதிரத்னத்தில்:- குங்குமம், அகில், கஸ்தூரி, சந்தனம் இவைகளால் விஷ்ணு பிம்பத்தைப் பக்தியுடன் பூசுகின்றவன், ஸ்வர்க்கத்தில் கோடிகல்பகாலம் வரையில் வஸிப்பான். வாஸனை வஸ்துக்களுள் சந்தனம் புண்யமானது. சந்தனத்திலும் அகில் புண்யமானது. அதினும் காரகில் புண்யமானது. அதினும் குங்குமப்பூ புண்யமானது.

आचारसारे — मालती मल्लिका चैव यूथिका चातिमुक्तकम्। पाटली करवीरं च जपा चावन्तमेव च ।। कुटजं श्री(त)करं चैव कर्णिकारं कुरण्डकम्। पुन्नागं चम्पकं कुन्दं बाणं षट्सरमल्लिका ।। अशोकं तिलकं चैव नन्द्यावर्तं तथैव च। अमी पुष्पप्रकाराश्च क्लृप्ताः केशवपूजने ।। बिल्वपत्रं शमीपत्रं भृङ्गराजस्य पत्रकम्। तुलसी कृष्णतुलसीपत्रं वासवमेव च।। केतकीपुष्पपत्रं च सद्यस्तुष्टिकरं हरेः। श्वेतरक्तसरोजानि नीलरक्ते तथोत्पले । सितोत्पलं च कृष्णस्य दयितानि सदा हरेः ।। नीपार्जुनकदंबैश्च वकुलैश्च सुगन्धिभिः । कल्हारैर्विष्णुमभ्यर्च्य विष्णुलोके महीयते ।। काञ्चनैः कुसुमैर्विष्णुं मणिविद्रुमनिर्मितैः। पूजयन् वस्त्रपुष्पाद्यैर्नरो मुक्तिमवाप्नुयात् इति।

ஆசாரஸாரத்தில்:- ஜாதிமல்லிகை, மல்லிகை, காட்டுமல்லிகை, காட்டுமுல்லை, பாதிரி, அரளி, செம்பருத்தி, ஜவந்தி, மலை மல்லிகை, தகரம், கொங்கிலவு, குறிஞ்சி, புன்னை, சண்பகம், குருந்தை, பாணம், ஆறுஸர மல்லிகை, அசோகம், மஞ்சாடி, நந்த்யாவர்த்தம் இவைகளின் புஷ்பங்களும், பில்வம், வன்னி, கரிசாலை, துளஸீ, கருந்துளஸீ, பச்சிலை, தாழைப்பூ இவைகளின் பத்ரங்களும் விஷ்ணுவுக்கு ப்ரீதி கரங்களாம். வெண்மை, சிவப்பு நிறமுள்ள தாமரைகளும், கறுப்பு, சிவப்பு நிறமுள்ள உத்பலங்களும், வெளுப்பு நிறமான உத்பலமும் விஷ்ணுவுக்கு ப்ரியங்களாம். நீர்க்கடம்பு, மருதை, கடம்பு, மகிழ், செங்கழுனீர் இவைகளின் புஷ்பங்களால் அர்ச்சித்தால் விஷ்ணுலோகத்தில் சிறப்புறுவான். தங்கப் புஷ்பங்களாலும், ரத்னம், பவழம் இவைகளாற் செய்த புஷ்பங்களாலும், வஸ்த்ரம், புஷ்பம் முதலியதாலும் அர்ச்சிப்பவன் முக்தியை அடைவான்.

पुलस्त्यः — पुष्पजातिषु सर्वासु सौवर्णं पुष्पमुत्तमम् । त्रुटिमात्रप्रदानात्तु शक्रार्द्धासनमाप्नुयात् इति । मौद्गल्यः – सकृदभ्यर्च्य गोविन्दं बिल्वपत्रेण मानवः । मुक्तिगामी निरातङ्कः कृष्णस्यानुचरो भवेत् । सुगन्धितुलसीपत्रैः प्रतिमायाः समन्ततः । निश्छिद्र-माचरेद्यस्तु सोऽनन्तफलमाप्नुयात् इति ॥ धर्मसारे – सालग्राम-शिलामूर्ध्नि तुलसीपत्रपातनम् । कर्मनिर्मूलनायालमेकादश्याम-भोजनम् ॥ न विप्रसदृशं पात्रं न दानं सुरभीसमम् । गङ्गाया न समं तीर्थं न पत्रं तुलसीसमम् इति ॥

புலஸ்த்யர்:- புஷ்பஜாதிகள் எல்லாவற்றிலும், ஸ்வர்ணத்தால் செய்த புஷ்பம் சிறந்தது. ஸ்வல்ப ஸ்வர்ணத்தைக் கொடுத்தாலும் இந்த்ரனின் பாதி ஆஸனத்தை அடைவான். மௌத்கல்யர்:- மனிதன் பில்வ பத்ரங்களால் ஒரு முறை கோவிந்தனை அர்ச்சித்தாலும், முக்தியை அடைந்து துக்கமற்றவனாய் விஷ்ணுவுக்கு தாஸனாகிறான். நல்ல வாஸனையுள்ள துளஸீ பத்ரங்களால் விஷ்ணு பிம்பத்தின் நான்கு புறத்திலும் இவைவெவெளியில்லாமல் அர்ச்சிப்பவன் முடிவில்லாத பலனை அடைவான். தர்மஸாரத்தில்:- ஸாளக்ராம சிலையின் சிரஸ்ஸில் துளஸியின் இலையை ஸமர்ப்பிப்பதும், ஏகாதசியில் உபவாஸமும், கர்மங்களை வேருடனகற்றப் போதுமானது. ப்ராம்ஹணனுக்குச் சமமான தான பாத்ரம் (தானத்திற்குரியவன்) இல்லை. கோதானத்திற்குச் சமமான தானமில்லை. கங்கைக்குச் சமமான தீர்த்தமில்லை. துளஸிக்குச் சமமான இலையுமில்லை.

चन्द्रिकायाम् – दश दत्वा सुवर्णानि यत्फलं लभते नरः । तत्फलं लभते विष्णोः द्रोणपुष्पप्रदानतः ॥ बिल्वपत्रसहस्राद्धि वकुलं पुष्पमुत्तमम् । तस्माद्वकुलपुष्पाद्धि नन्द्यावर्तं विशिष्यते ॥ नन्द्यावर्तसहस्राद्धि करवीरं विशिष्यते । सर्वैर्मनोरमैः पुष्पैः जातिपुष्पं विशिष्यते ॥ वर्णानां तु यथा विप्रस्तीर्थानां जाह्नवी यथा । सुराणां च

यथा विष्णुः कल्हारकुसुमं तथा ।। सितरक्तैर्महापुण्यैः कुसुमैः करवीरजैः । अर्चयित्वाऽच्युतं याति यत्रास्ते गरुडध्वजः ।। गन्धाढ्यैर्विमलै रम्यैः कुसुमैः कुन्दकोद्भवैः । भक्त्याऽभ्यर्च्य हृषीकेशं कुसुमैः केतकोद्भवैः ।। शुभ्राशुभ्रैर्महागन्धैः कुसुमैः पङ्कजोद्भवैः । अधोक्षजं समभ्यर्च्य नरो याति हरेः पदम् ।। अभ्यर्च्य केशवं पुष्पैः किंशुकैः सुमनोहरैः । समभ्यर्च्य हृषीकेशं जन्मदुःखाद्विमुच्यते ।। भक्त्या दत्तं फलं पत्रं पुष्पं दूर्वाङ्कुरं जलम् । अचिरात् प्रतिगृह्णाति भक्तिग्राह्यो हि केशवः ।। तुलसी कृष्णगौराख्या तयाऽभ्यर्च्य जनार्दनम् । नरो याति तनुं त्यक्त्वा वैष्णवीं शाश्वतीं गतिम् ।। एवं शुभैः सदा पुष्पैः पूज्यः सर्वैर्जनार्दनः । निषिद्धैर्दुःखदैर्देवं नार्चयेत कदाचन । न शुष्कैः पूजयेद्देवं कुसुमैर्न महीगतैः । न विशीर्णदलैः शिष्टैः नाशुभैर्नाविकासिभिः इति ।।

சந்த்ரிகையில்:- பத்து ஸுவர்ணங்களை (80-குன்றிமணி இடை ஒரு ஸுவர்ணம்) தானம் செய்தால் எந்தப் பலனோ அந்தப் பலனை விஷ்ணுவுக்குத் தும்பைப்பூவை ஸமர்ப்பிப்பதால் அடைவான். ஆயிரம் பில்வ தளத்தைவிட ஒரு வகுள (மகிழம்) புஷ்பம் சிறந்தது. ஆயிரம் வகுள புஷ்பத்தைவிட ஒரு நந்த்யாவர்த்தம் சிறந்தது. ஆயிரம் நந்த்யாவர்த்த புஷ்பத்தைவிட ஒரு அரளிப் புஷ்பம் சிறந்தது. மனதிற்கினிதான எல்லா புஷ்பங்களிலும் ஜாதி புஷ்பம் சிறந்தது. வர்ணங்களுள் ப்ராம்ஹணன் போலும், தீர்த்தங்களுள் கங்கை போலும், தேவர்களுள் விஷ்ணு போலும், புஷ்பங்களுள் செங்கழுனீர் புஷ்பம் சிறந்ததாகும். வெண்மை, சிவப்பு நிறமுள்ள அரளிப் புஷ்பங்களால் அச்யுதனை அர்சித்தால், கருடத்வஜனிருக்குமிடம் செல்லுகிறான். வாஸனையுள்ளதும், அழகியதுமாகிய குந்த புஷ்பங்களாலும், தாழையின் பூக்களாலும், வெளுப்பு, கறுப்பு நிறமுள்ள தாமரைப் பூக்களாலும், அதோக்ஷஜனை அர்சித்தால்

ஹரியின் உலகத்தை அடைவான். அழகிய புரசின் புஷ்பங்களால் விஷ்ணுவைப் பூஜித்தால், மனிதன் பிறப்பு துக்கத்தை அடையான். பக்தியுடன் கொடுக்கப்பட்டது, பழம், இலை, புஷ்பம், அறுகு, ஜலம் எதுவாயினும், அதைக் கேசவன் உடனே பெற்றுக் கொள்ளுகிறான். அவன் பக்தியினால் வசப்படுத்தக்கூடியவனல்லவா? கருந்துளஸி, வெண்துளஸியென இருவகைத் துளஸியால் ஜனார்த்தனனை அர்ச்சித்தால், மனிதன் உடலை விட்டு சாச்வதமான விஷ்ணுலோகத்தை அடைவான். எவ்விதமான சுபமான எல்லாப் புஷ்பங்களாலும் விஷ்ணுவைப் பூஜிக்கலாம். நிஷித்தமாகியதும் துக்கத்தைக் கொடுப்பதுமான புஷ்பங்களால் ஒருபொழுதும் தேவனை அர்ச்சிக்கக் கூடாது. உலர்ந்ததும், தரையில் விழுந்ததும் இதழ்கள் சிதறியதும், மற்றொரு தேவதையைப் பூஜித்து மீதியுள்ளதும், அசுபங்களும், மலராதவைகளுமான புஷ்பங்களால் பூஜிக்கக் கூடாது.

रत्नावल्याम् – मुकुलैर्नार्चयेद्देवं चम्पकैर्जलजैर्विना । न कण्टकिभवं पुष्पं दद्याच्छुक्लमृते सदा ।। येऽर्कपुष्पैस्त्रिलोकेश मर्चयन्ति जनार्दनम् । तेभ्यः क्रुद्धोऽक्षयं दुःखं क्रोधाद्विष्णुः प्रयच्छति ।। उन्मत्तकेन ये मूढाः पूजयन्ति त्रिविक्रमम् । उन्मादं दारुणं तेषां ददाति गरुडध्वजः इति ।। विष्णुः – न नक्तं गृहीतोदकेन देवतार्चनं कुर्याच्चन्दन कुङ्कमकर्पूरमृगमदजातीफलवर्जमनुलेपनं न दद्यान्मणिसुवर्णमुक्ताफलविद्रुमरजतवर्जं प्रतिरूपकमलङ्कारं न कुर्याच्च चासौ नीलं रक्तं नागन्धि पुष्पं नोग्रगन्धि न कण्टकिजं दद्यात्, कण्टकिजमपि शुक्लं सुगन्धि रक्तमपि कुङ्कुमजं दद्यात् इति ।।

ரத்னாவளியில்:- சம்பகம், தாமரை தவிர்த்து, மற்ற மொக்குகளால் தேவனைப் பூஜிக்கக் கூடாது. முள்ளுள்ள மரத்திலுண்டாகும் புஷ்பத்தை ஸமர்ப்பிக்கக் கூடாது. அது வெண்ணிறமானால் ஸமர்ப்பிக்கலாம். மூன்று லகுக்குமீசனான விஷ்ணுவை எருக்கின் பூக்களால் எவர்

பூஜிக்கின்றனரோ, அவர்களுக்குக் கோபத்தால் அக்ஷயமான துக்கத்தை விஷ்ணு கொடுக்கிறார். எவர்கள் ஊமத்தையின் பூக்களால் த்ரிவிக்ரமனைப் பூஜிக்கின்றனரோ, அவர்களுக்குப் பயங்கரமான உன்மாத தோஷத்தைக் கருடத்வஜன் கொடுக்கிறான். விஷ்ணு:- இரவில் க்ரஹித்து வைக்கப்பட்ட ஜலத்தினால் தேவபூஜையைச் செய்யக் கூடாது. சந்தனம், குங்குமப்பூ, கர்ப்பூரம், கஸ்தூரீ, ஜாதிக்காய் இவைகளைத் தவிர்த்து மற்ற அனுலேபனத்தை, (பூசிக்கொள்ளும் வஸ்து) கொடுக்கக் கூடாது. ரத்னம், தங்கம், முத்து, பவழம், வெள்ளி இவை தவிர்த்து மற்ற ஆபரணங்களைக் கொடுக்கக் கூடாது. கறுப்பு, சிவப்பு நிறமுள்ளதும், வாஸனை இல்லாததும் வெறுப்பான வாஸனையுள்ளதும், முள்மரத்தில் உண்டாகியதுமான புஷ்பத்தை ஸமர்ப்பிக்கக் கூடாது. முள்மரத்தினுடையதாயினும், வெண்ணிறமாயும், நல்ல வாஸனையுள்ளதுமாயின் ஸமர்ப்பிக்கலாம். சிவப்பாயினும் குங்குமப்பூவை ஸமர்ப்பிக்கலாம்.

सारसमुच्चये – गिरिकर्णिकया विष्णुं येऽर्चयन्त्यबुधा नराः । तेषां कुलक्षयं घोरं कुरुते मधुसूदनः ॥ गुल्गुलुं गन्धकं चैव देवदारुं सरूषकम् । सर्जारसं जातिफलं धूपयेद्गोघृतं हरेः ॥ न धूपयेत् जीवजातैर्नाहविष्यं निवेदयेत् । घृततैलैर्विना किञ्चिद्दीपार्थं न समाहरेत् ॥ प्रज्वाल्य देवदेवस्य कर्पूरेण तु दीपकम् । अश्वमेधमवाप्नोति कुलं चैव समुद्धरेत् इति ॥

ஸாரஸமுச்சயத்தில்:- அறியாத எந்த மனிதர் விஷ்ணுக்ராந்தையினால் விஷ்ணுவைப் பூஜிக்கின்றனரோ, அவர்கட்கு, கோரமான குல நாசத்தைக் கொடுக்கிறான் மதுஸூதனன். குங்கிலியம், கந்தகம், தேவதாரு, ஸருஷகம், ஸர்ஜரஸம், ஜாதிக்காய், பசுவின் நெய் இவைகளால் விஷ்ணுவுக்குத் தூபம் ஸமர்ப்பிக்க வேண்டும். ப்ராணிகளிடம் உண்டாகிய வஸ்துக்களால் தூபம் கூடாது. ஹவிஸ்ஸுக்கு அர்ஹமல்லாததை

நிவேதனம் செய்யக் கூடாது. நெய், எண்ணெய் தவிர மற்றதைத் தீபத்திற்காக உபயோகிக்கக் கூடாது. தேவதேவனான விஷ்ணுவுக்குக் கற்பூரத்தால் தீபத்தை ஸமர்ப்பித்தால் அச்வமேத பலத்தை அடைவான். தன் குலத்தையும் எழும்பச்செய்வான்.

संवर्तः – देवागारे द्विजानां च दीपं दत्वा चतुष्पथे। मेधावी ज्ञानसंपन्नश्चक्षुष्मान् जायते नरः इति ।। पाद्मे – नैवेद्यपात्रं वक्ष्यामि केशवाय महात्मने। हैरण्यं राजतं कांस्यं ताम्रं मृन्मयमेव वा ।। पालाशं पद्मपत्रं वा पात्रं विष्णोरतिप्रियम्।। हविः शाल्योदनं दिव्य माज्ययुक्तं सशर्करम् । नैवेद्यं देवदेवाय यावकं पायसं तथा ।। संस्कृतं चान्नमाज्याढ्यं दधिक्षीरमधूनि च। फलमूल्यन्यञ्जनानि मोदकं च निवेदयेत्। अर्घ्यमाचमनं चैव हविस्ताम्बूलमेव च। दक्षिणे देवदेवस्य हस्ते दद्याद्विचक्षणः। हविर्दानं त्रिकालं तु उत्तमोत्तममुच्यते। द्वयोश्च मध्यमं प्रोक्तं एककालेऽधमं हविः।

ஸம்வர்த்தர்:- தேவாலயத்திலும், ப்ராம்ஹணர்கள் க்ருஹத்திலும், நாற்சந்தியிலும் தீபத்தைக் கொடுத்தால், மனிதன், மேதாவியும், ஞானமுடையவனும், நல்ல கண்ணுள்ளவனுமாக ஆகிறான். பாத்மத்தில்:- மஹாத்மாவான கேசவனின் நைவேத்ய பாத்ரத்தைச் சொல்லுகிறேன். பொன், வெள்ளி, வெண்கலம், தாம்ரம், மண் இவைகளில் ஒன்றினால் செய்யப்பட்ட பாத்ரமாவது, புரசு, தாமரை இவைகளின் இலையாவது விஷ்ணுவுக்கு ப்ரியமான போஜன பாத்ரமாகும். நெல்லரிசியினால் பக்வமான அன்னம், நெய் சர்க்கரைகளுடன் கூடியது தேவனின் நிவேதனத்திற்கு உரியதாகும். அவ்விதம் யவையன்னம், பாயஸம், பால், தயிர் முதலியதுடன் சேர்க்கப்பட்டதும், நெய் மிகுந்துள்ளதுமான அன்னம், தனியே, தயிர், பால், தேன், பழம், வேர், வ்யஞ்ஜனம், மோதகம் இவைகளையும் நிவேதனம் செய்ய வேண்டும். அர்க்யம், ஆசமனம், ஹவிஸ், தாம்பூலம் இவைகளைத்

தேவனின் வலது கையில் அறிந்தவன் ஸமர்ப்பிக்க வேண்டும். மூன்று காலங்களிலும் நிவேதனம் செய்வது மிக உத்தமம், இரண்டு காலங்களில் செய்வது மத்யமம். ஒரு காலத்தில் செய்வது அதமமாம்.

रत्नावल्याम् – नैवेद्यस्य त्वलाभे तु फलानि तु निवेदयेत्। फलानामप्यलाभे तु तृणगुल्मौषधीरपि । औषधीनामलाभे तु तोयान्यपि निवेदयेत्। तदलाभे तु सर्वत्र मानसं प्रवरं स्मृतम् इति ।। व्यासः – गाण्डूषिकं जलं दद्यात् दद्यादाचमनं ततः। हस्तवासं सकर्पूरं मकुटं भूषणानि च ।। आदर्शयेत् तथाऽऽदर्शं कल्पयेच्छत्रचामरे। महानीराजनं श्रीमन्मङ्गलेशाय कल्पयेत्।। कर्पूरं तुलसीपत्रं ताम्बूलं च समर्पयेत् ।। गन्धकर्पूरसंयुक्तं ताम्बूलं यो निवेदयेत् । विष्णवे भक्तियुक्तः स विष्णुलोके महीयते ।। विष्णोर्विमानं यः कुर्यात् सकृद्भक्त्या प्रदक्षिणम्। अश्वमेधसहस्रस्य फलमाप्नोति मानवः ।। प्रणम्य दण्डवद्भूमौ नमस्कारेण योऽर्चयेत्। स यां गतिमवाप्नोति न तां क्रतुशतैरपि ।। दोर्भ्यां पद्भ्यां च जानुभ्यां उरसा शिरसा दृशा। मनसा वचसा चेति प्रणामोऽष्टाङ्ग ईरितः ।। जानुभ्यां वै बाहुभ्यां शिरसा वचसा धिया। पञ्चाङ्गकः प्रणामः स्यात् पूजासु प्रवराविमौ इति ।।

ரத்னாவளியில்:- நிவேதனத்திற்கு ஹவிஸ் கிடைக்காவிடில் பழங்களை நிவேதிக்கலாம். பழங்களும் கிடைக்காவிடில் புல் புண்டு ஓஷதிகள் இவைகளையாவது நிவேதிக்கலாம், ஓஷதிகளும் கிடைக்காவிடில் ஜலத்தையாவது நிவேதிக்கலாம். அதுவும் கிடைக்காவிடில் எப்பொழுதும் மனதினால் கல்பிக்கப்பட்ட நைவேத்யம் சிறந்ததெனச் சொல்லப்பட்டுள்ளது. வ்யாஸர்:- கண்டூஷத்திற்காகவும் ஜலத்தை ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு ஆசமனத்தையும் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு கைகளுக்கு வாஸனைதரும் வஸ்துவைக் கற்பூரத்துடனும், கிரீடம், ஆபரணங்கள்,

கண்ணாடி, குடை, சாமரம், மஹாநீராஜனம் இவைகளையும் மங்களேசனுன பகவானுக்கு ஸமர்ப்பிக்க வேண்டும். கற்பூரம், துளஸீ, தாம்பூலம் இவைகளையும் ஸமர்ப்பிக்க வேண்டும். கந்தத்துடனும் கற்பூரத்துடனும் கூடிய தாம்பூலத்தைத் தேவனுக்குப் பக்தியுடன் நிவேதனம் செய்பவன் விஷ்ணுலோகத்தில் சிறப்பையடைகிறான். எவன் விஷ்ணுவின் விமானத்தைப் பக்தியுடன் ஒருமுறையாவது ப்ரதக்ஷிணம் செய்வானோ அவன் ஆயிரம் அச்வமேதங்களின் பலனையடைகிறான். பூமியில் கழிபோல் நமஸ்கரித்து அர்ச்சிப்பவன் அடையும் கதியை நூறுயாகங்களாலும் அடையமுடியாது. கைகள், கால்கள், முழங்கால்கள், மார்பு, தலை, கண், மனது, வாக்கு இவ்வெட்டு அங்கங்களாலும் செய்யப்படும் நமஸ்காரம் ஸாஷ்டாங்க நமஸ்காரம் எனப்பட்டது. முழங்கால், கைகள், தலை, வாக்கு, மனது இவ்வைந்துகளாலும் செய்யப்படும் நமஸ்காரம் பஞ்சாங்க நமஸ்காரம் எனப்பட்டது. இவ்விரண்டு நமஸ்காரங்களும் பூஜைகளிற் சிறந்ததாகும்.

चन्द्रिकायाम् – उरसा मनसा चैव शिरसा च कपोलयोः । पद्भ्यां कराभ्यां जानुभ्यां प्रणामोऽष्टाङ्ग उच्यते ॥ कूर्मवच्चतुरः पादान् शिरश्चाहृत्य पञ्चमम् । मनोबुद्ध्यभिमानेन पञ्चाङ्गः परिकीर्तितः ॥ स्तुवन् देवं नमस्कुर्यात् प्रसीद भगवन्निति ॥ एकहस्तप्रणामश्च एकं चापि प्रदक्षिणम् । अकाले दर्शनं विष्णोः हन्ति पुण्यं पुरातनम् ॥ एकोऽपि कृष्णस्य कृतः प्रणामो दशाश्वमेधावभृथेन तुल्यः । दशाश्वमेधी पुनरेति जन्म कृष्णप्रणामो न पुनर्भवाय ॥ शङ्खमध्ये स्थितं तोयं भ्रामितं केशवोपरि । अङ्गलग्नं मनुष्याणां ब्रह्महत्यायुतं दहेत् ॥ शङ्खस्थं प्रोक्षयेद्देहं पुत्रमित्रपरिग्रहम् । इति ॥

*சந்த்ரிகையில்:-* மார்பு, மனது, தலை, கன்னங்கள் (இரண்டு), கால்கள், கைகள், முழங்கால்கள் இவ்வெட்டு அங்கங்களாலும் செய்யப்படும் நமஸ்காரம் ஸாஷ்டாங்க

நமஸ்காரம். ஆமைபோல் இரண்டு கைகள், இரண்டு கால்கள், தலை இவைகளைப் பூமியில் சேர்த்து, மனம், புத்தி, அபிமானம் (பக்தி) இவைகளுடன் செய்யப்படும் நமஸ்காரம் பஞ்சாங்க நமஸ்காரம் எனப்படும். ஓ பகவானே! அருளவேண்டும் என்று ஸ்துதிப்பவனாய் நமஸ்கரிக்க வேண்டும். ஒரு கையால் நமஸ்கரிப்பதும், ஒரு முறை ப்ரதக்ஷிணம் செய்வதும், அகாலத்தில் விஷ்ணுவைத் தர்சிப்பதும் முந்திய புண்யத்தைப் போக்கும். விஷ்ணுவை ஒரு முறை நமஸ்கரித்தாலும் அது பத்து அச்வமேதங்களின் அவப்ருதத்திற்குச் சமமாகும். பத்து அச்வமேதங்களின் அவப்ருதங்களை அனுஷ்டித்தவன் (அப்புண்யம் முடிந்த பிறகு) மறுபடி பிறப்பை அடைவான். க்ருஷ்ணனை நமஸ்கரித்தல் மறுபடி பிறப்பிற்கு ஆகாது. மோக்ஷத்திற்குக் காரணமாகின்றது. சங்கத்தின் நடுவிலுள்ளதும், கேசவனின் மேல் சுற்றப்பட்டதுமான ஜலம் மனிதரின் அங்கத்தைப் பற்றினால் பதினாயிரம் ப்ரம்ஹஹத்யா தோஷத்தைப் போக்கும். சங்கத்திலுள்ள ஜலத்தினால், தன் தேஹத்தையும், புத்ரன், மித்ரன், பார்யை இவர்களையும் ப்ரோக்ஷிக்க வேண்டும்.

व्यासः – देवदेव जगन्नाथ शङ्खचक्रगदाधर। देहि देव ममानुज्ञां भवत्तीर्थनिषेवणे । इत्यनुज्ञां ततो लब्ध्वा पिबेत्तीर्थमघापहम् ।। अकालमृत्युहरणं सर्वव्याधिविनाशनम् । विष्णोः पादोदकं तीर्थं शिरसा धारयाम्यहम् । इति मन्त्रं समुच्चार्य सर्वदुष्टग्रहापहम् । तुलसीमिश्रितं तीर्थं पिबेन्मूर्ध्नि च धारयेत् । सालग्रामशिलातोयमपीत्वा यस्तु मस्तके। प्रक्षेपणं प्रकुर्वीत ब्रह्महा स निगद्यते ।। विष्णोः पादोदकं पीतं कोटिहत्याघनाशनम् । तदेवाष्टगुणं पापं भूमौ बिन्दुनिपातनात् इति ।।

வ்யாஸர்:- ஓ தேவதேவ! ஜகந்நாத! சங்கசக்ரகதாதர! உமது தீர்த்தத்தைச் சேவிப்பதில் எனக்கு அனுக்ஞையளித்தருள வேண்டும் என்று ப்ரார்த்தித்து,

தேவனிடமிருந்து அனுக்ஞை பெற்று, தீர்த்தத்தைப் பானம் செய்ய வேண்டும். அகாலம்ருத்யுவை அபஹரிப்பதும், எல்லா வ்யாதிகளையுமகற்றுவதுமாகிய விஷ்ணு பாத தீர்த்தத்தைச் சிரத்தால் தரிக்கிறேன் என்ற மந்த்ரத்தை உச்சரித்து, ஸகலதுஷ்டக்ரஹ தோஷங்களை யகற்றுவதான, துளஸியுடன் கூடிய தீர்த்தத்தைப் பருக வேண்டும். சிரத்தாலும் தரிக்க வேண்டும். எவன், ஸாளக்ராம சிலா தீர்த்தத்தைப் பானம் செய்யாமல் சிரத்தில் ப்ரோக்ஷித்துக் கொள்கிருனே அவன் ப்ரம்ஹஹத்யை செய்தவன் எனப்படுகிருன். விஷ்ணுவின் பாதோதகம் பானம் செய்யப்பட்டால் கோடி ப்ரம்ஹஹத்யா தோஷத்தைப் போக்குவதாகும். அந்தத் தீர்த்தத்தின் ஒரு துளியைப் பூமியில் சிந்தினுல் அது முன்சொல்லிய புண்யத்தை விட எட்டு மடங்கு பாபத்தைக் கொடுப்பதாகும்.

मार्कण्डेयः – आम्रेक्षुखण्डताम्बूलचर्वणे सोमपानके । विष्ण्वङ्घ्रितोयपाने च नाद्यन्ताचमनं स्मृतम् । विष्णुपादोद्भवं तीर्थं पीत्वा न क्षालयेत् करम् । क्षालयेद्यदि मोहेन पञ्चपातकमाप्नुयात् इति ।। श्रुतिरपि – भगवान् पवित्रं भगवत्पादकं पवित्रं तत्पाने नाचमनं यथा हि सोमेषु इति ।। चन्द्रिकायाम् – हृदि रूपं मुखे नाम नैवेद्यमुदरे हरेः । पादोदकं च पुष्पं च मस्तके यस्य सोऽच्युतः ।। अग्निष्टोमसहस्रैस्तु वाजपेयशतैरपि । यत्फलं लभते भक्त्या विष्णोर्नैवेद्यभक्षणात् इति ।।

மார்க்கண்டேயர்:- மாங்கனி, கரும்புத்துண்டு, தாம்பூலம் இவைகளைப் பக்ஷிப்பதிலும், ஸோமபானத்திலும், விஷ்ணுபாத தீர்த்த பானத்திலும், முன்னும் பின்னும் ஆசமனம் வேண்டியதில்லை. விஷ்ணுபாத தீர்த்தத்தைப் பானம் செய்த பிறகு கையை அலம்பக்கக் கூடாது. அறியாமல் அலம்பினுல் ஐந்து மஹா பாதகங்களை அடைவான். ச்ருதியும்:- பகவான் சுத்தன், அவனது பாதோதகம் சுத்தம், அந்தப் பாதோதகத்தைப் பானம் செய்வதில் ஆசமனம் இல்லை. ஸோமபானங்களில்

போல். சந்த்ரிகையில்:- எவனுடைய மனதில் ஹரியின் ரூபமும், வாயில் ஹரிநாமமும், வயிற்றில் ஹரி நைவேத்யமும், தலையில் ஹரிபாதோதகமும், ஹரிநிர்மால்ய புஷ்பமும் இருக்கின்றதோ அவன் அச்யுதனேயாவான். ஆயிரம் அக்னிஷ்டோமங்களாலும் நூறு வாஜபேயங்களாலும் எந்தப் பலத்தை அடைவானோ அந்தப் பலத்தைப் பக்தியுடன் விஷ்ணு நைவேத்யத்தைப் பக்ஷிப்பதால் அடைவான்.

बह्वृचपरिशिष्टेऽपि – पवित्रं विष्णुनैवेद्यं सुरसिद्धर्षिभिः स्मृतम् । अन्यदेवस्य नैवेद्यं भुक्त्वा चान्द्रायणं चरेत् ।। ग्राह्यं हरेस्तु निर्माल्यं पत्रं पुष्पं फलं जलम् । सालग्रामशिलासङ्गात् सर्वं याति पवित्रताम् इति । व्यासः – नैवेद्यमन्नं तुलसीविमिश्रं विशेषतस्तीर्थजलेन सिक्तम् । योऽश्नाति नित्यं पुरतो मुरारेः प्राप्नोति यज्ञायुतकोटिपुण्यम् इति ।। पितामहः – नैवेद्यं तुलसीमिश्रं स्वयं भुञ्जीत वाग्यतः । गृही तस्मादयत्नेन स गच्छेद्वैष्णवं पदम् इति ।।

பஹ்வ்ருசபரிசிஷ்டத்திலும்:- விஷ்ணு நைவேத்ய அன்னம் பரிசுத்தமென, தேவர், ஸித்தர், ருஷிகள் இவர்கள் சொல்லியுள்ளனர். மற்றத் தேவதையின் நைவேத்யத்தைப் புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஹரியின் நிர்மால்யமான இலை, பூ, பழம், ஜலம் இவைகளை ஸ்வீகரிக்க வேண்டும். ஸாளக்ராம சிலையின் சேர்க்கையால் எல்லா வஸ்துவும் சுத்தமாகின்றது. வ்யாஸர்:- துளஸியுடன் சேர்ந்ததும் விசேஷமாய் விஷ்ணு பாதோதகத்தால் நனைக்கப்பட்டதுமான விஷ்ணு நைவேத்யான்னத்தை விஷ்ணுவின் எதிரில் எவன் நித்யமும் புஜிக்கின்றானோ அவன் பதினாயிரம் கோடி யாகங்கள் செய்த புண்யத்தை அடைகிறான். பிதாமஹர்:- க்ருஹஸ்தன், துளஸியுடன் சேர்ந்த நைவேத்யான்னத்தை, மௌனியாய்தான் புஜிக்க வேண்டும். அதனால் அவன் வேறு முயற்சியின்றி விஷ்ணுலோகத்தை அடைவான்.

श्रुतिरपि – तदस्य प्रियमभि पाथो अश्यां नरो यत्र देवयवो मदन्ति । उरुक्रमस्य स हि बन्धुरित्था विष्णोः पदे परमे मध्व उत्सः इति । अस्य विष्णोः प्रियं तत्पाथः - निवेदितं अन्नं अभ्यश्याम् । यत्र देवाराधकाः नराः हृष्यन्ति । इत्था - इत्थं वर्तमानः तस्य बन्धुः, मध्वे - मधुवद्भोग्ये, उत्सः - उत्सुकः इत्यर्थः ॥

ச்ருதியும்:- ததஸ்யப்ரிய + உத்ஸ: இதன்பொருள். 'அஸ்ய = இந்த விஷ்ணுவின், ப்ரியம் = ப்ரியமான, தத்பாத:= அந்த நிவேதிதமான அன்னத்தை, அப்யச்யாம் = புஜிப்பேன். யத்ர = எதில், தேவயவ:= தேவனை ஆராதிக்கின்ற, நர:- மனிதர்கள், மதந்தி= ஸந்தோஷிக்கின்றனரோ, இத்தா= இவ்விதமிருக்கும், உருக்ரமஸ்ய = த்ரிவிக்ரமனின், ஸ: பந்து:= அந்தப் பக்தன் விஷ்ணோ:= விஷ்ணுவின், மத்வே= தேன்போல் போக்யமான, பரமேபதே = சிறந்த வைகுண்டஸ்தானத்தில், உத்ஸ:= ஆசையுள்ளவனாய் இருக்கின்றான்' என்பதாம்.

स्मृतिरत्ने – शुभमिच्छन्नरः प्राज्ञः स्कन्धे मालां न धारयेत् । धारयेत्तां शिरस्येव सुगन्धां प्रियदर्शनाम् ॥ ततः स्तुत्वा तु देवेश मपराधान् क्षमापयेत् ॥ अपराधसहस्राणि क्रियन्तेऽहर्निशं मया । दासोऽयमिति मां मत्वा क्षमस्व परमेश्वर ॥ भगवान् देव देवेश पुरुषोऽसि सनातन । क्षमस्व सर्वलोकेश भक्तस्य तु विशेषतः ॥ ज्ञानादज्ञानतो वाऽपि यन्न्यूनादि कृतं मया । तत् सर्वं पूर्णमेवास्तु त्वत् प्रसादात् जनार्दन इति ।

ஸ்ம்ருதிரத்னத்தில்:- அறிந்த மனிதன் சுபத்தை விரும்பினால், தோளில் மாலையைத் தரிக்கலாகாது. நல்ல வாஸனையுள்ளதும், அழகியதுமான மாலையைத் தலையிலேயே தரிக்க வேண்டும். பிறகு தேவேசனை ஸ்துதித்து, குற்றங்களைப் பொறுத்தருளுமென

வேண்ட வேண்டும். ஓ பரமேசனே! பகலிலும், இரவிலும், பல்லாயிரம் குற்றங்களை நான் செய்கின்றேன். இவன் அடியான் என்று என்னை எண்ணிப் பொறுக்க வேணடும். ஓ பகவன்! தேவ! தேவேச! ஸர்வலோகேச! புராதன! நீர் புருஷனாகின்றீர். விசேஷபக்தனாகிய எனது குற்றங்களைப் பொறுத்தருளும். ஓ ஜனார்த்தன! அறிந்தோ, அறியாமலோ நான் குறைவு முதலியது எதில் செய்தாலும் அதெல்லாம் உனதருளால் ஸம்பூர்ணமாகவே ஆகவேண்டும். (என்று ப்ரார்த்தனா ப்ரகாரங்கள்.)

सङ्ग्रहे – साधु वाऽसाधु वा कर्म यद्यदाचरितं मया । तत् सर्वं भगवन् विष्णो गृहाणाराधनं मम ।। इति कर्मार्पणं कृत्वा स्वात्मानं च निवेदयेत् इति ।। योगयाज्ञवल्क्यः – एवं संपूज्य देवेशं क्षणं ध्यात्वा निरञ्जनम् । ततोऽवलोकयेदर्कं हंसः शुचिषदित्यृचा इति ।। महाभारते – ब्राह्मणैः क्षत्रियैर्वैश्यैः शूद्रैश्च कृतलक्षणैः । अर्चनीयश्च सेव्यश्च भक्तियुक्तैः सदा हरिः इति ।।

ஸங்க்ரஹத்தில்:- ஓ பகவன்! விஷ்ணோ! நன்றாகவோ, மாறாகவோ, எந்தெந்தக் கர்மம் என்னால் செய்யப்பட்டுள்ளதோ, என்னுடைய அக்கர்மம் முழுவதையும் பூஜையாய் க்ரஹித்தருளும் என்று கர்மத்தைப் பகவதர்ப்பிதமாக்கித் தன்னையும் பகவானுக்கு அர்ப்பிக்க வேண்டும். யோகயாக்ஞவல்க்யர்:- இவ்விதம் தேவேசனைப் பூஜித்து, நிர்மலனான அவனை க்ஷணகாலம் த்யானித்துப் பிறகு, 'ஹம்ஸச்சுசிஷத்' என்ற ருக்கினால் ஸூர்யனைப் பார்க்க வேண்டும். மஹாபாரதத்தில்:- பக்தர்களான ப்ராம்ஹணர், க்ஷத்ரியர், வைச்யர், அங்கனம் (முத்ரை) செய்து கொண்ட சூத்ரர்கள் இவர்கள் ஹரியை எப்பொழுதுமர்ச்சிக்க வேண்டும். ஸேவிக்கவும் வேண்டும்.

यत्तु स्मर्यते – जपस्तपस्तीर्थसेवा प्रव्रज्या मन्त्रसाधनम् । देवताराधनं चैव स्त्रीशूद्रपतनानि षट् इति, तद्वैदिकार्चनाभिप्रायम् ।।

जैमिनिः — अवश्यं तु त्यजेदन्नं मनसा वचसाऽपि च। ततश्च प्रक्षिपेदग्नाविति धर्मः सनातनः ॥ अत्यक्त्वा जुहुयाद्यस्तु मोहेनान्वितमानसः। देवानां नोपतिष्ठेत नरकं प्रतिपद्यते ॥ यत् किञ्चिज्जुहुयादग्नौ तत् सर्वं त्यागपूर्वकम्। अन्यथा कुरुते यस्तु नरकं स प्रपद्यते इति ॥ अनग्निकस्य वैश्वदेवे विशेषमाह वृद्धवसिष्ठः – अनग्निकस्तु यो विप्रः सोऽन्नं व्याहृतिभिः स्वयम्। हुत्वा शाकलमन्त्रैश्च शिष्टं काकबलिं हरेत् इति।

ஜைமினி:- அன்னத்தை மனதினாலும், வாக்கினாலும் தனதல்ல என்று அவச்யம் விடவேண்டும். பிறகு அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். இது புராதனமான தர்மமாம். அறியாதவனாய் எவன் த்யாகம் செய்யாமல் ஹோமம் செய்கின்றானோ, அவனது ஹவிஸ் தேவர்களை அடைவதில்லை. அவன் நரகத்தை அடைகிறான். அக்னியில் எந்த வஸ்துவை ஹோமம் செய்தாலும், அதை த்யாகத்தை முன்னிட்டே செய்ய வேண்டும். மாறிச் செய்பவன் நரகத்தை அடைகிறான். விதுரனின் வைச்வதேவத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், வ்ருத்த வஸிஷ்டர்:- அக்னியில்லாத ப்ராம்ஹணன் எவனோ அவன், வ்யாஹ்ருதிகளால் அன்னத்தை ஹோமம் செய்து, சாகல மந்த்ரங்களால் சகல ஹோமம் செய்து, ப்ரஜாபதிக்கும் ஹவிஸ்ஸை ஹோமம் செய்து, மீதியுள்ள அன்னத்தைக் காகபலியாய்க் கொடுக்க வேண்டும்.

विष्णुरपि — अन्नं व्याहृतिभिर्हुत्वा हुत्वा मन्त्रैश्च शाकलैः। प्रजापतेर्हविर्हुत्वा पूजयेदतिथिं ततः इति ॥ तिसृभिर्व्याहृतिभिरन्नाहुतीर्हुत्वा प्रजापतये स्वाहेति च, ततो देवकृतस्यैनस इत्याद्यैः शकलहोमं च कृत्वा काकबलिं हृत्वाऽतिथिं पूजयेदित्यर्थः। तथा च अत्रिः – साग्निकः पितृयज्ञान्तं बलिकर्म समाचरेत्। अनग्निर्हुतशेषं तु बलिं काकबलिं हरेत्॥ पुरुष यज्ञादृते नास्ति निरग्नेस्तु महामखः इति।

व्याहृत्यादि होमान् काकबलिमातिथ्यं च विना नान्यदस्तीत्यर्थः ।

**விஷ்ணுவும்:-** வ்யாஹ்ருதிகளால் அன்ன ஹோமமும், சகலஹோம மந்த்ரங்களால் ஹோமமும், ப்ரஜாபதிக்கு ஹவிர் ஹோமமும் செய்து, பிறகு அதிதியைப் பூஜிக்க வேண்டும். 'மூன்று வ்யாஹ்ருதிகளால் ஹோமம் செய்து, ப்ரஜாபதயே ஸ்வாஹா என்றும் ஹோமம் செய்து, பிறகு 'தேவக்ருதஸ்ய' என்பது முதலிய மந்த்ரங்களால் சகல ஹோமம் செய்து, காகபலியும் செய்து, அதிதியைப் பூஜிக்க வேண்டும் என்பது பொருள். அவ்விதமே, **அத்ரி:-** அக்னியுடன் கூடியவன் பித்ருயக்ஞம் வரையிலுள்ளதையும், பலி கர்மத்தையும் செய்ய வேண்டியது. அக்னியில்லாதவன் ஹோம சேஷத்தைக் காகபலியாகக் கொடுக்க வேண்டும். விதுரனுக்குப் புருஷயக்ஞம் தவிர்த்து வேறு மஹாயக்ஞம் இல்லை. 'வ்யாஹ்ருதி முதலியதால் ஹோமம், காகபலி. அதிதி பூஜை இவைகளைத் தவிர்த்து மற்றதொன்றுமில்லை. என்பது பொருள்.

मन्त्रोपयोगे नियममाहापस्तम्बः – गृहमेधिनो यदशनीयस्य होमा बलयश्च स्वर्गपुष्टिसंयुक्तास्तेषां मन्त्राणामुपयोगे द्वादशाहमधः शय्या ब्रह्मचर्यं क्षारलवणवर्जनं चोत्तमस्यैकरात्रमुपवासः इति ॥ गृहमेधिनो यदशनीयं पक्वमपक्वं वोपस्थितम्, तस्यैकदेशेन होमा बलयश्च कर्तव्याः । स्वर्गः पुष्टिश्च तेषां फलम् तेषां होमबलिमन्त्राणामुपयोगे । उपयोगः - नियमपूर्वकं विद्याग्रहणम् ॥ तथा च बोधायनः - तेषां ग्रहणे द्वादशरात्रम् इत्यादि ॥ तत्र उपयोक्तुरेव व्रतम् । अन्ये तु पत्न्या अपीच्छन्ति । उपयोगः - प्रथमप्रयोगः । तत्र पत्न्या अपि सहाधिकारः इति वदन्ति । उत्तमस्य - ये भूताः प्रचरन्तीत्यस्य एकरात्रमुपवासः कर्तव्यः इति हरदत्तः ॥

மந்தரங்களை முதலில் உபயோகிக்கும் பொழுதுள்ள நியமத்தைச் சொல்லுகிறார் **ஆபஸ்தம்பர்:-**

க்ருஹஸ்தனுக்கு, போஜனார்ஹமாகியது பக்வமாகவோ, அபக்வமாகவோ எந்த வஸ்து கிடைத்துள்ளதோ, அதில் ஏகதேசத்தால் ஹோமங்களையும், பலிகளையும் செய்ய வேண்டும். ஸ்வர்க்கமும், புஷ்டியும் அவைகளுக்குப் பலன். அந்த ஹோமபலி மந்த்ரங்களை உபயோகிக்கும் பொழுது, உபயோகம் என்ற பதத்திற்கு நியமத்துடன் வித்யையை க்ரஹிப்பதென்று பொருள். அவ்விதமே போதாயனர்:- 'அவைகளை க்ரஹிக்கும் பொழுது பன்னிரண்டுநாள்' என்பது முதலாகச் சொல்லியுள்ளார். பன்னிரண்டு நாள் பூமியில் படுக்கையும், ப்ரம்ஹசர்யமும், உறைப்பு, உப்புகளை வர்ஜிப்பதும் நியமங்கள். கடைசி மந்த்ரமாகிய 'யேபூதா:' என்பதற்கு ஒரு நாள் உபவாஸம் செய்ய வேண்டும் என்றார் ஹரதத்தர். இங்கு சொல்லிய வ்ரதம் புருஷனுக்கு மட்டில். சிலர் பத்னிக்கும் வேண்டுமென்கின்றனர். உபயோகம் என்பது முதல் ப்ரயோகம், அதில் பத்னிக்கும் கூட அதிகாரமென்று சொல்லுகின்றனர்.

अन्नसंस्कर्तॄनाहापस्तम्बः – आर्याः प्रयता वैश्वदेवेऽन्न-संस्कर्तारः स्युः इति ।। आर्याः - त्रैवर्णिकाः । स एव – सिद्धेऽन्ने तिष्ठन् भूतमिति स्वामिने प्रब्रूयात् तत् सुभूतं विराडन्नं तन्माक्षायीति प्रतिवचनः इति ।। सिद्धे - पक्वेऽन्ने तिष्ठन् पाचकः भूतम् इति अन्नस्वामिने ब्रूयात् । तत् सुभूतमित्यादिः प्रतिवचनो मन्त्र इत्यर्थः । यत्तु तेनैवोक्तम् – आर्याधिष्ठिता वा शूद्राः संस्कर्तारः स्युः इति, तद्युगान्तरविषयम् । ब्राह्मणादिषु शूद्रस्य पचनादि क्रियाऽपि च इति कलियुगनिषिद्धधर्मेषु मध्ये स्मरणात् ।।

வைச்வதேவார்ஹமான அன்னத்தைச் சமைப்பதற்கு அர்ஹர்களைச் சொல்லுகிறார், ஆபஸ்தம்பர்:- சுத்தரான மூன்று வர்ணத்தார் வைச்வ தேவத்தில் அன்னத்தைப் பாகம் செய்பவராக வேண்டும். ஆபஸ்தம்பரே:- அன்னம் பக்வமான உடன் நின்றுகொண்டு 'பூதம்' என்று

யஜமானனின் பொருட்டுச் சொல்ல வேண்டும். 'தத்ஸு பூதம்' என்பது முதலியது யஜமானன் சொல்லும் ப்ரதிவசனம். பூதம் - தயாராயுள்ளது. 'அந்த அன்னம் நன்ருய் உள்ளது, நான் விளங்குவதற்கு ஸாதனமாயுள்ளது, அது குறைய வேண்டாம்' என்பது ப்ரதிவசனத்தின் பொருள். 'மூன்று வர்ணத்தாரை மேல்வராய்க் கொண்ட சூத்ரராவது பாசகராய் இருக்கலாம்' என்று ஆபஸ்தம்பர் சொல்லியுள்ளது, மற்ற யுகங்களைப் பற்றியதாம். 'சூத்ரனுக்கு ப்ராம்ஹணர் முதலிய மூன்று வர்ணத்தாரிடம் சமையல் முதலியது செய்வதும் கூடாது' என்று கலியுக நிஷித்த தர்மங்களின் நடுவில் சொல்லியுள்ளனர்.

## बलिहरणम्

अथ बलिहरणम् । तत्र कात्यायनः – उद्धृत्य हविरासिच्य हविष्येण घृतादिना । स्वशाखाविधिना हुत्वा तच्छेषं बलिमाहरेत् ॥ यावद्गृहे वसेत्तावत् स्वयमेव बलिं हरेत् । सायं त्वन्नस्य सिद्धस्य पत्न्यमन्त्रं हरेत् इति ॥ चन्द्रिकायाम् – स्वशाखोक्तेन विधिना बलिकर्म विधीयते । न जातु परशाखोक्तं बुधः कर्म समाचरेत् इति ॥ हारीतः– वास्तुपालनभूतेभ्यो बलिहरणं भूतयज्ञः इति ॥ बलिहरणे गौणकर्तॄनाह अत्रिः – पुत्रो भ्राताऽथवा ऋत्विक् शिष्यश्वशुर-मातुलाः । पत्नीश्रोत्रिययाज्याश्च दृष्टास्ते बलिकर्मणि ॥ गृहे कर्त्रन्तराभावे प्रवासेऽप्याचरेत् स्वयम् इति ।

### பலிஹரணம்

இனி பலிஹரணம் சொல்லப்படுகிறது. அதில் காத்யாயனர்:- ஹவிஸ்ஸை எடுத்து, ஹோமார்ஹமான நெய் முதலியதால் நனைத்து, தன் சாகையில் சொல்லிய விதிப்படி ஹோமம் செய்து, அதன் மீதியைப் பலியாய்க் கொடுக்க வேண்டும். வீட்டில் இருக்கும் வரையில், தானே பலிஹரணம் செய்ய வேண்டும். ஸாயங்காலத்திலாஞல்,

ஸித்தமான அன்னத்தினுல், மந்த்ரமில்லாமல் பத்னீ பலிஹரணம் செய்யலாம். சந்த்ரிகையில்:- தன் சாகையில் சொல்லிய விதிப்படியே பலிஹரணம் விதிக்கப்படுகிறது. அறிந்தவன், பிறர் சாகையில் சொல்லப்பட்ட கர்மத்தை ஒருகாலும் அனுஷ்டிக்கக் கூடாது. ஹாரீதர்:- க்ருஹத்தை ரக்ஷிக்கும் பூதங்களுக்குப் பலியைக் கொடுப்பது பூதயக்ஞமாம். பலிஹரணத்தில் கௌணகர்த்தாக்களைச் சொல்லுகிருர் அத்ரி:- புத்ரன் அல்லது ப்ராதா, ருத்விக், சிஷ்யன், மாமனுர், மாதுலன், பத்னீ, ச்ரோத்ரியன், சிஷ்யன் இவர்கள் பலி கர்மத்தில் (கௌணகர்த்தாக்களாக) விதிக்கப்பட்டிருக்கின்றனர். வீட்டில் வேறு கர்த்தா இல்லாவிடில், ப்ரவாஸத்திலும் (வேறு தேசத்தில் இருக்கும் போதும்) யஜமானன் தானே பலிஹரணம் செய்ய வேண்டும்.

बलिहरणप्रकारमाह शौनकः – अथ बलिहरणमेताभ्यश्चैव देवताभ्योऽद्भ्य औषधिवनस्पतिभ्यो गृहाय गृहदेवताभ्यो वास्तुदेवताभ्य इन्द्रायेन्द्रपुरुषेभ्यो यमाय यमपुरुषेभ्यो वरुणाय वरुणपुरुषेभ्यः सोमाय सोमपुरुषेभ्य इति प्रतिदिशं, ब्रह्मणे ब्रह्मपुरुषेभ्य इति मध्ये, विश्वेभ्यो देवेभ्यः सर्वेभ्यो भूतेभ्यो दिवाचारिभ्य इति दिवा, नक्तंचारिभ्य इति नक्तं, रक्षोभ्य इत्युत्तरतः स्वधा पितृभ्य इति प्राचीनावीती शेषं दक्षिणा निनयेत् इति ॥

பலிஹரண ப்ரகாரத்தைச் சொல்லுகிருர், சௌனகர்:- இனி பலிஹரணம் சொல்லப்படுகிறது. இந்தத் தேவதைகளுக்கும், அப்புகள், ஓஷதி வனஸ்பதிகள், க்ருஹம், க்ருஹ தேவதைகள், வாஸ்து தேவதைகள், இந்த்ரன், இந்த்ர புருஷர்கள், யமன், யம புருஷர்கள், வருணன், வருண புருஷர்கள், ஸோமன், ஸோம புருஷர்கள் என்று இவர்களுக்கு ப்ரதிதிக்கிலும், ப்ரம்ஹாவுக்கும் ப்ரம்ஹ புருஷர்களுக்கும் என்று மத்யத்திலும், விச்வதேவர்களுக்கும், ஸர்வ

பூதங்களுக்கும், திவாசாரிகளுக்கும் என்று பகலில், நக்தஞ்சாரிகளுக்கென்று இரவில், ரக்ஷஸ்ஸுகளுக்கென்று வடக்கில், ஸ்வதா பித்ருப்ய: என்று, ப்ராசீனவீதியாய் மீதியைத் தென்பாகத்தில் வைக்க வேண்டும்.

आपस्तम्बोऽपि – अपरेणाग्निं सप्तमाष्टमाभ्यामुदगपवर्ग-मुदधानसन्निधौ नवमेन मध्येऽगारस्य दशमैकादशाभ्यां प्रागपवर्गमुत्तरपूर्वदेशेऽगारस्योत्तरैश्चतुर्भिः शय्यादेशे कामलिङ्गेन देहल्यामन्तरिक्षलिङ्गेनोत्तरेणापिधान्यामुत्तरैर्ब्रह्मसदने दक्षिणतः पितृलिङ्गेन प्राचीनावीत्यवाचीनपाणिः कुर्याद्रौद्र उत्तरो यथा देवताभ्यस्तयोर्नानापरिषेचनं धर्मभेदान्नक्तमेवोत्तमेन वैहायसं य एतानव्यग्रो यथोपदेशं कुरुते नित्यः स्वर्गः पुष्टिश्च इति ॥

अस्यार्थः – अग्नेः पश्चात् सप्तमाष्टमाभ्यां - धर्माय स्वाहा, अधर्माय स्वाहा इत्येताभ्यां उदगपवर्गं बलिहरणं कर्तव्यम्। उदकं यत्र धीयते तदुदधानं मणिकाख्यम्। तस्य सन्निधौ नवमेन - अद्भ्यः स्वाहेत्यनेन। अगारमध्ये दशमैकादशाभ्यां - औषधिवनस्पतिभ्यः स्वाहा, रक्षोदेवजनेभ्यः स्वाहेत्येताभ्यां प्रागपवर्गम्। अगारस्योत्तरपूर्वदेशे उत्तरैश्चतुर्भिः - गृह्याभ्यः स्वाहा, अवसानेभ्यः स्वाहा, अवसानपतिभ्यः स्वाहा, सर्वभूतेभ्यः स्वाहेत्येतैः प्रागपवर्गमेव। शय्यादेशे कामाय स्वाहेत्यनेन। देहली - अन्तर्द्वारस्याधस्ताद्दारु। तत्र अन्तरिक्षाय स्वाहेत्यनेन। येन अपिधीयते द्वारम्, सा अपिधानी कवाटम्। तदर्गलमित्यन्ये। तत्र उत्तरेण मन्त्रेण - यदेजति जगति यच्चचेष्टति नाम्नो भागोऽयन्नाम्ने स्वाहेत्यनेन।

ஆபஸ்தம்பரும்:- 'அபரேணாக்னிம் + புஷ்டிச்ச' என்பது ஸூத்ரம். இதன் பொருள் - அக்னிக்கு மேல்புறத்தில், 7-ஆவது 8-ஆவது மந்த்ரங்களால் =

தர்மாயஸ்வாஹா, அதர்மாய ஸ்வாஹா என்பவைகளால், வடக்கில் முடியும் வரை பலிஹரணம் செய்ய வேண்டும். ஜலம் வைக்கும் பாத்ரம் உததானம், மணிகமெனப்பட்டது. (பெரிதான ஜலபாத்ரம்) அதன் எதிரில் 9-ஆவது மந்த்ரத்தால் - 'அத்ப்ய: ஸ்வாஹா' என்பதால். வீட்டின் நடுவில் 10-ஆவது, 11- ஆவதுகளால் - ஓஷதி வனஸ்பதிப்ய: ஸ்வாஹா, ரக்ஷோதேவஜநேப்ய: ஸ்வாஹா என்ற இவைகளால் கிழக்கில் முடிவாக. வீட்டின் வடகிழக்கு ப்ரதேசத்தில், நான்கு மந்த்ரங்களால் = க்ருஹ்யாப்ய: ஸ்வாஹா, அவஸாநேப்ய: ஸ்வாஹா, அவஸாநபதிப்ய: ஸ்வாஹா, ஸர்வபூதேப்ய: ஸ்வாஹா என்பவைகளால், கிழக்கில் முடிவாகவே. படுக்கும் ஸ்தலத்தில் 'காமாய ஸ்வாஹா' என்று. தேஹளியில் - உள் வாயிலின் கீழ்ப்படியில் 'அந்தரிக்ஷாய ஸ்வாஹா' என்று. வாயிற்படி எதனுல் மூடப்படுகின்றதோ அது அபிதானீ - கதவு, அதன் தாழ்ப்பாள் என்று சிலர். அதில், அடுத்த மந்த்ரத்தால் = 'யதேஜ்ஜதி + நாம்னே ஸ்வாஹா' என்று.

ब्रह्मसदनं - मध्येऽगारं वास्तुविद्याप्रसिद्धम् । अग्नेर्दक्षिणत इत्यन्ये । तत्रोत्तरैर्दशभिः - पृथिव्यै स्वाहा, अन्तरिक्षाय स्वाहा, दिवे स्वाहा, सूर्याय स्वाहा, चन्द्रमसे स्वाहा, नक्षत्रेभ्यः स्वाहा, इन्द्राय स्वाहा, बृहस्पतये स्वाहा, प्रजापतये स्वाहा, ब्रह्मणे स्वाहेत्येतैः प्रागपवर्गमेव । दक्षिणतः - अनन्तराणां बलीनां दक्षिणतः स्वधा पितृभ्य इत्यनेन प्राचीनावीती अवाचीनपाणिः दक्षिणं पाणिमुत्तानं कृत्वा अङ्गुष्ठतर्जन्योरन्तरालेन कुर्यात् । पितृबलेरुत्तरतो रौद्रबलिः कर्तव्यः । यथादेवताभ्यः - उपवीतीत्यर्थः । नमो रुद्राय पशुपतये स्वाहेति मन्त्रः ।

அடுத்த பத்து மந்த்ரங்களால் = 'ப்ருதிவ்யை ஸ்வாஹா' என்பது முதல் 'ப்ரம்ஹணே ஸ்வாஹா' என்பது வரை உள்ளவைகளால் வீட்டில் நடுவில், அல்லது அக்னியின் தெற்கில், கிழக்கு முடிவாகக் கொடுக்க

வேண்டும். தெற்கில் - முன் சொல்லிய பலிகளின் தெற்குப் பாகத்தில், 'ஸ்வதாபித்ருப்ய:' என்ற மந்த்ரத்தால் ப்ராசீனு வீதியாய், அவாசீனபாணி: - வலதுகையை நிமிர்த்து, பெருவிரல் தர்ஜனீ இவைகளின் நடுவினுல் கொடுக்க வேண்டும். பித்ரு பலியின் வடக்கில் ரௌத்ர பலியைக் கொடுக்க வேண்டும். யதாதேவதாப்ய:= உபவீதியாய் என்று பொருள். 'நமோருத்ராயபசுபதயே ஸ்வாஹா' என்பது அதற்கு மந்த்ரம்.

बलीनां देशे देशे समवेतानां सकृत्सकृदन्ते परिषेचनम् इति स्वोक्तस्यापवादः, तयोर्नानापरिषेचनम् इति । तयोः - अनन्तरोक्तयोः बल्योरेकस्मिन् देशे समवेतयोरपि नाना - पृथक् परिषेचनं कर्तव्यम् । कुतः ? धर्मभेदात् । पित्र्यस्याप्रदक्षिणं परिषेचनं, इतरस्य दैवतत्वात् प्रदक्षिणमिति । उत्तमेन - ये भूताः प्रचरन्ति नक्तं बलिमिच्छन्तो वितुदस्य प्रेष्याः । तेभ्यो बलिं पुष्टिकामो हरामि मयि पुष्टिं पुष्टिपतिर्दधातु स्वाहा इत्यनेन वैहायसं बलिं दद्यात् । तच्च नक्तमेव । वैहायसमिति वचनात् आकाश एव बलिरुत्क्षेप्यः । न छदिः परिष्कृते देशे ॥ तथा च बोधायनः – अथाकाश उत्क्षिपति ये भूता इति ॥

'பலீநாம் + பரிஷேசனம்' என்று முன் சொல்லியதற்கு மறுப்பு 'தயோ: நாநாபரிஷேசனம்' என்பது. அந்த இரண்டு பலிகளுக்கும் நாநா - தனியாய்ப் பரிஷேசனம் செய்ய வேண்டும். ஏன்? தர்மபேதத்தால். பித்ரு பலிக்கு அப்ரதக்ஷிணமாய்ப் பரிஷேசனம். ரௌத்ர பலிக்கு ப்ரதக்ஷிணமாய்ப் பரிஷேசனம். உத்தமே - முடிவிலுள்ள 'யேபூதா: + ஸ்வாஹா' என்ற மந்த்ரத்தால் வைஹாயஸ பலியைக் கொடுக்க வேண்டும். அது ராத்ரியில் மட்டும். 'வைஹாயஸம்' என்றிருப்பதால், ஆகாசத்திலேயே பலியைத் தூக்கிப் போடவேண்டும். கூரையால் மறைக்கப்பட்ட ப்ரதேசத்திற் கூடாது. அவ்விதமே,

போதாயனர்:- 'பிறகு 'யேபூதா:' என்பதால் ஆகாசத்தில் பலியை எறியவேண்டும், என்கிறார்.

अपर आह– एवकारो भिन्नक्रमः । नक्तमुत्तमेनैव बलिरिति । तत्र बल्यन्तराणां रात्रौ निवृत्तिः । अन्ये तु दिवा बलिमिच्छन्त इत्यूहेन दिवाऽपि बलिं हरन्ति ।। तथा चाश्वलायनः – दिवाचारिभ्य इति दिवा नक्तंचारिभ्य इति नक्तम् इति ।।

மற்றொருவர் சொல்லுகிறார் 'ஏவ' என்பதற்கு க்ரமம் மாறியுள்ளது. 'உத்தமேநைவபலி:' என்று சேர்க்க வேண்டும். அங்கு, ராத்ரியில் மற்றப் பலிகள் நிவ்ருத்திக்கின்றன. பூதபலி மட்டுமே உண்டென்பது பொருள். சிலரோவெனில், 'திவாபலிமிச்சந்த:' என்று ஊஹித்துப் பகலிலும் பூதபலியைச் செய்கின்றனர். அவ்விதமே, ஆச்வலாயனர்:- 'திவாசாரிப்ய:' என்று பகலில், 'நக்தஞ்சாரிப்ய:' என்று ராத்ரியில், என்றார்.

मनुरपि – विश्वेभ्यश्चैव देवेभ्यो बलिमाकाश उत्क्षिपेत् । दिवाचरेभ्यो भूतेभ्यो नक्तंचारिभ्य एव च इति ।। बलिदेशसंस्कारोऽप्यापस्तम्बेनोक्तः – बलीनां तस्य तस्य देशसंस्कारो हस्तेन परिमृज्यावोक्ष्य न्युप्य पश्चात् परिषेचनम् इति । बलीनां मध्ये तस्य तस्य बलेर्देशसंस्कारः कर्तव्यः । कः पुनरसौ? हस्तेन परिमार्जनमवोक्षणं च । तत् कृत्वा बलिं निवपति । न्युप्य पश्चादेकैकस्मिन् देशे समवेतानां सकृत् परिषेचनं इत्यर्थः ।। स एव – सति सूपसंसृष्टेन कार्याः इति । व्यञ्जनैः सूपेन च संसृष्टेनान्नेन बलयः कार्याः । सति संभव इत्यर्थः ।। तथा च बोधायनः – एष एव व्यञ्जनानां संस्कारः सूपस्यापि इति ।। गौतमः – दिग्देवताभ्यश्च यथास्वं गृहस्य द्वार्षु मरुद्भ्यो गृहदेवताभ्यः प्रविश्य ब्रह्मणे मध्येऽद्भ्य उदकुम्भ आकाशायेत्यन्तरिक्षे नक्तं चरेभ्यश्च सायम् इति ।। दिग्देवताभ्यः -

इन्द्रादिभ्यः अष्टभ्यः प्रागादिदिक्षु प्रदक्षिणं बलिर्हर्तव्यः ।। यावन्ति गृहस्य द्वाराणि तेषु सर्वेषु मरुद्भ्यः स्वाहा इति बहिः स्थितो बलिं हृत्वा ततोऽन्तः प्रविश्य गृहदेवताभ्यो बलिं हरेत् ।। अत्रैके गृहदेवताभ्यः स्वाहेति मन्त्रं मन्यन्ते ।। आश्वलायने तथा दर्शनात्। अन्ये गृहे या देवताः, ताभ्यस्तेन तेन शब्देन बलिर्हर्तव्यः इत्याहुः ।

**மனுவும்:-** விச்வதேவர்களுக்கும், திவாசர பூதங்களுக்கும், நக்தஞ்சாரி பூதங்களுக்கும் பலியை ஆகாசத்தில் போடவேண்டும். பலி வைக்கப்படும் தேசத்தின் ஸம்ஸ்காரத்தைச் சொல்லியுள்ளார், **ஆபஸ்தம்பர்:-** பலிகளுக்குள் ஒவ்வொரு பலிக்கும் தேச ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும். அது என்ன? எனில், கையினுல் துடைப்பதும் நீர்தெளிப்பதும். அதைச் செய்து பலியை வைக்க வேண்டும். வைத்த பிறகு, ஒவ்வோரிடத்திலும் சேர்ந்துள்ள பலிகளுக்கு ஒவ்வொரு தடவை பரிஷேசனம் என்பது பொருள். **ஆபஸ்தம்பரே:-** வ்யஞ்சனங்களுடனும், ஸூபத்துடனும் சேர்ந்துள்ள அன்னத்தால் பலிகளைக் கொடுக்க வேண்டும்; இருக்குமாகில். அவ்விதமே, **போதாயனர்:-** இதுவே வ்யஞ்சனங்களுக்கும் ஸூபத்திற்கும் ஸம்ஸ்காரமாம்.

**கௌதமர்:-** 'திக் தேவதைகளுக்கு அவரவர் திக்கில், வீட்டின் வாயில்களில் மருத்துக்களுக்கும், வீட்டினுள் நுழைந்து க்ருஹ தேவதைகளுக்கும், வீட்டின் நடுவில் ப்ரம்ஹாவுக்கும், உதகும்பத்தில் அப்புகளுக்கும், ஆகாசத்தில் அந்தரிக்ஷத்திற்கும், ஸாயங்காலத்தில் நக்தஞ்சர பூதங்களுக்கும் பலியைக் கொடுக்க வேண்டும்.' என்பது ஸூத்ரம். இதன் பொருள் - திக் தேவதைகளுக்கு - இந்த்ராதிகளெட்டுப் பேர்களுக்குக் கிழக்கு முதலான திக்குகளில் ப்ரதக்ஷிணமாய்ப் பலியைக் கொடுக்க வேண்டும். வீட்டில் எவ்வளவு வாயில்களோ அவைகளெல்லாவற்றிலும், மருத்ப்ய: ஸ்வாஹா என்று வெளியிலிருந்து பலியை வைத்துப் பிறகு உள்ளே

நுழைந்து க்ருஹ தேவதைகளுக்குப் பலியைக் கொடுக்க வேண்டும். இங்கு சிலர் 'க்ருஹதேவதாப்ய: ஸ்வாஹா' என்று மந்த்ரத்தைச் சொல்லுகின்றனர். ஆச்வலாயனத்தில் அவ்விதம் இருப்பதால். சிலர் - க்ருஹத்தில் உள்ள தேவதைகள் எவையோ அவைகளுக்கு அந்தந்தச் சப்தத்தால் பலியைக் கொடுக்க வேண்டும் என்கின்றனர்.

ताश्चोशनसा दर्शिताः – शयनस्य शिरःस्थाने श्रियै नम इति दद्यात्। पादस्थाने भद्रकाल्यै नम इति। गोष्ठागारे धनपतये नम इति। स्तम्भनिलये रुद्राय नम इति । गोष्ठे मित्राय नम इति । उलूखलमुसलयोर्वरुणाय नम इति। कूपे अहये बुध्नियाय नम इति। पेषिण्यामग्निसमीपे चैताभ्यो देवताभ्यो नम इति। गृहमध्ये ब्रह्मणे स्वाहेति । उदकुम्भसमीपेऽद्भ्यः स्वाहेति । अन्तरिक्षे आकाशाय स्वाहेति । नक्तंचरेभ्यः स्वाहेति सायमाकाशे बलिरुत्क्षेप्यः इति गौतमवचनार्थः ॥

அந்தத் தேவதைகளும் உசனஸ்ஸினுல் சொல்லப்பட்டுள்ளனர். படுக்கையின் தலைப்பக்கத்தில் 'ச்ரியை நம:' என்று கொடுக்க வேண்டும். கால்பக்கத்தில் 'பத்ரகாள்யை நம:' என்று. கொட்டில் வீட்டில் 'தனபதயே நம:' என்று. ஸ்தம்பஸ்தானத்தில் 'ருத்ராய நம:' என்று. மாட்டுக் கொட்டிலில் 'மித்ராய நம:' என்று. உரல், உலக்கை இவைகளில் 'வருணாய நம:' என்ற. கிணற்றில் 'அஹயே புத்னியாய நம:' என்று. அம்மியிலும் அக்னி ஸமீபத்திலும் 'ஏதாப்யோ தேவதாப்யோ நம:' என்று. க்ருஹத்தின் நடுவில் 'ப்ரம்ஹணே ஸ்வாஹா' என்று. ஜலகும்ப ஸமீபத்தில் 'அத்ப்ய: ஸ்வாஹா' என்று. அந்தரிக்ஷத்தில் 'ஆகாசாய ஸ்வாஹா' என்று. 'நக்தஞ்சரேப்ய: ஸ்வாஹா' என்று மாலையில் ஆகாசத்தில் பலியை உயர்த்திப் போட வேண்டும். என்பது கௌதம வசனத்தினர்த்தமாம்.

मनुरपि — एवं सम्यग्घविर्हुत्वा सर्वदिक्षु प्रदक्षिणम् । इन्द्रान्तकाप्पतीन्दुभ्यः सानुगेभ्यो बलिं हरेत् ।। मरुद्भ्य इति तु द्वारि हरेदप्स्वद्भ्य इत्यपि । वनस्पतिभ्य इत्येवं मुसलोलूखले हरेत् ।। उच्छीर्षके श्रियै दद्याद्भद्रकाल्यै तु पादतः । ब्रह्मवास्तोष्पतिभ्यां तु वास्तुमध्ये बलिं हरेत् ।। विश्वेभ्यश्चैव देवेभ्यो बलिमाकाश उत्क्षिपेत् । दिवाचरेभ्यो भूतेभ्यो नक्तञ्चारिभ्य एव च ।। पृष्ठवास्तुनि कुर्वीत बलिं सर्वानुभूतये । पितृभ्यो बलिशेषं तु सर्वं दक्षिणतो हरेत् इति ।

**மனுவும்:**- இவ்விதம் நன்றாய் ஹவிஸ்ஸை ஹோமம் செய்து நான்கு திக்குகளிலும் ப்ரதக்ஷிணமாய் அனுசரர்களுடன் கூடிய இந்த்ரன், யமன், வருணன், ஸோமன் இவர்களுக்குப் பலியைக் கொடுக்க வேண்டும். 'மருத்ப்ய:' என்று வாயிலிலும், 'அத்ப்ய:' என்று ஜலத்திலும். 'வநஸ்பதிப்ய:' என்று உலக்கையிலும், உரலிலும், உச்சீர்ஷகத்தில் படுக்கையின் தலைப்ரதேசத்தில் 'ச்ரியை' என்றும். கால்ப்ரதேசத்தில் 'பத்ரகாள்யை' என்றும், வீட்டின் மத்யத்தில் 'ப்ரம்ஹணே', வாஸ்தோஷ்பதயே' என்றும், பலியைக் கொடுக்க வேண்டும். 'விச்வேப்யோ தேவேப்ய:' என்று பலியை வீட்டின் ஆகாசத்தில் உயர்த்திப் போடவேண்டும். திவாசர பூதங்களுக்குப் பகலிலும், நக்தஞ்சாரி பூதங்களுக்கு ராத்ரியிலும், வீட்டின் பின்புறத்தில் 'ஸர்வா(னு)த்ம பூதயே' என்றும் பலியைக் கொடுத்து, மீதியுள்ள அன்னம் முழுவதையும் ப்ராசீநாவீதியாய் 'ஸ்வதா பித்ருப்ய:' என்று தென்புறத்தில் வைக்க வேண்டும்.

इदं बलिहरणं व्यजनाकार मग्निसमीपे शिष्टाः कुर्वन्ति ।। अत्र कात्यायनः – ध्वजाकारं नराकारं तथा वल्मीकरूपकम् । चक्राकारं च काम्यानां बलीनां लक्षणं विदुः ।। चतुर्ष्वेतेषु विप्राणां नित्या चक्राकृतिर्भवेत् । चक्राकारमथाष्टारं कुर्यादग्निसमीपतः इति ।। शौनकोऽपि – आयुष्कामो दिवारात्रौ स्रुवाकारं बलिं हरेत् ।

आयुरारोग्यकामस्तु ध्वजाकारं बलिं हरेत् ॥ मृत्युरोगविनाशार्थी नराकारं बलिं हरेत् । जनवश्यं कर्तुकामो वल्मीकाख्यं बलिं हरेत् ॥ आयुरारोग्य सौभाग्य पुत्रविद्यापशून् प्रति । कामश्च धनमोक्षादौ चक्राकारं बलिं हरेत् ॥ बदरीफलमात्रान्नमङ्गुल्यग्रैर्भुवि क्षिपेत् इति ।

இந்தப் பலிஹரணத்தை விசிறியின் வடிவமுடையதாய் அக்னியின் ஸமீபத்தில் சிஷ்டர்கள் செய்கின்றனர். இதில், காத்யாயனர்:- த்வஜாகாரமாயும், நராகாரமாயும், புற்றின்ஆகாரமாயும், சக்ராகாரமாயும் காம்ய பலிகளின் லக்ஷணத்தைச் சொல்லுகின்றனர். இந்த நான்கு பக்ஷங்களுள் ப்ராம்ஹணர்களுக்குச் சக்ராகாரமே நித்யமாய் ஆகின்றது. அல்லது சக்ராகாரமாய், எட்டு ஆரங்களுள்ளதாயும் அக்னி ஸமீபத்தில் செய்யலாம். சௌனகரும்:- ஆயுஸ்ஸை விரும்பியவன், பகலிலும், இரவிலும் ஸ்ருவம் போன்ற பலிஹரணம் செய்ய வேண்டும். ஆயுஸ்ஸையும், ஆரோக்யத்தையும் விரும்பியவன் த்வஜம் போன்ற பலிஹரணம் செய்ய வேண்டும். ம்ருத்ய் ரோகம் இவைகளைப் போக்க விரும்பியவன் மனிதன் போன்ற பலிஹரணம் செய்ய வேண்டும். ஜனங்களை வசப்படுத்த விரும்பியவன் புற்றைப் போன்ற பலிஹரணம் செய்ய வேண்டும் ஆயுஸ், ஆரோக்யம், ஸௌபாக்யம், புத்ரர், வித்யை, பசுக்கள், தனம், மோக்ஷம் முதலியவைகளை விரும்பியவன் சக்ராகாரமான பலிஹரணம் செய்ய வேண்டும். இலந்தைக் கனியின் அளவுள்ள அன்னத்தை விரல்களின் நுனிகளால் பூமியில் வைக்க வேண்டும்.

व्यासः — श्वभ्यश्च श्वपचेभ्यश्च पतितादिभ्य एव च । दद्याद्भूमौ बहिस्त्वन्नं पक्षिभ्योऽथ द्विजोत्तमः इति ॥ मार्कण्डेयोऽपि – एवं गृहबलिं कृत्वा गृहे गृहपतिः शुचिः । आप्यायनाय भूतानां कुर्यादुत्सर्गमादरात् इति ॥ याज्ञवल्क्यः – देवेभ्यस्तु हुतादन्नात् शेषात् भूतबलिं हरेत् । अन्नं भूमौ श्वचण्डाल वायसेभ्यश्च निक्षिपेत् ॥

संक्षालनमथान्नेन निनयेत् प्रागुदग्दिशि इति ।। मनुरपि – शुनां च पतितानां च श्वपचां पापरोगिणाम् । वायसानां कृमीणां च शनकैर्निर्वपेद्भुवि इति ।। स्मृत्यर्थसारेऽपि – भूतयज्ञबलिशेषं सोदकं स्वधा पितृभ्य इति प्राचीनावीती पितृभ्यो दद्यात् ततस्तथैव बहिर्निवेशनान्ते सोदकमन्नं श्वचण्डालपतितवायसेभ्यश्च निक्षिपेत् इति ।

**வ்யாஸர்:**- ச்வா (நாய்), ச்வபசர்கள் (நாயாடி) பதிதர் முதலானவர், பக்ஷிகள் இவர்களுக்கும், வெளியில் பூமியில் அன்னத்தைக் கொடுக்க வேண்டும். **மார்க்கண்டேயரும்:**- க்ருஹஸ்தன் க்ருஹத்தில் இவ்விதம் க்ருஹபலி தானத்தைச் சுத்தனாய்ச் செய்து, பூதங்களுக்கு த்ருப்தி செய்ய அன்னத்தைக் கொடுக்க வேண்டும். **யாக்ஞவல்க்யர்:**- தேவர்களுக்கு ஹோமம் செய்து மீந்த அன்னத்தினின்றும் பூத பலிதானம் செய்ய வேண்டும். ச்வா, சண்டாளன், வாயஸம் இவர்களுக்கும் அன்னத்தைப் பூமியில் வைக்க வேண்டும். பிறகு பாத்ரத்தை அலம்பி அந்த ஜலத்தை அன்னத்துடன் வடகிழக்கில் விடவேண்டும். **மனுவும்:**- நாய்கள், பதிதர்கள், ச்வபசர்கள், பாபரோகிகள், (குஷ்டரோகிகள், அல்லது க்ஷயரோகிகள்) வாயஸங்கள், க்ரிமிகள் இவர்களுக்கும் அன்னத்தைப் பூமியில் மெதுவாய்க் கொடுக்க வேண்டும். **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்திலும்:**- பூதயக்ஞ பலிகள் செய்து மீந்த அன்னத்தை ஜலத்துடன், 'ஸ்வதாபித்ருப்ய:' என்ற மந்த்ரத்தால், ப்ராசீனாவீதியாய்ப் பித்ருக்களுக்குக் கொடுக்க வேண்டும். பிறகு அப்படியே வீட்டின் வெளியில் ஜலத்துடன் கூடிய அன்னத்தை ச்வ சண்டாள பதித வாயஸங்களின் பொருட்டு வைக்க வேண்டும்.

तत्र मन्त्रो विष्णुपुराणे दर्शितः— देवा मनुष्याः पशवो वयांसि सिद्धाः सदैत्योरगयक्षसङ्घाः । प्रेताः पिशाचास्तरवः समस्ताः ये चान्नमिच्छन्ति मयाऽत्र दत्तम् ।। पिपीलिकाः

कीटपतङ्गकाद्या बुभुक्षिताः कर्मनिबन्धबद्धाः । प्रयान्तु ते तृप्तिमिदं मयाऽन्नं तेभ्यो निसृष्टं सुखिनो भवन्तु ॥ येषां न माता न पिता न बन्धुर्नैवास्ति सिद्धिर्न तथाऽन्नमस्ति । तत्तृप्तयेऽन्नं भुवि दत्तमेतत्ते यान्तु तृप्तिं मुदिता भवन्तु ॥ भूतानि सर्वाणि तथाऽन्नमेतदहं च विष्णुर्न यतोऽन्यदस्ति । तस्मादहं भूतहिताय भूमावन्नं प्रयच्छामि भवाय तेषाम् । चतुर्दिशो लोकगणो य एष तत्र स्थिता येऽखिलभूतसङ्घाः । तृप्त्यर्थमन्नं हि मया निसृष्टं तेषामिदं ते मुदिता भवन्तु ॥ इत्युच्चार्य नरो दद्यादन्नं श्रद्धासमन्वितः । भुवि सर्वोपकाराय गृही सर्वाश्रयो यतः इति ।

அதில் மந்த்ரம் தெரிவிக்கப்பட்டுள்ளது விஷ்ணு புராணத்தில்:- 'தேவா மனுஷ்யாः + முதிதாபவந்து' என்பது மந்த்ரம். இதன் பொருள் - 'தேவர், மனிதர், பசுக்கள், பக்ஷிகள், ஸித்தர், தைத்யர், உரகர், யக்ஷர், ப்ரேதர், பிசாசர், வ்ருக்ஷங்கள், நான் கொடுக்கும் அன்னத்தை விரும்புகிறவரும், எறும்புகள், கீடங்கள், விளக்குப் பூச்சிகள் என்ற இவர்கள் பசியுற்றவராய், முன்வினையால் கட்டப்பட்டவராய் இருப்பவர் த்ருப்தியை அடையவேண்டும். இந்த அன்னம் என்னால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. அவர்கள் ஸுகமுடையவராய் ஆகவேண்டும். எவருக்குத் தாயில்லையோ, பிதாவுமில்லையோ, பந்துவுமில்லையோ, ஸித்தியில்லையோ, அன்னமுமில்லையோ, அவரின் த்ருப்திக்காக இந்த அன்னம் பூமியில் கொடுக்கப்பட்டது. அவர் த்ருப்தியை அடையவேண்டும். ஸந்துஷ்டராக வேண்டும். ஸகல ப்ராணிகளும், இந்த அன்னமும், நானும் விஷ்ணுவே. அவரினும் வேறு ஒன்றுமில்லை. ஆகையால் நான் பூதங்களின் ஹிதத்திற்காகப் பூமியில் அன்னத்தை, அவர்களின் நன்மைக்காகக் கொடுக்கிறேன். நான்கு திக்குகளும், ஸகல உலகங்களும், அவைகளிலுள்ள ஸகல பூத கணங்களும், எவையோ அவைகளின் த்ருப்திக்காக

இந்த அன்னம் என்னால் கொடுக்கப்பட்டது. அவர் த்ருப்தராகக் கடவர்' என்று. இவ்விதம் மந்த்ரத்தை உச்சரித்து, ச்ரத்தையுடன் எல்லாருடையவும் உபகாரத்திற்காகப் பூமியில் அன்னத்தைக் கொடுக்க வேண்டும். ஏனெனில்? க்ருஹஸ்தன் எல்லோருக்கும் ஆச்ரயமாயிருப்பவன்.

मार्कण्डेयः – ततः शनैर्बलिं दद्यात् बहिः काकशुनां तथा। तत्र मन्त्रः – ऐन्द्रवारुणवायव्याः सौम्या याम्याश्च नैरृताः। वायसाः प्रतिगृह्णन्तु भूमौ पिण्डं मयाऽर्पितम् ।। श्वानौ हि श्यामशबलौ वैवस्वतकुलोद्भवौ। ताभ्यां पिण्डं मया दत्तं स्यातां मे तावहिंसकौ। मन्त्राभ्यामेव चैताभ्यां श्वकाकबलिमुत्सृजेत्। दत्वाऽनेन विधानेन बलिं पश्चादुपस्पृशेत् इति ।।

மார்க்கண்டேயர்:- பிறகு காக்கைகள், ச்வாக்கள் இவைகளுக்கும் பலியை மெதுவாய்க் கொடுக்க வேண்டும். அதில் மந்த்ரம்- 'ஐந்த்ரவாருண + வஹிம்ஸகௌ' என்பது. இதன் பொருள் - 'இந்த்ரன், வருணன், வாயு, ஸோமன், யமன், நிர்ருதி இவர்களைச் சேர்ந்த காக்கைகள், என்னால் பூமியில் வைக்கப்பட்ட அன்னத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும். கறுப்பு நிறமும், பல வர்ணங்களும் உடையதும், வைவஸ்வதனின் குலத்திற் பிறந்ததுமான நாய் இரண்டு எவையோ, அவைகளுக்கு அன்னம் என்னால் கொடுக்கப்பட்டது. அவரிருவரும் என்னை ஹிம்ஸிப்பவரல்லாதவராய் ஆகவேண்டும்' என்பதாம். இந்த இரண்டு மந்த்ரங்களால் ச்வ காகபலியைக் கொடுக்க வேண்டும். இந்த விதிப்படி பலியைக் கொடுத்துப் பிறகு ஆசமனம் செய்ய வேண்டும்.

मुख्यानुकल्पभेदेन पितृयज्ञस्वरूपमाह कात्यायनः – श्राद्धं वा पितृयज्ञः स्यात् पित्र्यो बलिरथापि वा । एकमप्याशयेन्नित्यं पितृयज्ञार्थसिद्धये ।। अदैवं नास्ति चेदन्यो भोक्ता भोज्य मथापि वा।

अप्युद्धृत्य यथाशक्ति किञ्चिदन्नं यथाविधि । पितृभ्य इदमित्युक्त्वा स्वधाकारमथाहरेत् इति ।। व्यासः– एकं तु भोजयेद्विप्रं पितॄनुद्दिश्य सादरम् । नित्यं श्राद्धं समुद्दिष्टं पितृयज्ञो गतिप्रदः ।। उद्धृत्य वा यथाशक्ति किञ्चिदन्नं समाहितः । वेदतत्वार्थविदुषे द्विजायैव प्रदापयेत्। विप्राभावे तु पिण्डं वा दद्यात् दक्षिणतो भुवि । कुक्कुटाण्डप्रमाणस्तु पिण्ड इत्यभिधीयते इति।।

முக்ய கல்பம், கௌண கல்பம் என்ற பேதத்துடன், பித்ரு யக்ஞத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார், காத்யாயனர்:- ச்ராத்தமே பித்ருயக்ஞம் எனப்படும். அல்லது பித்ருபலியாவது பித்ருயக்ஞம் எனப்படும். ப்ரதிதினமும், பித்ருயக்ஞம் ஸித்திப்பதற்காக, ஒருவனையாவது, விச்வதேவரில்லாமல் புஜிக்கச் செய்ய வேண்டும். போக்தாவான ஒருவன் கிடைக்காவிடில், போஜனார்ஹமான வஸ்துவும் கிடைக்காவிடில், தன் சக்திக்கியன்றபடி, ஸ்வல்பமான அன்னத்தை எடுத்து, விதிப்படி, 'பித்ருப்ய இதம் ஸ்வதா' என்று சொல்லிப் பூமியில் வைக்க வேண்டும். வ்யாஸர்:- பித்ருக்களை உத்தேசித்து, ஆதரவுடன் ஒரு ப்ராம்ஹணனைப் புஜிப்பிக்க வேண்டும். இந்த ச்ராத்தம் நித்யமெனச் சொல்லப்பட்டுள்ளது. இந்தப் பித்ருயக்ஞம் நற்கதியைக் கொடுப்பதாகும். அல்லது யதாசக்தி ஸ்வல்ப அன்னத்தை எடுத்துக் கவனமுடையவனாய், வேதத்தின் அர்த்தத்தை அறிந்துள்ள ப்ராம்ஹணனுக்கே கொடுக்கவும். ப்ராம்ஹணன் இல்லாவிடில், தென்புறத்தில் ஒரு அன்ன பிண்டத்தையாவது வைக்க வேண்டும். கோழி முட்டையளவுள்ளது பிண்டமெனப்படுகிறது.

मनुः— दद्यादहरहः श्राद्धमन्नाद्येनोदकेन वा । पयोमूल-फलैर्वाऽपि पितृभ्यः प्रीतिमावहन् ।। एकमप्याशयेन्नित्यं पित्रर्थे पाञ्चयज्ञिके । न चैवात्राशयेत् कश्चिद्वैश्वदेवं प्रति द्विजम् इति ।। मार्कण्डेयोऽपि — पितॄनुद्दिश्य विप्रांस्तु भोजयेद्विप्रमेव वा इति ।।

तत्प्रकारमाह प्रचेताः – नावाहनाग्नौकरणे न पिण्डो न विसर्जनम्। दत्वा तु दक्षिणां शक्त्या नमस्कारैर्विसर्जयेत्॥ एकमप्याशयेन्नित्यं षण्णामप्यन्वहं गृही इति॥

மனு:- ஒவ்வொரு நாளிலும், பித்ருக்களுக்கு ப்ரீதி செய்பவனாய், அன்னம் முதலியதாலாவது, ஜலத்தினாலாவது, பால், வேர், பழம் இவைகளாலாவது ச்ராத்தம் செய்ய வேண்டும். பஞ்சயக்ஞத்தைச் சேர்ந்த பித்ருயக்ஞத்தில், ஒருவனையாவது புஜிப்பிக்க வேண்டும். இதில் விச்வதேவருக்காக ஒருவனையும் புஜிப்பிக்க வேண்டியதில்லை. மார்க்கண்டேயரும்:- பித்ருக்களை உத்தேசித்து, ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும். ஒரு ப்ராம்ஹணனையாவது புஜிப்பிக்க வேண்டும். அதன் ப்ரகாரத்தைச் சொல்லுகிறார். ப்ரசேதஸ்:- ஆவாஹனமில்லை, அக்னியில் ஹோமமில்லை, பிண்டமில்லை, விஸர்ஜனமுமில்லை, யதாசக்தி தக்ஷிணையைக் கொடுத்து நமஸ்காரங்களுடன் அனுப்ப வேண்டியது. க்ருஹஸ்தன் ப்ரதிதினமும் ஆறுபேர்களின் ஸ்தானத்தில் ஒருவனையாவது புஜிப்பிக்க வேண்டும்.

स्मृत्यर्थसारे – नित्यश्राद्धमदैवं षट्पुरुषं च भवति, तत्र न देशकालनियमाः कर्त्रादिनियमाः इति॥ सारसमुच्चये – नित्यश्राद्धं तु यन्नाम दैवहीनं तदुच्यते। तत्तु त्रिपूरुषं ज्ञेयं दक्षिणापिण्डवर्जितम् इति। व्यासोऽपि – नित्यश्राद्धे तु गन्धाद्यैर्द्विजानभ्यर्च्य शक्तितः। सर्वान् पितृगणान् सम्यक्सहैवोद्दिश्य भोजयेत्। आवाहनस्वधाकार-पिण्डाग्नौ करणादिकम्। ब्रह्मचर्यादिनियमो विश्वेदेवास्तथैव च॥ नित्यश्राद्धे त्यजेदेतान् भोज्यमन्नं प्रकल्पयेत् इति॥ शातातपः – नित्यश्राद्धमदैवं स्यादर्घ्यपिण्डादिवर्जितम् इति।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- நித்ய ச்ராத்தமென்பது விச்வே தேவரில்லாததும், ஆறுபேர்களை உத்தேச்யரா யுடைத்துமாம். அதில் தேசம், காலம், நியமம் இவையில்லை.

கர்த்தா முதலியவரின் நியமங்களுமில்லை. ஸாரஸமுச்சயத்தில்:- நித்யச்ராத்தமென்பது விச்வே தேவரில்லாதது எனப்படுகிறது. அது மூன்று புருஷர்களை உத்தேசித்துள்ளது. தக்ஷிணையும் பிண்டமுமில்லை. வ்யாஸரும்:- நித்ய ச்ராத்தத்தில் யதாசக்தி, கந்தம் முதலியதால் ப்ராம்ஹணர்களைப் பூஜித்து, பித்ரு கணங்களெல்லோரையும் சேர்த்தே உத்தேசித்துப் புஜிப்பிக்க வேண்டும். ஆவாஹனம், ஸ்வதாகாரம், பிண்டம், ஹோமம் முதலியது, ப்ரம்ஹசர்யம் முதலிய நியமம், விச்வேதேவர் இவைகளை த்யஜிக்க வேண்டும். போஜனார்ஹமான அன்னத்தைக் கொடுக்க வேண்டும். சாதாதபர்:- நித்ய ச்ராத்தம் என்பது, விச்வேதேவர், அர்க்யம், பிண்டம் முதலியவை இல்லாததாகும்.

मत्स्यपुराणेऽपि — नित्यं तावत् प्रवक्ष्यामि अर्घ्यावाहन-वर्जितम् । अदैवं तद्विजानीयात् पार्वणे तद्धि कीर्तितम् इति ।। रत्नावल्याम् – पितृगाथा - अपि स्यात् स कुलेऽस्माकं यः श्राद्धं नित्यमाचरेत् । पुष्पमूलफलैर्वाऽपि तिलतोयेन वा पुनः इति ।। अत्र केचित् वैश्वदेवबलिहरणयोः देवयज्ञभूतयज्ञपितृयज्ञाना मन्तर्भाव-माचक्षते ।। तथा च व्यासः – वैश्वदेवस्तु कर्तव्यो देवयज्ञः स वै स्मृतः । देवेभ्यस्तु हुतादन्नाच्छेषाद्भूतबलिं हरेत् ।। भूतयज्ञः स विज्ञेयो भूतिदः सर्वदेहिनाम् । श्राद्धं वा पितृयज्ञः स्यात् पित्र्यो बलिरथापि वा इति ।।

மத்ஸ்யபுராணத்திலும்:- நித்யச்ராத்தத்தைச் சொல்லுகிறேன். அது, அர்க்யம், ஆவாஹனமிவை யில்லாததும், தைவதமில்லாததுமாகும். அதெல்லாம் பார்வண ச்ராத்தத்தில் சொல்லப்பட்டுள்ளது. ரத்னாவளியில்:- பித்ருக்களின் வாக்யமிவ்விதமுள்ளது. 'எவன் ப்ரதிதினமும் புஷ்பம், மூலம், பலம், திலோதகமிவைகளில் ஒன்றினாலாவது நமக்கு ச்ராத்தத்தைச் செய்வானோ, அவன் நம் குலத்தில்

பிறப்பானு?' என்று. இங்கு சிலர், வைச்வதேவம், பலிஹரணம் இவைகளுள், தேவயக்ஞ, பூதயக்ஞ, பித்ருயக்ஞங்களுக்கு அந்தர்ப்பாவத்தைச் சொல்லு கின்றனர். அவ்விதமே, வ்யாஸர்:- வைச்வதேவம் செய்ய வேண்டும், அது தேவயக்ஞம் எனப்பட்டது. தேவர்களுக்கு ஹோமம் செய்து மிகுந்த அன்னத்தினின்றும் பூதபலியைச் செய்ய வேண்டும். அது பூதயக்ஞம் என்றறியவும். இது எல்லோருக்கும் ஐச்வர்யத்தையளிப்பதாகும். ச்ராத்தத்தையாவது பித்ருயக்ஞமெனலாம். அல்லது பித்ரு பலியையாவது பித்ருயக்ஞமெனலாம்.

हारीतोऽपि – वैश्वदेवो देवयज्ञो वास्तुपालनभूतेभ्यो बलिहरणं भूतयज्ञः इति ॥ आपस्तम्बः – अहरहर्भूतबलिर्मनुष्येभ्यो यथा-शक्तिदानं देवेभ्यः स्वाहाकार आकाष्ठात् पितृभ्यः स्वधाकार ओद पात्रात् स्वाध्यायः इति ॥

ஹாரீதரும்:- வைச்வதேவம் தேவயக்ஞமெனப் படுகிறது. வீட்டைப் பரிபாலிக்கும் பூதங்களுக்குப் பலியைக் கொடுப்பது பூதயக்ஞமெனப்படுகிறது. ஆபஸ்தம்பர் :- ப்ரதிதினம் பூதங்களுக்குப் பலிகொடுப்பதும், மனிதருக்கு யதாசக்தி தானமும், தேவர்களுக்கு ஒரு ஸமித்தையாவது ஸ்வாஹா என்று ஹோமம் செய்வதும், பித்ருக்களுக்கு ஜலத்துடன் பாத்ரத்தையாவது ஸ்வதா என்று கொடுப்பதும், தன் வேதத்தை அத்யயனம் செய்வதும் ஐந்து யக்ஞங்களாகும்.

अत्रोज्ज्वला – अपरेणाग्निं सप्तमाष्टमाभ्यामुदगपवर्गमिति बलिहरणप्रकारेण भूतेभ्योऽहरहर्बलिर्देय एष भूतयज्ञः । मनुष्येभ्यश्च यथाशक्ति दानं कर्तव्यम् । एष मनुष्ययज्ञः । देवेभ्यश्च स्वाहाकारेण प्रदानमाकाष्ठात् । अशनीयाभावे षड्भिराद्यैः प्रतिमन्त्रमिति वैश्वदेवोक्तप्रकारेण काष्ठमपि तावद्देयम् । एष देवयज्ञः । केचिद्वैश्वदेवाहुतिभ्यः पृथग्भूतां देवेभ्यः स्वाहेत्येकामाहुतिं मन्यन्ते ।

वयं तु न तथा । पितृभ्यः स्वधाकार ओदपात्रात् । अन्नाद्यभावे उदपात्रमपि स्वधाकारेण देयम् । एष पितृयज्ञः । स्वाध्यायः - नित्यस्वाध्यायः । एष ब्रह्मयज्ञः । एते महायज्ञाः इति ॥ माधवीये – त एते देवयज्ञपितृयज्ञभूतयज्ञास्त्रयोऽपि वैश्वदेवशब्देनोच्यन्ते इति ॥

இங்கு உஜ்வலை இவ்விதமுள்ளது. 'அக்னிக்கு மேல்புறத்தில்' என்று சொல்லியபடி பூதங்களுக்கு ப்ரதிதினமும் பலி கொடுக்கப்பட வேண்டும், இது பூதயக்ஞம். மனுஷ்ய யஜ்ஞம். யதாசக்தி தானம் செய்ய வேண்டும். இது மனுஷ்யர்களுக்கும் தேவர்களுக்கும் ஸ்வாஹாகாரத்தினால் ஸமித்தையாவது கொடுக்க வேண்டும். புஜிக்கக் கூடிய வஸ்துவில்லாவிடில், வைச்வதேவத்தில் சொல்லியபடி ஆறு மந்த்ரங்களால் ஸமித்தையாவது ஹோமம் செய்ய வேண்டும். இது தேவயக்ஞம். சிலர் வைச்வதேவாஹுதிகளைத் தவிர்த்துத் தனியாய் 'தேவேப்ய:ஸ்வாஹா' என்று ஒரு ஆஹுதியைத் தேவயக்ஞம் என்கின்றனர். நாம் அவ்விதம் சொல்லவில்லை. அன்னம் முதலியதில்லாவிடில் ஜலபாத்ரத்தையாவது 'ஸ்வதா' என்று கொடுக்க வேண்டும். இது பித்ருயக்ஞம். ப்ரதிதினமும் வேதாத்யயனம் செய்வது ப்ரம்ஹயக்ஞம். இவை மஹாயக்ஞங்களாம். மாதவீயத்தில்:- இந்தத் தேவயக்ஞ, பித்ருயக்ஞ, பூதயக்ஞங்கள் மூன்றும் வைச்வதேவ சப்தத்தால் சொல்லப்படுகின்றன.

स्मृत्यर्थसारेऽपि – देवयज्ञो वैश्वदेवाख्यं कर्म । देवयज्ञहुतशेषेण शुद्धं देशमभ्युक्ष्य बलिहरणं कुर्यादेष भूतयज्ञः । बलिशेषं सोदकं स्वधा पितृभ्य इति प्राचीनावीती पितृभ्यो दद्यादेष पितृयज्ञः । एते देवयज्ञभूतयज्ञ पितृयज्ञाः वैश्वदेवमित्युच्यन्ते इति ॥ मनुरपि – विधाय पितृयज्ञान्तं वैश्वदेवं ततो बहिः । श्वपाकपतिताद्यर्थमन्नमल्पं क्षिपेद्बहिः इति ।

ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலும்:- தேவயக்ஞம் வைச்வதேவமென்னும் கர்மம். தேவயக்ஞத்தில் ஹோமம் செய்து மீதியுள்ளதால் சுத்தமான ஸ்தலத்தை ப்ரோக்ஷித்துப் பலிஹரணம் செய்ய வேண்டும். இது பூதயக்ஞம். பலிசேஷத்தை ஜலத்துடன் ப்ராசீநாவீதியாய் 'ஸ்வதா பித்ருப்ய:' என்று பித்ருக்களுக்குக் கொடுக்க வேண்டும். இது பித்ருயக்ஞம். இந்தத் தேவயக்ஞ, பூதயக்ஞ, பித்ருயக்ஞங்கள் வைச்வதேவமெனச் சொல்லப்படுகின்றன. மனுவும்:- பித்ருயக்ஞம் வரையுள்ள வைச்வதேவத்தைச் செய்து, பிறகு வெளியில் ச்வபாகர், பதிதர் முதலியவர்க்காக ஸ்வல்பமான அன்னத்தை வைக்க வேண்டும்.

बलिहरणस्य वैश्वदेवशब्देनाभिधानमाश्रयाश्रयिणोर-भेदमाश्रित्येति द्रष्टव्यम्। आश्रयाश्रयिभावश्च कालादर्शे दर्शितः – बलीनां वैश्वदेवस्य वदन्त्याश्रयतां बुधाः इति । एवं च देवयज्ञभूतयज्ञपितृयज्ञानां वैश्वदेव बलिहरणात्मकत्वात् पृथङ्न कर्तव्या इति । अन्ये तु पञ्चयज्ञानां पृथक्त्वेन विधानात् तेषां वैश्वदेवबलिहरणयोरनन्तर्भावमाहुः ।। तथा च जमदग्निः – वैश्वदेवं दिवा रात्रौ कुर्याद्बलिहृतिं तथा । महतः पञ्चयज्ञांस्तु दिवैवेत्याह गौतमः इति ।।

பலிஹரணத்தை வைச்வதேவசப்தத்தால் சொல்லுவது, ஆச்ரயாச்ரயிகளின் அபேதத்தால் என்றறியவும். ஆச்ரயாச்ரயிபாவமும் காலாதர்சத்தில் காண்பிவிக்கப்பட்டிருக்கிறது- 'பலிகளுக்கு வைச்வதேவம் ஆச்ரயமென்று அறிந்தவர் சொல்லுகின்றனர்' என்று. 'இவ்விதம், தேவயக்ஞ, பூதயக்ஞ, பித்ருயக்ஞங்கள் வைச்வதேவ பலிஹரண ரூபமானதால், அவை தனியாய்ச் செய்யப்பட வேண்டியதில்லை' என்று, சிலரோவெனில், பஞ்சயக்ஞங்களைத் தனியாய் விதித்திருப்பதால், அவைகளுக்கு வைச்வதேவ

பலிஹரணங்களுள் அந்தர்ப்பாவமில்லை என்கின்றனர். அவ்விதமே. ஜமதக்னி:- வைச்வதேவம், பலிஹரணம் இவைகளைப் பகலிலும், ராத்ரியிலும் செய்ய வேண்டும். பஞ்சமஹாயக்ஞங்களையோவெனில் பகலில்தான் செய்ய வேண்டும் என்றார் கௌதமர்.

बोधायनोऽपि – अग्नये स्वाहेति षडाहुतीर्जुहोत्येष वैश्वदेवः सन्तिष्ठते, धर्माय स्वाहेत्यादि नमो रुद्राय पशुपतय इत्यन्तं बलीन् हरत्येतद्बलिहरणं सन्तिष्ठते, देवेभ्यः स्वाहेत्यग्नौ जुहोत्येष देवयज्ञः सन्तिष्ठते, पितॄनुद्दिश्यैकं ब्राह्मणं भोजयेदपिवा दक्षिणेनाग्निं दर्भान् दक्षिणाग्रान् संस्तीर्य तेषु पिण्डं ददाति पितृभ्यः स्वधाऽस्त्वित्यपि वाऽपस्तत् पितृ यज्ञः सन्तिष्ठते, उत्तरेणाग्निं शुचौ देशे प्रागग्रान् दर्भान् संस्तीर्य गन्धपुष्पधूपदीपैरलङ्कृत्य बलिमुपहरति भूतेभ्यो नम इत्यपः पुष्पाणि तद्भूत यज्ञः सन्तिष्ठते, मनुष्ययज्ञार्थ मतिथिं भोजयेदपिवा हन्तकारं ब्राह्मणेभ्यो दद्यात् इति ॥

போதாயனரும்:- 'அக்னயேஸ்வாஹா' என்பது முதலான ஆறு ஆஹுதிகளை ஹோமம் செய்ய வேண்டும், இது வைச்வதேவம் முடிகிறது. 'தர்மாயஸ்வாஹா' என்பது முதல் 'நமோருத்ராய பசுபதயே' என்பது வரையுள்ள மந்த்ரங்களால் பலிகளைக் கொடுக்க வேண்டும். இது பலிஹரணம் முடிகிறது. 'தேவேப்ய:ஸ்வாஹா' என்ற மந்த்ரத்தால் அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். இது தேவயக்ஞம் முடிகிறது. பித்ருக்களை உத்தேசித்து ஒரு ப்ராம்ஹணனைப் புஜிப்பிக்க வேண்டும். அல்லது அக்னிக்குத் தென்புறத்தில் தெற்கு நுனியுள்ளதாய்த் தர்ப்பங்களைப் பரப்பி அவைகளில் 'பித்ருப்ய: ஸ்வதாஸ்து' என்று பிண்டத்தைக் கொடுக்க வேண்டும், அல்லது ஜலத்தையாவது கொடுக்க வேண்டும். அது பித்ருயக்ஞம் முடிகிறது. அக்னிக்கு வடக்கில் சுத்த ஸ்தலத்தில் கிழக்கு நுனியுள்ளதாய்த் தர்ப்பங்களைப் பரப்பி, கந்தம், புஷ்பம், தூபம், தீபம் இவைகளால் அலங்கரித்து 'பூதேப்யோ நம:'

என்று பலியைக் கொடுக்க வேண்டும். ஜலத்தையும், புஷ்பங்களையும் கொடுக்க வேண்டும். அது பூதயக்ஞம் முடிவடைகிறது. மனுஷ்யயக்ஞத்திற்காக அதிதியைப் புஜிப்பிக்க வேண்டும். அல்லது 'ஹந்தகாரத்தை' (அன்னத்தை) ப்ராம்ஹணர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

आपस्तम्बपरिशिष्टेऽपि – वैश्वदेवबलिहरणानन्तर मग्रं दत्वा देवयज्ञार्थमुद्धृतादन्नात् देवेभ्यः स्वाहेत्येकामग्नौ जुहुयुः, पितृयज्ञार्थमपि वैश्वदेवबलिहरणशिष्टादन्नात् प्राचीनावीतिनो दक्षिणतोऽग्नेः पितृतीर्थेन पितृभ्यः स्वधाऽस्त्विति बलिं हरेयुः, भूतयज्ञार्थमपि वैश्वदेवशिष्टादन्नादेवोत्तरतोऽग्नेर्देवतीर्थेन बलिमुपहरेयुः भूतेभ्यः स्वाहेति, मनुष्ययज्ञार्थमतिथिं भोजयेयु रतिथ्यभावे सङ्कल्पितं दद्युः इति ॥

ஆபஸ்தம்ப பரிசிஷ்டத்திலும்:- வைச்வதேவம் பலிஹரணம் இவைகளைச் செய்தபிறகு, அக்ரதானம் செய்து, தேவயக்ஞத்திற்காக உத்தரணம் செய்த அன்னத்தினின்றும், 'தேவேப்ய: ஸ்வாஹா என்ற மந்த்ரத்தால் அக்னியில் ஒரு ஆஹுதியைச் செய்ய வேண்டும். பித்ருயக்ஞத்திற்காகவும், வைச்வதேவ பலிஹரண சேஷமான அன்னத்தினின்றும், ப்ராசீனாவீதியாய் அக்னிக்குத் தென்புறத்தில் பித்ரு தீர்த்தத்தால் 'பித்ருப்ய: ஸ்வதாஸ்து' என்று பலியைக் கொடுக்க வேண்டும். பூதயக்ஞத்திற்காகவும், வைச்வதேவ சேஷமான அன்னத்தினின்றே அக்னிக்கு வடபுறத்தில் தேவ தீர்த்தத்தால் 'பூதேப்ய:ஸ்வாஹா' என்ற மந்த்ரத்தால் பலியைக் கொடுக்க வேண்டும். மனுஷ்ய யக்ஞத்திற்காக அதிதியைப் புஜிப்பிக்க வேண்டும். அதிதி இல்லாவிடில் ஸங்கல்பிக்கப்பட்ட அன்னத்தை (ப்ராம்ஹணனுக்கு)த் தானம் செய்ய வேண்டும்.

तात्पर्यदर्शनेऽपि – पञ्चमहायज्ञेभ्यः पृथग्वैश्वदेवम् । प्रकरणान्तरात् संज्ञाभेदाः च कर्मभेदावगतेः । अत एव भाष्ये

वैश्वदेवस्य तेषां च प्रयोगः पृथगेवोपपादितः इति ।। प्रयोगोऽपि दर्शितस्तत्रैव – गृहमेधिनो यदशनीयमन्नं, ततो होमार्थं हविष्यमन्नं पात्रे कल्पयति । अहविष्यं क्षारलणादिसंसृष्टं द्वितीये । हविष्यमन्नं देवयज्ञाद्यर्थं तृतीये । सर्वतः समवदायाग्रार्थं चतुर्थे । सर्वत एव समवदाय मनुष्ययज्ञार्थं पञ्चमे । ततः परिषेचनं कृत्वा प्रथमकल्पितादन्नात् अग्नये स्वाहेत्यादिभिः षडाहुतीर्हुत्वोत्तर-परिषेचनम् । अथोदीचीनमुष्णं भस्मापोह्य तस्मिन्नहविष्यं स्वाहाकारेण जुहुयात् । अथषडाहुतिशेषमहविष्यशेषेण संसृज्य सूपसंसृष्टेन तेनान्नेन रौद्रान्तं बलिं हृत्वा अग्रं च देयमिति विहितं ग्रासचतुष्टयपर्याप्तमन्नं भिक्षवे दद्यात् ।

தாத்பர்யதர்சனத்திலும்:- 'பஞ்சமஹா யக்ஞங்களினின்றும் தனியாயுள்ளது வைச்வதேவம். ப்ரகரண பேதத்தாலும், நாமபேதத்தாலும் கர்மபேதம் அறியப்படுகிறது. ஆகையால்தான் பாஷ்யத்தில் வைச்வதேவத்திற்கும், பஞ்சமஹாயக்ஞங்களுக்கும் ப்ரயோகம் தனியாகவே சொல்லப்பட்டுள்ளது என்றுள்ளது. ப்ரயோகமும் காண்பிவிக்கப்பட்டள்ளது தாத்பர்யதர்சனத்திலேயே- ''க்ருஹஸ்தனுக்குப் போஜனார்ஹமான அன்னமெதுவோ அதினின்றும் ஹோமத்திற்காக ஹவிஷ்யமான அன்னத்தைப் பாத்ரத்தில் வைக்க வேண்டும். அஹவிஷ்யமாய் உறைப்பு உப்பு முதலியவையுடன் கலந்துள்ளதை இரண்டாவது பாத்ரத்தில் வைக்கவும். ஹவிஷ்யமான அன்னத்தைத் தேவயக்ஞம் முதலியதற்காக மூன்றாவது பாத்ரத்தில் வைக்கவும். எல்லாவற்றினின்றுமெடுத்து அக்ரதானத்திற்காக நான்காவது பாத்ரத்தில் வைக்கவும். எல்லாவற்றினின்றுமேயெடுத்து மனுஷ்ய யக்ஞத்திற்காக ஐந்தாவது பாத்ரத்தில் வைக்கவும். பிறகு பரிஷேசனம் செய்து, முதலாவதாய் வைக்கப்பட்ட அன்னத்தினின்றும் 'அக்னயேஸ்வாஹா என்பது முதலான மந்த்ரங்களால் ஆறு

ஆஹுதிகளைச் செய்து, உத்தர பரிஷேசனம் செய்யவும். பிறகு வடபுறத்திலுள்ள உஷ்ணமான பஸ்மத்தை ஒதுக்கி, அதில் 'ஸ்வாஹா' என்று அஹவிஷ்யத்தை ஹோமம் செய்யவும். பிறகு ஆறுஹுதி செய்து மீந்துள்ளதை அஹவிஷ்யத்தின் மீதியுடன் கலந்து, பருப்புடன் கலந்துள்ள அந்த அன்னத்தினால் ரௌத்ரபலி வரையில் பலிஹரணம் செய்து, 'அக்ரதானமும் செய்ய வேண்டும்' என்று விதிக்கப்பட்ட நான்கு கபள ப்ரமாணமுள்ள அன்னத்தைப் பிக்ஷுகனுக்குக் (ப்ரம்ஹசாரி, அல்லது ஸன்யாஸிக்கு) கொடுக்கவும்.

अथ देवयज्ञेन यक्ष्य इत्यागूर्य, विद्युदसीत्यपः स्पृष्ट्वा परिषिच्य देवेभ्यः स्वाहेत्यग्नौ हविष्यं हुत्वा परिषिच्य वृष्टिरसीत्यपः स्पृशेत्। एवमितरेष्वपि महायज्ञेषु विद्युद्वृष्टी भवतः । नावषट्कार होमेषु विद्युद्वृष्टी इत्युपदेशः । अथ प्राचीनावीती पितृयज्ञेन यक्ष्य इत्युक्त्वा शुचौ भूमौ हस्तेनाङ्गुष्ठ प्रदेशिन्यावन्तरेण पितृभ्यः स्वधाऽस्त्विति दद्यात्। अथ यज्ञोपवीती भूतयज्ञेन यक्ष्य इत्युक्त्वा शुचौ भूमौ हस्तेन इदं भूतेभ्योऽस्त्विति वा भूतेभ्यः स्वाहेति वा दद्यात्। अथ मनुष्ययज्ञेन यक्ष्य इत्युक्त्वा ब्राह्मणतर्पणं सङ्कल्पितस्य वा दानम् इति ।।

பிறகு, 'தேவயக்ஞேந யக்ஷ்யே', என்று ஸங்கல்ப்பித்து, 'வித்யுதஸி' என்பதால் ஜலத்தைத் தொட்டு, பரிஷேசனம் செய்து 'தேவேப்ய: ஸ்வாஹா' என்பதால் அக்னியில் ஹவிஷ்யத்தை ஹோமம் செய்து, பரிஷேசனம் செய்து, 'வ்ருஷ்டிரஸி' என்பதால் ஜலத்தைத் தொடவும். இவ்விதமே மற்ற மஹாயக்ஞங்களிலும் 'வித்யுத்வருஷ்டி' மந்த்ரங்களால் ஜலத்தைத் தொடுவதென்பதுண்டு. வஷட்காரமில்லாத ஹோமங்களில் 'வித்யுத்வ்ருஷ்டி' மந்த்ரங்கள் இல்லையென்பது ரஹஸ்யம். பிறகு, ப்ராசீனாவீதியாய் 'பித்ருயக்ஞேந யக்ஷ்யே' என்று ஸங்கல்ப்பித்து, சுத்தமான ஸ்தலத்தில் கையினால் பெருவிரல் தர்ஜனீ விரல்

இவைகளின் மத்யத்தால் 'பித்ருப்ய:ஸ்வாஸ்து' என்று ஹவிஷ்யத்தை வைக்க வேண்டும். பிறகு உபவீதியாய், 'பூதயக்ஞேநயக்ஷ்யே' என்று ஸங்கல்ப்பித்து, சுத்தமான ஸ்தலத்தில் கையினுல் 'இதம் பூதேப்யோஸ்து' என்ருவது, 'பூதேப்ய:ஸ்வாஹா' என்ருவது ஹவிஷ்யத்தை வைக்க வேண்டும். பிறகு 'மனுஷ்யயக்ஞேந யக்ஷ்யே' என்று ஸங்கல்ப்பித்து, ப்ராம்ஹண போஜனத்தையாவது, ஸங்கல்ப்பிக்கப்பட்ட அன்னத்தின் தானத்தையாவது செய்ய வேண்டும்'' என்று.

सर्वमेतत् संगृह्योक्तं कालादर्शे — वैश्वदेवे बलिहृतावन्तर्भावं प्रचक्षते। ब्रह्मयज्ञान्ययज्ञानां बह्वृचाः केचनर्षयः ॥ बोधायनापस्तम्बौ च बह्वृचा अपि केचन। अनन्तर्भावमप्याहुः पृथक्त्वेनोपदेशतः इति ॥

இது முழுவதும் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டுள்ளது காலாதர்சத்தில் :- வைச்வதேவத்திலும், பலிஹரணத்திலும், ப்ரம்ஹயக்ஞம் தவிர மற்ற யக்ஞங்களுக்கு அந்தர்ப் பாவத்தைச் சில பஹ்வ்ருச ருஷிகள் சொல்லுகின்றனர். போதாயனரும், ஆபஸ்தம்பரும், சில பஹ்வ்ருசருஷிகளும் அந்தர்ப் பாவமில்லை என்கின்றனர், தனியாய்ப் படித்திருப்பதே காரணம்.

अत्र मनुष्ययज्ञस्यापि बलिहरणरूपत्वमाश्रित्य चतुर्णामन्तर्भाव उक्तः ॥ तथा च स्मृत्यर्थसारे — निवीती सनकादिभ्यो मनुष्येभ्यो हन्तेति दद्याद्वद्रा हन्ताकारं हन्तेति त्यजेत् इति ॥ चन्द्रिकायामपि — अतिथिभ्योऽन्नदानं यत् नृयज्ञः सर्वपञ्चमः। अशक्तावन्नमुद्धृत्य हन्तेत्येवं प्रकल्पयेत् इति ॥ कात्यायनः — स्वाहाकारवषट्कारनमस्कारा दिवौकसाम्। स्वधाकारः पितॄणां तु हन्ताकारो नृणां तथा इति ॥

இங்கு, மனுஷ்ய யக்ஞத்திற்கும் பலிஹரண ரூபத்வத்தை ஆச்ரயித்து நாலுக்கும் அந்தர்பாவம்

சொல்லப்பட்டது. அவ்விதமே, ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- நிவீதியாய் ஸநகாதிகளின் பொருட்டு, 'மனுஷ்யேப்யோஹந்தா' என்று கொடுக்க வேண்டும். அல்லது 'ஹந்தா' என்று சொல்லிப் பூமியில் அன்னத்தை வைக்கவும். சந்த்ரிகையிலும்:- அதிதிகளுக்கு அன்னத்தைக் கொடுப்பது ஐந்தாவதான மனுஷ்ய யக்ஞம். சக்தி இல்லாவிடில் அன்னத்தை எடுத்து 'ஹந்தா' என்று பூமியில் வைக்க வேண்டும். காத்யாயனர்:- ஸ்வாஹாகாரம், வஷட்காரம், நமஸ்காரம் இவை தேவர்களுக்கு. ஸ்வதாகாரம் பித்ருக்களுக்கு. ஹந்தாகாரம் மனுஷ்யர்களுக்குமாம்.

काष्र्णाजिनिः — भिक्षां वा पुष्कलं वाऽपि हन्ताकारमथापि वा । असम्भवे सदा दद्यादुदपात्रमथापि वा इति ॥ व्यासोऽपि – हन्ताकारमथाग्रं वा भिक्षां वा शक्तितो द्विजः । दद्यादतिथये नित्यं बुध्येत्तं परमेश्वरम् इति ॥ मनुः – वैश्वदेवे तु निर्वृत्ते यद्यन्योऽतिथिराव्रजेत् । तस्मा अन्नं यथाशक्ति प्रदद्यात् न बलिं हरेत् इति । शातातपः – ग्रासमात्री भवेद्भिक्षा पुष्कलं तच्चतुर्गुणम् । पुष्कलानि च चत्वारि हन्ताकारं विदुर्बुधाः इति । स्मृतिरत्ने – यवानां व्रीहिशालीनां द्वे शते ग्रासमुच्यते । ग्रासप्रमाणं भिक्षा स्यादग्रं ग्रासचतुष्टयम् इति । प्रजापतिः – ग्रासमात्रं भवेद्भिक्षा अग्रं ग्रासचतुष्टयम् । अग्रं चतुर्गुणीकृत्य हन्ताकारं विधीयते इति ।

கார்ஷ்ணாஜினி:- பிக்ஷையையாவது, புஷ்கலத்தையாவது, ஹந்தாகாரத்தையாவது கொடுக்க வேண்டும். முடியாவிடில் ஜலபாத்ரத்தையாவது கொடுக்க வேண்டும். வ்யாஸரும்:- ப்ராம்ஹணன் ப்ரதிதினமும் யதாசக்தி, ஹந்தாகாரத்தை, அல்லது அக்ரத்தை, அல்லது பிக்ஷையை அதிதிக்குக் கொடுக்க வேண்டும். அதிதியைப் பரமேச்வரனாய் நினைக்க வேண்டும். மனு:- அதிதிபோஜனம் வரையிலுள்ள வைச்தேவம் ஆன பிறகு

அதிதியான மற்றொருவன் வந்து விட்டால் மறுபடி பாகம் செய்து அவனுக்கும் யதாசக்தி அன்னத்தைக் கொடுக்க வேண்டும். அந்த அன்னத்திலிருந்து பலிஹரணம் செய்ய வேண்டியதில்லை. சாதாதபர்:- ஒரு கபள ப்ரமாணமுள்ள அன்னம் 'பிக்ஷ' எனப்படும். அது நான்கு மடங்குள்ளது 'புஷ்கல' எனப்படும். நான்கு புஷ்கலங்களின் ப்ரமாணமுள்ளதை 'ஹந்தாகாரம்' என்கின்றனர் அறிந்தவர்கள். ஸ்ம்ருதிரத்னத்தில்:- யவங்கள், அல்லது வ்ரீஹிகள், அல்லது சாலிகள் இவைகளில் இருநூறு கொண்டது 'க்ராஸம்' எனப்படுகிறது. க்ராஸத்தினளவுள்ளது 'பிக்ஷ' எனப்படும். நான்கு க்ராஸங்களுள்ளது 'அக்ரம்' எனப்படும். ப்ரஜாபதி:- ஒரு க்ராஸ ப்ரமாணமுள்ளது 'பிக்ஷ' எனப்படும். நான்கு க்ராஸங்களுள்ளது 'அக்ரம்' எனப்படும். அக்ரம் நான்கு உள்ளது 'ஹந்தாகாரம்' எனப்படுகிறது.

इह केचित् वैश्वदेवाख्यस्य कर्मणः अन्नसंस्कारार्थत्वमिच्छति। तत्राश्वलायनः – सायंप्रातः सिद्धस्य हविष्यस्य जुहुयात् इति। आपस्तम्बश्च – यस्याग्नौ न क्रियते यस्य चाग्रं न दीयते न तत् भोक्तव्यम् इति॥ यमोऽपि – होमाग्रदानरहितं न भोक्तव्यं कथञ्चन। अविभक्तेषु संसृष्टेष्वेकेनापि कृतं च यत्। न सर्वैरपि कर्तव्यं लौकिकाग्नौ कृतं यदि इति॥

இங்கு சிலர், வைச்வதேவம் என்னும் கர்மத்திற்கு அன்ன ஸம்ஸ்காரார்த்தத்வத்தை விரும்புகின்றனர். (வைச்வதேவம் அன்னத்தின் ஸம்ஸ்காரத்திற்காகச் செய்யப்படுகின்றது என்கின்றனர்.) அங்கு, ஆச்வலாயனர்:- இரவிலும், பகலிலும், பக்வமான அன்னத்தை ஹோமம் செய்ய வேண்டும். ஆபஸ்தம்பரும்:- எந்த அன்னம் அக்னியில் ஹோமம் செய்யப்பட வில்லையோ, எந்த அன்னத்தால் 'அக்ர' தானம் செய்யப்படவில்லையோ அந்த அன்னம் புஜிக்கத் தகுந்ததல்ல. யமனும்:- ஹோமமும், அக்ரதானமும்

செய்யப்படாத அன்னத்தை எவ்விதத்தாலும் புஜிக்கக் கூடாது. விபாகமில்லாமல் ஒரே குடும்பமாய் வஸிக்கும் ப்ராதாக்களுள், ஒருவனுல் வைச்வதேவம் செய்யப்பட்டாலும், அதை எல்லோரும் தனித்தனி செய்ய வேண்டியதில்லை; லௌகிகாக்னியில் செய்யப்பட்டிருந்தால். (இந்த வசனங்களால் அன்ன ஸம்ஸ்காரார்த்தத்வம் தெரிகின்றது.)

अन्ये तु वैश्वदेवस्य आत्मसंस्कारार्थत्वमिच्छन्ति ।। तथा च आश्वलायनः – तानेतानहरहः कुर्वीत इति ।। आपस्तम्बः – देवेभ्यः स्वाहाकार आकाष्ठात् इति । बोधायनः – प्रवासं गच्छतो यस्य गृहे कर्ता न विद्यते । पञ्चानां महतामेषां स यज्ञैः सह गच्छति ।। प्रवासे कुरुते चैतान् यद्यन्नमुपपद्यते । न चेदुत्पद्यते चान्नमद्भिरेतान् समापयेत् इति ।। मनुरपि – महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः इति ।।

மற்றவரோவெனில்:- வைச்வதேவம் ஆத்ம ஸம்ஸ்காரத்திற்காக என்கின்றனர். அவ்விதமே, ஆச்வலாயனர்:- இவைகளை ஒவ்வொரு நாளிலும் செய்ய வேண்டும். ஆபஸ்தம்பர்:- 'தேவேப்ய: ஸ்வாஹாகார ஆகாஷ்டாத்' என்கிறார். (இந்த ஸூத்ரம் முன் விவரிக்கப்பட்டுள்ளது.) போதாயனர்:- அயல் தேசம் செல்லும் க்ருஹஸ்தனுக்கு வீட்டில் பஞ்சமஹா யக்ஞங்களைச் செய்பவனில்லாவிடில், அவன் யக்ஞங்களுடனேயே செல்லுகிறான். ப்ரவாஸத்திலும் அன்னம் கிடைக்குமாகில் இவைகளைச் செய்ய வேண்டும். அன்னம் கிடைக்காவிடில், ஜலத்தினால் இவைகளைச் செய்து முடிக்க வேண்டும். மனுவும்:- பஞ்ச மஹா யக்ஞங்களாலும், ஜ்யோதிஷ்டோமாதி யக்ஞங்களாலும் இந்தச் சரீரத்திலுள்ள ஆத்மா, ப்ரம்ஹ ப்ராப்தி யோக்யனுகச் செய்யப்படுகிறான்.

कात्यायनोऽपि – सायं प्रातर्वैश्वदेवः कर्तव्यो बलिकर्म च । अनश्नताऽपि सततमन्यथा किल्बिषी भवेत् इति ।।

वचनद्वयबलादुभयार्थं वैश्वदेवकर्मेत्यपरे ।। तथा च स्मृत्यर्थसारे – वैश्वदेवाख्यं कर्म अन्नस्य चात्मनश्च संस्कारार्थं इति ।। व्यासोऽपि – गृहस्थो वैश्वदेवाख्यं कर्म प्रारभते दिवा । अन्नस्य चात्मनश्चैव संस्कारार्थं तदिष्यते इति ।।

**காத்யாயனரும்:-** இரவிலும், பகலிலும், வைச்வதேவம் பலிதானம் இவைகளைச் செய்ய வேண்டும். போஜனம் செய்யாவிடினும், ப்ரதிதினம் செய்ய வேண்டும். செய்யாவிடில் பாபமுடையவனாகிறான். இவ்விதம் இருவிதமாயுள்ள வசனங்களின் பலத்தால், வைச்வதேவமென்னும் கர்மம் உபயார்த்தம் என்கின்றனர் சிலர். (அன்ன ஸம்ஸ்காரத்திற்கும் ஆத்ம ஸம்ஸ்காரத்திற்கும் என்பதாம்.) அவ்விதமே, **ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:-** வைச்வதேவம் என்னும் கர்மம், அன்னத்திற்கும் ஆத்மாவுக்கும் ஸம்ஸ்காரத்திற்காகும். **வ்யாஸரும்:-** க்ருஹஸ்தன் வைச்வதேவமென்னும் கர்மத்தைப் பகலில் ஆரம்பிக்க வேண்டும். அது அன்னத்திற்கும் ஆத்மாவுக்கும் ஸம்ஸ்காரத்திற்கென்று சொல்லப்படுகிறது.

तदेतद्विज्ञानेश्वरीयमाधवीयादौ पुरुषार्थत्वेन व्यवस्थापितम् ।। तथा हि – केचिद्वैश्वदेवस्य पुरुषार्थत्वेनव्यवस्थापितम् । तथा हि – केचिद्वैश्वदेवस्य पुरुषार्थत्वमन्नसंस्कारकर्मकत्वं चेच्छन्ति । तदयुक्तं, परस्परविरोधात् । अन्नसंस्कारत्वे ह्यन्नस्य प्राधान्यं वैश्वदेवस्य गुणता । पुरुषार्थत्वे तु तद्विपर्ययः । एकस्यैव युगपत् प्राधान्यं गुणत्वं च विरुध्येयाताम् । तर्ह्यस्त्वन्नसंस्कारतैवेति न वाच्यम् । तत्र हि प्रतिपाकमावृत्तिप्रसङ्गः । प्रतिप्रधानं गुणावृत्तिरिति न्यायात् । तस्मात् पुरुषार्थत्वमेव न्याय्यम् इति ।। अत एव गृह्यपरिशिष्टेऽभिहितम् – प्रोषितोऽप्यात्मसंस्कारं कुर्यादेवाविचारयन् इति ।

இந்த வைச்வதேவம், விக்ஞானேச்வரீயம், மாதவீயம் முதலியதில் 'புருஷார்த்தம்' என வ்யவஸ்தை செய்யப்பட்டுள்ளது. அது இவ்விதம். 'சிலர் வைச்வதேவத்திற்குப் புருஷார்த்தத்வம் அன்ன ஸம்ஸ்காரார்த்தத்வம் என்ற இரண்டையும் விரும்புகின்றனர். அது யுக்தமல்ல. (ஏனெனில்) பரஸ்பரம் விரோதம் இருப்பதால். (எவ்விதமெனில்) அன்ன ஸமஸ்காரார்தத்வ பக்ஷத்தில் அன்னத்திற்கு ப்ராதான்யம், வைச்வதேவத்திற்கு குணத்வம். புருஷார்த்தத்வ பக்ஷத்தில், இதற்கு மாறுதல். ஒன்றுக்கே ஒரே ஸமயத்தில் ப்ராதான்யமும், குணத்வமும் விருத்தங்களாகும். 'அப்பொழுது அன்ன ஸம்ஸ்காரர்த்தத்வமே இருக்கட்டும்' என்றும் சொல்லக் கூடாது. அந்தப் பக்ஷத்தில் ஒவ்வொரு பாகத்திலும் வைச்வதேவத்தை ஆவ்ருத்தி செய்ய வேண்டுமென்பது ப்ரஸக்தமாகும். 'ப்ரதி ப்ரதானம் குணாவ்ருத்தி:' என்ற ந்யாயத்தால். ஆகையால் புருஷார்த்தத்வத்தை ஒப்புவதே ந்யாய்யமாகும்' என்று. ஆகையால்தான், க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:- 'வெளித் தேசத்தில் இருப்பவனாயினும் ஸந்தேஹமில்லாதவனாய், ஆத்ம ஸம்ஸ்காரத்தைச் செய்ய வேண்டும்' என்று சொல்லப்பட்டுள்ளது.

गोभिलोऽपि — यद्येकस्मिन् काले व्रीहियवौ पच्येयातामन्यतरस्य हुत्वा कृतं मन्येत। यद्येकस्मिन् काले पुनः पुनरन्नं पच्येत सकृदेव बलिं कुर्वीत। यद्येकस्मिन् काले बहुधाऽन्नं पच्येत गृहपतिमहानसादेवैनं बलिं कुर्वीत इति ॥ अयमर्थः – नानाद्रव्यकान्नपाकेऽपि पुनः पुनः पाकेऽपि बहूनामविभक्तानां भ्रात्रादीनां पृथक् पृथक् पाकेऽप्येकस्मादेव गृहपतिपाकादेव होतव्यम् इति ॥

**கோபிலரும்:-** 'ஒரே ஸமயத்தில் நெல்லும், யவையும் சமைக்கப்படுமாயினும், ஒன்றால் ஹோமம் செய்து

மற்றதையும் ஹோமம் செய்ததாய் எண்ண வேண்டும். ஒரே ஸமயத்தில் அடிக்கடி அன்னம் பாகம் செய்யப்பட்டாலும், ஒரே தடவை பலிதானம் செய்ய வேண்டும். ஒரே ஸமயத்தில் பலவிதமாய் அன்னம் சமைக்கப்பட்டாலும், க்ருஹபதியின் சமையற்கட்டிலுள்ள அன்னத்தாலேயே பலிதானம் செய்ய வேண்டும். இதன் பொருள் -'அநேகம் த்ரவ்யமுள்ள அன்னத்தின் பாகத்திலும், அடிக்கடி செய்யும் பாகத்திலும், அநேகம் ப்ராதாக்கள் விபாகமில்லாமல் ஒரே க்ருஹத்தில் தனித்தனியாய்ப் பாகங்கள் செய்தாலும், க்ருஹபதியின் பாகம் ஒன்றிலிருந்தே ஹோமம் செய்ய வேண்டும்' என்பதாம்.

स्मृतिसंग्रहे – एकपाकेन वसतां पितृदेवद्विजार्चनम् । एकं भवेद्विभक्तानां तदेव स्याद्गृहे गृहे इति ।। सायं प्रातः सिद्धस्य इत्यादि वचनजातमुत्पत्तिप्रयोग प्रदर्शनपरम् । तानेतान् यज्ञानहरहः कुर्वीत इत्यादिरधिकारविधिः इति माधवीये ।।

**ஸ்ம்ருதிஸங்க்ரஹத்தில்:-** ஒரே பாகத்துடன் வஸிக்கும் ப்ராதாக்களுக்குப் பித்ருக்கள், தேவர்கள், ப்ராம்ஹணர்கள் இவர்களின் பூஜை ஒன்றே ஆகும். விபாகம் செய்து கொண்டவர்களானல் ஒவ்வொருவரின் க்ருஹம்தோறும் அது செய்யப்பட வேண்டும். 'இரவிலும், பகலிலும் பாகம் செய்யப்பட்ட அன்னத்தால்' என்பது முதலிய வசனங்கள் அன்னத்தின் உத்பத்தியையும், ப்ரயோகத்தையும் தெரிவிப்பதில் தாத்பர்யமுள்ளவை. 'இந்தப் பஞ்ச மஹாயக்ஞங்களை ப்ரதிதினமும் செய்ய வேண்டும்' என்பது முதலியது அதிகாரத்தின் விதியாம் என்று மாதவீயத்தில்.

पञ्चमहायज्ञान् प्रशंसति भृगुः – यत्फलं सोमयागेन प्राप्नोति धनवान् द्विजः । सम्यक् पञ्चमहायज्ञैर्दरिद्रस्तावदाप्नुयात् इति । अकरणे प्रत्यवायमाह स एव – पञ्चयज्ञांस्तु यो मोहान्न करोति गृहाश्रमी । तस्य नास्ति परो लोको लोके भवति निन्दितः ।। अकृत्वा

वैश्वदेवं तु भुञ्जते ये द्विजोत्तमाः । सर्वे ते निष्फला ज्ञेयाः पतन्ति नरकेऽशुचौ इति ॥ द्विजोत्तमाः - ब्राह्मणाः ॥ वसिष्ठः – अकृत्वा वैश्वदेवं तु भुञ्जते ये द्विजाधमाः । स्वप्रधानान्नपाकेन काकयोनिं व्रजन्ति ते इति ॥

பஞ்சமஹாயக்ஞங்களை ப்ரசம்ஸிக்கிறார், ப்ருகு:- தனமுள்ள ப்ராம்ஹணன் ஸோம யாகத்தால் எவ்வளவு பலனை அடைவானோ அவ்வளவு பலனை, தரித்ரன் விதிப்படி பஞ்சமஹாயக்ஞங்களைச் செய்வதால் அடைவான். செய்யாவிடில் தோஷத்தைச் சொல்லுகிறார், ப்ருகுவே:- எந்த க்ருஹஸ்தன் அறியாமையால் பஞ்சமஹா யக்ஞங்களைச் செய்யவில்லையோ அவனுக்குப் பரலோகம் இல்லை. அவன் உலகில் நிந்திக்கப்பட்டவனாக ஆகிறான். வைச்வதேவத்தைச் செய்யாமல் எந்த ப்ராம்ஹணர்கள் புஜிக்கின்றனரோ, அவர்கள் எல்லோரும் பலமற்றவர்களாக அறியத்தகுந்தவர்கள். அவர் அசுத்தமான நரகத்தில் விழுகின்றனர். வஸிஷ்டர்:- எந்த ப்ராம்ஹணோத்தமர்கள் வைச்வதேவத்தைச் செய்யாமல் புஜிக்கின்றனரோ அவர்கள் தமக்கென்றே அன்னத்தைச் சமைத்ததால் காக்கையின் பிறப்பை அடைகின்றனர்.

व्यासोऽपि – ऋषीन् देवान् पितॄंश्चैव भूतानि ब्राह्मणांस्तथा । तर्पयन् विधिना विप्रो ब्रह्मभूयाय कल्पते । वैश्वदेवेन ये हीना आतिथ्येन बहिष्कृताः । सर्वे ते वृषला ज्ञेयाः प्राप्तवेदा अपि द्विजाः ॥ अकृत्वा पञ्चयज्ञांस्तु भुक्त्वा चान्द्रायणं चरेत् ॥ अकृत्वा वैश्वदेवं तु यो भुङ्क्तेऽनापदि द्विजः । स मूढो नरकं याति कालसूत्रमवाक्छिराः इति ॥ मनुः – ऋषयः पितरो देवा भूतान्यतिथयस्तथा । आशंसन्ते कुटुम्बिभ्यस्तेभ्यः कार्यं विजानता ॥ एवं यः सर्वभूतानि ब्राह्मणो नित्यमर्चति । स गच्छति परं स्थानं तेजोमूर्तिः पथर्जुना ॥ देवतातिथिभूतानां पितॄणामात्मनश्च यः । न निर्वपति

पञ्चानामुच्छ्वसन्न स जीवति इति ॥ आत्मा - ब्रह्म । निर्वापः - पृथक्करणम् । यजनमिति यावत् ॥

**வ்யாஸரும்**:- ரிஷிகள், தேவர்கள், பித்ருக்கள், பூதங்கள், ப்ராம்ஹணர்கள் இவர்களை விதிப்படி த்ருப்தி செய்விக்கும் ப்ராம்ஹணன் ப்ரம்ஹ ஸாயுஜ்யத்தை அடைகிறான். எவர் வைச்வதேவம் இல்லாதவரும், அதிதி பூஜை இல்லாதவருமாய் இருக்கின்றனரோ அந்த ப்ராம்ஹணர் எல்லோரும் வேதம் கற்றவராயினும் சூத்ரரென அறியத்தகுந்தவர். பஞ்சமஹாயக்ஞங்களைச் செய்யாமல் புஜித்தால் சாந்த்ராயணத்தைச் செய்ய வேண்டும். வைச்வதேவத்தைச் செய்யாமல் எந்த ப்ராம்ஹணன் ஆபத்தில்லாத காலத்தில் புஜிக்கின்றானோ அந்த மூடன் தலைகீழாகக் காலஸூத்ரமெனும் நரகத்தை அடைகிறான். **மனு**:- ருஷிகள், பித்ருக்கள், தேவர்கள், பூதங்கள், அதிதிகள் என்ற இவர்கள் க்ருஹஸ்தர்களிடமிருந்து பூஜையை விரும்புகின்றனர். ஆகையால் அறிந்தவன் அவர்களுக்குப் பூஜையைச் செய்ய வேண்டும். இவ்விதம் எந்த ப்ராம்ஹணன் ப்ரதிதினம் ஸகல ப்ராணிகளையும் பூஜிக்கின்றானோ அவன் ஜ்ஞானஸ்வரூபனாய் நேரான (அர்ச்சிராதி) மார்க்கத்தினால் சிறந்த ஸ்தானத்தை (பரப்ரம்ஹத்தை) அடைகிறான். தேவர்கள், அதிதிகள், பூதங்கள், பித்ருக்கள், ப்ரம்ஹம் என்ற இவ்வைந்து பேர்களுக்கும் எவன் அன்னத்தைக் கொடுப்பதில்லையோ அவன் மூச்சுடனிருந்தாலும் பிழைத்திருப்பவனில்லை.

हारीतः — यद्देवेभ्यो जुहोति देवलोकं तेनाभिजयति, यत् पितृभ्यः पितृलोकं तेन, यत्स्वाध्यायमधीत ऋषि लोकं तेन, यद्भूतेभ्यो बलिं हरति भूतलोकं तेन, यद्ब्राह्मणांस्तर्पयति मनुष्यलोकं तेनाभि जयति इति ॥ कूर्मपुराणेऽपि – अकृत्वा तु द्विजः पञ्चमहायज्ञान् द्विजोत्तमाः । भुञ्जीत चेत् स मूढात्मा तिर्यग्योनिषु जायते इति ॥ संवर्तः

– पञ्चयज्ञविधानं च कुर्यादहरहर्द्विजः । न हापयेच्च तच्छक्तः श्रेयस्कामो द्विजोत्तमः ॥ हापनं तस्य कुर्वीत सदा मरणजन्मनोः इति । स्मृत्यन्तरे – होमस्तत्र न कर्तव्यः शुष्कान्नेन फलेन वा । पञ्चयज्ञविधानं तु न कुर्यान्मृतिजन्मनोः इति ॥

ஹாரீதர்:- தேவர்களுக்கு ஹோமம் செய்வதால் தேவலோகத்தை ஜயிக்கிறான். பித்ருக்களுக்குக் கொடுப்பதால் பித்ரு லோகத்தையும், அத்யயனம் செய்வதால் ருஷி லோகத்தையும், பூதங்களுக்குப் பலியைக் கொடுப்பதால் பூதலோகத்தையும், ப்ராம்ஹணர்களை த்ருப்தி செய்வதால் மனுஷ்ய லோகத்தையும் ஜயிக்கிறான். கூர்ம புராணத்திலும்:- ஓ ப்ராம்ஹணோத்தமர்களே! எந்த ப்ராம்ஹணன் ஐந்து மஹாயக்ஞங்களைச் செய்யாமல் புஜிப்பானோ அந்த மூடன் பசு, பக்ஷி ஜாதிகளில் பிறக்கிறான். ஸம்வர்த்தர்:- ப்ராமஹணன் ப்ரதிதினமும் பஞ்சமஹாயக்ஞங்களைச் செய்ய வேண்டும். சக்தியுள்ள ப்ராம்ஹணன் நன்மையை விரும்பினால் அவைகளை விடக்கூடாது. மரணசௌசம் ஜனனசௌசம் இவைகளில் எப்பொழுதும் அவைகளை விடவேண்டும். மற்றொருஸ்ம்ருதியில்:- ஜனனமரண சௌசங்களில் சுஷ்கான்னத்தினாலும் (தான்யத்தாலும்) பழத்தினாலும் கூட ஹோமத்தைச் செய்யக் கூடாது. பஞ்ச மஹாயஜ்ஞங்களையும் செய்யக் கூடாது.

श्राद्धे वैश्वदेवकालमाह मनुः – उच्छेषणं तु तत्तिष्ठेद्यावद्विप्रा विसर्जिताः । ततो गृहबलिं कुर्यादिति धर्मो व्यवस्थितः इति ॥ ततः - विप्रविसर्जनानन्तरं, गृहबलिं - वैश्वदेवं कुर्यात् इति तद्व्याख्याने ॥ तथा भविष्यत्पुराणे – कृत्वा श्राद्धं महाबाहो ब्राह्मणांश्च विसृज्य च । वैश्वदेवादिकं कर्म ततः कुर्यान्नराधिप इति ॥ मार्कण्डेयः – ततो नित्यक्रियां कुर्यात् भोजयेच्च तथाऽतिथीन् । ततस्तदन्नं भुञ्जीत सह भृत्यादिभिर्नरः ॥ नित्यक्रियां - श्राद्धारम्भात् पूर्वमकृतां

देवार्चनवैश्वदेवादिकां, ब्राह्मणविसर्जनानन्तरं कुर्यात्, इति चन्द्रिकायां व्याख्यातम्।। तत्रैव – यदा श्राद्धं पितृभ्यस्तु दातुमिच्छति मानवः। वैश्वदेवं तदा कुर्यात् निर्वृत्ते श्राद्धकर्मणि ।। प्रतिवासरिको होमः श्राद्धादौ क्रियते यदि। देवा हव्यं न गृह्णन्ति कव्यं च पितरस्तथा इति ।।

ச்ராத்தத்தில் வைச்வதேவ காலத்தைச் சொல்லுகிறார். மனு:- அந்த உச்சிஷ்டம் ப்ராம்ஹணர்களை அனுப்பும் வரை இருக்க வேண்டும். ப்ராம்ஹணர்களை அனுப்பிய பிறகு வைச்வ தேவத்தைச் செய்ய வேண்டும் என்று தர்மம் நிச்சயிக்கப்பட்டுள்ளது. அவ்விதமே, பவிஷ்யத் புராணத்தில் :- ஓ மஹாபாஹோ! ஓ அரசனே! ச்ராத்தம் செய்து, ப்ராம்ஹணர்களையும் அனுப்பிப் பிறகு வைச்வதேவம் முதலிய கர்மத்தைச் செய்ய வேண்டும் மார்க்கண்டேயர்:- பிறகு நித்யக்ரியையைச் செய்ய வேண்டும். அதிதிகளையும் புஜிப்பிக்க வேண்டும். பிறகு அந்த அன்னத்தை ப்ருத்யர் முதலியவர்களுடன் கூடப் புஜிக்க வேண்டும். 'நித்ய க்ரியையை - ச்ராத்தாரம்பத்திற்கு முன்செய்யாத தேவபூஜை வைச்வதேவம் முதலியதை, ப்ராம்ஹணர்களை அனுப்பிய பிறகு செய்ய வேண்டும்' என்று சந்த்ரிகையில் வியாக்யானம் செய்யப்பட்டுள்ளது. சந்த்ரிகையிலேயே:- மனிதன் எப்பொழுது பித்ருக்களுக்கு ச்ராத்தத்தைக் கொடுக்க விரும்புகின்றானோ அப்பொழுது ச்ராத்தம் முடிந்த பிறகு வைச்வதேவத்தைச் செய்ய வேண்டும். வைச்வதேவ ஹோமத்தை ச்ராத்தத்திற்கு முன் செய்தால் தேவர்கள் ஹவிஸ்ஸையும், பித்ருக்கள் கவ்யத்தையும் க்ரஹிப்பதில்லை.

मत्स्यपुराणे — ततश्च वैश्वदेवान्ते सभृत्यसुतबान्धवः। भुञ्जीतातिथिसंयुक्तः सर्वं पितृनिषेवितम् इति ।। मध्येऽपि वैश्वदेवादिकमुक्तमादित्यपुराणे – पितॄन् सन्तर्प्य विधिवत् बलिं दद्याद्विधानतः। वैश्वदेवं ततः कुर्यात् पश्चाद् ब्राह्मणवाचनम् इति ।।

अस्यार्थश्चन्द्रिकायामुक्तः – ब्राह्मणभोजनेन पितॄन् सन्तर्प्य, विकिररूपं बलिं प्रदाय अनन्तरं वैश्वदेवं कृत्वा पश्चात् स्वस्तिवाचनादि विसर्जनान्तं कुर्यात्। वैश्वदेवं प्रकुर्वीत नैत्यकं बलिमेव च इति द्वयोरानन्तर्येण विधानाद्वैश्वदेवा नन्तरमेव बलिहरणं कुर्यात् इति ॥

மத்ஸ்யபுராணத்தில்:- பிறகு வைச்வதேவத்தின் முடிவில் பணியாளர், பிள்ளைகள், பந்துக்கள் இவர்களுடன் கூடியவனாய், அதிதிகளுடனும் கூடியவனாய், பித்ரு சேஷமான எல்லாவற்றையும் புஜிக்க வேண்டும். ச்ராத்தத்தின் நடுவிலும் வைச்வதேவம் முதலியது சொல்லப்பட்டுள்ளது, ஆதித்யபுராணத்தில்:- 'விதிப்படி பித்ருக்களுக்கு த்ருப்தி செய்வித்து, விதிப்படி பலிதானம் செய்ய வேண்டும். பிறகு வைச்வதேவத்தைச் செய்ய வேண்டும். பிறகு ப்ராம்ஹணவாசனம் செய்ய வேண்டும்'. இந்த வசனத்திற்கு அர்த்தம் சந்த்ரிகையில் சொல்லப்பட்டுள்ளது - 'ப்ராம்ஹண போஜனத்தால் பித்ருக்களுக்கு த்ருப்தி செய்வித்து விகிரரூபமான பலியைக் கொடுத்துப் பிறகு வைச்வதேவத்தைச் செய்து, பிறகு ஸ்வஸ்திவாசனம் முதல் விஸர்ஜனம் வரையில் செய்ய வேண்டும். 'வைச்வதேவம் ப்ரகுர்வீத நைத்யகம் பலிமேவச' என்று வைச்வதேவ பலிஹரணங்களை சேர்த்து விதித்திருப்பதால் வைச்வதேவத்திற்கடுத்துப் பலிஹரணத்தைச் செய்ய வேண்டும்' என்று.

प्रकारान्तरमुक्तं स्मृत्यन्तरे – वैश्वदेवाहुतीरग्नावर्वाग् ब्राह्मणभोजनात्। जुहुयाद्भूतयज्ञादि श्राद्धं कृत्वा ततः स्मृतम् इति ॥ अर्वाग् ब्राह्मणभोजनादित्यनेन अग्नौ करणानन्तरं वैश्वदेवाहुतीः जुहुयादित्युक्तम् ॥ एवं च श्राद्धसमाप्त्यनन्तरं, श्राद्धमध्येऽपि विकिररूपबलिदानानन्तरं, अग्नौकरणानन्तरं वा वैश्वदेवानुष्ठानं बलिहरणं च कर्तव्यम् । न श्राद्धादौ कर्तव्यम् ।

अग्नौकरणानन्तरकरणपक्षे तु श्राद्धसमाप्त्यनन्तरं भूतयज्ञादिकं कर्तव्यमित्युक्तं भवति ॥

வேறொரு ப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது, மற்றொருஸ்ம்ருதியில்:- ப்ராம்ஹண போஜனத்திற்கு முன் வைச்வதேவாஹுதிகளை அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். ச்ராத்தம் செய்து பிறகு பூதயக்ஞம் முதலியதைச் செய்ய வேண்டும். இங்கு 'ப்ராம்ஹண போஜனத்திற்கு முன்' என்றதால், அக்னியில் ச்ராத்தத்திற்கான ஹோமம் செய்த உடன் வைச்வதேவாஹுதிகளை ஹோமம் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டது. இவ்விதமிருப்பதால், ச்ராத்தம் முடிந்த பிறகாவது, ச்ராத்த மத்யத்திலும் விகிரரூப பலியைக் கொடுத்த பிறகாவது, அக்னியில் ஹோமம் செய்த பிறகாவது, வைச்வதேவமும், பலிஹரணமும் செய்யப்பட வேண்டும். ச்ராத்தத்தின் ஆதியில் செய்யக் கூடாது. ஹோமத்திற்குப் பிறகு செய்யும் பக்ஷத்திலானால் (வைச்வதேவாஹுதிகளை மட்டில் செய்து) ச்ராத்தம் முடிந்த பிறகு, பூதயக்ஞம் முதலியதைச் செய்ய வேண்டும் என்று சொல்லியதாய் ஆகிறது.

एतच्च वैश्वेदवादिकं पृथक्पाकादेव कर्तव्यम्। तथा च सूत्रकारः – ब्राह्मणभोजनार्थादन्येनान्नेन वैश्वदेवादीन् कुर्यात् समाप्ते वा इति। लोकाक्षिरपि – गृहाग्निद्विजदेवानां यतीनां ब्रह्मचारिणाम्। श्राद्धपाको न दातव्यो यावत्पिण्डान्न निर्वपेत् इति ॥ पैठीनसिः – पितृपाकात् समुद्धृत्य वैश्वदेवं करोति यः। आसुरं तद्भवेच्छ्राद्धं पितॄणां नोपतिष्ठते इति ॥ लोकाक्षिः – पित्रर्थं निर्वपेत् पाकं वैश्वदेवार्थमेव च। वैश्वदेवं न पित्रर्थं न दार्शं वैश्वदेविकम् इति ॥ दार्शं - दर्शश्राद्धम् । अमावास्याश्राद्धार्थं निरुप्तमन्नं न वैश्वदेवार्थं भवतीत्यर्थः ॥

இந்த வைச்வதேவம் முதலியது, தனிப்பாகத்திலிருந்தே செய்யப்பட வேண்டும். அவ்விதமே ஸூத்ரகாரர்:- ப்ராம்ஹண

போஜனத்திற்காகச் செய்யப்பட்ட அன்னத்தினின்றும் வேறான அன்னத்தினால் வைச்வதேவம் முதலியவைகளைச் செய்ய வேண்டும். அல்லது ச்ராத்தம் முடிந்த பிறகாவது வைச்வதேவாதிகளைச் செய்யலாம். லோகாக்ஷியும்:- பூதபலி, வைச்வதேவம், மனுஷ்யயஜ்ஞம், தேவயக்ஞம், யதிகள், ப்ரம்ஹசாரிகள் இவர்களுக்கு, பிண்டதானம் செய்வதற்கு முன் ச்ராத்தான்னத்தைக் கொடுக்கக் கூடாது. பைடீநஸி:- பித்ருபாகத்திலிருந்து எடுத்து வைச்வதேவத்தை எவன் செய்கின்றானோ, அவனின் ச்ராத்தம் அஸுரர்களைச் சேர்ந்ததாகும். பித்ருக்களைச் சேர்வதில்லை. லோகாக்ஷி:- பித்ருக்களுக்காக அன்னத்தைப் பாகம் செய்ய வேண்டும். வைச்வதேவத்திற்காகவும் அன்னத்தைப் பாகம் செய்ய வேண்டும். வைச்வதேவான்னத்தைப் பித்ருக்களுக்கு உபயோகிக்கக் கூடாது. தர்ச ச்ராத்தத்திற்காகியதை வைச்வதேவத்திற்கு உபயோகிக்கக் கூடாது. தர்ச ச்ராத்தத்திற்காகச் செய்த அன்னத்தை வைச்வதேவத்திற்கு உபயோகிக்கக் கூடாதென்பது பொருள்.

आहिताग्नेर्विशेषमाह स एव – पक्षान्तं कर्म निर्वर्त्य वैश्वदेवं च साग्निकः। पिण्डयज्ञं ततः कुर्यात् ततोऽन्वाहार्यकं बुधः इति ।। पक्षान्तं कर्म - अग्न्यन्वाधानम्। अन्वाहार्यकं - अमावास्याश्राद्धम्।। न दार्शं वैश्वदेविकमित्येतत्तु आहिताग्न्यनाहिताग्निसाधारणम्।। चन्द्रिकायां प्रकारान्तरमुक्तम् – अग्नौकरणानन्तरं विकिरानन्तरं वा पृथक्पाकादेव कार्यम्। श्राद्धान्ते तु पितृपाकात् समुद्धृत्य वैश्वदेवादिकं कुर्यात् इति ।।

ஆஹிதாக்னி விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார், லோகாக்ஷியே:- ஆஹிதாக்னி, அன்வாதானத்தையும், வைச்வதேவத்தையும் செய்து, பிறகு பிண்ட பித்ருயக்ஞத்தையும், பிறகு தர்ச ச்ராத்தத்தையும் செய்ய வேண்டும். 'ந தார்சம் வைச்வதேவிகம்' என்பது ஆஹிதாக்னி, அநாஹிதாக்னி இருவருக்கும் பொதுவாகியது. சந்த்ரிகையில் வேறு

ப்ரகாரம் சொல்லப்பட்டுள்ளது:- 'ஹோமத்திற்குப் பிறகாவது, விகிரத்திற்குப் பிறகாவது செய்யும் வைச்வதேவத்தைத் தனியான அன்னத்தினின்றே செய்ய வேண்டும். ச்ராத்தத்தின் முடிவிலானால் பித்ரு பாகான்னத்திலிருந்து எடுத்து வைச்வதேவம் முதலியதைச் செய்ய வேண்டும்' என்று.

तथा च पैठीनसिः – श्राद्धं निर्वर्त्य विधिवद्वैश्वदेवादिकं ततः । कुर्याद्भिक्षां ततो दद्याद्धन्ताकारादिकं तथा इति ॥ ततः - पितृपाकसमुद्धृतादन्नादित्यर्थः ॥ साग्निकदर्शश्राद्धे वैश्वदेवार्थं पृथक्पाकः । अनाहिताग्निदर्शश्राद्धे न पृथक्पाकनियमः इति ॥ अन्ये तु पैठीनसिवचनस्य तथा व्याख्याने प्रमाणाभावात् श्राद्धे सर्वत्र वैश्व देवार्थं पृथक्पाक एव इत्याहुः । एवमेव शिष्टा आचरन्ति ॥

அவ்விதமே, பைடீநஸி:- விதிப்படி ச்ராத்தத்தை முடித்து, அதிலிருந்து வைச்வதேவம் முதலியதைச் செய்ய வேண்டும். அதிலிருந்து பிக்ஷையையும் கொடுக்க வேண்டும். ஹந்தாகாரம் முதலியதையும் அதிலிருந்து செய்ய வேண்டும். இங்குள்ள 'தத:' என்ற பதத்திற்கு 'பித்ரு பாகத்திலிருந்து எடுத்த அன்னத்தினின்று' என்பது பொருள். ஆஹிதாக்னி செய்யும் தர்ச ச்ராத்தத்தில் வைச்வதேவத்திற்காகத் தனியாய்ப் பாகம் செய்ய வேண்டும். அனாஹிதாக்னி செய்யும் தர்ச ச்ராத்தத்தில் தனிப்பாகம் செய்ய வேண்டிய நியமமில்லை என்று. சிலரோவெனில், பைடீநஸி வசனத்திற்கு அவ்விதம் வ்யாக்யானம் செய்வதில் ப்ரமாணமில்லாததால் ச்ராத்தமெல்லாவற்றிலும் வைச்வதேவத்திற்காகத் தனிப்பாகமே தான் என்கின்றனர். இவ்விதமேதான் சிஷ்டர்கள் அனுஷ்டிக்கின்றனர்.

सङ्ग्रहे तु – वृद्धावादौ क्षये चान्ते दर्शे मध्ये महालये । अन्त एव तु कुर्वीत वैश्वदेवं चतुर्विधम् इति । वृद्धौ - वृद्धिश्राद्धे । क्षये - मृताहश्राद्धे इत्यर्थः । वृद्ध्यादिचतुष्टयव्यतिरिक्तश्राद्धेषु विशेषो दर्शितः सङ्ग्रहे –

याजुषाः सामगाः पूर्वं मध्ये कुर्वन्ति बह्वृचाः । आथर्वणास्तृतीयांशे वैश्वदेवं त्रिधा मतम् इति ।। एतदेवाभिप्रेत्य गृह्यपरिशिष्टेऽभिहितम् – सम्प्राप्ते पार्वणश्राद्धे एकोद्दिष्टे तथैव च । अग्रतो वैश्वदेवं स्यात् पश्चादेकादशेऽहनि इति ।

ஸங்கிரஹத்திலானுல்:- நாந்தீ ச்ராத்தத்தில் ஆதியிலும், ப்ரத்யாப்திக ச்ராத்தத்தில் முடிவிலும், தர்ச ச்ராத்தத்தில் நடுவிலும், மஹாளயத்தில் முடிவிலும், ஆக நான்கு விதமாய் வைச்வதேவத்தைச் செய்ய வேண்டும். நாந்தீ ச்ராத்தம் முதலிய நான்கு ச்ராத்தங்களைத் தவிர்த்த மற்ற ச்ராத்தங்களிலுள்ள விசேஷம் காண்பிவிக்கப் பட்டுள்ளது, ஸங்க்ரஹத்தில்:- யாஜுஷர்களும் ஸாமகர்களும் ச்ராத்தத்திற்கு முன்பும், பஹ்வ்ருசர்கள் மத்யத்திலும், அதர்வவேதிகள் மூன்ருவது பாகத்திலும் (கடைசியிலும்) செய்கின்றனர். இவ்விதம் மூன்றுவிதமாயுள்ளது வைச்வதேவம். இதையே அபிப்ராயத்திற் கொண்டு சொல்லப்பட்டுள்ளது, க்ருஹ்யபரிசிஷ்டத்தில்:- பார்வண ச்ராத்தமாவது, ஏகோத்தேச்யக ச்ராத்தமாவது ப்ராப்தமானுல் ஆதியில் வைச்வதேவத்தைச் செய்ய வேண்டும். 11-ஆவது தினத்தில் ஏகோத்திஷ்டத்திற்குப் பிறகு செய்ய வேண்டும்.

## आतिथ्यम्

अथातिथ्यम् । तत्र व्यासः – आचम्य च ततः कुर्यात् प्राज्ञो द्वारावलोकनम् । मुहूर्तस्याष्टमं भागमुदीक्ष्यो ह्यतिथिर्भवेत् इति ।। शङ्खः – गोदोहमात्रमङ्कणेऽतिथिं प्रतीक्षमाण आसीत इति ।। माधवीये – ततो गोदोहमात्रं वै कालं तिष्ठेद्गृहाङ्कणे । अतिथिग्रहणार्थाय तदूर्ध्वं वा यथेच्छया ।। नाडिकायाश्चतुर्भागं गोदोहं ब्रुवते बुधाः इति । चन्द्रिकायाम् – गोदोहकालं काङ्क्षेत कृत्वा भूतबलिं द्विजः । अतिथिं तत्र सम्प्राप्तं पूजयेत् स्वागतादिना इति ।

## அதிதிபூஜை

இனி ஆதித்யம் சொல்லப்படுகிறது, அதில், வ்யாஸர்:- சாஸ்த்ரமறிந்தவன், ஆசமனம் செய்து, பிறகு வாயிலைப் பார்க்க வேண்டும். முஹூர்த்தத்தின் எட்டிலொருபாகம் (1/4- நாழிகை) வரையில் அதிதியை ப்ரதீக்ஷிக்க வேண்டும். சங்கர்:- கோதோஹன (மாடு கறக்கும்) காலமளவு வரையில் வாயிலில் அதிதியை எதிர்பார்த்திருக்க வேண்டும். மாதவீயத்தில்:- பிறகு வாயிலில் கோதோஹனகாலம் வரையில் இருக்க வேண்டும். அதிதியை ஏற்பதற்காக. அதற்கதிகமாயும் இஷ்டப்படி இருக்கலாம். ஒரு நாழிகையில் நான்கிலொரு பாகத்தைக் கோதோஹனம் என்கின்றனர் அறிந்தவர். சந்த்ரிகையில்:- ப்ராம்ஹணன் பூத பலியைச் செய்து, கோதோஹன காலம் வரையில் அதிதியை எதிர்பார்க்க வேண்டும். அக்காலத்தில் வந்த அதிதியை நல்வரவு கூறுவது முதலியதால் பூஜிக்க வேண்டும்.

मनुः – कृत्वैतद्बलिकर्मैवमतिथिं पूर्वमाशयेत्। भिक्षां च भिक्षवे दद्याद्विधिवद्ब्रह्मचारिणे इति ।। कूर्मपुराणे – गोदोहमात्रकालं वै प्रतीक्ष्यो ह्यतिथिः स्वयम् । अभ्यागतान् यथाशक्ति पूजयेदतिथिं यथा ।। भिक्षां वै भिक्षवे दद्यात् विधिवद् ब्रह्मचारिणे। दद्यादन्नं यथा शक्ति ह्यर्थिभ्यो लोभवर्जितः ।। सर्वेषामप्यलाभे तदन्नं गोभ्यो निवेदयेत् इति ।। व्यासः – गवाह्निकं परगवे दद्यादपि तृणादिकम् । अकृत्वा स्वयमाहारं स्वर्गलोकं स गच्छति इति ।। गवाह्निक मन्त्रो मार्कण्डेयेन दर्शितः – सौरभेय्यः सर्वहिताः सर्वपापप्रणाशनाः । प्रतिगृह्णन्तु मे ग्रासं गावस्त्रैलोक्यमातरः इति ।।

மனு:- இவ்விதம் இந்தப் பலிகர்மத்தைச் செய்து, அதிதியை முன்பு புஜிக்கச் செய்ய வேண்டும். ஸன்யாஸிக்கும், ப்ரம்ஹசாரிக்கும் விதிப்படி பிக்ஷையைக் கொடுக்க வேண்டும். கூர்ம புராணத்தில்:-

கோதோஹனகாலம் வரையில் அதிதியைத் தானுகவே ப்ரதீக்ஷிக்க வேண்டும். அக்காலத்தில் வந்த அதிதியைப்போல் அப்யாகதர் (விருந்தினர்)களையும் யதாசக்தி பூஜிக்க வேண்டும். ஸன்யாஸிக்கும், ப்ரம்ஹசாரிக்கும் யதாசக்தி பிக்ஷான்னத்தைக் கொடுக்க வேண்டும். மற்றும் யாசகருக்கும் யதாசக்தி லோபமின்றி அன்னத்தைக் கொடுக்க வேண்டும். ஒருவரும் கிடைக்காவிடில் அந்த அன்னத்தைப் பசுக்களுக்குக் கொடுக்கவும். வ்யாஸர்:- தான் ஆஹாரம் செய்வதற்கு முன்பே, புல் முதலியதையாவது கவாஹ்னிகமாய்ப் பிறரின் பசுவுக்குக் கொடுக்கவும். கொடுப்பவன் ஸ்வர்க்க லோகத்தை அடைவான். கவாஹ்னிக மந்த்ரம் மார்க்கண்டேயரால் சொல்லப்பட்டிருக்கிறது 'காமதேனுவினுடையவைகளும், எல்லோருக்கும் ஹிதமானவைகளும், ஸகல பாபங்களையும் அழிப்பவை களும், மூன்றுலகத்திற்கும் தாய்களாயுமுள்ள கோக்கள், எனது க்ராஸத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும்' என்று.

भारतेऽपि — दिने द्विरभिषेकश्च पितृदैवतपूजनम् । गवाह्निकप्रदानं च संविभागोऽतिथिष्वपि ।। ग्रासमप्येकमन्नस्य यो ददाति च गोर्दिने। स्वर्गलोकमवाप्नोति नरकं च न पश्यति इति ।। मनुः – विघसाशी भवेन्नित्यं नित्यं चामृतभोजनः । विघसो भुक्तशिष्टं स्याद्यज्ञशिष्टं तथाऽमृतम् ।। अघं स केवलं भुङ्क्ते यः पचत्यात्मकारणात् । यज्ञशिष्टाशनं ह्येतत् सतामन्नं विधीयते इति । गीतायामपि – यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः । ते त्वघं भुञ्जते पापा ये पचन्त्यात्मकारणात् इति ।। देवलः – देवार्थे ब्राह्मणार्थे च पचमानो न लिप्यते । अघं स केवलं भुङ्क्ते यः पचत्यात्मकारणात् । नात्मार्थं पाचयेदन्नं नात्मार्थं घातयेत् पशून् इति ।

பாரதத்திலும்:- பகலில் இருமுறை ஸ்நானமும், பித்ருக்கள் தேவதைகள் இவர்களின் பூஜையும்,

கவாஹ்னிக தானமும், அதிதிகளுக்கு அன்னதானமும் செய்யத்தகுந்தது. எவன் பகலில் ஒரு கபள மாத்ரமான அன்னத்தையாவது பசுவுக்குக் கொடுக்கின்றானோ அவன் ஸ்வர்க்கத்தை அடைவான், நரகத்தையும் பார்க்க மாட்டான். **மனு:-** ப்ரதிதினம் விகஸத்தைப் புஜிப்பவனாயும், அம்ருதத்தைப் புஜிப்பவனாயும் இருக்க வேண்டும். விகஸம் என்பது அதிதிகள் புஜித்து மீதியுள்ள அன்னம். அம்ருதம் என்பது யக்ஞம் செய்து மீதியுள்ள அன்னமாம். எவன் தனக்குமட்டில் சமைக்கின்றானோ அவன் பாபத்தையே புஜிக்கின்றான். யக்ஞம் செய்து மீதியுள்ள அன்னமே ஸாதுக்களின் அன்னமென்று விதிக்கப்படுகிறது. **பகவத்கீதையிலும்:-** யக்ஞ சேஷத்தைப் புஜிக்கும் ஸாதுக்கள் ஸகல பாபங்களாலும் விடப்படுகின்றனர். எவர்கள் தமக்கு மட்டில் அன்னத்தைச் சமைக்கின்றனரோ, அந்தப் பாபிகள் பாபத்தையே புஜிக்கின்றனர். **தேவலர்:-** தேவர்களுக்கும், ப்ராம்ஹணர்களுக்குமென்று சமைப்பவன் (பாபத்தினால்) பற்றப்படுவதில்லை. எவன் தனக்கு மட்டில் சமைக்கின்றானோ அவன் பாபத்தையே புஜிக்கின்றான். தனக்கென்று அன்னத்தைச் சமைக்கக் கூடாது. தனக்கென்று பசுக்களை வதைக்கக் கூடாது.

श्रुतिरपि — केवलाघो भवति केवलादी इति ।। हारीतः – अतिथीनागतान् शक्त्या पूजयेदविचारतः । अन्यानभ्यागतान् विप्रान् पूजयेच्छक्तितो गृही इति ।। आपस्तम्बः – अतिथीनेवाग्रे भोजयेद्बालान् वृद्धान् रोगसंबद्धान् स्त्रीश्चान्तर्वत्नीः इति, शेषभोज्यतिथीनां स्यात् न रसान् गृहे भुञ्जीतानवशेषमतिथिभ्यो नात्मार्थमभिरूपमन्नं पाचयेत् इति च ।। आगामिभ्यः अतिथिभ्यः गृहे गव्यादिरसानवशेष्य स्वयं भुञ्जीतेत्यर्थः ।। गौतमोऽपि – भोजयेत् पूर्वमतिथिकुमारव्याधितगर्भिणीसुवासिनीस्थविरान् जघन्यांश्च इति ।। सुवासिन्यः - दुहितरो भगिन्यश्च । स्थविराः - वृद्धाः । जघन्याः - परिचारकाः ।

ச்ருதியும்:- (பிறருக்குக் கொடாமல்) தான்மட்டில் புஜிப்பவன் பாபத்தையே அடைகின்றவனாகிறான். ஹாரீதர்:- வந்த அதிதிகளை விசாரிக்காமல், யதாசக்தி பூஜிக்க வேண்டும். மற்றும் அப்யாகதர்களான ப்ராம்ஹணர்களையும், யதாசக்தி க்ருஹஸ்தன் பூஜிக்க வேண்டும். ஆபஸ்தம்பர்:- அதிதிகளையே முதலில் புஜிப்பிக்க வேண்டும். பிறகு பாலர், வ்ருத்தர், ரோகிகள், கர்ப்பிணிகளான ஸ்த்ரீகள், இவர்களையும் புஜிப்பிக்க வேண்டும். அதிதிகளின் சேஷத்தைப் புஜிப்பவனாயிருக்க வேண்டும். வீட்டிலுள்ள மோர் முதலியவைகளை அதிதிகளுக்கு மீதிவைக்காமல் முழுவதையும் உபயோகித்துக் கொள்ளக் கூடாது. தனக்கென்று மதுரமான அபூபம் முதலியதைச் சமைக்கக் கூடாது. கௌதமரும்:- அதிதி, பாலன், ரோகி, கர்ப்பிணீ, ஸுவாஸினிகள் (பெண்களும், பகினிகளும்) வ்ருத்தர், பரிசாரகர்கள் இவர்களுக்கு முதலில் போஜனம் செய்விக்க வேண்டும். பிறகு தான் புஜிக்க வேண்டும்.

बोधायनोऽपि – सायं प्रातर्यदन्नं स्यात्तेन वैश्वदेवं बलिमुपहृत्य ब्राह्मणक्षत्रियविट्छूद्रानभ्यागतान् यथाशक्ति पूजयेद्यदि बहूनां न शक्नुयादे कस्मै गुणवते दद्याद्योवा प्रथममुपागतः स्याच्छूद्रश्चेदागत स्तं कर्मणि नियुञ्ज्याच्छ्रोत्रियाय वाऽग्रं दद्याद्ये नित्यभाक्तिकाः स्युस्तेषामनुपरोधेन संविभागो विहितो न त्वेव कदाचिददत्वा भुञ्जीताथाप्यत्रान्नगीतौ श्लोकावुदाहरन्ति – यो मामदत्वा पितृदेवताभ्यो भृत्यातिथिभ्यश्च सुहृज्जनाय। संपन्नमश्नन् विषमत्ति मोहात्तमद्म्यहं तस्य च मृत्युरस्मि ।। हुताग्निहोत्रः कृतवैश्वदेवः पूज्यातिथीन् भृत्यजनावशिष्टम्। तुष्टः शुचिः श्रद्दधदत्ति यो मां तस्यामृतं स्यां स च मां भुनक्ति इति ।।

போதாயனரும்:- இரவிலும், பகலிலும் எந்த அன்னம் உள்ளதோ அதனால் வைச்வதேவ பலிகளைச்

செய்து அப்யாகதர்களான ப்ராம்ஹண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரர்களை யதாசக்தி பூஜிக்க வேண்டும். அநேகருக்குப் பூஜை செய்யச் சக்தியில்லாவிடில் நற்குணங்களுள்ள ஒருவனுக்காவது கொடுக்க வேண்டும். அல்லது எவன் முதலில் வந்தவனோ அவனுக்குக் கொடுக்க வேண்டும். சூத்ரன் வந்தால் அவனை வேலையிலேவிப் பிறகு கொடுக்க வேண்டும். ச்ரோத்ரியனுக்காவது அக்ரத்தைக் கொடுக்க வேண்டும். எவர் நித்யமும் அன்னத்திற்கு அர்ஹர்களோ அவர்களுக்கு விரோதமல்லாமல் விபாகம் செய்து மற்றவருக்குக் கொடுக்க வேண்டும். எக்காலத்திலும் பிறருக்குக் கொஞ்சமாவது கொடாமல் புஜிக்கலாகாது. இவ்விஷயத்தில், அன்னத்தினால் சொல்லப்பட்ட இரண்டு ச்லோகங்களைச் சொல்லுகின்றனர் (பெரியோர்கள்)- "எவன் என்னை, பித்ருக்கள், தேவதைகள், ப்ருத்யர்கள், அதிதிகள், மித்ரர்கள் இவர்களுக்குக் கொடாமல் அறியாமையால் தான்மட்டில் நிறையப் புஜிக்கின்றானோ, அவனை நான் பக்ஷிக்கின்றேன். அவனுக்கு ம்ருத்யுவாகவும் ஆகின்றேன். எவன், அக்னி ஹோத்ரம் செய்து, வைச்வதேவமும் செய்து, அதிதிகளைப் பூஜித்து, ப்ருத்யர் முதலியவருக்கும் கொடுத்து, மீதியுள்ள என்னை, ஸந்துஷ்டனாய், சுத்தனாய், ச்ரத்தையுடையவனாய், புஜிக்கின்றானோ, அவனுக்கு நான் அம்ருதமாய் இருப்பேன். அவனே என்னைப் புஜிக்கின்றான்" என்று.

स एव – अग्रे तु भोजयेदतिथीनन्तर्वत्नीरनन्तरम्। बालवृद्धांस्तथा दीनान् व्याधितांश्च विशेषतः ।। अन्ने श्रितानि भूतानि अन्नं प्राणमिति श्रुतिः । तस्मादन्नं प्रदातव्यं अन्नं हि परमं हविः ।। हुतेन शाम्यते पापं हुतमन्नेन शाम्यति। अन्नं दक्षिणया शान्तिमुपयातीति नः श्रुतिः इति।

போதாயனரே:- முதலில் அதிதிகளைப் புஜிப்பிக்க வேண்டும். பிறகு கர்ப்பிணிகள், பாலர், வ்ருத்தர், தீனர், பிணியாளர் இவர்களையும் புஜிப்பிக்க வேண்டும்.

ப்ராணிகள் அன்னத்தை ஆச்ரயித்துள்ளன. 'அன்னம் ப்ராணம்' என்று ச்ருதியிருக்கின்றது. ஆகையால் அன்னத்தைக் கொடுக்க வேண்டும். அன்னம் சிறந்த ஹவிஸ்ஸல்லவா? (மனிதனின்) பாபம் ஹோமத்தால் தணிக்கப்படுகின்றது. ஹோமத்தாலுண்டாகும் பாபம் அன்னத்தால் தணிக்கப்படுகின்றது. அன்னத்தா லுண்டாகும் தோஷம் தக்ஷிணையால் தணிக்கப்படுகின்றது என்று நமக்குக் கேள்வி.

याज्ञवल्क्योपि — अन्नं पितृमनुष्येभ्यो देयमप्यन्वहं जलम्। स्वाध्यायं चान्वहं कुर्यान्न पचेदन्नमात्मने ॥ बालस्ववासिनी वृद्धगर्भिण्यातुरकन्यकाः । संभोज्यातिथिभृत्यांश्च दम्पत्योः शेषभोजनम्। अतिथित्वे तु वर्णानां देयं शक्त्याऽनुपूर्वशः। सत्कृत्य भिक्षवे भिक्षा दातव्या सुव्रताय च ॥ भोजयेच्चागतान् काले सखिसंबन्धिबान्धवान् इति ॥ मनुः — शक्तितोऽपचमानेभ्यो दातव्यं गृहमेधिना। संविभागश्च भूतानां कर्तव्योऽनुपरोधतः ॥ अपचमानेभ्यः - ब्रह्मचारिसन्यासिभ्यः ॥

யாக்ஞவல்க்யரும்:- ப்ரதிதினமும், பித்ருக் களுக்கும், மனுஷ்யர்களுக்கும் அன்னத்தை, அது இல்லாவிடில் ஜலத்தையாவது, கொடுக்க வேண்டும். ப்ரதிதினம் வேதாத்யயனமும் செய்ய வேண்டும். தனக்கென்று அன்னம் முதலியதைச் சமைக்கக் கூடாது. பாலர், ஸ்வவாஸினீ, வ்ருத்தர், கர்ப்பிணீ, பிணியாளன், கன்யகை, அதிதி, ப்ருத்யன் இவர்களைப் புஜிக்கச் செய்து மீதியுள்ளதைத் தம்பதிகள் புஜிக்க வேண்டும். (ஸ்வவாஸினீ = விவாஹமாகிப் பித்ருக்ருஹத்திலிருக்கும் பெண்.) நான்கு வர்ணத்தாரும் அதிதிகளாய் வந்தால் வர்ண க்ரமமாய் யதாசக்தி கொடுக்க வேண்டும். ப்ரம்ஹசாரிக்கும், ஸன்யாஸிக்கும் பிக்ஷையைக் கொடுக்க வேண்டும். அவன் நல்ல நியமமுடையவனாயின் ஸத்காரம் செய்து கொடுக்க வேண்டும். போஜன ஸமயத்தில் வந்த

மித்ரன், ஸம்பந்தி, பந்து இவர்களுக்கும் போஜனத்தைக் கொடுக்க வேண்டும். **மனு:-** பாகம் செய்யாதவர்க்கும், ப்ரம்ஹசாரீ, ஸன்யாஸீ இவர்கட்கும் யதாசக்தி அன்னத்தை க்ருஹஸ்தன் கொடுக்க வேண்டும். மற்ற ப்ராணிகளுக்கும். தன் குடும்பத்திற்கு உபரோதமில்லாமல் ஜலம் முதலியவைகளைக் கொடுக்க வேண்டும்.

स एव-यत्पुण्यफलमाप्नोति गां दत्वा विधिवद्गुरोः । तत्पुण्यफलमाप्नोति भिक्षां दत्वा द्विजो गृही । भिक्षां वाप्युदपात्रं वा सत्कृत्य विधिपूर्वकम् । वेदतत्त्वार्थविदुषे ब्राह्मणायोपपादयेत् । सुवासिनीः कुमारीश्च रोगिणो गर्भिणीस्तथा । अतिथिभ्योऽन्वगेवैतान् भोजयेदविचारयन् । भुक्तवत्सु च विप्रेषु स्वेषु भृत्येषु चैव हि । भुञ्जीयातां ततः पश्चात् अवशिष्टं तु दंपती । अदत्वा तु यदेतेभ्यः पूर्वं भुंक्तेऽविचक्षणः । स भुञ्जानो नैव जानाति श्वगृध्रैर्जग्धिमात्मनः । इतरानपि सख्यादीन् संप्रीत्या गृहमागतान् ।सत्कृत्यान्नं यथाशक्ति भोजयेत्सह भार्यया। यदि त्वतिथिधर्मेण क्षत्रियो गृहमाव्रजेत् । भुक्तवत्सु तु विप्रेषु कामं तमपि भोजयेत् । वैश्यशूद्रावपि तथा कुटुंबेऽतिथिधर्मिणौ । भोजयेत्सहभृत्यैस्तौ आनृशंस्यं प्रकल्पयन् इति । सह भृत्यैः स्व भृत्यैः सह । स्वभृत्य भोजन काले इत्यर्थः ।

**மனுவே:-** விதிப்படி குருவிற்குப் பசுவைத் தானம் செய்வதால் எந்த புண்யத்தை அடைவானோ, அந்த புண்யத்தை பிக்ஷையைக் கொடுப்பதால் க்ருஹஸ்த ப்ராம்ஹணன் அடைகிறான். பிக்ஷான்னத்தையாவது ஜலபாத்ரத்தையாவது வேதத்தின் தத்வத்தை உணர்ந்த பிராம்ஹணனுக்கு விதியுடனும் ஆதரவுடனும் கொடுக்க வேண்டும். ஸுவாஸினிகள் (புதிதாய் விவாஹமான பெண்கள், நாட்டுப் பெண்கள்) குமாரிகள், (கன்யகைகள்) ரோகிகள், கர்ப்பிணிகள், இவர்களை அதிதிகளுடன் சேர்த்தே ஸந்தேகமில்லாமல் புஜிக்கச் செய்ய வேண்டும். இதில் அக்ரே என்ற பாடபேதமுண்டு. அதற்கு

அதிதிகளுக்கு முன்பே என்று பொருள். ப்ராம்ஹணர்களும் பந்துக்களும் தாஸர்களும் உண்ட பிறகு மீதியுள்ளதைத் தம்பதிகள் புஜிக்க வேண்டும். எவன் இவர்களுக்குக் கொடாமல் முன்பு புஜிக்கிருனோ அந்த மூடன் இறந்த பிறகு தன்னை நாய்களும், கழுதைகளும் புஜிக்குமென்பதை அறியவில்லை. ப்ரீதியுடன் வீட்டிற்கு வந்துள்ள மற்ற மித்ரன் முதலியவரையும் ஆதரவுடன், பார்யையுடன் சேர்த்து யதாசக்தி போஜனம் செய்விக்க வேண்டும். க்ஷத்ரியன் அதிதியாய் க்ருஹத்திற்கு வந்தால், ப்ராம்ஹணர்கள் புஜித்த பிறகு அவனையும் புஜிக்கச் செய்ய வேண்டும். வைச்யனும், சூத்ரனும் குடும்பத்தில் அதிதி தர்மத்துடன் வந்தால் தாஸர்களுடன் அவர்களையும் புஜிக்கச் செய்ய வேண்டும்.

स एव – न ब्राह्मणस्य त्वतिथिः गृहे राजन्य उच्यते। वैश्यशूद्रौ सखा चैव ज्ञातयो गुरुरेव च इति ।। न क्षत्रियादयो ब्राह्मणेनातिथि सत्कारमर्हन्ति । किन्तु भोजनमात्रमित्यर्थः । तथा च स्मृतिरत्ने – ब्राह्मणं त्वनधीयानमधीयानं नृपं विशम् । पूर्वं च भोजयेत्तुल्यान् प्रत्युत्थानविवर्जितः ।। शूद्रमभ्यागतं कर्म कारयित्वा तु भोजयेत् ।। मातृजातीयसदृशं पूजयेदनुलोमजम् इति ।। आपस्तम्बोऽपि – ब्राह्मणायानधीयानायासनमुदकमन्नमिति देयं न प्रत्युत्तिष्ठे द्राजन्यवैश्यौ च शूद्रमभ्यागतं कर्मणि नियुञ्ज्यादथास्मै दद्यात् इति ।। राजन्यवैश्यावधीयानावपि न प्रत्युत्तिष्ठेदित्यर्थः ।।

மனுவே:- ப்ராம்ஹணனுடைய வீட்டில் வந்த க்ஷத்ரியன் அதிதி எனச் சொல்லப்படுவதில்லை. வைச்யன், சூத்ரன், ஸகா ஜ்ஞாதி, குரு இவர்களுமப்படியே. க்ஷத்ரியன் முதலியவர் அதிதி பூஜையைப் பெறுவதற்குரியவரல்ல, போஜன மாத்ரத்திற்கு அர்ஹரென்பது பொருள். அவ்விதமே, ஸ்ம்ருதிரத்னத்தில்:- வேதாத்யயனம் செய்யாத ப்ராம்ஹணனையும், அத்யயனம்

செய்துள்ள க்ஷத்ரியனையும், வைச்யனையும், எழுந்து வரவேற்ப தில்லாமல், முதலில் புஜிக்கச் செய்ய வேண்டும். அப்யாகதனான சூத்ரனை ஒரு வேலையைச் செய்வித்துப் பிறகு புஜிக்கச்செய்ய வேண்டும். அனுலோம ஜாதீயனை மாதாவின் ஜாதியில் பிறந்தவனைப் போல் பூஜிக்க வேண்டும். ஆபஸ்தம்பரும்:- வேதாத்யனமில்லாத ப்ராம்ஹணனுக்கு ஆஸனம், ஜலம், அன்னம் இவைகளைக் கொடுக்க வேண்டும். எழுந்து மர்யாதை செய்யக் கூடாது. க்ஷத்ரிய வைச்யர்கள் விஷயத்திலுமப்படியே. சூத்ரன் வந்தால் அவனை ஒரு வேலையில் ஏவிப்பிறகு இவனுக்குக் கொடுக்க வேண்டும். க்ஷத்ரிய வைச்யர்கள் வேதாத்யயனமுள்ளவராயினும் ப்ராம்ஹணன் எழுந்திருக்கக் கூடாதென்பது பொருள்.

विष्णुपुराणे —— ततः सुवासिनी दुःखिगर्भिणीवृद्धबालकान्। भोजयेत् सत्कृतान्नेन प्रथमं तु परं गृही ।। अभुक्तवत्सु चैतेषु भुञ्जन् भुङ्क्ते सुदुष्कृतम् । मृतश्च भुक्त्वा नरकं श्लेष्मभुग्जायते नृप इति ।। मार्कण्डेयोऽपि – पूजयित्वाऽतिथीन् स्वांश्च ज्ञातीन् बन्धूंस्तथाऽर्थिनः । विकलान् बालवृद्धांश्च भोजयेदातुरांस्ततः ।। वाञ्छेत् क्षुत्तृट्परीतात्मा यश्चान्नं रससंयुतम् ।। श्रीमन्तं ज्ञातिमासाद्य यो ज्ञातिरवसीदति । सीदता यत्कृतं पापं तत्सर्वं प्रतिपद्यते इति ।। पराशरः– अपूर्वः सुव्रती विप्रो ह्यपूर्वश्चातिथिस्तथा । वेदाभ्यासरतो नित्यं त्रयोऽपूर्वा दिने दिने ।। यतिश्च ब्रह्मचारी च पक्वान्नस्वामिनावुभौ । तयोरन्नमदत्वा तु भुक्त्वा चान्द्रायणं चरेत् ।। दद्याच्च भिक्षात्रितयं परिव्राड् ब्रह्मचारिणाम् । इच्छया च ततो दद्याद्विभवे सत्यवारितम् ।। यतिहस्ते जलं दद्याद्भैक्षं दद्यात् पुनर्जलम् । तद्भैक्षं मेरुणा तुल्यं तज्जलं सागरोपमम् इति ।। नृसिंहपुराणे – भिक्षां च भिक्षवे दद्यात् परिव्राड् ब्रह्मचारिणे । अकल्पितान्नादुद्धृत्य सर्वव्यञ्जनसंयुताम् इति ।

விஷ்ணு புராணத்தில்:- பிறகு, ஸுவாஸினீ, வருந்தியவன், கர்ப்பிணீ, கிழவன், சிறுவன் இவர்களை ஆதரவுடன் முந்தியே புஜிக்கச் செய்ய வேண்டும். பிறகு க்ருஹஸ்தன் புஜிக்க வேண்டும். இவர்கள் புஜிக்காமலிருக்கத் தான் புஜித்தால் க்ருஹஸ்தன் பாபத்தைப் புஜிக்கின்றான். இறந்து நரகத்தை அனுபவித்துப் பிறகு ச்லேஷ்மத்தைப் புஜிக்கும் ஜந்துவாய்ப் பிறப்பான், ஓ அரசனே! மார்க்கண்டேயரும்:- அதிதிகளையும், தனது ஜ்ஞாதிகள் பந்துக்கள், யாசகர், அங்கஹீனர், பாலர்கள், வ்ருத்தர்கள், பிணியாளர்கள் இவர்களையும், பசி தாகங்களுடன் அன்னத்தை அபேக்ஷிப்பவனையும் பூஜித்துப் புஜிப்பிக்க வேண்டும். தனமுள்ள பந்துவையடைந்து, தனமில்லாத எந்தப் பந்து வருந்துகின்றானோ, வறுமையுள்ள அவன் செய்த பாபம் முழுவதையும் தனமுள்ள பந்து அடைகிறான். பராசரர்:- நல்ல நியமங்களுடைய ஸன்யாஸியும் அபூர்வனாவான். அதிதியும் அபூர்வனாவான். ப்ரதிதினம் வேதாப்யாஸம் செய்பவனான ப்ரம்ஹசாரியும் அபூர்வனாவான். இவ்விருவரும் அதிதிபோல் பூஜ்யராவர். இம்மூவரும் ப்ரதிதினம் அபூர்வராவர். ஸன்யாஸியும், ப்ரம்ஹசாரியும், க்ருஹஸ்தன் சமைத்துள்ள அன்னத்திற்கு ஸ்வாமிகளாவர். அவ்விருவருக்கும் அன்னத்தைக் கொடாமல் புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஸன்யாஸிகளுக்கும், ப்ரம்ஹசாரிகளுக்கும் மூன்று பிக்ஷையைக் கொடுக்க வேண்டும். விபவமிருந்தால், இச்சைப்படி அதற்கு மேலும் கொடுக்கலாம். யதியின் கையில் ஜலத்தைக் கொடுக்க வேண்டும். பிறகு பிக்ஷான்னத்தைக் கொடுக்க வேண்டும். மறுபடி ஜலத்தைக் கொடுக்க வேண்டும். அந்தப் பிக்ஷான்னம் மேருவுக்குச் சமமாகும். அந்த ஜலம் ஸமுத்ரத்திற்குச் சமமாகும். ந்ருஸிம்மபுராணத்தில்:- ஸன்யாஸிக்கும், ப்ரம்ஹசாரிக்கும், அன்ன பாத்ரத்திலிருந்து எடுத்து எல்லா வ்யஞ்ஜனங்களுடன் கூடியதாய்ப் பிக்ஷையைக் கொடுக்க வேண்டும்.

यमः — सत्कृत्य भिक्षवे भिक्षां यः प्रयच्छति मानवः । गोप्रदानसमं पुण्यं तस्याह भगवान् यमः इति ।। ब्रह्मचारिणं स्वस्तीति वाचयित्वा तद्धस्ते जलं प्रदाय भिक्षां दद्यादित्याह गौतमः – स्वस्ति वाच्य भिक्षादानमप्पूर्वम् इति ।। हारीतः – भक्त्या च शक्तितो नित्यं विष्णुमभ्यर्च्य सादरम् ।। भिक्षां च भिक्षवे दद्यात् परिव्राड् ब्रह्मचारिणे । विष्णुरेव यतिश्चायमिति निश्चित्य भावयेत् ।। यतिर्यस्य गृहे भुङ्क्ते तस्य भुङ्क्ते हरिः स्वयम् । हरिर्यस्य गृहे भुङ्क्ते तस्य भुङ्क्ते जगत्त्रयम् । इति ।

யமன்:- எந்த மனிதன் பூஜித்துப் பிக்ஷுகனுக்குப் பிக்ஷையைக் கொடுக்கின்றானோ அவனுக்குக் கோதான பலனுக்குச் சமமான பலமென்று பகவான் யமன் சொன்னார். ப்ரம்ஹசாரியை ஸ்வஸ்தி என்று சொல்வித்து அவன் கையில் ஜலத்தைக் கொடுத்துப் பிக்ஷையைக் கொடுக்க வேண்டும். ஹாரீதர்:- ப்ரதிதினம் ஆதரவுடன் யதாசக்தி விஷ்ணுவைப் பூஜித்து, ஸன்யாஸிக்கும், ப்ரம்ஹசாரிக்கும் பிக்ஷையைக் கொடுக்க வேண்டும். இந்த ஸன்யாஸி விஷ்ணுவே என்று பாவிக்க வேண்டும். யதி எவனின் க்ருஹத்தில் புஜிக்கின்றானோ அவன் க்ருஹத்தில் ஹரி தாமே புஜிக்கின்றார். ஹரி எவனின் க்ருஹத்தில் புஜிக்கின்றாரோ அங்கு மூன்றுலகமும் புஜிக்கின்றது.

व्यासः – यः पात्रपूर्णां भिक्षां यतिभ्यः सम्प्रयच्छति । विमुक्तः सर्वपापेभ्यो नासौ दुर्गतिमाप्नुयात् इति ।। वैश्वदेवात् पूर्वं भिक्षौ गृहमागते सति कर्तव्यमाह पराशरः – वैश्वदेवे तु सम्प्राप्ते भिक्षुके गृहमागते । वैश्वदेवाकृतं पापं शक्तो भिक्षुर्व्यपोहितुम् । न हि भिक्षुकृतान् दोषान् वैश्वदेवो व्यपोहति इति ।। सम्प्राप्ते - प्रसक्ते । अननुष्ठित इति यावत् । वैश्वदेवाकृतमिति ।। वैश्वदेवस्य पश्चात्करणेन प्रसक्तो यो दोषः, स भिक्षादानेन निवर्त्यते । भिक्षापरिहारेण तु यो दोषः, नासौ पूर्वकृतेनापि वैश्वदेवेन निवर्त्यत इत्यर्थः ।।

**வ்யாஸர்:-** எவன் யதிகளுக்குப் பாத்ரம் நிறையுமான பிக்ஷையைக் கொடுக்கின்றானோ, அவன் ஸகல பாபங்களினின்றும் விடுபடுவான். தாரித்ர்யத்தை அடையமாட்டான். வைச்வதேவம் செய்வதற்கு முன் பிக்ஷுகன் பிக்ஷைக்கு வீட்டிற்கு வந்துவிட்டால் செய்ய வேண்டியதைச் சொல்லுகிறார் **பராசரர்:-** வைச்வதேவம் செய்ய வேண்டிய ஸமயத்தில் (செய்யாமலிருக்கும் பொழுது) பிக்ஷுகன் க்ருஹத்திற்கு வந்து விட்டால், வைச்வதேவத்திற்காக எடுத்து வைத்துவிட்டு, பிக்ஷுகனை, அன்னத்தைக் கொடுத்து அனுப்ப வேண்டும். வைச்வதேவத்தை முன் செய்யாத தோஷத்தைப் போக்குவதற்குப் பிக்ஷுகன் சக்தன். பிக்ஷுவுக்குப் பிக்ஷையைக் கொடாததால் உண்டான தோஷத்தை வைச்வதேவம் போக்குவதில்லை. வைச்வதேவத்தைப் பின்பு செய்வதால் எந்தத் தோஷமோ அது பிக்ஷாதானத்தால் நிவர்த்திக்கப்படுகிறது. பிக்ஷை கொடாததால் உண்டாகிய தோஷம், முன் செய்யப்பட்ட வைச்வதேவத்தால் நிவர்த்திக்கப்படுவதில்லை என்பது பொருள்.

तथा च हारीतः – अकृते वैश्वदेवे तु भिक्षुके गृहमागते । उद्धृत्य वैश्वदेवार्थं भिक्षां दत्वा विसर्जयेत् ॥ पश्चात् कृते वैश्वदेवे दोषं भिक्षुर्व्यपोहति । न भिक्षुवर्जनोत्थं तु वैश्वदेवो व्यपोहति ॥ तस्मात् समाहितो भिक्षां दद्यात् प्राप्ताय भिक्षवे इति ॥

**ஹாரீதர்:-** வைச்வதேவம் செய்யப்படாமலிருக்கும் பொழுது, பிக்ஷுகன் வீட்டிற்கு வந்தால், வைச்வ தேவத்திற்காக எடுத்து வைத்துவிட்டுப் பிக்ஷையைக் கொடுத்து அனுப்ப வேண்டும். வைச்வதேவத்தைப் பின்பு செய்வதாலுண்டாகும் தோஷத்தை, பிக்ஷுகன் போக்குவான். பிக்ஷுவுக்குப் பிக்ஷைகொடுக்காத தோஷத்தை வைச்வதேவம் போக்காது. ஆகையால் கவனமுடையவனாய், வீட்டிற்கு வந்த பிக்ஷுவுக்குப் பிக்ஷையைக் கொடுக்க வேண்டும்.

व्यासेन भिक्षवो दर्शिताः – यतिश्च ब्रह्मचारी च विद्यार्थी गुरुपोषकः । अध्वगः क्षीणवृत्तिश्च षडेते भिक्षुकाः स्मृताः इति ।। मनुरपि – व्याधितस्यार्थहीनस्य कुटुम्बात्प्रच्युतस्य च । अध्वानं वा प्रपन्नस्य भिक्षाचर्या विधीयते इति । एवं च – न दद्याद्यतये स्वर्णं तण्डुलं ब्रह्मचारिणे । पक्वान्नं तु गृहस्थाय दाता दुर्गाणि गच्छति इति वचनं भिक्षुकव्यतिरिक्तगृहस्थविषयं वेदितव्यम् । यमः – आहारमात्रादधिकं न कश्चिद्भैक्षमाहरेत् । युज्यते स्तेयदोषेण कामतोऽधिकमाहरन् ।। तस्मान्नोपहरेद्भैक्ष मतिरिक्तं यतिर्व्रती इति ।

வ்யாஸரால்:- பிக்ஷுக்கள் இன்னுரென்று சொல்லப்பட்டுள்ளனர், யதி, ப்ரம்ஹசாரீ, வித்யார்த்தீ, குருவைப் போஷிப்பவன், வழிப்போக்கன், வ்ருத்தியில்லாதவன் என்ற ஆறு பேர்களும் பிக்ஷுகர் எனச் சொல்லப்பட்டுள்ளனர். மனுவும்:- வ்யாதியுடையவன், பணமில்லாதவன், குடும்பத்தினின்றும் நழுவியவன், வழிப்போக்கன் இவர்களுக்குப் பிக்ஷை எடுத்தல் விதிக்கப்படுகிறது. இவ்விதமிருப்பதால், 'யதிக்கு ஸ்வர்ணத்தையும், ப்ரம்ஹசாரிக்கு அரிசியையும், க்ருஹஸ்தனுக்குப் பக்வான்னத்தையும் கொடுக்கக் கூடாது. கொடுத்தால், கொடுத்தவன் கஷ்டங்களை அடைவான்' என்ற வசனம் பிக்ஷுகனல்லாத க்ருஹஸ்தனைப் பற்றியதென அறியவும். யமன்:- தன் ஆஹாரத்திற்குப் போதுமானதை விட அதிகமாகப் பிக்ஷையை வாங்கக் கூடாது. ஆசையால் அதிகமாக வாங்குகின்றவன் திருடிய பாபத்துடன் சேருவான். ஆகையால், விரதமுள்ள ஸன்யாஸியும் அதிகமாக பிக்ஷான்னத்தை வாங்கக் கூடாது.

चन्द्रिकायाम् – माधूकरीं य आदाय ब्राह्मणेभ्यः प्रयच्छति । दाता तु नरकं याति भोक्ता भुञ्जीत किल्बिषम् ।। हस्तदत्ता तु या भिक्षा लवणव्यञ्जनानि च । भोक्ता ह्यशुचितां याति दाता स्वर्गं न गच्छति

इति ।। यमः — अपचन्तमतिक्रम्य पचन्तं यस्तु भोजयेत्। कृमीणां तु भजेद्योनिं वर्षाणामधिकं शतम् ।। अहुत्वाऽग्निमसन्तर्प्य तपस्विनमुपागतम्। अशित्वा तु परे लोके स्वानि मांसानि खादति इति।

**சந்த்ரிகையில்:-** பிக்ஷான்னத்தை வாங்கி எவன் அதை ப்ராம்ஹணர்களுக்குக் கொடுக்கின்றானோ, அவன் நரகத்தையடைவான். புஜித்தவன் பாபத்தைப் புஜிப்பான். கையினால் கொடுக்கப்பட்ட பிக்ஷான்னம், உப்பு, வ்யஞ்ஜனங்கள் இவைகளைப் புஜிப்பவன் அசுத்தியை அடைகிறான். கொடுத்தவனும் ஸ்வர்க்கத்தை அடையமாட்டான். **யமன்:-** சமைக்காதவனை (யதி ப்ரம்ஹசாரிகளை) அதிக்ரமித்துச் சமைப்பவனை (க்ருஹஸ்தனை) எவன் புஜிப்பிக்கின்றானோ, அவன் அநேகவர்ஷகாலம் வரை புழுக்களின் பிறப்பை அடைவான். அக்னியில் ஹோமம் செய்யாமல், வீட்டிற்கு வந்துள்ள தபஸ்வியைப் புஜிப்பிக்காமல் புஜிப்பானாகில், அவன் நரகத்தில் தன் மாம்ஸத்தைப் புஜிப்பான்.

आपस्तम्बः — स्त्रीणां प्रत्याचक्षाणानां समाहितो ब्रह्मचारीष्टं दत्तं हुतं प्रजां पशून् ब्रह्मवर्चसमन्नाद्यं वृङ्क्ते तस्मादुह वै ब्रह्मचारिसङ्घं चरन्तं न प्रत्याचक्षीत इति ।। समाहितः - व्रताध्ययननिष्ठ इत्यर्थः ।। अत एव वसिष्ठपराशरौ — अव्रता ह्यनधीयाना यत्र भैक्षचरा द्विजाः। तं ग्रामं दण्डयेद्राजा चोरभक्तप्रदो हि सः इति ।। ब्रह्मचारिकर्तृकं मध्वादिवर्जनम्, स्वगृह्यप्रसिद्धानि चत्वारि प्राजापत्यादीनि च अत्र व्रतशब्दाभिधेयानि। तदुभयविधव्रतरहिताः स्वाध्यायमप्यनधीयानाः ब्रह्मचारिणः यत्र ग्रामे भैक्षमाचरन्ति तं ग्रामं दण्डयेत्। यतः चोरसदृशेभ्यः भक्तं - अन्नं प्रयच्छतीत्यर्थः ।।

**ஆபஸ்தம்பர்:-** ஸமாஹிதனான (விஹித ப்ரதிஷித்தங்களில் கவனமுடைய) ப்ரம்ஹசாரீ, பிக்ஷையைக் கொடாமல் மறுதலிக்கும் ஸ்த்ரீகளின்,

யாகத்தாலும், தானத்தாலும், ஹோமத்தாலும் ஸம்பாதித்த கர்மம், ப்ரஜை, பசுக்கள், ப்ரம்ஹவர்ச்சஸம், அன்னம் இவைகளை நாசப்படுத்துவான். ஆகையால் பிக்ஷை வாங்கும் ப்ரம்ஹசாரிகளின் கூட்டத்தை மறுதலிக்கக் கூடாது. (இவர்களுள்) ஸமாஹிதனும், ப்ரம்ஹசர்ய வ்ரதங்களுடையவனுமான ப்ரம்ஹசாரியும் ஒருகால் இருக்கக் கூடும். 'ஸமாஹிதன்' என்பதற்கு, வ்ரதம் அத்யயனம் இவைகளுடன் கூடியவன் என்றும் பொருள். ஆகையாலேயே வஸிஷ்டரும், பராசரரும்:- வ்ரதங்களில்லாமலும், வேதாத்யயனம் இல்லாமலுமுள்ள ப்ராம்ஹணர்கள் எந்த க்ராமத்தில் பிக்ஷையைப் பெறுகிறார்களோ, அந்த க்ராமத்தை அரசன் தண்டிக்க வேண்டும். ஏனெனில் அந்த க்ராமம் திருடர்களுக்கு அன்னத்தைக் கொடுக்கின்றதல்லவா. இங்கு 'வ்ரதம்' என்பதற்கு ப்ரம்ஹசாரிகள் அனுஷ்டிக்க வேண்டிய மது முதலியதின் வர்ஜனமும், ப்ரஜாபத்யம் முதலிய நான்கு வ்ரதங்களும் பொருள். அந்த இருவிதமான வ்ரதங்களில்லாமலும், வேதாத்யனனம் செய்யாமலும் ப்ரம்ஹசாரிகள் எந்த க்ராமத்தில் பிக்ஷையை வாங்குகின்றனரோ அந்த க்ராமத்தைத் தண்டிக்க வேண்டும். திருடனைப் போன்றவருக்கு அன்னத்தைக் கொடுக்கிறதல்லவா? என்று பொருள்.

व्यासः – द्वाविमौ पुरुषौ लोके सूर्यस्योपरि तिष्ठतः । अन्नप्रदाता दुर्भिक्षे सुभिक्षे हेमवस्त्रदः ।। मनुः – विद्यातपः समृद्धेषु हुतं विप्रमुखाग्निषु। निस्तारयति दुर्गाच्च महतश्चैव किल्बिषात्।। नश्यन्ति हव्यकव्यानि नराणामविजानताम्। भस्मीभूतेषु विप्रेषु मोहाद्दत्तानि दातृभिः ।। अविजानताम् - अपात्रदानदोषमविजानतां दातॄणां, हव्यकव्यानि नश्यन्ति। हव्यं - दैवम्। कव्यं - पित्र्यम्। भस्मीभूतेषु - निस्तेजस्केषु ।।

வ்யாஸர்:- துர்ப்பிக்ஷ காலத்தில் அன்னத்தைக் கொடுப்பவன், ஸுபிக்ஷ காலத்தில் பொன் வஸ்த்ரம்

இவைகளைக் கொடுப்பவன் என்ற இவ்விரு மனிதர்களும் ஸூர்யனுக்கு மேலான உலகில் இருக்கின்றனர். மனு:- வித்யையாலும், தபஸ்ஸாலும் நிறைந்துள்ள ப்ராம்ஹணர்களின் முகங்களாகிய அக்னிகளில் ஹோமம் செய்யப்பட்ட ஹவ்யம் கவ்யம் முதலிய வஸ்து, பெரிதான பயத்தினின்றும், பாபத்தினின்றும் தப்புவிக்கின்றது. தேஜஸ்ஸில்லாமல் சாம்பல் போலுள்ள ப்ராம்ஹணர்களிடத்தில், அயோக்ய ப்ராம்ஹணர்களுக்குக் கொடுப்பதால் உண்டாகும் தோஷத்தை அறியாத தாதாக்களால் அறியாமையால் கொடுக்கப்பட்ட ஹவ்யகவ்யங்கள் வீணாய் அழிகின்றன.

स एव – काममभ्यर्चयेन्नित्यं नाभिरूपमपि त्वरिम्। द्विषता हि हविर्भुक्तं भवति प्रेत्य निष्फलम्। श्रोत्रियायैव देयानि हव्य कव्यानि दातृभिः। अर्हत्तमाय विप्राय तस्मै दत्तं महाफलम्॥ सहस्रं हि सहस्राणामनृचां यत्र भुञ्जते। एकस्तान् मन्त्रविद्विप्रः सर्वानर्हति धर्मतः॥ ज्ञाननिष्ठा द्विजाः केचित्तपोनिष्ठास्तथा परे। तपः स्वाध्यायनिष्ठाश्च कर्मनिष्ठास्तथैव च॥ ज्ञाननिष्ठेषु कव्यानि प्रतिष्ठाप्यानि यत्नतः। हव्यानि त यथान्यायं सर्वेष्वेव चतुर्ष्वपि इति।

மனுவே:- வித்வானாகினும் சத்ருவைப் பூஜிக்கக் கூடாது. சத்ருவினால் புஜிக்கப்பட்ட ஹவ்யம், பரலோகத்தில் நிஷ்பலமாய் ஆகிறது. கொடுப்பவர்கள் ஹவ்யங்களையும் கவ்யங்களையும் ச்ரோத்ரியனுக்கே கொடுக்க வேண்டும். அவ்விதமான ப்ராம்ஹணனுக்குக் கொடுக்கப்பட்டது மஹாபலத்தைக் கொடுப்பதாகும். எந்த ச்ராத்தத்தில், வேதாத்யயனமில்லாத பத்துலக்ஷம் ப்ராம்ஹணர்கள் புஜிக்கின்றனரோ அந்த ச்ராத்தத்தின் பலனை, வேதமறிந்த ப்ராம்ஹணன் ஒருவன் புஜிப்பதால் கொடுக்க அர்ஹனாவான். சில ப்ராம்ஹணர்கள், ஆத்மஜ்ஞானபரர்களாயுள்ளனர். சிலர் தபோநிஷ்டர்களாய் இருக்கின்றனர். சிலர் தபஸ்ஸிலும், அத்யயனத்திலும்

ஆஸக்தியுள்ளவராய் இருக்கின்றனர். சிலர் யாகாதிகர்மங்களில் தத்பரராயிருக்கின்றனர். ஜ்ஞானப்ரதானராய் இருப்பவரிடத்தில் பித்ருக்களையுத்தேசித்த அன்னங்களை ப்ரயத்னத்துடன் கொடுக்க வேண்டும். தேவர்களை உத்தேசித்த ஹவ்யங்களை இந்த நான்கு பேர்களிடத்திலும் ந்யாயானுஸாரமாய்க் கொடுக்க வேண்டும்.

बृहस्पतिरपि— नष्टशौचे व्रतभ्रष्टे विप्रे वेदविवर्जिते। दीयमानं रुदत्यन्नं (किंमया) यन्मया दुष्कृतं कृतम्॥ वेदविद्याव्रतस्नाते श्रोत्रिये गृहमागते। क्रीडन्त्योषधयः सर्वा यास्यामः परमां गतिम् इति॥ अयं च गुणदोषविवेको वैश्वदेवान्ते न कर्तव्य इत्यभिप्रेत्य अतिथिलक्षणमाह पराशरः— इष्टो वा यदि वा द्वेष्यो मूर्खः पण्डित एव वा। सम्प्राप्तो वैश्वदेवान्ते सोऽतिथिः स्वर्गसंक्रमः॥ दूराध्वोपगतं श्रान्तं वैश्वदेव उपस्थितम्। अतिथिं तं विजानीयान्नातिथिः पूर्वमागतः॥ नैकग्रामीणमतिथिं संगृह्णीत कदाचन। अनित्यमागतो यस्मात् तस्मादतिथिरुच्यते इति॥ वैश्वदेवान्ते - वैश्वदेवस्योपरि घटिकापादपरिमिते काले समागनमेवातिथिलक्षणं नान्यद्विद्यादि। स्वर्गसंक्रमः - स्वर्गप्राप्तिहेतुः। नातिथिः पूर्वमागतः इति। वैश्वदेवे समागतः तस्मिन्नेवातिथिः, नोत्तरेद्युरित्यर्थः।

ப்ருஹஸ்பதியும்:- சௌசமற்றவனும், வ்ரதமில்லாதவனும், வேதமற்றவனுமான விப்ரனிடத்தில் கொடுக்கப்படும் அன்னமானது 'என்னால் என்ன பாபம் செய்யப்பட்டது' என்று கண்ணீர் விடுகிறது. வித்யாஸ்நாதனும் வ்ரதஸ்நாதனுமான விப்ரன் வீட்டிற்கு வந்தால், நாம் நற்கதியை அடையப்போகிறோம்' என்று அன்னங்களெல்லாம் ஸந்தோஷித்து விளையாடுகின்றன. இந்தக் குணதோஷ விவேகத்தை வைச்வதேவத்தின் முடிவில் செய்ய வேண்டுவதில்லை என்று அபிப்ராயப்பட்டு, அதிதி லக்ஷணத்தைச் சொல்லுகிறார்

பராசரர்:- இஷ்டனுனாலும், த்வேஷ்யனுனாலும், மூர்க்கனுனாலும், பண்டிதனுனாலும் வைச்வதேவத்தின் முடிவில் வந்தவனெவனே, அந்த அதிதி ஸ்வர்க்கத்தின் ப்ராப்திக்குக் காரணமாவான். தூரமான வழி நடந்து வந்தவனும், களைப்படைந்தவனும், வைச்வதேவ காலத்தில் வந்தவனுமாயுள்ளவனை அதிதியென்றறியவும். அதற்கு முன்வந்தவன் அதிதியாகமாட்டான். ஒரே க்ராமத்தில் வஸிப்பவனை அதிதியாய் க்ரஹிக்கக் கூடாது. அநித்யமாய் வந்தவனுகையால் அதிதி எனப்படுகிறுன். மூலத்திலுள்ள 'வைச்வதேவாந்தே' என்பதற்கு, வைச்வதேவம் ஆனபிறகு கால்நாழிகைக்குள் என்பது பொருள். அக்காலத்தில் வருவதுதான் அதிதிக்கு லக்ஷணம். மற்ற வித்யை முதலியதல்ல. 'நாதிதி:பூர்வமாகத;' - வைச்வதேவத்தில் வந்தவன் அன்றைக்குத்தான் அதிதி. மறுநாளில் அதிதியல்ல என்று பொருள்.

तथा च मनुः — एकरात्रं हि निवसन्नतिथिर्ब्राह्मणः स्मृतः। अनित्यं हि स्थितो यस्मात्तस्मादतिथिरुच्यते ।। नैकग्रामीणमतिथिं विप्रं साङ्गतिकं तथा। उपस्थितं गृहे विद्याद्भार्या यत्राग्नयोऽपि वा इति। साङ्गतिकं - सङ्गतेन चरन्तं कचित् कचिदतिथित्वेन सङ्गतपूर्वमिति यावत्। तं नातिथिं विद्यात्। यत्र स्वकीये परकीये वा गृहे भार्या नातिथिं विद्यात्। यत्र स्वकीये परकीये वा गृहे भार्या अग्नयो वा सन्ति, तत्रोपस्थितमतिथिं विद्यात्। नान्यं विप्रोषितभार्यस्य स्वस्याभ्याशमागतमित्यर्थः। आपस्तम्बः – स्वधर्मयुक्तं कुटुम्बिन मभ्यागच्छति धर्मपुरस्कारो नान्यप्रयोजनः सोऽतिथिर्भवति इति ।। आदितो यच्छब्दो द्रष्टव्यः। अन्ते स इति दर्शनात्।। स एव – अग्निरिव ज्वलन्नतिथिरभ्यागच्छति इति ।। तस्मादसौ भोजनादिभि-स्तर्पयितव्यः। निराशस्तु गतः गृहान् दहेत् इत्यर्थः।

அவ்விதமே மனு:- ஒருநாள் (மட்டும்) வஸிக்கும் ப்ராம்ஹணன் அதிதி எனப்படுகிறுன். அநித்யமாய்

இருப்பதால் அதிதி எனப்படுகிறான். ஒரு க்ராமத்தில் இருப்பவனை அதிதி என்று அறியக்கூடாது. சிற்சில ஸமயங்களில் அதிதியாய் வந்தவனையும் அதிதி என்றறியக்கூடாது. தன் வீட்டிலாவது பிறர் வீட்டிலாவது பார்யையுடனும் அக்னிகளுடனுமிருந்தால் அந்த இடத்தில் வந்தவனை அதிதி என்றறியவும். பார்யை அன்ய தேசத்திலிருக்கும் பொழுது தனிமையாயுள்ள தன் ஸமீபத்திற்கு வந்தவனை அதிதியெனக் கொள்ள வேண்டியதில்லை என்று பொருள். ஆபஸ்தம்பர்:- எந்த ச்ரோத்ரியன், ஸ்வதர்மத்துடன் கூடிய க்ருஹஸ்தனைக் குறித்து, தர்மத்தை விரும்பியவனாய், வேறு ப்ரயோஜனமில்லாமல் வருகின்றானோ அவன் அதிதி ஆவான். ஆபஸ்தம்பரே:- எரிகிற அக்னிபோல் அதிதி வருகிறான் என்று. இதன் பொருள். ஆகையால் இவனைப் போஜனாதிகளால் த்ருப்தனாய்ச் செய்ய வேண்டும். ஆசையற்றுச் சென்றால் அவன் வீட்டைத் தஹித்து விடுவானென்பதாம்.

स एव – सर्वान् वैश्वदेवे भागिनः कुर्वीताश्वचण्डालेभ्यो नानर्हद्भ्यो दद्यादित्येके ये नित्या भाक्तिकास्तेषामनुपरोधेन संविभागो विहितः काममात्मानं भार्यां पुत्रं वोप रुन्ध्यात् नत्वेव दासकर्मकरं तथा चात्मनोऽनुपरोधं कुर्याद्यथा कर्मसु समर्थः स्यात् इति। बोधायनः – श्रान्तोऽदृष्टपूर्वोऽश्रुतः केवलमन्नार्थी नान्यप्रयोजनो य एति सोऽतिथिर्भवत्यपि वा सर्ववर्णानामन्यतः काले यथोपपन्नः सर्वेषामतिथीनां श्रेष्ठतमोऽतिथिर्भवति इति।

ஆபஸ்தம்பரே:- வைச்வதேவத்தின் முடிவில் போஜனத்திற்காக வந்த எல்லோரையும் பாகமுள்ளவராய்ச் செய்ய வேண்டும், நாய்கள், சண்டாளர் வரையில். சண்டாளாதிகளுக்குக் கொடுக்கக் கூடாதென்று சிலர் எண்ணுகின்றனர். (இதனால், கொடுத்தால் நன்மை, கொடுக்காவிடில் ப்ரத்யவாயமில்லை என்பதாம்.) எவர்கள் நித்யமும் அன்னத்திற்கு யோக்யர்களோ, வேலைக்காரர்

முதலியவர், அவர்களுக்கு இடையூறில்லாமல் வைச்வதேவாந்தத்தில் வந்தவர்க்கு அன்னத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டும். தன்னையும் பார்யையையும், புத்ரனையும் வருத்தலாம், வீட்டில் ஊழியம் செய்பவனை வருத்தக் கூடாது. தனக்கும் அதிகமாய் வறுமையைச் செய்யக் கூடாது. நித்ய கர்மானுஷ்டானத்திற்கு ஸாமர்த்யமிருக்கும்படி கவனித்துக் கொள்ள வேண்டும். **போதாயனர்:-** களைப்புற்றவனும், முன் பார்க்கப்படாதவனும், முன் கேட்கப்படாதவனும், அன்னத்தை மட்டில் விரும்பியவனும், வேறொன்றையும் விரும்பாதவனுமாய் எவன் வருகின்றானோ அவன் அதிதியாவான். அல்லது எந்தவர்ணத்தில் ஒருவனானாலும் காலத்தில் விதிப்படி வந்தவன் எல்லா அதிதிகளிலும் மிகச் சிறந்த அதிதியாகிறான்.

गौतमोऽपि — असमानग्रामोऽतिथिरैकरात्रिकोऽधिवृक्षसूर्योपस्थायी ब्राह्मणस्यानतिथिरब्राह्मणोऽयज्ञे संवृतश्चेद्भोजनं तु क्षत्रियस्योर्ध्वं ब्राह्मणेभ्योऽन्यान् भृत्यैः सहानृशंस्यार्थम् इति । अब्राह्मणः - क्षत्रियादिः । अनतिथिः - न तत्रातिथिधर्मा अनुष्ठेयाः । अयज्ञे - यज्ञादन्यत्र । यज्ञे त्वागतस्य कर्तव्याः । स चेदब्राह्मणः संवृतः - अप्रकाशः दरिद्रः । प्रभूतस्य तु भवत्येव । आनृशंस्यार्थं नृशंसोऽयमिति लोको माक्रुशदित्यर्थः ।। संवर्तः - तिथिपर्वोत्सवाः सर्वे त्यक्ता येन महात्मना । सोऽतिथिः सर्वभूतानां शेषानभ्यागतान् विदुः इति ।

**கௌதமரும்:-** வேறு க்ராமத்தில் வஸிப்பவனும், ஒருநாள் மட்டில் வஸிப்பவனும், மத்யாஹ்ன ஸமயத்தில் வந்தவனும் ஆகியவன் அதிதி ஆவான். ப்ராம்ஹணனுக்கு அப்ராம்ஹணன் (க்ஷத்ரியன் முதலியவன்) அதிதியாகான். இது யாகம் தவிற மற்ற இடத்தில். யாகத்திலானால், வந்த அப்ராம்ஹணனுக்கும் அதிதிதர்மங்களைச் செய்ய வேண்டும். அந்த அப்ராம்ஹணன் தரித்ரனாயிருந்தால்.

க்ஷத்ரியனுக்கு அதிதிகளான ப்ராம்ஹணர்கள் புஜித்த பிறகு போஜனம் செய்விக்க வேண்டும். ஆதித்ய காலத்தில் வந்த வைச்யன் முதலானவரையும், தன் பணியாளுடன் புஜிக்கச் செய்ய வேண்டும், விபவமிருந்தால். இவன் க்ரூரன் என்று உலகம் சொல்லாமலிருப்பதற்காக. ஸம்வர்த்தர்:- எந்த மஹாத்மா, திதி, பர்வம், உத்ஸவம் இவைகள் எல்லாவற்றையும் விட்டு வருகின்றானோ அவன் எல்லோருக்கும் அதிதி ஆவான். மற்றவர்களை அப்யாகதர் என்பார்கள்.

व्यासः — सुदूरादाशया प्राप्तः तृष्णाश्रमकर्शितः । यत् पूज्यतेऽतिथिः सम्यगयूपः क्रतुरेव सः ॥ पापो वा यदि चण्डालो विप्रघ्नः पितृघातकः । वैश्वदेवे तु सम्प्राप्तः सोऽतिथिः स्वर्गसंक्रमः ॥ अज्ञात कुलनामानं याचमानमकिञ्चनम् । ब्राह्मणं प्राहुरतिथिं स पूज्यः शक्तितो द्विजैः । अकिञ्चनमसंम्बन्धमन्यदेशादुपागतम् । असंपूज्यातिथिं भुञ्जन् भुक्त्वा कामं व्रजत्यधः इति । सुमन्तुः – अभ्यागतो ज्ञातपूर्वस्त्वज्ञातोऽतिथिरुच्यते । यस्याध्वखिन्नाः पथिकाः गृहमायान्ति कर्शिताः । पूज्यन्ते तृणभूम्याद्यैः पितरस्तेन पुत्रिणः इति ।

வ்யாஸர்:- வெகு தூரத்திலிருந்து ஆசையுடன் வந்தவனும், பசி, தாஹம், ச்ரமம் இவைகளால் மெலிந்தவனுமான அதிதியை நன்றாய்ப் பூஜிப்பதென்பது யூபமில்லாத யாகமே ஆகும். பாபியானாலும், சண்டாளனானாலும், ப்ரம்ஹக்னனானாலும், பித்ருக்னனானாலும் வைச்வதேவ காலத்தில் வந்த அதிதி ஸ்வர்க்கத்திற்குப் படியாவான். குலம் பெயர் அறியப்படாதவனும், யாசிப்பவனும், தரித்ரனுமான ப்ராம்ஹணனை அதிதி என்பார். அவன் க்ருஹஸ்தரான ப்ராம்ஹணர்களால் யதாசக்தி பூஜிக்கப்பட வேண்டும். தரித்ரனும், ஸம்பந்தமில்லாதவனும், அன்யதேசத்தினின்று வந்தவனுமான அதிதியைப் பூஜிக்காமல் புஜிப்பவன், இஷ்டப்படி

புஜித்தால் பாதித்யத்தை அடைவான். ஸுமந்து:- முன் அறியப்பட்டவன் அப்யாகதன் எனப்படுவான். முன் அறியப்படாதவன் அதிதி எனப்படுவான். வழிகடந்து வருந்தியவரும் மெலிந்தவருமான வழிப்போக்கர்கள் எவன் வீட்டை அடைகின்றனரோ, க்ருஹஸ்தனால், புல், பூமி முதலியதால் யதாசக்தி பூஜிக்கப்படுகின்றனரோ, அதனால் அவன் பித்ருக்கள் புத்ரனுடையவராய் ஆகின்றனர்.

याज्ञवल्क्यः — अध्वनीनोऽतिथिर्ज्ञेयः श्रोत्रियो वेदपारगः। मान्यावेतौ गृहस्थस्य ब्रह्मलोकमभीप्सतः इति ॥ आश्वमेधिके – दूराध्वगं श्रान्तमनुव्रजन्ति देवाश्च सर्वे पितरोऽग्नयश्च। तस्मिन् द्विजे तुष्यति पूजिताः स्युर्दिते निराशा अपि ते प्रयान्ति ॥ दिते - खण्डिते निराकृत इति यावत्। बुभुक्षितं पिपासार्तमतिथिं श्रान्तमागतम्। तदा तं भावयेदत्र व्यासोऽयं समुपस्थितः इति ॥ आपस्तम्बः – असमुदेतश्चेदतिथिर्ब्रुवाण आगच्छेदासनमुदकमन्नं श्रोत्रियाय ददामीत्येव दद्यादेवमस्य समृद्धं भवति इति। विद्यारहितः असमुदेतः।

யாக்ஞவல்க்யர்:- வழியிலிருப்பவனை அதிதியென்று அறியவும். ச்ரோத்ரியன், வேதபாரகன் என்ற இருவரும் வழியிலிருப்பவரானால், ப்ரம்ஹலோகத்தை விரும்பும் க்ருஹஸ்தனால் பூஜிக்கத் தகுந்தவர். (ச்ரோத்ரியன் வேதாத்யயனம் செய்தவன் என்றாலும், இங்கே சாஸ்த்ரம், அத்யயனம் இவைகளுடன் கூடியவன், என்று பொருள். வேதபாரகன் என்பதற்கு, ஒரு வேதத்தை அத்யயனம் செய்விக்கச் சக்தி உள்ளவன், என்று பொருள்.) ஆச்வமேதிகத்தில்:- தூரமான வழிநடந்தவனும் களைப்புற்றவனுமானவனைத் தேவ்ரும், எல்லாப் பித்ருக்களும், அக்னிகளும் தொடர்ந்து செல்லுகின்றனர். அந்த ப்ராம்ஹணன் பூஜையால் ஸந்தோஷித்தால், அவர்களும் பூஜிக்கப்பட்டவராய் ஆகின்றனர். அவர் நிராகரிக்கப்பட்டால், அவரும் ஆசையற்றவராய்ச்

செல்கின்றனர். பசியால் வருந்தியவனும், தாஹத்தால் வருந்தியவனும், ச்ரமமுற்று வந்தவனுமான அதிதியை 'வ்யாஸர் இங்கு வந்திருக்கிறார்' என்று பாவிக்க வேண்டும். ஆபஸ்தம்பர்:- வித்யையில்லாதவன், அதிதி என்று சொல்பவனாய் வந்தால், ஆஸனம், ஜலம், அன்னம் இவைகளை, ச்ரோத்ரியனுக்குக் கொடுக்கிறேன் என்று பாவித்தே கொடுக்க வேண்டும். இவ்விதமானால் இவனின் தானம் ஸம்பூர்ணமாய் ஆகிறது. ச்ரோத்ரியனுக்கே கொடுத்ததாகிறது, என்பதாம்.

स्मृतिसारे – अज्ञातकुलगोत्रस्तु अध्वश्रान्तो बुभुक्षितः । सम्प्राप्तो वैश्वदेवान्ते सोऽतिथिः स्वर्गसङ्क्रमः इति ।। वैश्वदेवान्त इति दिवसाभिप्रायम्। सायं तु वैश्वदेवकाले कालान्तरे च प्राप्तोऽतिथिरेव ।। तथा च मनुः – अप्रणोद्योऽतिथिः सायं सूर्योढो गृहमेधिना । काले प्राप्तस्त्वकाले वा नास्यानश्नन् गृहे वसेत् इति । सूर्योढ इति । अस्तं गच्छता सूर्येण देशान्तरगमनाशक्तिमुत्पाद्य गृहं प्रापित इत्यर्थः ।

ஸ்ம்ருதிஸாரத்தில்:- குல கோத்ரங்களறியப் படாதவனும், வழி நடையால் களைப்புற்றவனும், பசியுள்ளவனும், வைச்வதேவத்தின் முடிவில் வந்தவனுமான அதிதி எவனோ அவன் ஸ்வர்க்கத்திற்கு மார்க்கமாகியவனாம். வைச்வதேவாந்தத்தில் என்று சொல்லியது பகலில் என்றபிப்ராயமுடையது. இரவிலானால் வைச்வதேவகாலத்திலோ வேறு காலத்திலோ வந்தாலும் அவன் அதிதியேயாவான். அவ்விதமே, மனு:- ஸாயங்காலத்தில் ஸூர்யோடனாய் வந்த அதிதியை க்ருஹஸ்தன் மறுதலிக்கக் கூடாது. அவன் ஸாயம் வைச்வதேவ காலத்தில் வந்தாலும், போஜனத்திற்குப் பிறகு வந்தாலும், க்ருஹஸ்தன் வீட்டில் போஜனமில்லாமல் வஸிக்கக் கூடாது. ஸூர்யோடன் - அஸ்தமயமடையும் ஸூர்யனால் வேறு இடத்திற்குப் போவதற்குச் சக்தியின்மையை உண்டாக்கி, க்ருஹத்தை அடைவிக்கப்பட்டவன், என்று பொருள்.

प्रचेता अपि – यः सायं वैश्वदेवान्ते सायं वा गृहमागतः । देववत् पूजनीयोऽसौ सूर्योढः सोऽतिथिः स्मृतः इति ॥ याज्ञवल्क्योऽपि – अप्रणोद्योऽतिथिः सायमपि वाग्भूतृणोदकैः इति । सङ्ग्रहे – सायं प्राप्तायातिथये प्रदद्यादासनोदके । अन्नं चैव यथाशक्ति सत्कृत्य विधिपूर्वकम् इति ॥ स्मृतिरत्ने – दिवाऽतिथौ तु विमुखे गते यत् पातकं भवेत् । तदेवाष्टगुणं पुंसां सूर्योढे विमुखे गते ॥ तस्माच्छक्त्या च भक्त्या च सूर्योढमतिथिं नरः । पूजयेत् पूजिते तस्मिन् पूजिताः सर्वदेवताः ॥ धाता प्रजापतिः शक्रो वह्निर्वायुगणोऽर्यमा । प्रविश्यातिथिमेनं वै भुञ्जते नात्र संशयः इति ॥

ப்ரசேதஸ்ஸும்:- எவன் மாலையில் செய்யப்படும் வைச்வதேவத்தின் முடிவிலோ, மாலையிலோ வீட்டிற்கு வந்தவனோ, இவனைத் தேவனைப்போல் பூஜிக்க வேண்டும். அந்த அதிதி ஸூர்யோடன் எனப்படுகிறான். யாக்ஞவல்க்யரும்:- ஸாயங்காலத்தில் வந்த அதிதியை மறுதலிக்கக் கூடாது. அன்னம் முதலியதில்லாவிடினும், நல்ல வார்த்தை, தங்குமிடம், பாய், ஆஸனம் முதலியது, ஜலம் இவைகளாலாவது பூஜிக்க வேண்டும். ஸங்க்ரஹத்தில்:- இரவில் வந்த அதிதிக்கு, ஆஸனம், ஜலம், அன்னம் இவைகளை விதிப்படி ஆதரித்துக் கொடுக்க வேண்டும். ஸ்ம்ருதிரத்னத்தில்:- பகலில் வந்த அதிதி பூஜிக்கப்படாமல் திரும்பிச் சென்றால் எந்தப் பாபமுண்டாகுமோ, அதே எட்டு மடங்கு அதிகமாகும், ராத்ரியில் வந்த அதிதி பூஜிக்கப்படாமல் திரும்பிச் சென்றால். ஆகையால் யதாசக்தி, பக்தியுடன் ஸூர்யோடனை அதிதியை க்ருஹஸ்தன் பூஜிக்க வேண்டும். அவன் பூஜிக்கப்பட்டால் ஸகல தேவர்களும் பூஜிக்கப்பட்டவராய் ஆகின்றனர். தாதா, ப்ரஜாபதி, இந்திரன், அக்னி, வாயுக்கள், அர்யமா என்ற இவர்கள் இந்த அதிதியினுட் புகுந்து, ஆதித்யத்தைப் புஜிக்கின்றனர். இதில் ஸந்தேஹமில்லை.

उक्तलक्षणेऽतिथावागते सति यत् कर्तव्यम्, तदाह पराशरः- अतिथिं तत्र सम्प्राप्तं पूजयेत् स्वागतादिना । तथाऽऽसनप्रदानेन पादप्रक्षालनेन च ॥ श्रद्धया चान्नदानेन प्रियप्रश्नोत्तरेण च । गच्छतश्चानुयानेन प्रीतिमुत्पादयेद्गृही ॥ न पृच्छेद्गोत्रचरणे न स्वाध्यायं श्रुतं तथा । हृदये कल्पयेद्देवं सर्वदेवमयो हि सः इति ॥ चरणं - आचारः । श्रुतं - व्याकरणमीमांसादि ॥ यमोऽपि – न पृच्छेद्गोत्रचरणे देशं नाम कुलं श्रुतम् । अध्वनोऽभ्यागतं विप्रं भोजनार्थमुपस्थितम् ॥ देशं नाम कुलं विद्यां पृष्ट्वा योऽन्नं प्रयच्छति । न स तत् फलमाप्नोति दत्वा स्वर्गं न गच्छति इति ॥

சொல்லிய லக்ஷணங்களுடைய அதிதி வந்தால் எது செய்யத் தகுந்ததோ அதைச் சொல்லுகிருர். பராசரர்:- அக்காலத்தில் வந்த அதிதியை, நல்வரவு கூறுவது முதலியதால் பூஜிக்க வேண்டும். ஆஸனம் கொடுப்பதாலும், கால்களைக் கழுவுவதாலும், ச்ரத்தையுடன் அன்னமளிப்பதாலும், ப்ரியமான கேள்விகளாலும், உத்தரங்களாலும், செல்பவனைப் பின் தொடருவதாலும், க்ருஹஸ்தன் அதிதிக்குக் களிப்பை உண்டாக்க வேண்டும். கோத்ரத்தையும், ஆசாரத்தையும், வேதத்தையும், சாஸ்த்ரத்தையும் கேட்கக் கூடாது. அவனைத் தேவனுய் மனதில் எண்ண வேண்டும். அவன் ஸர்வதேவஸ்வரூபனல்லவா. யமனும்:- வழியினின்று வந்தவனும், போஜனத்திற்காக வீட்டிற்கு வந்தவனுமான ப்ராம்ஹணனை, தேசம், நாமதேயம், குலம், வித்யை இவைகளைக் கேட்டுக் கொண்டு எவன் அன்னத்தைக் கொடுக்கின்ருனே, அவன் அதன் பலனையடைவதில்லை. கொடுத்தும் ஸ்வர்க்கத்தை அடைவதில்லை.

विष्णुपुराणे — स्वाध्यायगोत्रचरणमपृष्ट्वा च तथा कुलम् । हिरण्यगर्भबुध्या तं मन्येताभ्यागतं गृही इति ॥ शातातपोऽपि – चित्ते विभावयेदस्मिन् व्यासः स्वयमुपागतः इति ॥ व्यासोऽपि – न

पृच्छेद्गोत्रचरणं न स्वाध्यायं न च श्रुतम्। शोभनाशोभनाकारं तं मन्येत प्रजापतिम्॥ अन्नशाकाम्बुदानेन स्वशक्त्या पूजयेत् पुमान्। शयन प्रस्तरमहीप्रदानैर्मृदुभाषणैः इति॥

**விஷ்ணு புராணத்தில்:-** க்ருஹஸ்தன் வீட்டிற்கு வந்த அதிதியை, வேதம், கோத்ரம், ஆசாரம், குலம் இவைகளைக் கேட்காமல் ஹிரண்யகர்ப்பன் என்ற புத்தியுடன் மதிக்க வேண்டும். **சாதாதபரும்:-** வ்யாஸர் தாமாகவே வந்திருக்கிறார் என்று மனதில் எண்ண வேண்டும். **வ்யாஸரும்:-** கோத்ரம், ஆசாரம், வேதம், சாஸ்த்ரம் இவைகளைப் பற்றிக் கேட்கக் கூடாது. அதிதி நன்றாயிருந்தாலும், நன்றாயில்லாவிடினும், அவனை ப்ரம்ஹாவாக எண்ண வேண்டும். யதாசக்தி அன்னம், சாகம், ஜலம், படுக்கை, ஆஸனம், பூமி இவைகளைக் கொடுப்பதாலும், மெதுவான வார்த்தைகளாலும் பூஜிக்க வேண்டும்.

यमः— चक्षुर्दद्यान्मनो दद्याद्वाचं दद्याच्च सूनृताम्। उत्थाय चासनं दद्यात् स्वधर्मः पञ्चलक्षणः॥ संमुखे तुष्ट आदित्यः सम्भाषेण सरस्वती। स्वागतेनाग्नयः प्रीता आसनेन शतक्रतुः। पितरः पादशौचे न अन्नाद्येन प्रजापतिः। शयनेन च तुष्टाः स्युः ब्रह्मविष्णु महेश्वराः इति। संवर्तः – अदृष्टपूर्वमज्ञातमतिथिं प्राप्तमर्चयेत्। स्वागतासनदानेन प्रत्युत्थानेन चाम्बुना। स्वागतेनाग्नयस्तुष्टा भवन्ति गृहमेधिनः। आसनेन तु दत्तेन प्रीतो भवति देवराट्॥ पादशौचेन पितरः प्रीतिमायान्ति दुर्लभाम्। अन्नदानेन युक्तेन तृप्यते हि प्रजापतिः इति।

**யமன்:-** கண்ணைக் கொடுக்க வேண்டும். மனதைக் கொடுக்க வேண்டும். ஸத்யமாயும் ப்ரியமாயுள்ள வார்த்தையைக் கொடுக்க வேண்டும். எழுந்து, ஆஸனத்தைக் கொடுக்க வேண்டும். இவ்விதம் க்ருஹஸ்தனின் தர்மம் ஐந்துவிதம். எதிரில் செல்வதால்

ஸூர்யனும், பேசுவதால் ஸரஸ்வதியும், நல்வரவு கூறுவதால் அக்னிகளும், ஆஸனத்தைக் கொடுப்பதால் இந்த்ரனும், காலலம்புவதால் பித்ருக்களும், அன்னம் முதலியதால் ப்ரஜாபதியும், படுக்கையால் ப்ரம்ஹ, விஷ்ணு, மஹேச்வரர்களும், ப்ரீதர்களாய் ஆகின்றனர். ஸம்வர்த்தர்:- முன் காணப்படாதவனும், அறியப் படாதவனுமான வந்த அதிதியை, நல்வரவு கூறுதல், ஆஸனம் கொடுத்தல், எழுந்து ஆதரித்தல், ஜலத்தைக் கொடுத்தல் இவைகளால் அர்ச்சிக்க வேண்டும். க்ருஹஸ்தன் நல்வரவு கூறுதலால் அக்னிகளும், ஆஸனம் கொடுப்பதால் இந்த்ரனும், கால்களை அலம்புவதால் பித்ருக்களும் மிகுந்த த்ருப்தியை அடைகின்றனர். உசிதமாய் அன்னதானம் செய்வதால் ப்ரஜாபதியும் த்ருப்தராகிறார்.

आसनादिदाने विशेषमाह मनुः – आसनावसथे शय्या मनुव्रज्यामुपासनाम्। उत्तमेषूत्तमं कुर्याद्धीने हीनं समे समम् इति ।। गौतमोऽपि – शय्यासनावसथानुव्रज्योपासनानि सदृक् श्रेयसोः समान्यल्पशोऽपि हीने इति ।। सदृक् - आत्मना तुल्यः । श्रेयान् - अधिको विद्यावृत्तादिना । तयोरात्मना तुल्यानि शय्यासनादीनि देयानि। हीनेऽप्यल्पशो देयानीत्यर्थः ।।

ஆஸனம் முதலியதைக் கொடுப்பதில் பேதத்தைச் சொல்லுகிறார், மனு:- ஆஸனம், இருப்பிடம், படுக்கை, பின்தொடருதல், பணிவிடை இவைகளை உத்தமருக்கு உத்தமமாயும், தாழ்ந்தவருக்குத் தாழ்ந்ததாயும், ஸமமானவருகக்கு ஸமமாகியதாகவும் செய்ய வேண்டும். கௌதமரும்:- படுக்கை, ஆஸனம், இருப்பிடம், தொடர்ந்து செல்லுதல், பணிவிடை இவைகளை வித்யையாலும், ஆசாரத்தாலும் தனக்குச் சமமாயும், மேலாயும் உள்ளவருக்குத் தன்னுடையது போலவும், தன்னைவிடக் குறைந்தவனுக்கு அல்பமாகியதாயும் கொடுக்க வேண்டும்.

स एव — श्रोत्रियस्य तु पाद्यमर्घ्यमन्नविशेषांश्च प्रकारयेन्नित्यं वा संस्कारविशिष्टं मध्यतोऽन्नदानमवैद्ये साधुवृत्ते विपरीते तु तृणोदकभूमीः स्वागतमन्ततः पूजाऽनत्याशश्च इति ।। अन्नविशेषाः - पायसादयः । नित्यं वा - यदेवास्य गृहे नित्यम्, तदेव मरीचिभर्जनादिसंस्कारविशिष्टं साधयेत् । अवैद्ये - विद्यारहिते साधुवृत्ते उपस्थिते, मध्यतः - मध्यमेन संस्कारेण अन्नं देयम् । यद्यवैद्यः साधुवृत्तश्च न भवति, स विपरीतः । तस्मै तृणादि दद्यात् । अनत्याशः - यदतिथये न दत्तं, न तदश्नीयादित्यर्थः ।।

கௌதமரே:- ச்ரோத்ரியனுன அதிதிக்குப் பாத்யம், அர்க்யம், இவைகளைக் கொடுக்க வேண்டும். பாயஸம் முதலியதையும் செய்விக்க வேண்டும். அல்லது, ப்ரதிதினம் தன் வீட்டில் எவ்விதம் சமைக்கப்படுமோ அவ்விதம் அன்னத்தைக் கொடுக்க வேண்டும். வித்யை இல்லாமல் நல்ல ஆசாரத்துடனிருப்பவனுன அதிதிக்கு, நடுத்தரமான பாகத்தினுல் ஸித்தமான அன்னத்தைக் கொடுக்க வேண்டும். வித்யையுமில்லாமல் நல்ல ஆசாரமும் இல்லாதவனுக்கு, புல் ஆஸனம், இடம், இவைகளைக் கொடுத்து நல்வரவு கூற வேண்டும். எவ்விதமான அதிதியைப் புஜிப்பித்தாலும் அவனைப் பூஜிக்க வேண்டும். அதிதிக்குக் கொடுக்காத வஸ்துவைத் தான் புஜிக்கக் கூடாது.

तथा च वसिष्ठः — मांसमन्नं तथा शाकं गृहे यद्वोपपादितम् । न वै स्वयं तदश्नीया दतिथिं यन्न भोजयेत् ।। यद्येकपङ्क्तौ विषमं ददाति स्नेहाद्भयाद्वा यदि वाऽर्थहेतोः । वेदेषु दृष्टामृषिभिश्च गीतां तां ब्रह्महत्यां मुनयो वदन्ति इति ।। देवलोऽपि — अघृतं भोजयेद्विप्रं यो गृहे सति सर्पिषि । परत्र निरयं घोरं गृहस्थः प्रतिपद्यते ।। मृष्टमन्नं स्वयं भुक्त्वा पश्चात् कदशनं नरः । ब्राह्मणं भोजयन् मूर्खो नरके चिरमावसेत् इति ।। मनुरपि — नैव स्वयं तदश्नीया दतिथिं यन्न भोजयेत् । धन्यं यशस्यमायुष्यं स्वर्ग्यं चातिथिपूजनम् इति ।

அவ்விதமே வஸிஷ்டர்:- மாம்ஸம், அன்னம், சாகம், வீட்டில் ஸித்தமாகிய வஸ்து எது ஆனாலும் அவைகளில் அதிதியைப் புஜிப்பிக்காததைத் தான்மட்டில் புஜிக்கக்கூடாது. ஒரே வரிசையில் உட்கார்ந்திருப்பவருக்கு ஸந்தேஹத்தாலோ, பயத்தாலோ, பணத்திற்காகவோ பேதமாய்ப் பரிமாறினால், அது ப்ரம்ஹஹத்யை என்று வேதங்களில் சொல்லப்பட்டதாயும் முனிகளால் பாடப்பட்டதாயும், ருஷிகள் சொல்லுகின்றனர். தேவலரும்:- எந்த க்ருஹஸ்தன், வீட்டில் நெய் இருக்கும் பொழுது, நெய் இல்லாமல் அதிதியைப் புஜிப்பிக்கின்றானோ, அவன் பரலோகத்தில் கோரமான நரகத்தை அடைகின்றான். ம்ருஷ்டமான அன்னத்தைத் தான் புஜித்து, மட்டமான அன்னத்தை ப்ராம்ஹணனைப் புஜிப்பித்தால், அந்த மூர்க்கன் நரகத்தில் வெகுகாலம் வஸிப்பான். மனுவும்:- அதிதியைப் புஜிப்பிக்காத வஸ்து எதுவோ அதைத் தான் புஜிக்கக் கூடாது. அதிதியைப் பூஜிப்பது, தனம், கீர்த்தி, ஆயுள், ஸ்வர்க்கம் இவைகளை யளிப்பதாய் ஆகின்றது.

आपस्तम्बः – तमभिमुखोऽभिगम्य यथावयः समेत्य तस्यासनमाहारयेच्छक्तिविषये नाबहुपादमासनं भवतीत्येके तस्य पादौ प्रक्षालयेत् इति। स एव – सान्त्वयित्वा तर्पयेद्रसैर्भक्ष्यैरद्भिरवरार्ध्येनेत्यावसथं दद्यादुपरिशय्यामुपस्तरणमुपधानं सावस्तरणमभ्यञ्जनं च इति। सावस्तरणं - उपरि पटसहितमुपधानम्। अभ्यञ्जनं - पादयोस्तैलं, घृतं वा। एतु सर्वं भोजनात् प्रागूर्ध्वं वा अपेक्षिते काले दद्यादित्यर्थः।

ஆபஸ்தம்பர்:- அதிதியை எதிர்கொண்டு சென்று, வயதிற்குத் தகுந்தபடி நமஸ்காரம் முதலியதால் அவனுடன் சேர்ந்து, ஆஸனத்தைக் கொடுக்க வேண்டும். சக்தியிருந்தால் அநேகம் கால்களில்லாத ஆஸனத்தைக் கொடுக்ககூடாதென்று சிலர். அதிதியின் கால்களை அலம்ப வேண்டும். ஆபஸ்தம்பரே:- ப்ரியமான வார்த்தைகள்

பேசி, பால் முதலியதாலும், பக்ஷயங்களாலும், அவையில்லாவிடில் ஜலத்தினுலாவது த்ருப்தி செய்ய வேண்டும். இளைப்பாறுமிடம், கட்டில் முதலிய படுக்கை, மெத்தை முதலியது, தலையணை, படுக்கையில் விரிக்கும் வஸ்த்ரம் முதலியது, காலில் தடவுவதகற்கான எண்ணெய் முதலியது இவைகளையும், போஜனத்திற்கு முன் அல்லது பின் வேண்டும் ஸமயத்தில் கொடுக்க வேண்டும்.

आश्वमेधिके भगवान् – पादाभ्यङ्गाम्बुपानैस्तु योऽतिथिं पूजयेन्नरः । पूजितस्तेन राजेन्द्र भवामीह न संशयः ॥ क्षुत्पिपासागतार्ताय देशकालागताय च । सत्कृत्यान्नं प्रदातव्यं यज्ञस्य फलमिच्छता इति ॥ ऐश्वर्योपेतस्य गृहे समागतस्याप्यातिथ्यं कर्तव्यमभ्युदयकामिनेत्याह पराशरः – यस्य छत्रं हयश्चैव कुञ्जरारोहमृद्धिमत् । ऐन्द्रं स्थानमुपासीत तस्मात्तं न विचारयेत् इति ॥ यस्य छत्रहयौ विद्येते, तस्यातिथ्यं कुर्वन् ऐन्द्रं पदमाप्नुयात् । कुञ्जरस्यारोहो यस्मिन्नैन्द्र पदे, तत् कुञ्जरारोहम् । ऋद्धिः - अमृतपानाप्सरःसेवादिः अस्मिन्नस्तीति ऋद्धिमत् । छत्रादिमन्तं जातिकुलाचारैर्हीनमपि न विचारयेत् । पूज्योऽयं न वेति न सन्दिह्यात् । किन्तु ईश्वरबुध्या पूजयेत् ॥ अत एवाह भगवान् – यद्यद्विभूतिमत् सत्वं श्रीमदूर्जितमेव वा । तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसम्भवम् इति ।

**பகவான்:-** (ஆச்வமேதிக பர்வத்தில்) காலுக்காகும் எண்ணெய், ஜலம், பால் முதலிய பானம் இவைகளால் எவன் அதிதியைப் பூஜிப்பானே அவனுல் நானே பூஜிக்கப்பட்டவனுய் ஆகிறேன். ஓ அரசனே! ஸம்சயமில்லை. பசி தாகங்களை அடைந்து வருந்தியவனும், நல்ல தேசத்தில் நல்ல காலத்தில் வந்தவனுமான அதிதிக்கு ஸத்காரம் செய்து அன்னத்தைக் யாகத்தின் பலத்தை விரும்புகின்றவன். கொடுக்க வேண்டும், ஐச்வர்ய முள்ளவன் க்ருஹத்திற்கு வந்தால் அவனுக்கும் நன்மையை விரும்புகிறவன், ஆதித்யம் செய்ய வேண்டும்.

என்றூர். பராசரர்:- எவனுக்குக் குடையும், குதிரையும் இருக்கின்றனவோ, அவனுக்கு ஆதித்யம் செய்பவன், இந்த்ரனுடைய பதத்தை அடைவான். யானையில் ஏற்றம், அம்ருதபானம், அப்ரஸ்ஸுக்களின் ஸேவை இவைகள் எதில் உள்ளதோ அவ்விதமானது. இந்திர பதவியால் குடை முதலியதுடைய க்ஷத்ரியன் முதலியவனை, ஜாதி, குலம், ஆசாரம் இவைகளால் தாழ்ந்தவனுயினும், இவன் பூஜிக்கத் தகுந்தவனு அல்லவா என்று ஸந்தேஹிக்கக் கூடாது. ஆனுல் ஈச்வர புத்தியுடன் பூஜிக்க வேண்டும். ஆகையால்தான், பகவான்:- (கீதையில்) எந்தெந்த வஸ்து ஸமூஹம் ஐச்வர்யத்துடன் கூடியதோ, லக்ஷ்மியுடன், அல்லது சோபையுடன் கூடியதோ, உத்ஸாகத்துடன், அல்லது பலத்துடன் கூடியதோ, அந்தந்த வஸ்துவை, ஈச்வரனுகிய எனது சக்தியின் ஏகதேசத்தால் உண்டாகியதாக நீ அறியக்கடவாய் என.

याज्ञवल्क्यः— महोक्षं वा महाजं वा श्रोत्रियायोपकल्पयेत्। सत्क्रियाऽन्वासनं स्वादु भोजनं सूनृतं वचः इति ॥ अत्र विज्ञानेश्वरः – महान्तमुक्षाणं धौरेयं महाजं वा श्रोत्रियायोपकल्पयेत् भवदर्थमस्माभिः परिकल्पितमिति । तत्प्रीत्यर्थं न तु दानाय व्यापादनाय वा । प्रतिश्रोत्रियमुक्षासम्भवात्। तस्मात् सत्क्रियाद्येव कर्तव्यम् इति ॥

யாக்ஞவல்க்யர்:- பெரிய எருதையாவது, பெரிய ஆட்டையாவது, ச்ரோத்ரியனுக்கு ஸமர்ப்பிக்க வேண்டும், தங்களுக்காக இது கல்பிக்கப்பட்டுள்ளதென்று. இவ்விதம் சொல்வது ப்ரீதிக்காக. தானத்திற்காகவும் அல்ல, அழிப்பதற்காகவும் அல்ல. ஒவ்வொரு ச்ரோத்ரியனுக்கும் எருது ஸம்பவிக்காது. ஆகையால். பிறகு நல்வரவு கூறுதல் முதலிய ஸத்காரம், அவனுட்கார்ந்த பிறகு உட்காருதல், நல்ல போஜனம், ப்ரியமான வசனம் இவைகளால் பூஜிக்க வேண்டும் என்று விக்ஞானேச்வரர்.

मधुपर्कार्हानाहापस्तम्बः – गोमधुपर्कार्हो वेदाध्याय आचार्य ऋत्विक् स्नातको राजा वा धर्मयुक्त आचार्यायर्त्विजे श्वशुराय राज्ञ इति

परिसंवत्सरादुपतिष्ठद्भ्यो गौर्मधुपर्कश्च दधि मधुसंसृष्टं मधुपर्कः पयो वा मधुसंसृष्टमभाव उदकम् इति ।। साङ्गस्य वेदस्याध्येता वेदाध्यायः । सोऽतिथिर्मधुपर्कमर्हति । गां च दक्षिणाम् । धर्मयुक्त इति राज्ञो विशेषणम् । वाशब्दः समुच्चये । परिसंवत्सरात् - संवत्सरं वर्जयित्वा । तदुपर्यागतेभ्यो मधुपर्को गौर्दक्षिणेत्यर्थः ।।

மதுபர்க்கத்திற்குரியவர்களைச் சொல்லுகிறார், ஆபஸ்தம்பர்:- ஸாங்கமாக வேதத்தை அத்யயனம் செய்தவன் கோதக்ஷிணையுடன் கூடிய மதுபர்க்கத்திற்கு அர்ஹனாகிறான். வேதாத்யயனமில்லாதவராகினும் ஆசார்யன், ருத்விக், ஸ்நாதகன், தர்மிஷ்டனான அரசன் இவர்களும் கோமதுபர்க்கத்திற்கு அர்ஹராகின்றனர். ஆசார்யன், ருத்விக், மாமனார், அரசன் இவர்கள் ஒரு வர்ஷத்திற்குப் பிறகு வந்தால் அவர்களுக்குக் கோவும் மதுபர்க்கமும் கொடுக்கப்பட வேண்டும். தேனுடன் கூடிய தயிர், அல்லது தேனுடன் கூடிய க்ஷீரமாவது மதுபர்க்கம். இல்லாவிடில் ஜலமாவது.

गौतमोऽपि— ऋत्विगाचार्यश्वशुरपितृव्यमातुलानामुपस्थाने मधुपर्कः संवत्सरे पुनर्यज्ञविवाहयोरर्वाग्राज्ञश्च श्रोत्रियस्य अश्रोत्रियस्यासनोदके इति ।। मनुरपि – राजर्त्विक् स्नातकगुरून् प्रियश्वशुरमातुलान् । अर्हयेन्मधुपर्केण परिसंवत्सरात्पुनः ।। राजा च श्रोत्रियश्चैव यज्ञकर्मण्युपस्थितौ । मधुपर्केण संपूज्यौ नत्वन्यत इति स्थितिः इति ।। उपस्थितौ - संवत्सरादर्वागप्यागतौ । अन्यतः - अन्यदा । स्थितिः - सिद्धान्त इत्यर्थः । याज्ञवल्क्यश्च – प्रतिसंवत्सरं त्वर्घ्याः स्नातकाचार्यपार्थिवाः । प्रियो विवाह्यश्च तथा यज्ञं प्रत्यृत्विजः पुनः इति । अर्घ्या - मधुपर्केण संपूज्या इत्यर्थः ।

கௌதமரும்:- ருத்விக், ஆசார்யன், மாமனார், பித்ருவ்யன், அம்மான் இவர்கள் வீட்டிற்கு வந்தால் மதுபர்க்கத்தைக் கொடுக்க வேண்டும். ஒரு வர்ஷம்

க்ரமித்து மறுபடி வந்தால் மறுபடி மதுபர்க்கம் கொடுக்கப்பட வேண்டும். யாகம், விவாஹம் இவைகளில் ஒரு வர்ஷத்திற்குள் வந்தாலும் மதுபர்க்கத்தைக் கொடுக்க வேண்டும். ச்ரோத்ரியனான ராஜாவுக்கு இவ்விதமே. அவன் அச்ரோத்ரியனாகில் ஆஸனம், ஜலம் இவைகளை மட்டும் கொடுக்கவும். **மனுவும்:-** ராஜா, ருத்விக், ஸ்நாதகன், குரு, ப்ரியன், மாமனார், மாதுலன் இவர்களை மதுபர்க்கத்தால் பூஜிக்க வேண்டும். ஒரு வர்ஷம் க்ரமித்து மறுபடி வந்தால் மறுபடி மதுபர்க்கம். ராஜாவும், ச்ரோத்ரியனும் யாகத்தில் வந்தால் ஒரு வர்ஷத்திற்கு முன்பானாலும் மதுபர்க்கம் கொடுக்க வேண்டும். மற்றக் காலத்தில் கொடுக்க வேண்டியதில்லை, என்பது ஸித்தாந்தம். **யாக்ஞவல்க்யரும்:-** ஸ்நாதகன், ஆசார்யன், அரசன், மித்ரன், ஜாமாதா, ருத்விக் இவர்கள் மதுபர்க்கத்தால் பூஜிக்கத் தகுந்தவர். ருத்விக்குகள் யாகத்தில் வந்தால் ஒரு வர்ஷத்திற்குள்ளாயினும், மதுபர்க்கத்தால் பூஜிக்கத் தகுந்தவர் ஆவர்.

अतिथिं प्रत्याह मनुः – न भोजनार्थं स्वे विप्रः कुलगोत्रे निवेदयेत्। भोजनार्थं हि ते शंसन् वान्ताशीत्युच्यते बुधैः इति ।। विप्रः - अतिथिभूतः । वान्ताशी - उद्गीर्णाशी । स हि कुलगोत्रे उद्गीर्य अन्नरूपेणाश्नातीत्यर्थः ।। याज्ञवल्क्यः – परपाकरुचिर्न स्यादनिन्द्यामन्त्रणादृते । वाक्पाणिपादचापल्यं वर्जयेच्चातिभोजनम् इति । अनिन्द्यामन्त्रणं विना । अनिन्द्येनामन्त्रितो नातिक्रामेत् इति स्मरणात् ।। अतिथिरूपेण परपाकभोजनप्रसक्ति प्रतिषेधार्थं निन्दार्थवादमाह मनुः – उपासते ये गृहस्थाः परपाकमबुद्धयः । तेन ते प्रेत्य पशुतां व्रजन्त्यन्नाद्यदायिनाम् इति ।। परपाकः - परेषां पक्वान्नम्। तेन - परपाकोपासनेन ।।

அதிதியைக் குறித்துச் சொல்லுகிறார், **மனு:-** ப்ராம்ஹணன் போஜனத்திற்காகத் தன்னுடைய குலம், கோத்ரம் இவைகளைச் சொல்லக் கூடாது. போஜனத்திற்காக

அவைகளைச் சொல்பவன் 'வாந்தாசீ' என்று சொல்லப்படுகிறான். வாந்தாசீ = வாந்தி செய்ததைப் புஜிப்பவன். அவன் குல கோத்ரங்களை வாயினால் வெளியிட்டு அன்ன ரூபமாய்ப் புஜிக்கின்றான் என்று பொருள். யாக்ஞவல்க்யர்:- பரான்னத்தில் ஆசையுள்ளவனாய் இருக்கக் கூடாது. நிந்திக்கத்தகாதவன் அழைத்தால் அதைத் தவிர்க்கக் கூடாது. வாய், கைகள், கால்கள் இவைகளின் சாபல்யத்தையும், அதிக போஜனத்தையும் வர்ஜிக்க வேண்டும். 'நிந்திக்கத்தகாதவன் அழைத்தாலதை அதிக்ரமிக்கக் கூடாது' என்று ஸ்ம்ருதியுள்ளது. அதிதிவேஷத்தால் பரான்னத்தைப் புஜிக்கக் கூடாதென்பதற்காக நிந்தார்த்தவாதத்தைச் சொல்லுகிறார். மனு:- எந்த க்ருஹஸ்தர்கள் புத்தியற்றவராய் அதிதி வேஷத்துடன் பரான்னத்தைப் புஜிக்கின்றனரோ, அவர்கள் அந்தத் தோஷத்தால் மறு ஜன்மத்தில், அன்னாதிகளைக் கொடுத்தவருக்குப் பசுத் தன்மையை அடைகின்றனர்.

याज्ञवल्क्यः – अतिथिं श्रोत्रियं तृप्तमासीमान्तमनुव्रजेत् इति। मुख्यकल्पाभावेऽनुकल्पमाह आपस्तम्बः – अभावे भूमिरुदकं तृणानि कल्याणी वागित्येतानि वै सतोऽगारे न क्षीयन्ते कदाचन इति। मनुरपि – तृणानि भूमिरुदकं वाक्चतुर्थी च सूनृता। एतान्यपि सतां गेहे नोच्छिद्यन्ते कदाचन इति।। तृणान्यासनाभावे। भूमिः शय्याभावे। उदकं पादाभ्यञ्जनाभावे। सूनृता - कल्याणी वाक् अन्नाभावे इत्यर्थः। अतिथिसत्कारं प्रशंसति व्यासः – सुक्षेत्रे वापयेद्बीजं सुपात्रे निक्षिपेद्धनम्। सुक्षेत्र इव सत्पात्रे दत्तमन्नं न नश्यति इति।।

யாக்ஞவல்க்யர்:- ச்ரோத்ரியனான அதிதியைப் புஜிப்பித்து, அவனை வீட்டின் எல்லை வரையில் பின்தொடர்ந்து அனுப்ப வேண்டும். முக்யகல்பம் ஸம்பவிக்காவிடில், அனுகல்பத்தைச் சொல்லுகிறார், ஆபஸ்தம்பர்:- அன்னமில்லாவிடில், இருப்பிடம், ஜலம்,

ஆஸனத்திற்கான புல்கள், ப்ரியவார்த்தை என்ற இவைகள் ஸாதுவின் க்ருஹத்தில் ஒருபொழுதும் குறைவதில்லே. மனுவும்:- ஆஸனமில்லாவிடில் புல்கள், படுக்கையில்லாவிடில் பூமி, எண்ணெயில்லாவிடில் ஜலம், அன்னமில்லாவிடில் ப்ரியமுள்ளவார்த்தை என்ற இவை ஸாதுக்கள் வீட்டில் ஒருகாலும் குறைவதில்லே. அதிதி ஸத்காரத்தைப் புகழ்கிறுர், வ்யாஸர்:- நல்ல வயலில் விதையை விதைக்க வேண்டும். நல்ல பாத்ரத்தில் தனத்தைக் கொடுக்க வேண்டும். நல்ல வயலில் விதைத்த விதைபோல், நல்ல பாத்ரத்தில் கொடுத்த அன்னம் அழிவதில்லே.

शातातपः – स्वाध्यायेनाग्निहोत्रेण यमेन तपसा तथा । नावाप्नोति गृही लोकान् यथा त्वतिथिपूजनात् इति ।। अकरणे प्रत्यवायमाह स एव – अतिथिर्यस्य भग्नाशो गृहात् प्रतिनिवर्तते । तस्मात्सुकृतमादाय दुष्कृतं तु प्रयच्छति इति । विष्णुरपि – अतिथिर्यस्य भग्नाशो गृहात् प्रतिनिवर्तते । पितरस्तस्य नाश्नन्ति दश वर्षाणि पञ्च च ।। काष्ठभारसहस्रेण घृतकुम्भशतेन च । अतिथिर्यस्य भग्नाशस्तस्य होमो निरर्थकः इति ।।

சாதாதபர்:- க்ருஹஸ்தன் அதிதிபூஜையினுல் எவ்விதம் நல்ல உலகங்களே அடைகின்றுனே, அவ்விதம் வேதாத்யயனம் அக்னிஹோத்ரம், யஜ்ஞம், தபஸ் இவைகளால் அடைவதில்லே. செய்யாவிடில் ப்ரத்யவாயத்தைச் சொல்லுகிறுர், சாதாதபரே:- அதிதி, பூஜையைப் பெருமல் ஆசையற்றவனுய் எந்த க்ருஹஸ்தனின் வீட்டினின்றும் திரும்பிச் செல்லுகின்றுனே. அந்த க்ருஹஸ்தனிடமிருந்து புண்யத்தை எடுத்துக் கொண்டு, தன் பாபத்தை க்ருஹஸ்தனுக்குக் கொடுத்துச் செல்கிறுன். விஷ்ணுவும்:- எந்த க்ருஹஸ்தனின் வீட்டினின்றும், அதிதி ஆசையிழந்தவனுய்த் திரும்பிச் செல்கின்றுனே, அவன் அன்னத்தைப் பித்ருக்கள் பதினேந்து வருஷம் வரையில்

பூஜிப்பதில்லை. அதிதியின் ஆசையைப் பங்கம் செய்தவன், ஆயிரம் சுமை ஸமித்துக்களாலும், நூறு குடம் நெய்யினாலும் ஹோமம் செய்தாலும் அது ப்ரயோஜன மற்றதாகிறது.

मनुरपि — सिलानप्युञ्छतो नित्यं पञ्चाग्नीनपि जुह्वतः । सर्वं सुकृतमादत्ते ब्राह्मणोऽनर्चितो व्रजन् इति । आश्वमेधिके – साङ्गोपाङ्गांस्तथा वेदान् पठतीह दिने दिने । न चातिथिं पूजयति वृथा स पठति द्विजः ।। पाकयज्ञैर्महायज्ञैः सोमसंस्थाभिरेव च । ये यजन्ति न चार्चन्ति गृहेष्वतिथिमागतम् ।। तेषां यशोधिकामानां दत्तमिष्टं च यद्भवेत् । वृथा भवति तत् सर्व माशया हतया हतम् इति ।। विष्णुः – वैश्वदेवान्तिके प्राप्त मतिथिं यो न पूजयेत् । स चण्डालत्वमाप्नोति सद्य एव न संशयः ।। निर्वासयति यो विप्रं देशकालातिथिं गृहात् । पतितस्तत् क्षणादेव जायते नात्र संशयः इति ।

மனுவும்:- ப்ரதிதினம் ஸிலங்களைப் பொறுக்கி ஜீவிப்பவனும், ஐந்து அக்னிகளில் ஹோமம் செய்பவனாயினும், அவன் புண்யம் முழுவதையும் அவனிடம் பூஜையை அடையாமல் திரும்பிச் செல்லும் அதிதி க்ரஹித்துக் கொள்ளுகிறான். (அறுக்கப்பட்ட வயலில் சிந்தியுள்ள தான்யங்கள் ஸிலங்கள்' எனப்படும்.) ஆச்வமேதிகத்தில்:- எந்த ப்ராம்ஹணன், அங்கங்களுடனும், உபாங்கங்களுடனும் கூடிய வேதங்களை ப்ரதிதினம் படிக்கின்றானோ, அதிதியை மட்டில் பூஜிப்பதில்லையோ, அவன் வீணாகப் படிக்கிறான். எவர்கள் பாக யஜ்ஞங்களையும், மஹா யஜ்ஞங்களையும்ல ஸோம ஸம்ஸ்தைகளையும் செய்கின்றனரோ, வீட்டில் வந்த அதிதியைப் பூஜிப்பதில்லையோ, புகழில் அதிக ஆசையுள்ள அவர்களின் தானம், யாகம் முதலியது முழுவதும், கெடுக்கப்பட்ட அதிதியின் ஆசையால் கெடுக்கப்பட்டு வீணாய் ஆகின்றது. விஷ்ணு:- வைச்வதேவத்தின் ஸமீபகாலத்தில் வந்துள்ள அதிதியை எவன்

பூஜிப்பதில்லையோ அவன் சண்டாளத் தன்மையை உடனே அடைகிறான். ஸந்தேஹம் இல்லை. எவன், தேசத்திலும், காலத்திலும் வந்த அதிதியாகிய ப்ராம்ஹணனை வீட்டினின்றும் வெளியேற்றுகின்றானோ அவன் அப்பொழுதே பதிதனாய் ஆகின்றான். இதில் ஸந்தேஹம் இல்லை.

व्यासः – अतिथिं पूजयेद्यस्तु श्रान्तं चादृष्टमागतम् । सवृषं गोशतं तेन दत्तं स्यादिति मे मतिः ॥ पथि श्रान्तमविज्ञातमतिथिं क्षुत्पिपासितम् । यो न पूजयते भक्त्या तमाहुर्ब्रह्मघातकम् ॥ अतिथिर्यस्य भग्नाशो गृहात् प्रतिनिवर्तते । स दत्वा दुष्कृतं तस्य पुण्यमादाय गच्छति इति ॥ आनुशासनिके – गृहानाश्रयमाणस्य अग्निहोत्रं च जुह्वतः । सर्वं सुकृतमादत्ते यः सायेऽनर्चितोऽतिथिः इति ।

வ்யாஸர்:- எவன், ச்ரமமுற்றவனும், முன் பார்க்கப்படாதவனுமாய் வந்துள்ள அதிதியைப் பூஜிக்கின்றானோ அவனால் எருதுடன் கூடிய நூறு பசுக்கள் கொடுக்கப்பட்டதாய் ஆகும் என்பது என்னுடைய அபிப்ராயம். எவன், வழியால் களைப்புற்றவனும், இதற்குமுன் அறியப்படாதவனும், பசி, தாகமுற்றவனுமாகிய அதிதியைப் பக்தியுடன் பூஜிக்கவில்லையோ அவனைப் ப்ரம்ஹகாதகனாகச் சொல்லுகின்றனர். எவனுடைய க்ருஹத்தினின்றும் அதிதியானவன் ஆசையற்றவனாய்த் திரும்பிச் செல்லுகிறானோ அந்த அதிதி தனது பாபத்தை க்ருஹஸ்தனுக்குக் கொடுத்து அவனின் புண்யத்தை க்ரஹித்துக் கொண்டு போகிறான். ஆனுசாஸநிகத்தில்:- அக்னிஹோத்ர ஹோமம் செய்து கொண்டிருக்கும் எந்த க்ருஹஸ்தனின் வீட்டில் ஸாயங்காலத்தில் எந்த அதிதி பூஜிக்கப்படவில்லையோ அந்த அதிதி அந்த க்ருஹஸ்தனின் புண்யம் முழுவதையும் க்ரஹித்துக் கொள்ளுகிறான்.

आपस्तम्बः – स एष प्राजापत्यः कुटुम्बिनो यज्ञो नित्यप्रततो योऽतिथीनामग्निः स आहवनीयो यः कुटुम्बे स गार्हपत्यो यस्मिन्

पच्यते सोऽन्वाहार्यपचन ऊर्जं पुष्टिं प्रजां पशूनिष्टापूर्तमिति गृहाणामश्नाति यः पूर्वोऽतिथेरश्नाति इति ।। श्रुतिरपि – न कञ्चन वसतौ प्रत्याचक्षीत । तद्व्रतम् । तस्माद्यया कया च विधया बह्वन्नं प्राप्नुयात् । अराध्यस्मा अन्नमित्या चक्षते इति ।। वसत्यर्थमागतं न निवारयेत् । वासे चान्नं दातव्यम् । तस्मात् येन केन च प्रकारेण बह्वन्नसंग्रहं कुर्यात् । यस्मादन्नवन्तो गृहिणोऽभ्यागतायातिथये अराधि - संसिद्धं (अस्मै) अन्नमित्याचक्षते इत्यर्थः ।। व्यासः – वेदाभ्यासोऽन्वहं शक्त्या महायज्ञक्रिया क्षमा । नाशयन्त्याशु पापानि देवानामर्चनं तथा ।। तस्मात् सर्वप्रयत्नेन कृत्वा कर्माणि वै द्विजः । भुञ्जीत स्वजनैः सार्धं स याति परमां गतिम् इति ।।

**ஆபஸ்தம்பர்:-** இந்த மனுஷ்ய யஜ்ஞும் ப்ரஜாபதியினுல் காணப்பட்டது. க்ருஹஸ்தன் நித்யமும் செய்கிற யாகம். அதிதிகளின் வயிற்றிலுள்ள அக்னி எதுவோ அது ஆஹவனீயம். வீட்டிலுள்ள ஔபாஸனுக்னி எதுவோ அது கார்ஹபத்யம். எந்த அக்னியில் சமையல் செய்யப்படுகிறதோ அது தக்ஷிணுக்னியாம். எவன் அதிதிகளுக்கு முன் புஜிக்கின்ருனே அவன் தன் குலத்தினுடையதாகிய அன்னத்தையும், புஷ்டியையும், ப்ரஜையையும், பசுக்களையும், யாகத்தையும், பூர்த்தத்தையும் (குளம் வெட்டுவது முதலியது) பக்ஷிக்கிருன். ச்ருதியும்:- 'நகஞ்சந + சக்ஷதே' என்று. இதன் பொருள் - ''வீட்டில் வஸிப்பதற்கு வந்தவனைத் தடுக்கக் கூடாது. வஸித்தால் அவனுக்கு அன்னம் கொடுக்க வேண்டும். ஆகையால் எந்த ப்ரகாரத்தாலாவது அதிகமான அன்னத்தை ஸங்க்ரஹம் செய்ய வேண்டும். அன்னமுடையவர்களான க்ருஹஸ்தர்கள் வந்திருக்கும் அதிதிக்கு 'அன்னம் தயாராயிருக்கிறது' என்று சொல்ல வேண்டும். **வ்யாஸர்:-** ப்ரதிதினம் யதாசக்தி வேதாத்யயனமும், யதாசக்தி மஹாயஜ்ஞங்களைச் செய்வதும், தேவபூஜையும் பாபங்களைச் சீக்கிரமாய்ப்

போக்குகின்றன. ஆகையால் ப்ராம்ஹணன் எல்லா முயற்சியுடனும் கர்மங்களைச் செய்து தன் ஜனங்களுடன் புஜிக்க வேண்டும். அவன் சிறந்த உலகத்தை அடைகிறான்.

## भोजनम्

अथ भोजनं निरूप्यते ।। तत्र व्यासः – यज्ञोपवीती भुञ्जीत सुगन्धालङ्कृतः शुचिः । सायं प्रातर्नान्तरा वै सन्ध्यायां तु विशेषतः ।। नायज्ञशिष्टमश्नीयान्न क्रुद्धो नान्यमानसः इति ।। धर्मोद्योते – अस्नाताशी मलं भुङ्क्ते अजपः पूयशोणितम् । अहुताशी कृमिं भुङ्क्ते अदाता विषमश्नुते ।। एकः संपन्नमश्नाति वस्ते वासश्च शोभनम् । योऽसंविभज्य भक्तानां को नृशंसतरस्ततः ।। पितृदैवतभृत्यानां मातापित्रोर्गुरोस्तथा । विघसं वाग्यतोऽश्नीयादेवं धर्मो न हीयते इति ।।

### போஜனம்

இனி போஜனம் சொல்லப்படுகிறது. வ்யாஸர்:- யஜ்ஞோபவீதம் உடையவனாய், நல்ல சந்தனத்தால் அலங்கரிக்கப்பட்டவனாய், சுத்தனாய்ப் புஜிக்க வேண்டும். இரவிலும், பகலிலும், புஜிக்க வேண்டும். இவைக்கு நடுவிலும், ஸந்த்யா காலத்திலும் புஜிக்கக் கூடாது. யாகத்தில் மீதியாகாததைப் புஜிக்கக் கூடாது. கோபமுள்ளவனும், வேறிடத்தில் மனமுடையவனும் புஜிக்கக் கூடாது. தர்மோத்யோதத்தில்:- ஸ்நானம் செய்யாமல் புஜிப்பவன் மலத்தைப் புஜிக்கிறான். ஜபம் செய்யாமல் புஜிப்பவன் சீழ், ரக்தம் இவைகளைப் புஜிக்கிறான். ஹோமம் செய்யாமல் புஜிப்பவன் புழுவைப் புஜிக்கிறான். பிறருக்குக் கொடாமல் புஜிப்பவன் விஷத்தைப் புஜிக்கிறான். எவன் தன்னைச் சேர்ந்தவர்க்குக் கொடாமல் தான் ஒருவனே நல்ல அன்னத்தைப் புஜிக்கிறானோ, நல்ல வஸ்த்ரத்தை உடுக்கிறானோ அவனிலும் மிகக் கொடியவன் எவன் இருக்கிறான்? பித்ருக்கள், தேவர்கள், ப்ருத்யர்கள், மாதாபிதாக்கள், குரு இவர்களுக்குக் கொடுத்து மீதியுள்ள அன்னத்தை

மௌனியாய்ப் புஜிக்க வேண்டும். இவ்விதமாகில் தர்மம் குறைவதில்லை.

अपरार्के — आचार्यो ब्रह्मलोकेशो देवलोकस्य चर्त्विजः । जामयोऽप्सरसां लोके वैश्वदेवस्य बान्धवाः।। सम्बन्धिनः स्वर्लोकस्य पृथिव्या मातृमातुलौ । आकाशेशास्तु विज्ञेया बालवृद्धकृशातुराः इति । मनुः – सायंप्रातर्द्विजातीनामशनं श्रुतिचोदितम् । नान्तरा भोजनं कुर्यादग्निहोत्रसमो विधिः ।। नातिप्रगे नातिसायं न सायं प्रातराशितः इति ।। अतिप्रगे - अपररात्रे । अतिसायं - अर्धरात्रे । न सायं प्रातराशितः - रात्रावहनि वा द्विर्नभुञ्जीतेत्यर्थः ।। श्रुतिरपि – तस्माद् द्विरह्नो मनुष्येभ्य उपह्रियते इति ।। हारीतोऽपि – कृतहोमस्तु भुञ्जीत सायं प्रातरुदारधीः इति ।

அபரார்க்கத்தில்:- ஆசார்யன் ப்ரம்ஹலோகத்திற்கு அதிபன். ருத்விக்குகள் வேதலோகத்திற்கு அதிபர்கள். ஜாமிகள், (பெண்கள், பகினிகள்) அப்ஸரஸ்ஸுகளின் லோகத்திற்கு அதிபர்கள். பந்துக்கள் விச்வதேவ லோகத்திற்கு அதிபர்கள். ஸம்பந்திகள் ஸ்வர்க்க லோகத்திற்கு அதிபர்கள். தாயும், அம்மானும் பூமிக்கு அதிபர்கள். சிறுவன், வ்ருத்தன், எளியவன், பிணியாளன் இவர்கள் ஆகாசத்திற்கு அதிபர்கள். (அவரவர்களைப் பூஜிப்பதால் அந்தந்த உலகங்களை அடையலாம் என்பது பொருள்.) மனு:- ப்ராம்ஹணனுக்கு மாலையிலும், காலையிலும் போஜனம் வேதத்தால் விதிக்கப்பட்டுள்ளது. நடுவில் போஜனம் செய்யக் கூடாது. இந்த விதி அக்னிஹோத்ரத்திற்குச் சமமாம். அபரராத்ரியிலும், அர்த்த ராத்ரியிலும் புஜிக்கக் கூடாது. ராத்ரியிலோ, பகலிலோ இருமுறை புஜிக்கக் கூடாது. ச்ருதியும்:- ஆகையால் ஒரு தினத்திற்கு இரண்டு முறை மனிதர்களால் அன்னம் புஜிக்கப்படுகிறது. ஹாரீதரும்:- சிறந்த புத்தியுடையவன் இரவிலும், பகலிலும் ஹோமம் செய்துவிட்டுப் புஜிக்க வேண்டும்.

गौतमः – सायं प्रातस्त्वन्नमभिपूजितमनिन्दन् भुञ्जीत इति ।। आपस्तम्बोऽपि – कालयोर्भोजनमन्यत्र प्रायश्चित्तात् इति ।। अत्र हरदत्तः – परिसङ्ख्येयम् । भोजनस्य रागप्राप्तत्वात् । अन्येतु नियमं मन्यन्ते । शक्तौ सत्यां कालयोर्भोजनमवश्यं कर्तव्यम् । प्राणाग्निहोत्रस्यालोपाय इति ।। तथा च बोधायनः – गृहस्थो ब्रह्मचारी वा योऽनश्नंस्तु तपश्चरेत् । प्राणाग्निहोत्रलोपेन अवकीर्णी भवेत्तु सः इति ।। अन्यत्र प्रायश्चित्तात् - प्रायश्चित्ते तदेव विधानम् । अथाप्युदाहरन्ति-अन्तरा प्रातराशं च सायमाशं तथैव च । सदोपवासी भवति यो न भुङ्क्ते कदाचन । प्राणाग्नि होत्रमन्त्रांस्तु निषिद्धे भोजने जपेत् । त्रेताग्नि होत्रमन्त्रांस्तु द्रव्यालाभे यथा जपेत् ।। इत्येवमाचरन् विप्रो ब्रह्मभूयाय कल्पते इति ।

கௌதமர்:- மாலையிலும், காலையிலும் பூஜிக்கப்பட்ட அன்னத்தைப் பழிக்காமல் புஜிக்க வேண்டும். ஆபஸ்தம்பரும்:- ப்ராயச்சித்த காலம் தவிர மற்றக் காலத்தில் இருகாலத்திலும் போஜனம். இங்கு ஹரதத்தர்:- "இது பரிஸங்க்யை. போஜனம் ராகத்தாலேயே ப்ராப்தமாவதால். சிலரோவெனில் நியமம் என்று இதை நினைக்கின்றனர். சக்தியிருந்தால் இரு காலங்களிலும் போஜனம் அவச்யம் செய்யப்பட வேண்டும். ப்ராணாக்நிஹோத்ரம் லோபிக்காமல் இருப்பதற்காக" அவ்விதமே போதாயனர்:- க்ருஹஸ்தனாயினும், ப்ரம்ஹசாரியாயினும் எவன் புஜிக்காமல் தபஸ்ஸைச் செய்கிறானோ அவன் ப்ராணாக்நிஹோத்ரத்தை விட்டதால் அவகீர்ணியாய் ஆகிறான். ப்ராயச்சித்தம் தவிற என்றதற்குப் பொருள் - ப்ராயச்சித்தத்தில் அதுவே விதாநம். இவ்விதம் சொல்லுகிறார்கள். "காலை போஜனம், மாலை போஜனம் இவைகளுக்கு நடுவில் எவன் புஜிக்காமல் இருக்கிறானோ அவன் எப்பொழுதும் உபவாஸமுடையவனாயாகிறான். போஜனம் நிஷித்தமான காலத்தில் ப்ராணாக்நிஹோத்ர மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். த்ரவ்யம் கிடைக்காவிடில்

அக்நிஹோத்ர மந்த்ரங்களை ஜபிப்பது போல். இவ்விதம் அனுஷ்டிக்கும் ப்ராம்ஹணன் ப்ரம்ஹஸாயுஜ்யத்திற்கு அர்ஹனாகிறான்.''

व्यासः – सायं प्रातर्मनुष्याणामशनं वेदनिर्मितम्। नान्तरा भोजनं कुर्यादुपवासविधिर्हि सः ।। न सन्ध्ययोर्न प्रभाते नार्धरात्रे कदाचन इति ।। शङ्खः – उपलिप्ते शुचौ देशे पादौ प्रक्षाल्य वै करौ। आचम्यार्द्राननोऽक्रोधः पञ्चार्द्रो भोजनं चरेत् इति ।। व्यासोऽपि – पञ्चार्द्रो भोजनं कुर्यात् प्राङ्मुखो मौनमास्थितः । हस्तौ पादौ तथा चास्यमेषु पञ्चार्द्रता मता इति ।। देवलः – पादौ प्रक्षाल्य हस्तौ च द्विराचम्य च वाग्यतः । प्राङ्मुखोऽन्नानि भुञ्जीत शुचिः पीठमधिष्ठितः इति ।। मनुः – आर्द्रपादस्तु भुञ्जीत नार्द्रपादस्तु संविशेत्। पञ्चार्द्रो भोजनं कुर्वन् मुच्यते सर्वकिल्बिषैः इति ।। विष्णुपुराणे – प्रशस्तरत्नपाणिस्तु भुञ्जीत प्रयतो गृही । पुण्यगन्धधरः शस्तमाल्यधारी नरेश्वर ।। नैकवस्त्रधरोऽथार्द्रपाणिपादो नरेश्वर । विशुद्धवदनः प्रीतो भुञ्जीत न विदिङ्मुखः इति ।। देवलः – सम्यक्कृतोपलेपे तु बहिराचम्य वाग्यतः । प्राङ्मुखो ह्यन्नमश्नीयात् सम्यग्विधृतभाजनः ।। यस्तु भोजन शालायां भोक्तुकाम उपस्पृशेत्। आसनस्थो न चान्यत्र स विप्रः पङ्क्तिदूषकः इति ।।

வ்யாஸர்:- மனுஷ்யர்களுக்கு மாலையிலும், காலையிலும் போஜனம் வேதத்தால் விதிக்கப்பட்டுள்ளது. நடுவில் போஜனம் செய்யக் கூடாது. அது உபவாஸ விதியாம். ஸந்த்யைகளிலும், விடியற்காலத்திலும், அர்த்தராத்ரியிலும், ஒருகாலும் புஜிக்கக் கூடாது. சங்கர்:- மெழுகப்பட்டதும், சுத்தமுமான ஸ்தலத்தில், கால்களையும், கைகளையும் அலம்பிக் கொண்டு, ஆசமனம் செய்து, ஈரமுள்ள முகத்தை உடையவனாய், கோபமற்றவனாய். ஐந்து இடங்களில் ஈரமுள்ளவனாய் போஜனம் செய்ய வேண்டும். வ்யாஸரும்:- ஐந்து

இடங்களில் ஈரமுள்ளவனாய், கிழக்கு நோக்கியவனாய், மௌனியாய் போஜனம் செய்ய வேண்டும். கைகள், கால்கள், வாய் இந்த ஐந்துகளிலும் ஈரம் விதிக்கப்பட்டுள்ளது. 'தேவலர்:- கால்களையும், கைகளையும் அலம்பி, இருமுறை ஆசமனஞ்செய்து, மௌனியாய், கிழக்கு நோக்கியவனாய், சுத்தனாய், ஆஸனத்தில் உட்கார்ந்தவனாய் அன்னத்தைப் புஜிக்க வேண்டும். மனு:- ஈரமுள்ள கால்களையுடையவனாய்ப் புஜிக்க வேண்டும். அவ்விதமாய்த் தூங்கக் கூடாது. ஐந்து இடங்களில் ஈரமுள்ளவனாய்ப் போஜனம் செய்பவன் ஸகல பாபங்களாலும் விடுபடுகிறான். விஷ்ணு புராணத்தில்:- க்ருஹஸ்தன் சிறந்த ரத்னத்தைக் கையில் உடையவனாய், சுத்தனாய், நல்ல கந்தத்தைத் தரித்தவனாய், சிறந்த புஷ்பம் தரித்தவனாய்ப் புஜிக்க வேண்டும். ஓ அரசனே! ஒரு வஸ்த்ரம் தரித்தவனாய்ப் புஜிக்கக் கூடாது. நனைந்த கை கால்கள் உடையவனாய், சுத்தமான முகமுடையவனாய், ஸந்துஷ்டனாய்ப் புஜிக்க வேண்டும். விதிக்குகளை நோக்கியவனாய்ப் புஜிக்கக் கூடாது. (விதிக்குகள் - திக்குகளின் ஸந்திகள்) தேவலர்:- நன்றாய் மெழுகப்பட்ட ஸ்தலத்தில், வெளியில் ஆசமனம் செய்து, மௌனியாய், கிழக்கு நோக்கியவனாய், நன்றாய்ப் போஜன பாத்ரத்தைப் பிடிததவனாய் அன்னத்தைப் புஜிக்க வேண்டும். எவன் சாப்பிட விரும்பியவனாய்ப் போஜன சாலையிலேயே ஆஸனத்தில் உட்கார்ந்து ஆசமனஞ் செய்வானோ, வெளியில் செய்யாம, அவன் ப்ராம்ஹண வரிசையைக் கெடுப்பவனாவான்.

स्मृतिरत्नावल्याम् – भोक्तुकामे यदा विप्रे ह्याचान्ते त्वासनस्थिते । अभिवादं करोत्यन्य आचामेत् स पुनस्ततः इति ॥ आपस्तम्बः – भोक्ष्यमाणस्तु प्रयतोऽपि द्विराचामेत् इति ॥ संवर्तः – आचम्यैव तु भुञ्जीत भुक्त्वा चोपस्पृशेदपः । अनाचान्तस्तु योऽश्नीयात् प्रायश्चित्तीयते हि सः ॥ अनाचान्तः पिबेद्यस्तु अपि वा

भक्षयेद्द्विजः । गायत्र्यष्टसहस्रं तु जपं कृत्वा विशुध्यति इति । बोधायनः – उपलिप्ते शुचौ स्थाने समे श्लक्ष्णासनान्विते । चतुरश्रं त्रिकोणं च वर्तुलं चार्धचन्द्रकम् ।। कर्तव्यमानुपूर्व्येण ब्राह्मणादिषु मण्डलम् इति ।

ஸ்ம்ருதிரத்னாவளியில்:- சாப்பிட விரும்பிய ப்ராம்ஹணன் ஆசமனம் செய்து ஆஸனத்தில் இருக்கும் பொழுது, மற்றவன் அவனுக்கு நமஸ்காரம் செய்தால் அவன் மறுபடி ஆசமனம் செய்ய வேண்டும். ஆபஸ்தம்பர்:- போஜனம் செய்யப்போகிறவன் சுத்தனாயிருந்தாலும் இருமுறை ஆசமனம் செய்ய வேண்டும். ஸம்வர்த்தர்:- ஆசமனம் செய்த பிறகே புஜிக்க வேண்டும். புஜித்த பிறகும் ஆசமனம் செய்ய வேண்டும். ஆசமனம் செய்யாமல் புஜித்தவன் ப்ராயச் சித்தார்ஹனாய் ஆகிறான். எந்த ப்ராம்ஹணன், ஆசமனம் செய்யாமல் பானம், அல்லது போஜனம் செய்கின்றானோ, அவன் ஆயிரத்தெட்டு முறை காயத்ரீ ஜபம் செய்தால் சுத்தனாகிறான். போதாயனர்:- மெழுகியதும், சுத்தமாயும், ஸமமாயும், மெதுவான ஆஸனத்துடன் கூடியதுமான ஸ்தலத்தில், ப்ராம்ஹணர் முதலிய நான்கு வர்ணத்தாருக்கும் முறையே நான்கு மூலை, மூன்று மூலை, வர்த்துளம், அர்த்த சந்த்ராகாரம் என்ற விதமாய் மண்டலம் செய்ய வேண்டும்.

शङ्खः — आदित्या वसवो रुद्रा ब्रह्मा चैव पितामहः । मण्डलान्युपजीवन्ति तस्मात् कुर्वीत मण्डलम् इति ।। वृद्धात्रेयः – यातुधानाः पिशाचाश्च असुराश्चाथ राक्षसाः । घ्नन्ति वै बलमन्नस्य मण्डलेन विवर्जितम् ।। ब्रह्मा विष्णुश्च रुद्रश्च श्रीर्हुताशन एव च । मण्डलान्युपजीवन्ति तस्मात् कुर्वीत मण्डलम् । उपलिप्ते शुचौ देशे निश्छिद्रं चतुरश्रकम् ।। गौमयं मण्डलं कृत्वा भोक्तव्यमिति निश्चितम् । पात्रावस्थानतो न्यूनमधिकं वा न कारयेत् इति ।। पितामहः – चतुरश्रं ब्राह्मणस्य त्रिकोणं क्षत्रियस्य तु । वर्तुलं चैव वैश्यस्य शूद्रस्याभ्युक्षणं

स्मृतम् इति ।। पितामहः – चतुरश्रं ब्राह्मणस्य त्रिकोणं क्षत्रियस्य तु। वर्तुलं चैव वैश्यस्य शूद्रस्याभ्युक्षणं स्मृतम् इति ।।

**சங்கர்:-** ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள், ப்ரம்ஹா, பிதாமஹன் என்ற இவர்கள் மண்டலத்தை (ஆச்ரயித்து இருக்கின்றனர்.) உபஜீவிக்கின்றனர். ஆகையால் மண்டலம் செய்ய வேண்டும். **வ்ருத்தாத்ரேயர்:-** யாதுதானர், பிசாசர், அஸுரர், ராக்ஷஸர்கள் என்ற இவர்கள் மண்டலமில்லாத அன்னத்தின் பலத்தைப் போக்குகின்றனர். ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர், லக்ஷ்மீ, அக்னி, இவர்கள் மண்டலத்தில் விளங்குகின்றனர். ஆகையால் மண்டலம் செய்ய வேண்டும். மெழுகியதும், சுத்தமுமான தேசத்தில் துளையில்லாமல் நான்கு மூலையுள்ள மண்டலத்தைக் கோமயத்தால் செய்து புஜிக்க வேண்டுமென்பது நிச்சயம். போஜனபாத்ரமிருக்குமளவுக்குக் குறைவாகவும், அதிகமாகவும் செய்யக் கூடாது. **பிதாமஹர்:-** ப்ராம்ஹணனுக்கு நான்கு மூலையுள்ளதும், க்ஷத்ரியனுக்கு த்ரிகோணமும், வைச்யனுக்கு வர்த்துளமும் ஆகிய மண்டலங்கள். சூத்ரனுக்கு ப்ரோக்ஷணம் மட்டுமாம்.

बोधायनः —– मन्त्रेणैव द्विराचम्य गोमयेनोपलेपिते। भस्मना वारिणा वाऽपि मण्डलं कारयेत् ततः इति । मन्त्रः प्रणवः इति स्मृतिरत्ने ।। आश्वमेधिके – स्नातः शुचिः शुचौ देशे निर्जने हुतपावकः । मण्डलं कारयित्वाऽथ चतुरश्रं द्विजोत्तमः ।। क्षत्रियश्चेत्ततो वृत्तं वैश्योऽर्धेन्दुसमाकृति । आर्द्रपादस्तु भुञ्जीयात् प्राङ्मुखस्त्वासने शुचौ ।। पादाभ्यां धरणीं स्पृष्ट्वा पादेनैकेन वा पुनः इति ।। अत्रिः – भूम्यां पादौ प्रतिष्ठाप्य यो भुङ्क्ते वाग्यतः शुचिः । भोजने भोजने विप्रस्त्रिरात्रफलमश्नुते ।। आसनारूढपादस्तु ब्राह्मणो यस्तु भुञ्जते। मुखेन धमते चान्नं तुल्यं गोमांसभक्षणे इति।

**போதாயனர்:-** இருமுறை ஆசமனம் செய்து, கோமயத்தால் மெழுகிய இடத்தில், பஸ்மத்தினுலாவது,

ஜலத்தினாலாவது மந்த்ரத்தினால் மண்டலம் செய்ய வேண்டும். மந்த்ரமென்பது ப்ரணவம் என்று ஸ்ம்ருதிரத்னத்தில். ஆச்வமேதிகத்தில்:- ப்ராம்ஹணன் ஸ்நானம் செய்து சுத்தனாய், ஏகாந்தத்தில் அக்னியில் ஹோமம் செய்து, நான்கு சதுரமான மண்டலம் செய்வித்து, க்ஷத்ரியனால் வர்த்துளமாயும், வைச்யனால் அர்த்த சந்த்ராகாரமாயும் மண்டலம் செய்வித்து, ஈரமுள்ள கால்களுடையவனாய், சுத்தமான ஆஸனத்தில் கிழக்கு முகமாய் உட்கார்ந்து, கால்களால் அல்லது காலினால் பூமியை ஸ்பர்சித்துக் கொண்டு புஜிக்க வேண்டும். அத்ரி:- எந்த ப்ராம்ஹணன், மௌனியாயும், சுத்தனாயும், பூமியில் கால்களை வைத்துக் கொண்டு புஜிக்கிறானோ அவன், ஒவ்வொரு போஜனத்திலும் த்ரிராத்ர பலத்தை அடைகிறான். (த்ரிராத்ரம் - ப்ராஜாபத்யக்ருச்ரத்தின் கால்பாகம்) ஆஸனத்தின் மேல் கால்களை வைத்துக் கொண்டு எவன் புஜிக்கின்றானோ, அல்லது அன்னத்தை வாயினால் ஊதுகின்றானோ, அவனுடைய போஜனம் கோமாம்ஸ பக்ஷணத்திற்குச் சமமாகும்.

चन्द्रिकायाम् – गुप्ते चैव प्रदेशे तु प्राङ्मुखो वाऽप्युदङ्मुखः । सुखासने समासीनः पादौ कृत्वा महीतले इति । शाण्डिल्यः – भुवं स्पृष्ट्वा तु पादाभ्यां पात्रं सव्येन पाणिना । इज्याप्रदेशाभिमुखः समश्नीयात् प्रसन्नधीः ॥ आहारं तु रहः कुर्यान्निहारं चैव सर्वदा । गुप्ताभ्यां लक्ष्म्युपेतः स्यात् प्रकाशे हीयते श्रिया इति ॥ भारते – महाशनानामेकान्ते भोजनं हि सुखायते इति ॥ व्यासः – प्राङ्मुखोऽन्नानि भुञ्जीत सूर्याभिमुख एव वा । आसीनस्त्वासने शुद्धे भूम्यां पादौ निधाय च इति ।

சந்த்ரிகையில்:- மறைவுள்ள ஸ்தலத்தில், கிழக்கு அல்லது வடக்கு முகமாய், ஸுகமான ஆஸனத்தில் உட்கார்ந்தவனாய், கால்களைப் பூமியில் வைத்துக் கொள்ளவும். சாண்டில்யர்:- கால்களால் பூமியையும்,

இடது கையினால் போஜன பாத்ரத்தையும் தொட்டுக் கொண்டு, கிழக்கு நோக்கியவனாய், ப்ரஸன்ன சித்தனாய்ப் புஜிக்க வேண்டும். ஆஹாரம், விஹாரம் இவைகளை எப்பொழுதும் ஏகாந்தத்தில் செய்ய வேண்டும். இவ்விரண்டையும் ரஹஸ்யமாய்ச் செய்தால் லக்ஷ்மியுடன் கூடுவான். ப்ரகாசமாய்ச் செய்தால் லக்ஷ்மியால் விடுபடுவான். (விஹாரம் = மலமூத்ர விஸர்ஜனம். ஸ்த்ரீ சங்கம் என்று சிலர்.) பாரதத்தில்:- அதிகமாய்ப் புஜிப்பவர்களுக்கு, ஏகாந்த ஸ்தலத்தில் புஜிப்பது ஸுகரமாகும். வ்யாஸர்:- கிழக்கு முகமாய், அல்லது ஸூர்யாபிமுகமாய், சுத்தமான ஆஸனத்தில் உட்கார்ந்து, பூமியில் கால்களை வைத்துக் கொண்டு, அன்னத்தைப் புஜிக்க வேண்டும்.

गोभिलः — प्राङ्मुखावस्थितो विप्रः प्रतीच्यां वा यथासुखम्। उत्तरं पितृकार्ये च दक्षिणं तु विवर्जयेत् इति ।। आपस्तम्बः – प्राङ्मुखोऽन्नानि भुञ्जीत इति ।। मनुः – आयुष्यं प्राङ्मुखो भुङ्क्ते यशस्यं दक्षिणा मुखः । श्रियं प्रत्यङ्मुखो भुङ्क्ते ऋतं भुङ्क्ते उदङ्मुखः इति एतत् काम्यविषयम् ।। वर्ज्यान्यासनान्याह प्रचेताः – गोशकृन्मृन्मयं भिन्नं तथा पालाशमेव च । लोहबद्धं सदैवार्कं वर्जयेदासनं बुधः इति ।। कौशिकः – भिन्नासनं योगपट्टं तथैव मृगचर्म च । कृष्णाजिनं च यत्नेन वर्जयेत् पुत्रवान् सदा इति ।। आपस्तम्बः – यत्नेन धारयेद्विप्रः पवित्रं दक्षिणे करे । भुञ्जानस्तु विशेषेण चान्नदोषैर्न लिप्यते इति ।।

கோபிலர்:- ப்ராம்ஹணன் கிழக்கு முகமாய் அல்லது மேற்கு முகமாய்ப் புஜிக்க வேண்டும். வடக்கு பித்ருகார்யத்தில். தெற்குத் திக்கை வர்ஜிக்க வேண்டும். ஆபஸ்தம்பர்:- கிழக்கு முகமாய் அன்னத்தைப் புஜிக்க வேண்டும். மனு:- ஆயுஸ்ஸை விரும்பியவன் கிழக்கு முகமாகவும், யசஸ்ஸை விரும்பியவன் தெற்கு முகமாகவும், லக்ஷ்மியை விரும்பியவன் மேற்கு முகமாகவும், ஸத்யத்தின் பலத்தை விரும்பியவன் வடக்கு

முகமாகவும் புஜிக்க வேண்டும். இது காம்யவிஷயமாம். தள்ளத்தகுந்த ஆஸனங்களைச் சொல்லுகிறார் ப்ரசேதஸ்:- சாணத்தாலாகியதும், மண்ணாலாகியதும், பிளவுள்ளதும், பலாசத்தினுடையதும், இரும்பினால் கட்டப்பட்டதும், எருக்கினாலாகியதுமான ஆஸனத்தை அறிந்தவன் வர்ஜிக்க வேண்டும். கௌசிகர்:- உடைந்த ஆஸனம், யோகபட்டம், மான்தோல், புள்ளிமான் தோல் இவைகளைப் புத்ரனுள்ள க்ருஹஸ்தன் அவச்யம் வர்ஜிக்க வேண்டும். ஆபஸ்தம்பர்:- ப்ராம்ஹணன் பவித்ரத்தை வலது கையில் அவச்யம் தரிக்க வேண்டும். புஜிப்பவன் அவச்யம் தரிக்க வேண்டும். அத்துடன் புஜித்தால் அன்னதோஷங்களால் பற்றப்படமாட்டான்.

बोधायनः – भोजनं भवनं दानमुपहारः प्रतिग्रहः । न बहिर्जानु कार्याणि तद्वदाचमनं स्मृतम् इति । व्यासः – स्वयं प्रक्षाल्य पात्राणि दत्तमन्नं तु भार्यया । भोक्तव्यं सघृतं सोष्णं हितं पथ्यं मितं तथा इति ॥ विष्णुपुराणे – अन्नं प्रशस्तं पथ्यं च प्रोक्षितं प्रोक्षणोदकैः । न कुत्सिताहृतं नैव जुगुप्सितमसंस्कृतम् इति ॥

போதாயனர்:- போஜனம், ஹோமம், தானம், பூஜை, ப்ரதிக்ரஹம், ஆசமனம் இவைகளை, முழங்கால்களுக்கு வெளியில் கையை வைத்துக் கொண்டு செய்யக் கூடாது. வ்யாஸர்:- போஜன பாத்ரங்களைத் தானாகவே அலம்பி, பார்யையால் கொடுக்கப்பட்டதும், நெய்யுடன் கூடியதும், உஷ்ணமானதும், ஹிதமானதும், பத்யமானதும், மிதமானதுமான அன்னத்தைப் புஜிக்க வேண்டும். விஷ்ணு புராணத்தில்:- பத்யமாகியதும், சுத்த ஜலங்களால் ப்ரோக்ஷிக்கப்பட்டதுமாகிய அன்னம் சிறந்ததாகும். வெறுக்கத் தகுந்தவரால் கொண்டுவரப்பட்டதும், வெறுக்கக் கூடியதும், ஸம்ஸ்காரமற்றதுமாகிய அன்னம் ப்ரசஸ்தமல்ல.

भोजनपात्राण्याह योगयाज्ञवल्क्यः – अमत्रं वाऽथ कांस्यं वा राजतं वा हिरण्मयम् । तानि पात्राणि सर्वेषां यथाविभवमाचरेत् इति ।

पैठीनसिः – प्रशस्तशुद्धपात्रे तु(षु)भुञ्जीताकुपितो द्विजः। सौवर्णे राजते ताम्रे पद्मपत्रपलाशयोः। भोजने भोजने चैव त्रिरात्रफलमश्नुते॥ एक एव तु यो भुङ्क्ते विमले कांस्यभाजने। चत्वारि तस्य वर्धन्ते ह्यायुः प्रज्ञा यशो बलम् इति॥ अत्र पद्मपत्रपलाशपत्रभोजनं गृहिव्यतिरिक्त विषयम्। पलाशपद्मपत्रेषु गृही भुङ्क्त्वैन्दवं चरेत्। ब्रह्मचारियतीनां तु चान्द्रायणफलं भवेत् इति व्यास स्मरणात्॥. रत्नावल्यां तु – वल्लीपलाशपत्रेषु स्थलजे पौष्करे तथा। गृहस्थश्चेत्समश्नीयाच्छुद्ध्यै चान्द्रायणं चरेत् इति॥

போஜன பாத்ரங்களைச் சொல்லுகிறார். யோகயாக்ஞவல்க்யர்:- இலை, வெண்கலம், வெள்ளி, பொன் இவைகளாலாகிய போஜன பாத்ரத்தை எல்லோரும் விபவத்திற்குத் தகுந்தபடி செய்து கொள்ளலாம். பைடீநஸி:- சிறந்ததும், சுத்தமுமான பாத்ரத்தில், கோபமில்லாமல் ப்ராம்ஹணன் புஜிக்க வேண்டும். பொன், வெள்ளி, தாம்ரம், தாமரையிலை, புரசினிலை இவைகளாலாகிய பாத்ரத்தில் புஜித்தால், ஒவ்வொரு போஜனத்திலும் த்ரிராத்ரபலத்தை யடைகிறான். நிர்மலமான வெண்கலப் பாத்ரத்தில் ஒருவனாகவே எவன் புஜிக்கின்றானோ, அவனுக்கு, ஆயுள், புத்தி, கீர்த்தி, பலம் என்ற நான்கும் வளர்கின்றன. இங்கு, தாமரையிலை, புரசு இலை இவைகளில் போஜனம் விதித்தது க்ருஹஸ்தனைத் தவிர்த்த மற்றவர் விஷயம். 'புரசு இலை, தாமரை இலை இவைகளில் க்ருஹஸ்தன் புஜித்தால் ப்ராயச்சித்தத்திற்காகச் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். ப்ரம்ஹசாரீ, ஸன்யாஸீ இவர்களுக்குச் சாந்த்ராயண பலன் உண்டாகும்' என்று வ்யாஸர் சொல்லியிருக்கிறார். ரத்னாவளியிலோவெனில்:- கொடியின் இலையிலும், புரசின் இலையிலும், மேட்டுத்தாமரை இலையிலும் க்ருஹஸ்தன் புஜித்தால் சுத்திக்காகச் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

स्मृतिरत्ने च – कदलीगर्भपत्रे च पद्मपत्रे जलास्पृशि । वल्लीपलाशपत्रे च भुक्त्वा चान्द्रायणं चरेत् इति ।। पालाशेषु च पत्रेषु मध्यमेषु तु भारत । यस्तु भुङ्क्ते स लभते प्राजापत्यं दिने दिने इति भारत वचनम्, य इच्छत्यूर्ध्वगामित्वं परं स्थानं च शाश्वतम् । पद्मपत्रेषु भोक्तव्यं मासमेकं निरन्तरम् इति पैठीनसिवचनं च यतिब्रह्मचारिविषयं काम्यविषयं च इति स्मृतिरत्ने ।। स्मृतिचिन्तामणौ च – एक एव तु भुञ्जीत विमले कांस्य भाजने । पलाद्विंशतिकादर्वागत ऊर्ध्वं यथेच्छया इति ।। कांस्यपात्रं तु गृहस्थैकविषयम् । यत्यादीनां तन्निषेधात् ।। तदाह प्रचेताः – ताम्बूलाभ्यञ्जने चैव कांस्यपात्रे च भोजनम् । यतिश्च ब्रह्मचारी च विधवा च विवर्जयेत् इति ।

**ஸ்ம்ருதிரத்னத்திலும்:-** வாழையின் பட்டையிலும், ஜல ஸம்பந்தமில்லாத தாமரை இலையிலும், கொடியின் இலையிலும், புரசின் இலையிலும் புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். ''நடுவிலுள்ள புரசு இலைகளில், எவன் புஜிக்கின்றானோ, அவன், ப்ரதிதினம் ப்ராஜாபத்ய க்ருச்ரபலனை அடைகிறான்'' என்ற பாரதவசனமும்:- ''எவன் மேல் பதவியையடையும் தன்மையையும், சாச்வதமான உலகத்தையும், விரும்புகின்றானோ அவன், ஒரு மாதம் இடைவிடாது தாமரை இலைகளில் புஜிக்க வேண்டும்'' என்ற பைடீநஸி - வசனமும், யதி ப்ரம்ஹசாரி விஷயமும், காம்ய விஷயமுமாம் என்று ஸ்ம்ருதி ரத்னத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஸ்ம்ருதிசிந்தாமணி யிலும் :- இருபது பலத்திற்குக் குறைந்த நிர்மலமான வெண்கலப் பாத்ரத்தில் ஒருவனே புஜிக்கலாம். அதற்குமேல் நிறையுள்ளதில் இஷ்டப்படி புஜிக்கலாம். வெண்கலப் பாத்ரம், க்ருஹஸ்தனுக்கு மட்டில் விஹிதம். யதி முதலியவருக்கு அது நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. அதைச் சொல்லுகிறார், ப்ரசேதஸ்:- யதியும், ப்ரம்ஹசாரியும், விதவையும், தாம்பூலம், அப்யஞ்ஜனம், வெண்கலப் பாத்ரத்தில் போஜனம் இவைகளை வர்ஜிக்க வேண்டும்.

अपरार्के – कांसिकस्य तु यत् पापं गृहस्थस्य तथैव च । कांस्यभोजी यतिः सर्वं प्राप्नुयात् किल्बिषं तयोः इति ।। संवर्तः – शूद्राणां भाजने भुक्त्वा भुक्त्वा वा भिन्नभाजने। अहोरात्रोषितो भूत्वा घृतं प्राश्य विशुध्यति इति ।। मनुः – न पादौ धावयेत् कांस्ये कदाचिदपि भाजने। न भिन्नपात्रे भुञ्जीत न भावप्रतिदूषिते इति ।। पैठीनसिः – सौवर्णं राजतं वाऽपि शूद्रपात्रं तु न स्पृशेत्। इतरेषां तु शुद्धिः स्यात् तापघर्षणतस्तथा ।। ब्रह्मपत्रे तु यो भुङ्क्ते मासमेकं निरन्तरम् । त्रिभिश्चान्द्रायणैस्तुल्यं महापातकनाशनम् ।। पनसाम्रनालिकेरकदलीबिल्वपत्रके । उह्निने काञ्चिपत्रे च चान्द्रायणफलं लभेत् इति ।।

அபரார்க்கத்தில்:- வெண்கலத்தில் புஜிக்கும் ஸன்யாஸீ, வெண்கல வ்யாபாரியின், பாபம், க்ருஹஸ்தனின் பாபம் இவைகளை முழுவதையும் அடைவான். ஸம்வர்த்தர்:- சூத்ரரின் பாத்ரத்தில் புஜித்தாலும், உடைந்த பாத்ரத்தில புஜித்தாலும், ஒருநாள் முழுவதும் உபவாஸமிருந்து, நெய்யை ப்ராசனம் செய்தால் சுத்தனுவான். மனு:- வெண்கலப் பாத்ரத்தில் ஒருகாலும் காலை அலம்பக் கூடாது. உடைந்த பாத்ரத்தில் புஜிக்கக் கூடாது. அசுத்தமாயிருக்கக் கூடுமென்று மனதில் தோன்றிய பாத்ரத்திலும் புஜிக்கக் கூடாது. பைடீநஸி:- தங்கமானுலும், வெள்ளியானுலும் சூத்ரனின் போஜன பாத்ரத்தைத் தொடக் கூடாது. மற்றவைகளுக்கு மட்டில் அக்னியில் காய்ச்சுவதாலும், உரைப்பதாலும் சுத்தியுண்டாகும், புரசு இலையில் ஒரு மாதம் முழுவதும் புஜிப்பது மூன்று சாந்த்ராயணங்களுக்குச் சமம். மஹாபாதகங்களையகற்றுவதுமாகும். பலா, மா, தென்னை, வாழை, வில்வம், உஹிநம், காஞ்சி இலை இவைகளில் புஜித்தால் சாந்த்ராயண பலத்தை அடைவான். இங்கு 'போஜனே காம்ஸ்யபாத்ரேச' என்றும் ஒரு பாடம்.)

मनुः – वटार्काश्वत्थपत्रेषु कुम्भीतिन्दुकपत्रयोः । कोविदारकरञ्जेषु भुक्त्वा चान्द्रायणं चरेत् इति ।। व्यासः – करे कर्पटके चैव ह्यायसे ताम्रभाजने । वटार्काश्वत्थपर्णेषु भुक्त्वा चान्द्रायणं चरेत् इति ।। शाण्डिल्यः – नातिदोषावहं कांस्यं भोजनेऽश्वत्थमेव च । कुटुम्बिनामकामानामपीच्छन्तीह केचन इति ।। प्रचेताः – मृन्मये पर्णपृष्ठे वा कार्पासे तान्तवेऽश्मनि । नाश्नीयान्न पिबेच्चैव न करे न तथाऽञ्जलौ इति ।। कार्पासे - पत्रे । तान्तवे - वस्त्रे ।।

மனு:- ஆல், எருக்கு, அரசு, தேக்கு, தும்பை, மலையத்தி, புங்கை இவைகளின் இலையில் புஜித்தால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். வ்யாஸர்:- கையிலும், வஸ்த்ரத்திலும், இரும்பிலும், தாம்ரத்திலும், ஆல், எருக்கு, அரசு இவைகளின் இலைகளிலும் புஜித்தால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். சாண்டில்யர்:- வெண்கலமும், அரசின் இலையும், போஜனத்தில் அதிக தோஷத்தைக் கொடுக்காது. அகாமர்களான குடும்பிகளுக்கும் க்ராஹ்யமென்கின்றனர் சிலர். ப்ரசேதஸ்:- மண்பாத்ரத்திலும், இலையின் பின்புறத்திலும், பருத்தி இலையிலும், வஸ்த்ரத்திலும், கல்லிலும், கையிலும், அஞ்ஜலியிலும் புஜிக்கக் கூடாது. ஜலத்தையும் குடிக்கக் கூடாது.

सङ्ग्रहे – करे कर्पटके चैव शिलायां च प्रमादतः । औदुम्बरे पलाशे च भुक्त्वा चान्द्रायणं चरेत् इति ।। हारीतः – न कार्ष्णायसे मृन्मये वा पात्रेऽश्नीयान्न भिन्नपात्रे न भूमौ ताम्ररजतसुवर्ण-शङ्खशुक्तिस्फटिकानां भिन्ने वाऽभिन्ने वा न दोषः इति । ताम्रपात्रभोजनं ब्रह्मचारिविधवाविषयमिति स्मृतिरत्ने ।। आपस्तम्बो विशेषमाह – औदुम्बरश्चमसः सुवर्णनाभः प्रशस्तो न चान्येनापि भोक्तव्यम् इति ।। औदुम्बरः - ताम्रमयः । चमसः - भोजनपात्रम् । सुवर्णनाभः - हिरण्येन मध्येऽलङ्कृतः ।। एक एव तत्र भुञ्जीतेत्यर्थः ।।

ஸங்க்ரஹத்தில்:- கையிலும், வஸ்த்ரத்திலும், கல்லிலும், அகத்தி, புரசு இலையிலும், கவனமில்லாமல் புஜித்தாலும் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். ஹாரீதர்:- இரும்புப் பாத்ரம், மண்பாத்ரம், உடைந்த பாத்ரம் பூமி இவைகளில் புஜிக்கக் கூடாது. தாம்ரம், வெள்ளி, பொன், சங்கு, சிப்பி, ஸ்படிகம் இவைகளின் பாத்ரம் உடைந்ததாயினும், உடையாததாயினும், தோஷமில்லை. தாம்ரபாத்ரத்தில் புஜிப்பது ப்ரம்ஹசாரி, விதவை இவர்களின் விஷயம் என்று ஸ்ம்ருதிரத்னத்தில். ஆபஸ்தம்பரும்:- விசேஷத்தைச் சொல்லுகிறார்:- ச்லாக்யமான தங்கத்தினால் அலங்கரிக்கப்பட்ட தாம்ர பாத்ரம் ச்லாக்யமான போஜன பாத்ரமாகும். அதில் ஒருவனே புஜிக்க வேண்டும். அன்யர்கள் புஜிக்கக் கூடாது.

तदाह व्यासः – पञ्चार्द्रो भोजनं कुर्यात् भूमौ पात्रं निधाय च। उपवासेन तत्तुल्यं मनुराह प्रजापतिः । भूमौ पात्रं प्रतिष्ठाप्य यो भुङ्क्ते वाग्यतः शुचिः । भोजने भोजने चैव त्रिरात्रफलमश्नुते इति ।। तच्च स्थापनं प्राणाहुतिपर्यन्तम् । पश्चात्तु यन्त्रिकामारोप्य भोक्तव्यम् ।। तदाह स एव – न्यस्तपात्रं तु भुञ्जीत पञ्च ग्रासान् महामुने । शेषमुद्धृत्य भोक्तव्यं श्रूयतामत्र कारणम् ।। विप्रुषां दोषसंस्पर्शः पादचेलरजस्तथा । सुखेन भुङ्क्ते विप्रोऽपि पित्रर्थं तु न लुप्यते इति ।। पैतृकभोजने भूमिपात्रप्रतिष्ठापनं न लोपनीयमित्यर्थः ।।

அந்தப் பாத்ரத்தைப் பூமியில் வைத்துக் கொள்ள வேண்டும். அதைச் சொல்லுகிறார், வ்யாஸர்:- ஐந்து இடங்களில் ஈரமுள்ளவனாய், பூமியில் போஜனபாத்ரத்தை வைத்துக் கொண்டு புஜிக்க வேண்டும். அது உபவாஸத்திற்குஸமான மென மனு, ப்ரஜாபதி இவர்கள் சொல்லுகிறார்கள். எவன் பூமியில் பாத்ரத்தை வைத்துக் கொண்டு மௌனியாய், சுத்தனாய்ப் புஜிக்கின்றானோ, அவன் ஒவ்வொரு போஜனத்திலும் 3-நாள் அனுஷ்டிக்கும் க்ருச்ரத்தின் பலத்தை அடைகிறான். பூமியில்

வைத்துக்கொள்வதென்பதும் ப்ராணாஹுதி வரையில். பிறகானல் யந்த்ரத்தின் மேல் (முக்காலி முதலியது) வைத்துக் கொண்டு புஜிக்க வேண்டும். அதைச் சொல்லுகிறார் வ்யாஸரே:- ஓ முனிவரே! பூமியில் பாத்ரத்தை வைத்துக் கொண்டு ஐந்து கபளங்களைப் புஜிக்க வேண்டும். மீதியைப் பாத்ரத்தை உயர எடுத்து வைத்துக் கொண்டு புஜிக்க வேண்டும். இதில் காரணத்தைக் கேளும். ஜலத்திவலைகளின் தோஷம் பற்றுதலும், கால், வஸ்த்ரம் இவைகளின் புழுதியும் உண்டாகும். ஆகையால் எடுத்து உயரத்தில் வைத்துச் சாப்பிடுவதில் ப்ராம்ஹணன் ஸுகமாய்ச் சாப்பிடுவான். பித்ருக்களுக்காகச் செய்யும் போஜனத்தில் பூமியிலேயே பாத்ரம் இருக்க வேண்டும். உயர எடுத்து வைத்துக் கொள்ளக் கூடாது. என்பது பொருள்.

स्मृतिरत्ने — प्राणाहुत्यूर्ध्वमुद्धृत्य पात्रं यन्त्रे विनिक्षिपेत् इति। एतत् सर्वं सङ्गृह्योक्तं स्मृत्यर्थसारे – पादौ प्रक्षाल्य द्विराचम्य प्राङ्मुख उदङ्मुखो वा यज्ञोपवीती सोत्तरवासा विभवे सति रत्नहिरण्यपाणि-र्गन्धाक्षतमाल्यान्वितः प्रशस्तश्लक्ष्णचतुष्पात्पीठे सुखमासीनो भूमौ पादौ पादं वा प्रतिष्ठाप्य अन्तर्जानुकरो वाग्यतः तच्चित्तश्चतुरश्रगोमय-मण्डले ब्रह्मग्रन्थिरहितपवित्रदक्षिणपाणिः प्रक्षालितपात्रं भूमौ निधाय प्राणाहुत्यनन्तरं यन्त्रिकादौ पात्रं निधाय पञ्चयज्ञावशिष्टं संस्कृतं मितं घृताद्युपस्कृतं मातृभार्यादिदत्तमतिथ्यभ्यागतपुत्रभृत्यादिपरिवृत एकान्ते भुञ्जीत इति॥

ஸ்ம்ருதிரத்னத்தில்:- ப்ராணாஹுதிகளுக்குப் பிறகு போஜன பாத்ரத்தை எடுத்து யந்த்ரத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இவையெல்லாம் சுருக்கிச் சொல்லப் பட்டுள்ளது, ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- கால்களை அலம்பி இருமுறை ஆசமனம் செய்து, கிழக்கு அல்லது வடக்கு முகமாய் யஜ்ஞோபவீதியாய், உத்தரீயமுடையவனாய், விபவமிருந்தால் ரத்னம், பொன் இவைகளைக் கையில்

உடையவனாய், கந்தம், அக்ஷதை, மாலை இவைகளுடன் கூடினவனாய், சிறந்ததும், மெதுவாகியதும், நான்கு கால்களுடையதுமான ஆஸனத்தில் ஸுகமாய் உட்கார்ந்தவனாய், பூமியில் இரண்டு கால்களை, அல்லது ஒரு காலை வைத்துக் கொண்டு, முழங்கால்களுக்குள் கைகளையுடையவனாய், மௌனியாய், ஏகாக்ரனாய், நான்கு மூலைகளுள்ளதும், கோமயத்தால் செய்ததுமான மண்டலத்தில், ப்ரம்ஹக்ரந்தியில்லாத பவித்ரத்தை வலது கையில் உடையவனாய், அலம்பிய பாத்ரத்தை ப்ராணாஹுதி வரையில் பூமியில் வைத்துக் கொண்டு, பிறகு யந்த்ரம் முதலியதில் வைத்துக் கொண்டு பஞ்சமஹாயஜ்ஞங்கள் செய்து மீதியுள்ளதும், ஸம்ஸ்க்ருதமும், மிதமும் நெய் முதலியதோடு சேர்க்கப்பட்டதும், தாய், பார்யை முதலியவரால் கொடுக்கப்பட்டதுமாகிய அன்னத்தை அதிதி, அப்யாகதன், புத்ரர், ப்ருத்யர் முதலியவர்களால் சூழப்பட்டவனாய், ஏகாந்தமான ஸ்தலத்தில் புஜிக்க வேண்டும்.

बोधायनोऽपि – सर्वावश्यकावसाने प्रक्षालितपाणिपादोऽप आचम्य सुसंमृष्टोपलिप्ते शुचौ संवृते देशे प्राङ्मुख उपविश्योद्धृत माह्रियमाणं भूर्भुवः सुवरोमित्युपस्थाय वाचं यच्छेन्न्यस्तमन्नं महाव्याहृतिभिः प्रदक्षिणमुदकं परिषिच्य सव्येन पाणिनाऽविमुञ्चन्न मृतोपस्तरणमसीति पुरस्तादपः पीत्वा पञ्चान्नेन प्राणाहुतीर्जुहोति प्राणे निविष्टोऽमृतं जुहोमि शिवो माविशाप्रदाहाय प्राणाय स्वाहेति पञ्चभिः पर्यायैर्हुत्वा तूष्णीं भूयो व्रतयेत्, प्रजापतिं मनसा ध्यायन्नान्तरा वाचं विसृजेद्यदि विसृजेत् भूर्भुवः सुवरोमिति जपित्वा पुनरेव भुञ्जीताथाप्युदाहरन्ति। आसीनः प्राङ्मुखोऽश्नीया द्वाग्यतोऽन्न मकुत्सयन्। अस्कन्दयंस्तन्मनाश्च भुक्त्वाऽन्नं समुपस्पृशेत् इति।

**போதாயனரும்:-** ஸகல ஆவச்யகங்களும் முடிந்த பிறகு, கை கால்களை அலம்பிக் கொண்டு, ஆசமனம் செய்து,

நன்ருய்ப் பெருக்கி மெழுகப்பட்டதும், சுத்தமாயும், மறைவுள்ளதாயுமான ஸ்தலத்தில், கிழக்கு முகமாய் உட்கார்ந்து, எடுத்துக் கொண்டு வரப்படும் அன்னத்தை 'பூர்ப்புவஸ்ஸுவ்ரோம்' என்று உபஸ்தானம் செய்து மௌனமாயிருக்க வேண்டும். பிறகு பாத்ரத்தில் வைக்கப்பட்ட அன்னத்தை மஹாவ்யாஹ்ருதிகளால், ப்ரதக்ஷிணமாய் ஜலத்தால் பரிஷேசனம் செய்து, இடது கையினுல் பாத்ரத்தை விடாமல் 'அம்ருதோப-ஸ்தரணமஸி' என்று முதலில் ஜலத்தைப் பருகி, அன்னத்தினுல் ஐந்து ப்ராணுஹுதிகளைச் செய்ய வேண்டும். 'ப்ராணேநிவிஷ்ட:+ ப்ராணுய ஸ்வாஹா' என்று ஐந்து பர்யாயங்களால் ஹோமம் செய்து, மௌனமாய் மறுபடி புஜிக்க வேண்டும். ப்ரஜாபதியை மனதினுல் த்யானித்துக் கொண்டு நடுவில் வார்த்தை பேசக்கூடாது. பேசினுல் 'பூர்ப்புவஸ்ஸுவரோம்' என்று ஜபித்து மறுபடி புஜிக்க வேண்டும். இதில் இவ்விதம் சொல்லுகின்றனர் - 'கிழக்குமுகமாய் உட்கார்ந்தவனுய், மௌனியாய் அன்னத்தை நிந்திக்காமல் புஜிக்க வேண்டும். இறைக்காமல், ஏகாக்ரனுய் அன்னத்தைப் புஜித்து ஜலத்தைப் பருகவேண்டும்.

सुमन्तुः – अन्नं निधाप्यं दर्व्या तु न हस्तेन कदाचन। पूजयित्वा तदन्नं च आपोशनं तु समन्त्रकम् इति ॥ व्यासः – अन्नं दृष्ट्वा प्रणम्यादौ प्राञ्जलिः कथयेत् ततः । अस्माकं नित्यमस्त्वेत दिति भक्त्याऽथ वन्दयेत् इति ॥ मनुः – पूजयेदशनं नित्यमद्यात् चैतदकुत्सयन्। पूजितं ह्यशनं नित्यं बलमूर्जं प्रयच्छति ॥ अपूजितं तु यद्भुक्त मुभयं तु हिनस्ति तत् इति ॥ भारतेऽपि – अन्नं पूर्वं नमस्कुर्यात् प्रहृष्टेनान्तरात्मना । नान्यदालोकयेदन्नं न जुगुप्सेत तत्परः इति । माधवीये – ततो महाव्याहृतिभिः पात्रं तत् परिषिच्य च। ऋतेन सायं सत्येन प्रातश्च परिषेचयेत् ॥ सोदकं दक्षिणं पाणिं कुर्यादन्नं प्रदक्षिणम्। अपेयं तद्भवेत्तोयं पीत्वा चान्द्रायणं चरेत् इति ॥ परिषेचनावशिष्टं जलं अपेयमित्यर्थः ।

ஸுமந்து:- அன்னத்தைக் கரண்டியினுல் வைக்க வேண்டும். ஒருகாலும் கையினுல் வைக்கக் கூடாது. அந்த அன்னத்தைப் பூஜித்து ஆபோசனத்தை மந்த்ரத்துடன் செய்ய வேண்டும். வ்யாஸர்:- முதலில் அன்னத்தைப் பார்த்து நமஸ்கரித்து அஞ்ஜலியுடன் 'அஸ்மாகம் நித்யமஸ்த்வேதத்' (இவ்வுணவு என்றும் நமக்கு கிடைக்கட்டும்.) என்று சொல்ல வேண்டும். பிறகு பக்தியுடன் நமஸ்கரிக்க வேண்டும். மனு:- அன்னத்தை எப்பொழுதும் பூஜிக்க வேண்டும். இதை நிந்திக்காமல் புஜிக்க வேண்டும். எப்பொழுதும் பூஜிக்கப்பட்டுள்ள அன்னம் ஸாமர்த்யத்தையும், வீர்யத்தையும் கொடுக்கின்றது. பூஜிக்கப்படாமல் புஜிக்கப்பட்ட அன்னம் அந்த இரண்டையும் நாசப்படுத்துகிறது. பாரதத்திலும்:- முதலில் ஸந்தோஷமுள்ள மனதுடன் அன்னத்தை நமஸ்கரிக்க வேண்டும். ஏகாக்ரனுய் மற்ருென்றையும் பார்க்கக் கூடாது. அன்னத்தை நிந்திக்கக் கூடாது. மாதவீயத்தில்:- பிறகு அந்தப் போஜன பாத்ரத்தை மஹா வ்யாஹ்ருதிகளால் பரிஷேசனம் செய்ய வேண்டும். 'ருதம்' என்கிற மந்த்ரத்திஞல் இரவிலும் 'ஸத்யம்' என்ற மந்த்ரத்திஞல் பகலிலும் பரிஷேசனம் செய்ய வேண்டும். ஜலத்துடன் கூடிய வலது கையா அன்னத்தை ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். அந்த ஜலம் பருகத்தகுந்ததல்ல. பருகிஞல் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். பரிஷேசனத்தில் மீந்துள்ள ஜலம் பருகத் தகுந்ததல்ல என்பது பொருள்.

आश्वमेधिकेऽपि – पाणिना जलमुद्धृत्य कुर्यादन्नं प्रदक्षिणम्। अपेयं तद्विजानीयात् पीत्वा चान्द्रायणं चरेत्॥ परिषेकजलादन्यत् पेयमेतत्तु मन्त्रवत् इति॥ गोभिलः – व्याहृतिभिर्गायत्र्याऽभिमन्त्र्य ऋतं त्वा सत्येन परिषिञ्चामीति सायं, सत्यं त्वर्तेन परिषिञ्चामीति प्रातः परिषिञ्चति इति॥ सङ्ग्रहे – आपोशनमकृत्वा तु यद्यन्नं विस्तृतं भवेत्। तदन्नं मांसतुल्यं स्यात् भुक्त्वा चान्द्रायणं चरेत्॥ अकृत्वा

परिषेकं तु यस्त्वन्नं परिमर्दयेत् । अभोज्यं तत् भवेदन्नं भुक्त्वा चान्द्रायणं चरेत् । परिषेचनतः पश्चात् पूर्वं प्राणाहुतेस्तथा । पुनरन्नं न गृह्णीयादिति वेदविदो विदुः इति ।

**ஆச்வமேதிகத்திலும்:-** கையினால் ஜலத்தை எடுத்து அன்னத்தை ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். ப்ரதக்ஷிணம் செய்த ஜலம் பருகத் தகுந்ததல்ல என்று அறியவேண்டும். பருகினால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். பரிஷேசன ஜலத்தினின்றும் வேறான ஜலத்தை மந்த்ரத்துடன் பருகவேண்டும். **கோபிலர்:-** வ்யாஹ்ருதிகளாலும், காயத்ரியாலும் அபிமந்த்ரித்து 'ருதந்த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமி' என்று இரவிலும், 'ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமி' என்று பகலிலும் பரிஷேசனம் செய்ய வேண்டும். **ஸங்க்ரஹத்தில்:-** ஆபோசனத்தைச் செய்யாமல் அன்னத்தைப் பரத்தினால் அந்த அன்னம் மாம்ஸத்திற்குச் சமமாம். அதைப் புஜித்தால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். பரிஷேசனம் செய்யாமல் அன்னத்தைப் பிசைந்தால் அந்த அன்னம் புஜிக்கத் தகாததாகும். புஜித்தால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். பரிஷேசனத்திற்குப் பிறகு ப்ராணாஹுதிக்கு முன் மறுபடி அன்னத்தை க்ரஹிக்கக் கூடாது என்று வேதமறிந்தவர் சொல்லுகின்றனர்.

परिषेचनानन्तरभावी विशेषो भविष्यत्पुराणे दर्शितः – भोजनात् किञ्चिदग्रं धर्मराजाय वै बलिम् । दत्वाऽथ चित्रगुप्ताय प्रेतेभ्यश्चेदमुच्चरेत् ॥ मन्त्रः – यत्र क्वचन संस्थानां क्षुत्तृष्णोपहतात्मनाम् । प्रेतानां तृप्तयेऽक्षय्य मिदमस्तु यथासुखम् इति ॥ हारीतस्तु – अन्नपतये नमः । भुवनपतये नमः । भूतानां पतये नमः इति बलित्रयं भूमौ दद्यात् इति ॥ स्मृत्यर्थसारे – गायत्र्याऽन्नमभ्युक्ष्य ओं भूरित्यादिना दशहोत्रा चाभिमन्त्र्य, यमाय नमः, चित्रगुप्ताय नमः, सर्वभूतेभ्यो नमः इति च भूमौ बलिं दद्यात् इति ।

பரிஷேசனத்திற்குப் பிறகு உள்ள விசேஷம் பவிஷ்யபுராணத்தில்:- காண்பிவிக்கப்பட்டுள்ளது. போஜனன்னத்திலிருந்து கொஞ்சம் மேலான அன்னத்தைத் தர்மராஜனுக்கும், சித்ரகுப்தனுக்கும், ப்ரேதங்களுக்கும் பலியாய்க் கொடுத்து, வரும் மந்த்ரத்தைச் சொல்ல வேண்டும். மந்த்ரம் - 'யத்ரக்வசந + யதாஸுகம்' என்று. இதன் பொருள் - எங்கெங்கோ இருப்பவரும், பசி தாஹத்தால் வருந்தியவருமான ப்ரேதங்களின் த்ருப்தியின் பொருட்டு இந்த அன்னம் அவர்களுக்கு ஸுகப்படி குறைவற்றதாய் இருக்க வேண்டும் என்று பொருள். ஹாரீதரானல்:- 'அன்னபதயே நம:, புவனபதயே நம:, பூதாநாம்பதயே நம:, என்று மூன்று பலிகளைப் பூமியில் கொடுக்க வேண்டுமென்றார். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- காயத்ரியினல் அன்னத்தை ப்ரோக்ஷித்து, ஓம்பூ: என்பது முதலியதாலும், 'தசஹோதா' மந்த்ரத்தாலும் அபிமந்த்ரித்து, 'யமாய நம:, சித்ரகுப்தாய நம:, ஸர்வபூதேப்யோ நம:, என்று பூமியில் பலியைக் கொடுக்க வேண்டும்.

पराशरः – ततः प्रक्षाल्य हस्तं च ध्यात्वा चान्नाधिदेवताम्। समन्त्राचमनं कृत्वा प्राणाद्याहुतिपञ्चकम्।। दशनस्पृष्टिरहितं कृत्वा भुञ्जीत वाग्यतः इति ।। गोभिलः – अन्तश्चरसि भूतेषु गुहायां विश्वतोमुखः । त्वं यज्ञ स्त्वं हि विष्णु स्त्वं हि वषट्कार आपो ज्योतीरसोऽमृतं त्वं ब्रह्मा त्वं प्रजापति र्ब्रह्म भूर्भुवः सुवरो ममृतोपस्तरणमसीत्यपः पीत्वा दशहोतारं मनसाऽनुद्रुत्या त्वरन् पञ्च ग्रासान् गृह्णीयात् प्राणाय स्वाहेति गार्हपत्यमेव तेन जुहोत्यपानाय स्वाहेत्यन्वाहार्यपचनमेव तेन जुहोति व्यानाय स्वाहेत्याहवनीयमेव तेन जुहोत्युदानाय स्वाहेति सभ्यमेव तेन जुहोति समानाय स्वाहेत्यावसथ्यमेव तेन जुहोति इति ।। एते मन्त्राः प्रणवाद्याः कर्तव्याः ।

கூடாது. தர்மத்தைக் கெடுக்கும் வ்யாபாரங்களால் விளையாடக் கூடாது. வ்யாதியுள்ளவர்களுடன் சேர்ந்து படுக்கக் கூடாது. சாண்டில்யரும்:- போஜனகாலத்தில், போஜன பாத்ரத்தாலாவது, கையினுலாவது பருகக் கூடாது. அதிகமாய் ஜலத்தைப் பருகக் கூடாது. ஜலத்தைப் பருகாமலே புஜிக்கவும் கூடாது. பானபாத்ரத்தில் குடித்து மீந்த ஜலத்தை மறுபடி குடிக்கக் கூடாது.

व्यासः—पानीयानि पिबेद्येन तत्पात्रं द्विजसत्तम। अनुच्छिष्टं भवेत्तावद्यावद्भूमौ न निक्षिपेत्।। पात्रशिष्टं तु यत्तोयं पाने पादावनेजने। भूमौ तदम्बु निःस्राव्य शिष्टं तत् पानमर्हति इति ।। बृहस्पतिः – पर्णपृष्ठे न भुञ्जीया द्रात्रौ दीपं विना तथा इति।। कात्यायनः – नृणां भोजनकाले तु यदा दीपो विनश्यति। पाणिभ्यां पात्रमादाय भास्करं मनसा स्मरेत्।। पुनश्च दीपितं कृत्वा तच्छेषं भोजयेन्नरः। पुनरन्नं न भोक्तव्यं भुक्त्वा पापैर्विलिप्यते इति।

வ்யாஸர்:- ஓ ப்ராம்ஹணோத்தம! எந்தப் பாத்ரத்தால் ஜலத்தைப் பருகுகின்றானோ, அந்தப் பாத்ரம், பூமியில் வைக்காத வரையில் உச்சிஷ்டமல்லாததாகும். பூமியில் வைக்கப்பட்டால் அது உச்சிஷ்டமாகும். பானத்திலோ, காலலம்புவதிலோ, பாத்ரத்தில் மீதியுள்ள ஜலத்தைப் (பருகவேண்டுமானுல்) பூமியில் கொஞ்சம் விட்டு விட்டால், மீதியுள்ளது பானத்திற்கு அர்ஹமாகும். ப்ருஹஸ்பதி:- இலையின் பின்புறத்திலும், இரவில் தீபமில்லாமலும் புஜிக்கக் கூடாது. காத்யாயனர்:- மனிதர் புஜிக்கும்பொழுது தீபம் அணைந்து விட்டால், புஜிப்பவன் கைகளால் போஜன பாத்ரத்தை எடுத்துக் கொண்டு ஸூர்யனை மனதால் த்யானிக்க வேண்டும். மறுபடி தீபத்தை ப்ரகாசப்படுத்தி, மீதியுள்ளதைப் புஜிக்க வேண்டும். மறுபடி வேறு அன்னத்தை க்ரஹிக்கக் கூடாது. க்ரஹித்துப் புஜித்தால் பாபங்களுடன் சேருவான்.

शातातपः – हस्तदत्तानि चान्नानि प्रत्यक्षलवणं तथा। मृत्तिका भक्षणं चैव गोमांसाभ्यशनं स्मृतम्॥ लवणं व्यञ्जनं चैव घृतं तैलं तथैव च। लेह्यं पेयं च विविधं हस्तदत्तं न भक्षयेत् इति॥ यमः – हस्तदत्ता तु या भिक्षा लवणव्यञ्जनानि च। भोक्ता ह्यशुचितां याति दाता स्वर्गं न गच्छति॥ हस्तदत्तास्तु ये स्नेहा लवणव्यञ्जनानि च। दातारं नोपतिष्ठन्ति भोक्ता भुञ्जीत किल्बिषम् इति॥ अत्रिः – घृतं वा यदि वा तैलं ब्राह्मण्या नखनिःसृतम्। अभोज्यं तद्द्विजातीनां भुक्त्वा चान्द्रायणं चरेत्॥ यत्त्यक्तं भुवि तच्चान्नं भुक्त्वा चान्द्रायणं चरेत् इति।

சாதாதபர்:- கையால் கொடுக்கப்பட்ட அன்னங்களும், நேராய்க் கொடுக்கப்பட்ட உப்பும், மண்ணைப் பக்ஷிப்பதும் கோமாம்ஸ பக்ஷணமெனச் சொல்லப்பட்டுள்ளது. லவணம், வ்யஞ்ஜனம், நெய், எண்ணெய், பலவிதமான லேஹ்யம், பேயம் இவைகள் கையினால் கொடுக்கப்பட்டால் அவைகளைப் பக்ஷிக்கக் கூடாது. யமன்:- கையால் கொடுக்கப்பட்ட பிக்ஷான்னம், லவணம், வ்யஞ்ஜனம் இவைகளைப் புஜிப்பவன் அசுத்தனாகிறான். கொடுத்தவன் ஸ்வர்க்கத்தை அடைவதில்லை. கையால் கொடுக்கப்பட்ட நெய் முதலியவை, உப்பு, வ்யஞ்ஜனங்கள் இவை பரலோகத்தில் கொடுத்தவனை அடைவதில்லை. புஜித்தவனும் பாபத்தைப் புஜிக்கிறான். அத்ரி:- நெய் அல்லது எண்ணெய் இவை ப்ராம்ஹண ஸ்த்ரீயின் கை நகங்களால் தொடப் பட்டிருந்தால் அவை ப்ராம்ஹணருக்குப் புஜிக்கத்தகாதது. புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். பூமியில் தள்ளப்பட்ட அன்னத்தைப் புஜித்தாலும் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

मनुः — वीर्यहानिर्यशोहानिः प्रज्ञाहानिस्तथैव च। भवेत्तस्मात्ततो रात्रौ धात्रीं यत्नेन वर्जयेत्॥ धानाः खादेन्न च दिवा दधिसक्तूंस्तथा निशि। सर्वं च तिलसंबन्धं नाद्यादस्तमयं प्रति॥

तिक्तार्द्रकदधिश्राणातिलशाकानि निश्यदन्। त्यज्यते रूपवाक् श्रीभिः पुष्पितस्त्री रताद्यथा इति ।। स्मृत्यन्तरे — आमलक्याः फलं चैव जम्बीरं तिन्त्रिणीफलम्। प्रज्ञाप्रतापलक्ष्मीवान् सदैतद्वर्जयेन्निशि ।। नालिकेरोदकं कांस्ये ताम्रपात्रस्थितं मधु । ताम्रपात्रस्थितं गव्यं मद्यतुल्यं घृतं विना ।। अपि प्रस्थानसमये रात्रौ दधि न भक्षयेत् । मधुपर्कप्रदानं तु वर्जयित्वा विशेषतः इति।

மனு:- ராத்ரியில் நெல்லிக் கனியைப் புஜிப்பவனுக்கு, வீர்யம், யசஸ், புத்தி இவைகள் குறையும். ஆகையால் எவ்விதத்தாலும் அதை ராத்ரியில் வர்ஜிக்க வேண்டும். பகலில் முட்டைப் பொரிகளையும், இரவில் தயிர், நெல்வறுத்தமாவு இவைகளையும் புஜிக்கக் கூடாது. எள்ளுடன் கூடிய எந்த வஸ்துவையும் அஸ்தமயத்திற்குப் பிறகு புஜிக்கக் கூடாது. குங்கிலியம், இஞ்சி, தயிர், கஞ்சி, எள்ளு, சாகம் இவைகளை இரவில் புஜிப்பவன், ரூபம், வாக்கு, லக்ஷ்மீ இவைகளால் விடப்படுவான், ரஜஸ்வலாஸ்த்ரீ ஸங்கத்தாற் போல். மற்றொரு ஸ்ம்ருதியில்:- நெல்லிக்கனி, எலுமிச்சையின் பழம், புளி இவைகளை, புத்தி, ப்ரதாபம், லக்ஷ்மீ இவைகளை விரும்புகின்றவன் ராத்ரியில் வர்ஜிக்க வேண்டும். வெண்கலப் பாத்ரத்திலுள்ள இளநீரும், தாம்ர பாத்ரத்திலுள்ள தேனும், தாம்ர பாத்ரத்திலுள்ள நெய் தவிர பால், தயிர், மோர் இவையும் மத்யத்திற்குச் சமமாகும். புறப்படும் ஸமயத்திலும், ராத்ரியிலும் தயிரைக் குடிக்கக் கூடாது. மதுபர்க்க ப்ரதானத்தில் நிஷேதமில்லை.

शातातपः — रात्रौ धानादधिसक्तून् श्रेयस्कामो विवर्जयेत्। भोजनं तिलसम्बन्धं स्नानं चैव विशेषतः इति ।। वृद्धहारीतः – सकांस्यं नालिकेराम्बु कांस्ये च रसमैक्षवम् । ताम्रपात्रयुतं गव्यं क्षीरं च लवणान्वितम्।। घृतं लवणसंयुक्तं सुराकल्पं विवर्जयेत्। प्रत्यक्षलवणं नाद्यात् पक्वं परगृहागतम् इति।। प्रत्यक्षलवणं चतुर्ग्राह्यमेव दत्तं नाद्यम्।

ओदनाद्यन्तर्हितं दत्तमदनीयमित्यर्थः ।।

சாதாதபர்:- நன்மையை விரும்பியவன், ராத்ரியில், முட்டைப் பொரி, தயிர், வறுத்த நெல்லின்மாவு, எள்ளின் ஸம்பந்தமுள்ள போஜனம், ஸ்நானம் இவைகளை அவச்யம் வர்ஜிக்க வேண்டும். வ்ருத்தஹாரீதர்:- வெண்கலப் பாத்ரத்திலுள்ள இளநீர், கரும்புச்சாறு இவைகளும், தாம்ர பாத்ரத்திலுள்ள கவ்யமும், (பால் முதலியது) உப்புடன் கூடிய பாலும், நெய்யும் ஸுரைக்கு ஸமமாகும். அவைகளை வர்ஜிக்க வேண்டும். ப்ரத்யக்ஷ லவணத்தையும், பிறர் க்ருஹத்திலிருந்து கொண்டு வரப்பட்ட பக்வான்னத்தையும் புஜிக்கக் கூடாது. ப்ரத்யக்ஷ லவணம், கண்ணிற்குத் தெரியும் படி கொடுக்கப்பட்டால் புஜிக்கத்தகாதது. அன்னம் முதலியதால் மறைத்துக் கொடுக்கப்பட்டால் புஜிக்கத்தகுந்தது என்பது பொருள்.

भक्ष्याण्याह भृगुः— भेदैस्तु कारवल्ल्यादि सर्वं ग्राह्यमितीरितम् । कन्दं पिण्डीकृतं चैव क्षुद्रकन्दं तथैव च ।। महाकन्दादिकं कन्दमाहरेत विचक्षणः । सहकारप्रभेदं च तथैव पनसद्वयम् ।। कदल्यादिषु भेदं च गृह्णीयात्तु प्रयत्नतः । कूश्माण्डोर्वारुकं चैव सिंही व्याघ्री तथैव च ।। कार्कोटकादि सङ्ग्राह्यं कलञ्जादीनि वर्जयेत् ।। इति ।

புஜிக்கத் தகுந்தவைகளைச் சொல்லுகிறார், ப்ருகு:- பாகலின் பேதங்கள் எல்லாம் புஜிக்கத் தகுந்தவை. உருண்டையான கிழங்கு, சிறு கிழங்கு, பெருங்கிழங்கு, மாவின் வகைகள், பலாவின் இரண்டு வகை, வாழையின் எல்லா வகையும், பூசனி, வெள்ளரி, கண்டங்கத்தரி, அதன் பேதம், கக்கரி இவைகள் புஜிக்கத் தகுந்தவை. கஞ்சா முதலியதை வர்ஜிக்க வேண்டும்.

मरीचिः—कदली चूत पनस नालिकेर तिन्त्रिणी कारवल्लीव्याघ्री शिम्बभेद बृहतीभेद सिंही व्याघ्रनखी कर्कन्धूर्वारुक

कूश्माण्डकार्कोटकादि सूरणकन्द क्षुद्रकन्द महाकन्द वल्लीकन्द शृङ्गिबेरोत्पलकन्द पिण्डीकृत शकुटकन्दानि च मरीचिसर्षपाणु-मुद्गाढक कुलत्थ तिल्वमाष मसूरकादीनि शाकेषु जीवन्ती झरस रक्तबाष्पाणि चान्यानि भक्ष्याणि यथालाभमाहरेत् इति।

மரீசி:- வாழை, மா, பலா, தென்னை, புளி, பாகல், கண்டங்கத்திரி, அவரையின் வகை, கண்டங்கத்திரியின் வகை, கத்திரியின் பேதம், புலியுகிர், இலந்தை, வெள்ளரி, பூசனி, தும்மட்டி, கரணைக் கிழங்கு, சிறுகிழங்கு, பெருங்கிழங்கு, கொடிக்கிழங்கு, இஞ்சி, நெய்தல் கிழங்கு, உருண்டைக் கிழங்கு, சகுட்டக் கிழங்கு, மிளகு, கடுகு, பயறு, பச்சைப்பயறு, துவரை, கொள்ளு, சாமை, உளுந்து, காட்டுப்பயறு இவைகள் போஜ்யங்களாம். சாகங்களுள், சிறுபாலை, சரஸம் என்று கீரை, கருஞ்சீரகம் இதுபோன்ற கீரைகளும் பக்ஷ்யங்களாகும். கிடைத்ததை உபயோகிக்கலாம்.

स एव — तुम्बीदलं च भार्ङ्गीं च शिबुमुद्गदलानि च। शाकिनीं शतपर्वाण मभ्रं चाश्वासनन्दिनीम् ॥ अगस्त्यं शकुटं शाकं विहितं ब्राह्मणस्य च। एकमूलानि चान्यानि गृह्णीयादनिषेधितान् इति।

மரீசியே:- சுரையின் இலை, கண்டப்பரங்கி, அவரை, நரிப்பயறு, சாகினீ, கொத்துமல்லி, முத்தக்காசு, ஞாணல், கடுக்காய், அகத்திக்கீரை, வஞ்சி இவை ப்ராம்ஹணனுக்கு விஹிதமாம். ஒரே வேருள்ளதான மற்றவையும் நிஷேதமில்லாவிடில் க்ரஹிக்கத் தகுந்தவேயாம்.

बोधायनः— आम्रं च शृङ्गिबेरं च कर्करीफलमेव च। नालिकेरफलं चाभ्रं कपित्थं बदरीफलम् ॥ द्राक्षा राजादनं जम्बूफलं ताटकमप्यथ। खर्जूरं वेत्रकं चैव मातुलुङ्गं च डाडिमम् ॥ फलान्येतानि पक्वानि कालपक्वानि चाहरेत्। आजकं जीरकं चैव मरीचं सर्षपं तथा॥

राजमाषं महामाषं श्यामाकं कृष्णमाषकम् । माषं मुद्गं महामुद्गं निष्पावं तिलतिल्वकौ ।। कालाय मुद्गनिष्पावशिम्ब माषकुलुत्थकाः । सयूषा वा वियूषा वा पचनीया गुणान्विताः ।। धान्यानामपि सर्वेषां कृष्णधान्यं विवर्जयेत् । अथवाऽन्यदलब्धं चेच्छुद्धं तदपि चाहरेत् ।। माहिषं क्षीरमाजं च गव्यं भक्ष्यं विनिर्दिशेत् । अमेध्येषु च ये वृक्षा उप्ताः पुष्पफलोपगाः ।। तेषामपि न दुष्यन्ति पुष्पाणि च फलानि च । गौळी भाञ्जी च मत्स्याक्षी मुद्गशिम्बाम्रतुम्बिकाः ।। निर्लतोपोदकी चैव कारञ्जालर्कशाकिनी । मण्डूकपर्णी जीवन्ती कुबेराक्षी च पिप्पली ।। आगस्ती वैष्णवी शाकी विष्णुभक्तिविवर्धनी इति ।

**போதாயனர்:-** மா, இஞ்சி, கக்கரி, தென்னை, முத்தக்காசு, விளா, இலந்தை, த்ராக்ஷை, முரளஞ்செடி, நாவல், கொடிக்கீரை, பேரீச்சை, பிரம்பு, புளிமாதுளை, மாதுளை இவைகளின் பழங்களையும் உபயோகிக்கலாம். ஆட்டுளுந்து, ஜீரகம், மிளகு, கடுகு, மொச்சை, பெரிய உளுந்து, தினை, கருமொச்சை, உளுந்து, பயறு, பெரும்பயறு, தட்டைப்பயறு, எள்ளு, வெள்ளலொத்தி, கறுப்புத் தட்டைப்பயறு, அவரை, கொள்ளு இவைகளைத் தோலுடனாவது, தோலில்லாமலாவது சமைக்கலாம். எல்லாத் தான்யங்களிலும் கறுப்புத் தான்யத்தை வர்ஜிக்க வேண்டும். வேறு தான்யம் கிடைக்காவிடில், சுத்தமான க்ருஷ்ண தான்யத்தையும் க்ரஹிக்கலாம். எருமை, வெள்ளாடு, பசு இவைகளின் பாலை உபயோகிக்கலாம். புஷ்பங்களுடனும், பலங்களுடனும் கூடிய வ்ருக்ஷங்கள் அசுத்த ஸ்தலத்தில் முளைத்திருந்தாலும், அவைகளின் புஷ்பங்களும், பழங்களும் தோஷமுள்ளவைகளல்ல. இலந்தை, கண்டப்பரங்கி, பொன்னாங்காணி, பயறு, அவரை, முத்தக்காசு, சுரை, நாவற்புல், நீர்ப்பசலை, நாரத்தை, தூதுவளை, கீரை, வல்லாரை, சிவந்தி, சீந்தில், கழற்சி, திப்பிலி, அகத்தி இவை உபயோகிக்கத் தக்கவையாம். அகத்தி என்பது விஷ்ணுவினுடையதாம். விஷ்ணு பக்தியை விருத்தி செய்வதாகும்.

व्यासः — धात्रीफलं सदा यस्तु भक्षयेदप्रमादतः । तस्य नारायणो देवः परमात्मा प्रसीदति इति ॥ पुराणे – अतसी तुलसी चैव धात्रीफलमथाच्युतम् । यस्योदरे प्रवर्तन्ते तस्य सन्निहितो हरिः इति ॥ चन्द्रिकायाम् – भक्ष्यं भोज्यं च लेह्यं च नमो नारायणेति यः । अभिमन्त्र्य स्पृशन् भुङ्क्ते स याति परमां गतिम् इति ॥ श्रुतिः — विष्णुनाऽत्तमश्नन्ति विष्णुना पीतं पिबन्ति विष्णुना घ्रातं जिघ्रन्ति इति ॥

**வ்யாஸர்:-** எவன் எப்பொழுதும் நெல்லிக்கனியைக் கவனமாய்ப் பக்ஷிக்கின்ருனே அவனுக்குப் பரமாத்மா வாகிய நாராயணன் பிரஸன்னனுய் ஆகிருன். **புராணத்தில்:-** அதஸி (அகத்தி), துளஸி, நெல்லிக்கனி, சுண்டைக்காய் இவை எவன் வயிற்றில் இருக்கின்றனவோ அவனுக்கு 'ஹரி' ஸமீபத்தில் இருக்கின்ருர். **சந்த்ரிகையில்:-** எவன், பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம் இவைகளைத் தொட்டு, 'நமோ நாராயணுய' என்று அபிமந்த்ரித்துப் புஜிக்கின்ருனே அவன் சிறந்த கதியை அடைகின்ருன். **ச்ருதி:-** விஷ்ணுவினுல் புஜிக்கப்பட்டதைப் புஜிக்கின்றனர், விஷ்ணுவினுல் பருகப்பட்டதைப் பருகுகின்றனர், விஷ்ணுவினுல் முகரப்பட்டதை முகர்கின்றனர்.

शाण्डिल्यः—वासोभूषणमाल्यादि गन्धं तैलं तथौषधम् । सर्वं भगवते दत्वा उपयुञ्ज्यान्निवेदितम् इति ॥ जाबालशाखायां श्रूयते – रुद्रेणात्तमश्नन्ति रुद्रेण पीतं पिबन्ति रुद्रेणाघ्रातं जिघ्रन्ति इति ॥ कठश्रुतावपि — त्रिगुप्सातमश्नीयाद्यदि पाप्मन् शिवानर्पितं भुंक्ष्व तदैनो भुंक्ष्व मलं भुंक्ष्व विषं भुंक्ष्व कृमिं भुंक्ष्वाघं भुंक्ष्वाधो गच्छ गच्छ इति ॥ अस्यार्थः – त्रिगुः = त्रिणेत्रः । तेन प्सातं भक्षितमश्नीयात् । हे पाप्मन् ! शिवानर्पितं यदि भुंक्ष्व - अश्नीयाः, तदा एनः - पातकम् । अघम् - उपपातकम् । तच्छिवानर्पितभोजने भवति इति ॥

சாண்டில்யர்:- வஸ்த்ரம், ஆபரணம், மாலை முதலியவை, கந்தம், தைலம், ஔஷதம் என்று எதையும் பகவானுக்குக் கொடுத்து நிவேதிதமாய் உள்ளதைத்தான் உபயோகிக்க வேண்டும். ஜாபாலசாகையில் சொல்லப் படுகிறது:- ருத்ரனால் புஜிக்கப்பட்டதைப் புஜிக்கின்றனர். ருத்ரனால் பருகப்பட்டதைப் பருகுகின்றனர். ருத்ரனால் முகரப்பட்டதை முகர்கின்றனர். கடச்ருதியிலும்:- முக்கண்ணனால் பக்ஷிக்கப்பட்டதையே பக்ஷிக்க வேண்டும். ஓ! பாபியே! சிவனுக்குக் கொடுக்கப் படாததைப் புஜித்தால் அப்பொழுது உபபாதகத்தைப் புஜிப்பாய், மலத்தைப் புஜிப்பாய், விஷத்தைப் புஜிப்பாய், புழுவைப் புஜிப்பாய், பாபத்தைப் புஜிப்பாய், கீழே செல்வாய். சிவனுக்கு அர்ப்பிதம் இல்லாததைப் புஜித்தால் உபபாதகம் உண்டாகும் என்பதாம்.

व्यासः—देवासुरनरैः स्थाप्य लिङ्गे चण्डाय शम्भुना । दत्तस्तस्मै न सर्वत्र प्रसादः शिवशासनात् ।। नाश्नीयात् स्थावरे लिङ्गे चण्डाय विनिवेदितम् इति ।। आदित्यपुराणे – लिङ्गे स्वायम्भुवे बाणे रत्नजे रौप्यनिर्मिते । सिद्धप्रतिष्ठिते लिङ्गे चण्डभागो न विद्यते इति ।। पाद्मे – बाणलिङ्गे स्वयम्भूते चन्द्रकान्ते हृदि स्थिते । चान्द्रायणसमं ज्ञेयं शम्भोर्निर्माल्यभक्षणम् इति ।

வ்யாஸர்:- தேவர், அஸுரர், மனிதர் இவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கத்தில் சண்டேச்வரனுக்குப் பாகம் ஈச்வரனால் கொடுக்கப்பட்டுள்ளது. எல்லாவற்றிலும் பாகமில்லை. ஈசன் ஆக்ஞையினால். ஸ்தாவர லிங்கத்தில் சண்டேச்வரனுக்கு நிவேதனம் செய்யப்பட்டதைப் புஜிக்கக் கூடாது. ஆதித்ய புராணத்தில்:- ஸ்வாயம்புவமான லிங்கத்திலும், பாணலிங்கத்திலும், ரத்னலிங்கத்திலும், ரஜதலிங்கத்திலும், ஸித்தரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கத்திலும் சண்டேச்வரனுக்குப் பாகமில்லை. பாத்மத்தில்:- பாணலிங்கத்திலும், ஸ்வயம் புதமான லிங்கத்திலும்,

சந்த்ரகாந்த லிங்கத்திலும், ஹ்ருதயத்திலுள்ள லிங்கத்திலும், சிவநிர்மால்யத்தைப் பக்ஷிப்பது சாந்த்ராயணத்திற்கு ஸமமென்று அறியப்பட வேண்டும்.

एतत् सर्वं वैदिकमार्गपूजित गृहदेवता निर्माल्यविषयम्। स्वस्य देवस्य यद् दत्तं चरुकं तु न संशयः। तत् प्राशयेत् स्वयं प्राज्ञो नैवान्यस्मै प्रदापयेत् इति वचनात् ॥ चरुकं - हविः । अन्यस्मै - पुत्रादिभ्योऽन्यस्मै।

இது முழுவதும் வேதமார்க்கத்தால் பூஜிக்கப்பட்ட க்ருஹ தேவதையின் நிர்மால்யத்தைப் பற்றியது. "தனது தேவனுக்கு எந்த ஹவிஸ் கொடுக்கப்பட்டதோ அதை, அறிந்தவன் தானே புஜிக்க வேண்டும், பிறனுக்குக் கொடுக்கக் கூடாது" என்ற வசனத்தினுல், பிறருக்கு என்பது புத்ரன் முதலியவரைத் தவிர்த்து மற்றவனுக்கு என்பது பொருள்.

तथा च पाद्मे – ततः स्वयं तु भुञ्जीत शुद्धं पुत्रादिभिः सह। निवेदितं च देवाय तच्छेषं चात्मशुद्धये इति ॥ गृहदेवताव्यतिरिक्तदेवतानिवेदितभक्षणं निषेधति दत्तात्रेयः — निर्माल्यं भक्षयित्वैवमुच्छिष्टमगुरोरपि । मासं पयोव्रतो भूत्वा जपन्नष्टाक्षरं सदा ॥ ब्रह्मकूर्चं ततः पीत्वा शुद्धो भवति मानवः ॥ निर्माल्यं नैव संरक्षेत् कूपे सर्वं च निक्षिपेत्। स्वीकुर्याद्यदि तन्मोहाद्रौरवे नरके पतेत् ॥ मक्षिकापा(त)दमात्रं तु निर्माल्यं न स्पृशेत् क्वचित् ॥ यदि स्पृशेत् स मोहाद्वै नरकेषु निमज्जति इति ॥ सङ्ग्रहेऽपि— निर्माल्यं च निवेद्यं च भुक्त्वा चान्द्रायणं चरेत् इति।

பாத்மத்தில்:- பிறகு தேவனுக்கு நிவேதிதமும், சுத்தமும், சேஷமுமான அன்னத்தைத் தனது சுத்திக்காகப் புத்ரன் முதலியவருடன் புஜிக்க வேண்டும். க்ருஹ தேவதையைத் தவிர்த்து மற்றத் தேவதைக்கு நிவேதித மான அன்னத்தைப் பக்ஷிப்பதை நிஷேதிக்கின்றூர்

**தத்தாத்ரேயர்:-** நிர்மால்யத்தைப் பக்ஷித்தாலும், குருவல்லாத மற்றவனின் உச்சிஷ்டத்தைப் புஜித்தாலும், ஒரு மாதம் பாலேயே பருகி வ்ரதமுடையவனாய், எப்பொழுதும் அஷ்டாக்ஷர மந்த்ரத்தை ஜபித்து, பிறகு ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்ய ப்ராசனம் செய்தால் மனிதன் சுத்தனாகிறான். நிர்மால்யத்தை ஸம்ரக்ஷித்து வைக்கக் கூடாது. எல்லாவற்றையும் கிணற்றில் போடவேண்டும். ஈயின் கால் அளவுள்ளதாயினும் நிர்மால்யத்தை ஒருகாலும் தொடக்கூடாது. அறியாமையால் தொடுவானாகில் ரௌரவமௌனும் நரகத்தில் விழுவான். **ஸங்க்ரஹத்திலும்:-** நிர்மால்யத்தையும், நைவேத்யத்தையும், புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

यत्तु पुराणवचनम् — प्रापणेन महाविष्णोः वैश्वदेवं करोति यः । प्राणाग्निहवनं चैव तेन लोका जितास्त्रयः इति तत् तान्त्रिकविषयम् । अत एव महाभारते — पाञ्चरात्रविदो मुख्यास्तस्य गेहे महात्मनः । प्रापणं भगवद्भुक्तं भुञ्जते चाग्रभोजनम् ।। प्राणाग्निहोत्रं यच्चान्यत् सर्वं कुर्वन्ति तेन तु इति ।। पार्वणश्राद्धे शिष्टभोजनमाह मनुः— एवं निर्वपणं कृत्वा पिण्डांस्तांस्तदनन्तरम् । प्रक्षाल्य हस्तावाचम्य ज्ञातिप्रायं प्रकल्पयेत् ।। ज्ञातिभ्यः सत्कृतं दत्वा बान्धवानपि भोजयेत् इति ।। ज्ञाति प्रायं - ज्ञातिबाहुल्यम् । प्रकल्पयेत् - ज्ञातीन् सङ्घातयेदित्यर्थः । बान्धवान् - सम्बन्ध्यादीन् ।

**புராணவசனம்:-** "விஷ்ணுவின் நைவேத்யத்தால் எவன் வைச்வதேவத்தையும், ப்ராணாக்னி ஹோமத்தையும் செய்கின்றானோ அவனால் மூன்று உலகங்களும் ஜயிக்கப்பட்டதாய் ஆகின்றன" என்றிருக்கிறதே எனில், அது தாந்த்ரிகரைப் பற்றியதாம். ஆகையால்தான். **மஹாபாரதத்தில்:-** "அந்த மஹாத்மாவின் க்ருஹத்தில் பாஞ்சாராத்ரமறிந்த முக்யர்கள் பகவானுக்கு நிவேதிதமான அன்னத்தைப் புஜிக்கின்றனர், ப்ராணாக்னிஹோத்ரத்தையும்

அதனுலேயே செய்கின்றனர், மற்ற எல்லாவற்றையும் அதனுலேயே செய்கின்றனர்'' என்றுள்ளது. பார்வண ச்ராத்தத்தில் சேஷபோஜனத்தைச் சொல்லுகிருர், மனு:- இவ்விதம் பிண்டதானம் செய்து (அந்தப் பிண்டங்களைப் பசு, ப்ராம்ஹணன், ஆடு, அக்னி இவருள் ஒருவருக்குக் கொடுக்க வேண்டும். அல்லது ஜலத்தில் போடவேண்டும்.) பிறகு கைகளை அலம்பி, ஆசமனம் செய்து சேஷமான அன்னத்தை ஜ்ஞாதிகளை ஆதரவுடன் புஜிப்பிக்க வேண்டும். மற்ற ஸம்பந்தி முதலிய பந்துக்களையும் புஜிப்பிக்க வேண்டும்.

चन्द्रिकायाम् – एवं देवान् पितॄंश्चैव तर्पयित्वा द्विजोत्तमः। पुत्रमित्रादिसहितो गृहस्थो भोक्तुमर्हति इति ।। आदित्यपुराणेऽपि — भगिन्यो बान्धवाः पूज्याः श्राद्धेऽपि च सदैव हि । दारिद्र्योपहता दीनाश्छिन्नाङ्गाश्चाधिकाङ्गुलिः ।। वृथाजाता विरेकाश्च व्याधिभारप्रपीडिताः । एते भोजनमर्हन्ति भोक्तुः सर्वत्र सर्वदा ।। वन्दिमागधसूताश्च तौर्यत्रिकविदस्तथा । अलब्धलाभाः श्राद्धेषु नाशयन्ति महद्यशः ।। तस्मात्तेऽपि विभक्तव्याः स्वकलत्रं विभज्य च इति।

சந்த்ரிகையில்:- க்ருஹஸ்தனை ப்ராம்ஹணன் இவ்விதம் தேவர்களையும், பித்ருக்களையும் த்ருப்தி செய்வித்து, புத்ர மித்ராதிகளுடன் கூடியவனுய்ப் போஜனம் செய்ய வேண்டும். ஆதித்ய புராணத்திலும்:- பகினிகளும், பாந்தவர்களும், ச்ராத்தத்திலும், எப்பொழுதும் பூஜிக்கத் தகுந்தவராவர். தரித்ரர்கள், அங்கமிழந்தவர்கள், அதிக விரலுடையவன், வீணுய்ப் பிறந்தவர், விரேகர்கள், அதிக வ்யாதியுள்ளவர் இவர்கள் எவ்விடத்திலும், எக்காலத்திலும், க்ருஹஸ்தன் வீட்டில் போஜனத்திற்கு அர்ஹர்களாகின்றனர். வந்திகள், மாகதர்கள், ஸூதர்கள், ந்ருத்தம், கீதம், வாத்யமிவைகளை அறிந்தவர்கள் ச்ராத்தத்தில் அன்னத்தை அடையாவிடில்,

பெரும் புகழைக் கெடுப்பார்கள். ஆகையால் அவர்களுக்கும் அன்னத்தைக் கொடுக்க வேண்டும். தன்களத்ரத்திற்குக் கொடுத்த பிறகு.

अत्राहुः — नवश्राद्धेषु यच्छिष्टं गृहे पर्युषितं च यत् । दम्पत्योर्भुक्तशेषं च न भुञ्जीत कदाचन इति विज्ञानेश्वरेण नवश्राद्धशेषस्यैवाभ्योज्यत्वप्रतिपादनात्, आपस्तम्बेन च नचातद्गुणायोच्छिष्टं प्रयच्छेत्, नचातद्गुणायोच्छिष्टं दद्युः इति श्राद्धविशेषेऽपि निमन्त्रित विसदृशगुणेभ्य एव पितृशेषदाननिषेधात्, इष्टैः सह भुज्यताम् इतीष्टानां च शिष्टान्नभोजनानुज्ञानात्, 'शेषं चैवानुमान्य च' 'प्रदक्षिणीकृत्य शेषमनुज्ञाप्य', 'अनुज्ञातो गृह्यान् बालवृद्धांश्च परितोष्य भुञ्जीते'ति याज्ञवल्क्यबोधायनादिभि रभ्यनुज्ञापनविधानात्, मन्वादिवचनेषु तथा दर्शनाच्च, 'एकोद्दिष्टे च यच्चोक्तुरभोज्यं शिष्टभोजनम्। चन्द्रसूर्योपरागे च शिष्टमन्नं विवर्जयेत् इति विशेष निषेधाच्च, स्त्रीशूद्रानुपनीतानां श्राद्धोच्छिष्टं न दापयेत्। यो दद्याद्रागसंमोहात् न तद्गच्छति वै पितॄनित्यादेर्भुक्तिपात्र स्थोच्छिष्टविषयत्वात्, पितृशेषभोजने न दोषः इति।

இது விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:- ''நவச்ராத்தத்தில் மீந்ததையும், வீட்டில் பழையதான அன்னத்தையும், தம்பதிகள் புஜித்து மீந்த அன்னத்தையும் ஒருகாலும் புஜிக்கக் கூடாது என்று விஜ்ஞானேச்வரரால், நவச்ராத்த சேஷத்திற்கே அபோஜ்யத்வம் சொல்லப் பட்டிருப்பதாலும், ஆபஸ்தம்பரால், ச்ராத்தத்தில் நிமந்த்ரிதரான ப்ராம்ஹணர்களுக்குச் சமமான குணமில்லாதவருக்கே உச்சிஷ்டத்தைக் கொடுக்கக் கூடாதென்று பித்ருசேஷதானம் நிஷேதிக்கப் பட்டிருப்பதாலும், 'இஷ்டர்களுடன் புஜிக்கப்படலாம்' என்று இஷ்டர்களுக்கும் சேஷான்ன போஜனம் உத்தரவிடப்பட்டிருப்பதாலும், 'ப்ரதக்ஷிணம் செய்து

சேஷான்னத்திற்கு அனுக்ஞை பெற்று, 'அனுக்ஞை பெற்றவனுய் க்ருஹத்தில் உள்ளவரையும், பாலரையும், வ்ருத்தரையும் ஸந்தோஷிப்பித்துப் பிறகு புஜிக்க வேண்டும்' என்று, யாக்ஞவல்க்யர், போதாயனர் முதலியவர்களால் அனுக்ஞை செய்விப்பது விதிக்கப் பட்டிருப்பதாலும், மன்வாதிகளின் வசனங்களில் அவ்விதம் காணப்படுவதாலும், 'ஏகோத்திஷ்டத்தில் புஜித்தவனின் சேஷான்னம் அபோஜ்யம், சந்த்ர ஸூர்யோபராகத்தில் மீதியான அன்னத்தையும் வர்ஜிக்க வேண்டும், என்று விசேஷ நிஷேதம் இருப்பதாலும், 'ஸ்த்ரீ, சூத்ரன், அனுபநீதன் இவர்களுக்கு ச்ராத்தோச்சிஷ்டத்தைக் கொடுக்கக் கூடாது, ராகத்தாலாவது மோஹத்தாலாவது கொடுத்தால் அந்த ச்ராத்தம் பித்ருக்களைச் சேருவதில்லை' என்பது முதலிய வசனங்கள் போஜன பாத்ரத்திலுள்ள உச்சிஷ்டத்தைப் பற்றியதாலும் பித்ரு சேஷ போஜனத்தில் தோஷமில்லை'' என்று.

अन्ये त्वाहुः — श्राद्धीयमन्नं पितृभुक्तशेषं ये भुञ्जते ते नरकानशेषान् । प्रयान्ति कर्ता पितरश्च सर्वे भुञ्जीत कर्ता सह तत्सपिण्डैः । श्राद्धशेषं तु यो भुङ्क्ते तत्कर्ता ज्ञातिभिर्विना । तस्य वैवस्वतो भोक्तुर्मलं प्राशयते पितॄन् इत्यादिना सपिण्डव्यतिरक्तानां निषेधात्, न पार्वणेष्वन्येषां पितृशेषं भोज्यमिति । इति भक्ष्याभक्ष्यविवेकः ।

மற்றும் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர்:- 'பித்ருக்கள் புஜித்து மீந்த ச்ராத்தான்னத்தை எவர் புஜிக்கின்றனரோ அவரும் கர்த்தாவும், பித்ருக்க ளெல்லோரும் எல்லா நரகங்களையுமடைகின்றனர். ஆகையால் அந்தச் சேஷான்னத்தை, கர்த்தா ஸபிண்டர்களுடன் புஜிக்க வேண்டும்' என்றும், 'ச்ராத்த சேஷான்னத்தைக் கர்த்தாவையும், அவன் க்ஞாதிகளையும் தவிர்த்த மற்றவன் புஜித்தால், அவன் மலத்தைப் யமன்

பித்ருக்களைச் சாப்பிடச் செய்கிறான் என்பது முதலியதால் ஸபிண்டர்களைத் தவிர மற்றவர்க்கு நிஷேதமிருப்பதால், பார்வண ச்ராத்தத்தில் பிறருக்குப் பித்ரு சேஷம் புஜிக்கத் தகுந்ததல்ல' என்று.

## भोज्याभोज्यान्नानि।

अथ भोज्याभोज्यान्नानि। तत्रापस्तम्बः — द्वावेवाश्रमिणौ भोज्यौ ब्रह्मचारी गृही तथा। मुनेरन्नं न भोज्यं स्यात् सर्वेषां लिङ्गिनां तथा। लिङ्गिनः - पाशुपतादयः। यच्चान्नं यतिपात्रस्थं यतिना प्रेषितं च यत्। अन्नत्रयं न भोक्तव्यं भुक्त्वा चान्द्रायणं चरेत् इति।। प्रजापतिः— श्रद्धधानस्य भोक्तव्यं चोरस्यापि विशेषतः। न त्वेव बहुयाज्यस्य यश्चोपनयते बहून्।। अवलिप्तस्य मूर्खस्य दुष्टवृत्तस्य दुर्मतेः। अन्नमश्रद्दधानस्य यो भुङ्क्ते भ्रूणहा स वै इति।

### புஜிக்கத் தகுந்ததும், தகாததுமான அன்னங்கள்

இனி புஜிக்கத் தகுந்தவையும், தகாதவையுமான அன்னங்கள் சொல்லப்படுகின்றன, அதில், ஆபஸ்தம்பர் :- ப்ரம்ஹசாரீ, க்ருஹஸ்தன் என்கிற இரண்டு ஆச்ரமிகளின் அன்னத்தை மட்டில் புஜிக்கலாம். வானப்ரஸ்தனின் அன்னமும், எல்லா லிங்கிகளுடையவும் அன்னமும் புஜிக்கத்தகாததாகும். லிங்கிகள் = பாசுபதர் முதலியவர். யதியின் அன்னமும், யதியின் பாத்ரத்திலுள்ள அன்னமும், யதியால் அனுப்பப்பட்ட அன்னமும் இம்மூன்று அன்னமும் புஜிக்கத்தகாதது. புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். ப்ரஜாபதி:- திருடனாயினும் ச்ரத்தையுள்ளவனின் அன்னம் போஜ்யமாகும். அநேகருக்கு யாஜகன், அநேகருக்கு உபநயனம் செய்கின்றவன், கர்வமுடையவன், மூர்க்கன், கெட்ட நடத்தையுள்ளவன், துர்ப்புத்தி யுள்ளவன், ச்ரத்தையில்லாதவன் இவர்களின் அன்னம் போஜ்யமல்ல. புஜித்தவன் கர்ப்பஹத்யை செய்தவனாவான். ப்ரூணம் = கர்ப்பம்.

श्रोत्रियस्य कदर्यस्य वदान्यस्य च वार्धुषेः । मीमांसित्वोभयं देवाः सममन्नमकल्पयन् ॥ तान् प्रजापतिराहैत्य मा कृध्वं विषमं समम् । श्रद्धापूतं वदान्यस्य हतमश्रद्धयेतरत् ॥ श्रद्धयेष्टं च पूतं च नित्यं कुर्यादतन्द्रितः । श्रद्धाकृते ह्यक्षये ते भवतः स्वागतैर्धनैः इति ॥ कदर्यः - लुब्धः । आत्मानं धर्मकृत्यं च पुत्रदारांश्च पीडयेत् । लोभाद्यः पितरौ भृत्यान् स कदर्य इति स्मृतः इत्युक्तेः । वार्धुषिः - निषिद्धवृद्ध्युपजीवी, आत्मस्तुतिपरनिन्दाकर्ता च । द्विजो निषिद्धया वृद्ध्या जीवन् वार्धुषिकः स्मृतः ॥ यस्तु निन्देत् परगुणान्प्रशंसत्यात्मनो गुणान् । स वै वार्धुषिको नाम हव्यकव्येषु गर्हितः इति विष्णुस्मरणात् ।

மனு:- ச்ரோத்ரியனுன கதர்யன், வதான்யனுன (தானசீலன்) வார்த்துஷி, என்ற இவ்விருவரின் குணதோஷங்களை விசாரித்துத் தேவர்கள், இவ்விருவரின் அன்னமும் ஸமம் என்று நிச்சயித்தனர். அந்தத் தேவர்களிடம் வந்து ப்ரம்ஹதேவர் சொன்னுர். ''பேதமுள்ள இவ்விரண்டையும் ஸமமாகச் செய்யாதீர்கள். (ஏனெனில்) வதான்யனுன வார்த்துஷியின் அன்னம் ச்ரத்தையால் சுத்தமாகியது. க்ருபணனுன ச்ரோத்ரியனின் அன்னம் ச்ரத்தையில்லாததால் துஷ்டமாகியது'' என்று இஷ்டத்தையும் (யாகம் முதலியதையும்) பூர்த்தத்தையும், (குளம்வெட்டுவது முதலியதையும்) சோம்பலில்லாதவனுய் எப்பொழுதும் ச்ரத்தையுடன் செய்ய வேண்டும். ந்யாயத்தால் ஸம்பாதிக்கப்பட்ட தனங்களால் ச்ரத்தையுடன் இஷ்டாபூர்த்தங்களைச் செய்ய வேண்டும். அவ்விதம் செய்யப்பட்டால் அவை அக்ஷயபலமுள்ளவைகளாய் ஆகும். கதர்யன் - உலோபி. 'எவன் உலோபத்தால், தன்னையும், தர்ம கார்யத்தையும், புத்ரர்களையும், பத்னியையும், மாதா பிதாக்களையும், ப்ருத்யர்களையும் பீடிக்கின்றுனே அவன் கதர்யன் என்று சொல்லப்படுகிறுன்' என்று சொல்லப்பட்டவன்.

வார்த்துஷி - நிஷித்தவ்ருத்தியால் (வட்டியால்) ஜீவிப்பவனும், தன்னை ஸ்துதித்துப் பிறனை நிந்திப்பவனும். "நிஷித்தமான வட்டியினுல் ஜீவிக்கும் ப்ராம்ஹணன் 'வார்த்துஷி' எனப்படுவான். எவன் பிறரின் குணங்களை நிந்திக்கின்றுனே, தனது குணங்களைப் புகழ்கின்றுனே அவன் 'வார்த்துஷிகன்' எனப்படுவான். அவன் ஹவ்யங்களிலும் கவ்யங்களிலும் அர்ஹனுகான்" என்று விஷ்ணுஸ்ம்ருதி உள்ளது.

आपस्तम्बः — क आश्याान्नो य ईप्सेदिति कण्वः पुण्य इति कौत्सः यः कश्चिद् दद्यादिति वार्ष्यायणिर्यदिह रजः स्थावरं पुरुषे भोक्तव्यमथ चेच्चलं दानेन निर्दोषो भवति, पुण्यस्येप्सतो भोक्तव्यं पुण्यस्याप्यनीप्सतो न भोक्तव्यम् इति ॥ गौतमः – प्रशस्तानां स्वकर्मसु द्विजातीनां ब्राह्मणो भुञ्जीत इति ॥ पराशरः – क्षत्रियश्चापि वैश्यश्च क्रियावन्तौ शुचिव्रतौ। तद्गृहेषु द्विजैर्भोज्यं हव्यकव्येषु नित्यशः इति।

ஆபஸ்தம்பர்:- எவனின் அன்னத்தைப் புஜிக்கலாம்? எவன் ப்ரார்த்திக்கின்றுனே அவனின் அன்னத்தைப் புஜிக்கலாம். ப்ரதிஷித்தனைத் தவிர்த்து, என்பது கண்வரின் மதம். தபஸ், ஹோமம், ஜபம், ஸ்வதர்மம் இவைகளுடன் கூடியவன் புண்யன். அவன் ப்ரார்த்திக்காவிடினும் அவனின் அன்னம் போஜ்யம் என்பது கௌத்ஸரின் மதம். புண்யனுயினும், அபுண்யனுயினும் எவன் எப்பொழுதும் தானசீலனுயுள்ளவனே அவனின் அன்னம் போஜ்யம் என்கிறுர் வார்ஷ்யாயணி. பாபமானது, கர்த்தாவினிடத்தில் ஸ்திரமாகவேயுள்ளது, அனுபவமில்லாமல் க்ஷயிப்பதில்லை என்றுல், அப்பொழுது, அவனிடமிருந்து ப்ரதிக்ரஹித்தாலும் புஜித்தவனிடத்தில் தாதாவின் பாபம் ஸங்க்ரமிக்காதாகையால் புஜிக்கலாம். அல்லது, பாபம் சலம், உபயோகமில்லாவிடினும் க்ஷயிக்குமென்றுல், அப்பொழுது, எப்போதும் தானசீலனுய் இருப்பவ

னிடத்தில் முஹூர்த்த காலங்கூடப் பாபம் இருப்பதிற்கில்லை என்பதால் நிர்த்தோஷனான அவனின் அன்னத்தைப் புஜிப்பவனுக்குத் தோஷமேது? 'புண்யனாயும், கொடுப்பதற்கு விரும்பியவனாயு முள்ளவனின் அன்னம் போஜ்யமாகும். புண்யனானாலும் கொடுக்க விரும்பாதவனின் அன்னம் அபோஜ்யம்' என்பது ஆபஸ்தம்பரின் மதமாம். கௌதமர்:- ஸ்வகர்மானுஷ்டானத்தால் சிறந்த ப்ராம்ஹணர்களின் அன்னத்தை ப்ராம்ஹணன் புஜிக்க வேண்டும். பராசரர்:- க்ஷத்ரியன், வைச்யன் இவர்கள், ஸ்வகர்மத்தைச் செய்பவராய், சுத்தமான நியமமுடையவர்களாகில், அவர் க்ருஹங்களில் ப்ராம்ஹணர்கள் எப்பொழுதும் ஹவ்யகவ்யங்களில் புஜிக்கலாம்.

स्मृतिरत्ने — ब्राह्मणस्य सदाऽश्नीयात् क्षत्रियस्य तु पर्वसु। उत्सवेषु च वैश्यस्य शूद्रस्य न कदाचन इति। मनुः – नाश्रोत्रियतते यज्ञे ग्रामयाजहुते तथा। स्त्रिया क्लीबेन च हुते भुञ्जीत ब्राह्मणः कचित्॥ अश्रीकमेतत् साधूनां यत्र जुह्वत्यमी हविः। प्रतीपमेतद्देवानां तस्मात् तु परिवर्जयेत्॥ ग्रामयाजः - बहूनां याजकः। एतद्भोजनं साधूनां अश्रीकं - अमङ्गलम्। प्रतीपं - प्रतिकूलमित्यर्थः॥

ஸ்ம்ருதிரத்னத்தில்:- ப்ராம்ஹணனின் க்ருஹத்தில் எப்பொழுதும் புஜிக்கலாம். க்ஷத்ரியன் க்ருஹத்தில் பர்வகாலங்களிலும், வைச்யன் க்ருஹத்தில் உத்ஸவங்களிலும் புஜிக்கலாம். சூத்ரன் க்ருஹத்தில் ஒருகாலும் புஜிக்கக் கூடாது. மனு:- அச்ரோத்ரியனால் வ்யாபிக்கப்பட்ட யாகத்திலும், க்ராம யாஜகன் ஹோமம் செய்தவிடத்திலும், ஸ்த்ரீயினாலும், நபும்ஸகனாலும் ஹோமம் செய்யப்பட்டவிடத்திலும், ப்ராம்ஹணன் ஒருகாலும் புஜிக்கக் கூடாது. இவர்கள் எந்தக் கர்மத்தில் ஹவிஸ்ஸை ஹோமம் செய்கின்றனரோ அது, ஸாதுக்களுக்கு அமங்களமாயும், தேவர்களுக்கு ப்ரதிகூலமாயுமுள்ளது. ஆகையால் அவர்களால் ஹோமம் செய்விப்பதை வர்ஜிக்க வேண்டும்.

स एव—मत्तक्रुद्धातुराणां च न भुञ्जीत कदाचन । गणान्नं गणिकान्नं च विदुषां यत् जुगुप्सितम् ॥ स्तेनगायकयोश्चान्नं तक्ष्णो वार्धुषिकस्य च । दीक्षितस्य कदर्यस्य बद्धस्य निगलेन च ॥ अभिशस्तस्य षण्डस्य पुंश्चल्या डाम्भिकस्य च । चिकित्सकस्य मृगयोः क्रूरस्योच्छिष्ट भोजिनः ॥ उग्रान्नं सूतिकान्नं च पर्याचान्तमनिर्दशम् । अनिर्दशं सूतिकान्नमित्यन्वयः । अनर्चितं वृथामांसमवीरायाश्च योषितः । द्विषदन्नं नगर्यन्नं पतितान्नमवक्षुतम् ॥ अनर्चितम् = अवज्ञया दत्तम् । अवीरायाः - पतिपुत्रहीनायाः । नगर्यन्नमिति देशसम्बन्धेनास्य निषेधः । पिशुनानृतिनोश्चान्नं क्रतुविक्रयिणस्तथा ।

மனுவே:- திமிருள்ளவன், கோபமுள்ளவன், வ்யாதியுள்ளவன் இவர்களின் அன்னத்தை ஒருகாலும் புஜிக்கக் கூடாது. அஸாது ப்ராம்ஹணக் கூட்டத்தின் அன்னம். வேச்யையின் அன்னம், வித்வான்களால் நிந்திக்கப்பட்ட அன்னம், திருடன், பாட்டிஞல் ஜீவிப்பவன், தச்சன் வ்ருத்தியால் ஜீவிப்பவன், வட்டியால் ஜீவிப்பவன், தீக்ஷிதன், க்ருபணன், விலங்கிடப் பட்டவன், மஹாபாதகியென்று ஜனங்களால் சொல்லப் பட்டவன், நபும்ஸகன், வ்யபிசாரிணீ, தாம்பிகன் (கபடமாய்த் தர்மம் செய்பவன்), சிகித்ஸையால் ஜீவிப்பவன், மாம்ஸ விக்ரயத்திற்காக மான் முதலியதைக் கொல்பவன், குடிலஸ்பாவமுள்ளவன், நிஷித்தமான உச்சிஷ்டத்தைப் புஜிப்பவன், பயங்கரமான கார்யம் செய்பவன் இவர்களின் அன்னத்தைப் புஜிக்கலாகாது. ஸூதிகையை உத்தேசித்துச் செய்யப்பட்ட அன்னம், பர்யாசாந்தமான அன்னம், (பலர் புஜிக்கும் பங்க்தியில் ஒருவன் மட்டில் நடுவில் ஆசமனம் செய்து எழுந்தால் அந்தப் பங்க்தியிலுள்ளவரின் அன்னம் பர்யாசாந்தம்) பத்து நாளைக்குள் ஸூதிகையின் அன்னம், அநாதரவுடன்

கொடுக்கப்பட்ட அன்னம், தேவதோத்தேசமில்லாமல் சமைக்கப்பட்ட மாம்ஸம், கணவனும் புத்ரனுமில்லாத ஸ்த்ரீயின் அன்னம், சத்ருவின் அன்னம், நகரியின் அன்னம், பதிதனின் அன்னம், தும்மலினுல் தூஷிக்கப்பட்ட அன்னம், கோட்சொல்பவன், பொய்ஸாக்ஷ்யம் சொல்பவன் இவரின் அன்னம், யாகபலத்தை விற்பவனின் அன்னம், இவை கூடாது.

शैलूषतुन्नवायान्नं कृतघ्नस्यान्नमेव च ।। शैलूषः - नटः । कर्मारस्य निषादस्य रङ्गावतारकस्य च । श्ववतां शौण्डिकानां च चेलनिर्णेजकस्य च ।। कर्मारः - अयस्कारः । श्ववतां - श्वपोषकाणाम् । शौण्डिकानां - सुराविक्रयिणाम् । चेलनिर्णेजकस्य - वस्त्रशोधकस्य । सुवर्णकर्तुर्वेनस्य शस्त्रविक्रयिणस्तथा । रञ्जकस्य नृशंसस्य यस्य चोपपतिर्गृहे ।। वैदेहकेनाम्बष्ठ्यामुत्पन्नो वेनः । रञ्जकस्य - वस्त्रादीनां नीलादिरागकारस्य । नृशंसस्य - निर्दयस्य । यस्य गृहे उपपतिः - जारो वर्तते, तस्य चान्नं न भुञ्जीतेत्यर्थः ।। मृष्यन्ति ये चोपपतिं स्त्रीजितानां च सर्वशः । अनिर्दशं च प्रेतान्नमतुष्टिकरमेव च ।

தையற்காரன், நன்றி செய்தவனுக்கு அபகாரம் செய்பவன் இவர்களின் அன்னம், கர்மாரன் (கொல்லன்) நிஷாதன், நாட்யக்காரன், நாயை வளப்பவர்கள், கள்ளை விற்பவர்கள், வஸ்த்ரங்களை வெளுப்பவன், தட்டான், வேனன் என்றவன், ஆயுதங்களை விற்பவன், வஸ்த்ரங்களுக்குச் சாயம் போடுகின்றவன், தயையில்லாதவன், எவன் க்ருஹத்தில் ஜாரன் இருக்கின்றுனே அவன் இவர்களின் அன்னத்தையும் புஜிக்கக் கூடாது. இங்கு 'வேனன்' என்ற பதத்திற்கு 'வைதேஹகன்' என்னும் ஸங்கீர்ண ஜாதீயனுக்கு, 'அம்பஷ்டீ' என்னும் ஸ்திரீயினிடத்தில் உண்டானவன் என்று பொருள். வீட்டிலிருக்கும் ஜாரனைப் பொறுத்துக் கொண்டிருப்பவர், எக்கார்யங்களிலும் ஸ்த்ரீ பரதந்த்ரர்களாயிருப்பவர், பத்து நாளாகாத ப்ரேதா

சௌசிகள் இவர்களின் அன்னமும், அஸந்துஷ்டிகரமான அன்னமும் புஜிக்கத் தகாதவையாகும்.

राजान्नं तेज आदत्ते शूद्रान्नं ब्रह्मवर्चसम्। आयुः सुवर्णकारान्नं यशश्चर्मावकृन्तिनः ॥ कारुकान्नं प्रजां हन्ति बलं निर्णेजकस्य च। कारुकान्नं - कर्मारान्नम्। गणान्नं गणिकान्नं च लोकेभ्यः परिकृन्तति ॥ पूयं चिकित्सकस्यान्नं पुंश्चल्यास्त्वन्नमिन्द्रियम्। विष्ठा वार्धुषिकस्यान्नं शस्त्रविक्रयिणो मलम्॥ इन्द्रियं - रेतः।

அரசனின் அன்னம் தேஜஸ்ஸை அபஹரிக்கும். சூத்ரனின் அன்னம் ப்ரம்ஹவர்ச்சஸத்தை அபஹரிக்கும். தட்டானின் அன்னம் ஆயுஸ்ஸை அபஹரிக்கும். தோல் தைப்பவனின் அன்னம் யசஸ்ஸை அபஹரிக்கும். கர்மாரனின் அன்னம் ப்ரஜையை அபஹரிக்கும். வஸ்த்ரத்தை வெளுப்பவனின் அன்னம் பலத்தை அபஹரிக்கும். கூட்டத்தின் அன்னமும், வேச்யையின் அன்னமும் புண்யலோகங்களினின்று பிரிக்கின்றது. வைச்யனின் அன்னம் சீழுக்குச் சமானம். வ்யபிசாரிணியின் அன்னம் ரேதஸ்ஸுக்குச் சமானம். வட்டியால் ஜீவிப்பனின் அன்னம் விஷ்டைக்குச் சமானம். ஆயுதம் விற்பவனின் அன்னம் கோழை முதலிய மலத்திற்குச் சமானம் - ஷை மலங்களைப் புஜிப்பதற்குச் சமமான தோஷமுண்டென்பதாம்.

य एतेऽन्ये त्वभोज्यान्नाः क्रमशः परिकीर्तिताः। तेषां त्वगस्थिरोमाणि वदन्त्यन्नं मनीषिणः ॥ भुक्त्वाऽतोऽन्यतमस्यान्न ममत्या तु त्र्यहं क्षिपेत्। मत्या भुक्त्वा चरेत् कृच्छ्रं रेतो विण्मूत्रमेव च। नाद्याच्छूद्रस्य पक्वान्नं विद्वानश्राद्धिनो द्विजः। आममेवाददीतास्मा दवृत्तावैकरात्रिकम्॥ अत्र आमस्याभ्यनुज्ञानात् पूर्वोक्ते मत्तक्रुद्धादिषु पक्वामयोरुभयोरपि निषेधः।

மற்றும் எவரின் அன்னம் அபோஜ்யமென்று க்ரமமாய் சொல்லப்பட்டதோ அவர்களின் அன்னம், அவரின் தோல், எலும்பு, ரோமம் என அறிந்தவர் சொல்லுகின்றனர். இவர்களுள் ஒருவனின் அன்னத்தை அறியாமல் புஜித்தால் மூன்று நாள் உபவாஸம் அனுஷ்டிக்க வேண்டும். அறிந்து புஜித்தால் ப்ராஜாபத்ய க்ருச்ரமனுஷ்டிக்க வேண்டும். ரேதஸ், விஷ்டை, மூத்ரம் இவைகளைப் புஜித்தாலும் இதே ப்ராயச்சித்தம். சாஸ்த்ரமறிந்த ப்ராம்ஹணன், ச்ராத்தம் பஞ்சயக்ஞம் முதலியதை அனுஷ்டிக்காத சூத்ரனின் பக்வான்னத்தைப் புஜிக்கக் கூடாது. வேறு அன்னம் கிடைக்காவிடில், ஒரு தினத்திற்கு மட்டில் போதுமான ஆமத்தையே இவனிடமிருந்து க்ரஹிக்கலாம். பக்வான்னத்தை க்ரஹிக்கக் கூடாது. இங்கு ஆமத்திற்கு அனுக்ஞை செய்ததால் முன் சொல்லப்பட்ட மத்தன், க்ருத்தன் (கோபமுடையவன்)ஷி முதலியவர் விஷயத்தில் பக்வம் ஆமம் (அபக்வம்) என்ற இரண்டிற்கும் நிஷேதம்.

याज्ञवल्क्यः – कदर्यबद्धचोराणां क्लीबरङ्गावतारिणाम् । वैणाभिशस्तवार्द्धुष्यगणिकागणदीक्षिणाम् ॥ वीणावादनजीवी, वेणुच्छेदजीवी च वैणः । गणदीक्षी - बहुयाजकः - अन्नं नाद्यादित्यनुवर्तते ॥ स एव— चिकित्सकातुरक्रुद्धपुंश्चली-मत्तविद्विषाम्। क्रूरोग्रपतितव्रात्यडाम्भिकोच्छिष्टभोजिनाम्॥ क्रूरः - दृढाभ्यन्तरकोपः । उग्रः - वाक्कायव्यापारेणोद्वेजकः । अवीरस्त्री स्वर्णकारस्त्रीजितग्रामयाजिनाम् । शस्त्रविक्रयिकर्मारतुन्न वायश्व-वृत्तिनाम्॥ ग्रामयाजी - ग्रामस्य शान्त्यादिकर्ता। बहूनां वोपनेता। नृशंसराजरजककृतघ्नवधजीविनाम् । चेलधाव सुराजीव सहोपपतिवेश्मनाम्॥ पिशुनानृतिनोश्चैव तथा चाक्रिकवन्दिनाम्। एषामन्नं न भोक्तव्यं सोमविक्रयिणस्तथा इति॥ चाक्रिकः - तैलिकः। द्विजाना मेतेषामन्नं न भोक्तव्यम्। शूद्रस्य प्राप्त्यभावात्।

யாக்ஞவல்க்யர்:- கதர்யன், விலங்கு முதலியதால் கட்டப்பட்டவன், திருடன், நபும்ஸகன், நடன் முதலியவர், வைணன் (வீணையால் ஜீவிப்பவனும், மூங்கில் வெட்டி ஜீவிப்பவனும்) அபிசஸ்தன் (பதநீய கர்மங்களுடையவன்) வார்த்யுஷ்யன் (வட்டியால் ஜீவிப்பவன்) வேச்யை, கணதீக்ஷீ (பலருக்கு யாஜனம் செய்பவன்) இவர்களின் அன்னத்தைப் புஜிக்கக் கூடாது. யாக்ஞவல்க்யரே:- வைத்யன், மஹாரோகமுடையவன், கோபமுடையவன், வ்யபிசாரிணீ, கர்வமுடையவன், சத்ரு, மனதினுள் த்ருடமான கோபமுடையவன், உக்ரன் (வாக்கு, தேஹம் இவைகளின் செயலால் வருத்துகிறவன்) பதிதன், வ்ராத்யன் (காயத்ரீ இல்லாதவன்) டாம்பிகன், (வஞ்சகன்) பிறரின் உச்சிஷ்டத்தைப் புஜிப்பவன், அவீரஸ்த்ரீ, (ஸ்வதந்த்ரமாயுள்ளவள், அல்லது பதி புத்ரரில்லாதவள்) தட்டான், ஸ்த்ரீக்கு வசமாயுள்ளவன், க்ராமயாஜீ, (க்ராம சாந்தி முதலியதைச் செய்பவன், அல்லது அநேகருக்கு உபநயனம் செய்பவன்) ஆயுதங்களை விற்பவன், கர்மாரன் (தச்சன், கொல்லன் முதலியவர்) தையற்காரன், நாய்களால் பிழைப்பவன், தயையற்றவன், அரசன், (புரோஹிதனும்) சாயமிடுபவன், உபகாரத்தை மறந்தவன், ப்ராணிவதத்தால் ஜீவிப்பவன், துணிகளை வெளுப்பவன், மத்யத்தை விற்பவன், ஜாரனுடன் கூடிய க்ருஹத்திலுள்ளவன், கோட் சொல்பவன், பொய் சொல்பவன், சாக்ரிகன் (எண்ணெய் வ்யாபாரீ, அல்லது வண்டியால் பிழைப்பவன்) ஸ்துதிபாடகன், ஸோமலதையை விற்பவன் என்ற இரு பிறப்பாளரான இவர்களின் அன்னம் புஜிக்கத்தகாததாம். சூத்ரனுக்கு ப்ராப்தி இல்லை.

सङ्ग्रहे — त्यजेदनुपनीतान्नमन्धस्य पतितस्य च । वेदाध्ययनहीनस्य कन्याविक्रयिणस्तथा ॥ दरिद्रस्य च मूर्खस्य यतिनिन्दापरस्य च । अयाज्ययाजकस्यान्नं निर्मर्यादस्य कर्षिणः । देवद्रोहपरस्यान्नं तथा विज्ञानदूषिणः । दग्धाङ्गस्यायसैर्दिव्यैः

सोमविक्रयिणस्तथा इति।

ஸங்க்ரஹத்தில்:- உபநயனமில்லாதவன், குருடன், பதிதன், வேதாத்யயனமற்றவன், பெண்ணை விற்பவன், தரித்ரன், மூர்க்கன், யதிநிந்தையை அதிகமாய்ச் செய்பவன், அனர்ஹருக்கு யாஜனம் செய்பவன், மர்யாதையில்லாதவன், க்ருஷி செய்பவன், தேவத்ரோகத்தையே எப்பொழுதும் செய்பவன். சாஸ்த்ரங்களைத் தூஷிப்பவன், தேவ ஸம்பந்தமான இரும்பு ஆயுதங்களால் தேஹத்தைச் சூடிட்டுக் கொண்டவன், ஸோமத்தை விற்பவன் இவர்களின் அன்னத்தைப் புஜிக்கக் கூடாது.

यमः - चक्रोपजीवी गान्धर्वः कितवस्तस्करस्तथा। ध्वजी दारोपजीवी च शूद्राध्यापकयाजकौ ॥ कुलालश्चित्रकर्मा च वार्धुषिश्चर्मविक्रयी। अभोज्यान्ना इमे षण्डमार्जारा वाखुकुक्कुटौ ॥ पतिताश्चापविद्धाश्च चण्डाला अधमाश्च ये ॥ न जुहोत्युचिते काले न स्नाति न ददाति च। पितृदेवार्चनाद्धीनः स षण्डः परिकीर्तितः ॥ डम्भार्थं जपते यश्च तप्यते च तपस्तथा। न परत्रार्थ इत्युक्तः स मार्जारः प्रकीर्तितः ॥ विभवे सति नैवार्थं ददाति न जुहोति च। तमाहुराखुं तस्यान्नं भुक्त्वा कृच्छ्रेण शुध्यति ॥ सभागतानां यः सभ्यः पक्षपातं समाचरेत् ॥ तमाहुः कुक्कुटं देवास्तस्याप्यन्नं विगर्हितम्। स्वधर्मं यः समुत्सृज्य परधर्मं समाचरेत्। अनापदि तु विद्वद्भिः पतितः परिकीर्त्यते। देवत्यागी पितृत्यागी गुरूणामप्यपूजकः। गोब्राह्मणस्त्रीवधकृदपविद्धः प्रकीर्तितः ॥ आशाकरस्त्वदाता च दातुश्च प्रतिषेधकः। शरणागतं यस्त्यजति स चण्डालः प्रकीर्तितः इति।

யமன்:- சக்ரத்தால் ஜீவிப்பவன், பாடகன், சூதாடுபவன், திருடன், ஸுராகாரன், பத்னியால் பிழைப்பவன், சூத்ராத்யாபகன், சூத்ரயாஜகன், குயவன்,

சித்ரகாரன், வட்டியால் ஜீவிப்பவன், தோல் விற்பவன், ஷண்டன், மார்ஜாரன், ஆகு, குக்குடன், பதிதன், அபவித்தன், சண்டாளன், அதமன் (தாழ்ந்தவன்) இவர்களின் அன்னத்தைப் புஜிக்கக் கூடாது. விஹிதமான காலத்தில், ஹோமம், ஸ்நானம், தானம், பித்ரு தேவபூஜை இவைகளைச் செய்யாதவன் 'ஷண்டன்' எனப்படுகிறான். எவன் டம்பத்திற்காக ஜபம், தபஸ் இவைகளைச் செய்கின்றானோ, பரகதிக்காகச் செய்யவில்லையோ அவன் 'மார்ஜாரன்' (பூனை) எனப்படுகிறான். எவன் விபவமிருந்தும், தானம், ஹோமம் இவைகளைச் செய்வதில்லையோ அவனை 'ஆகு' (எலி) என்பார்கள். அவன் அன்னத்தைப் புஜிப்பவன் ஒரு க்ருச்ரத்தால் சுத்தனாவான். எவன் ஸபைக்குத் தலைவனாயிருந்து, ஸபையிலுள்ளவர்களுக்குப் பக்ஷபாதம் செய்வானோ, அவனை 'குக்குடன்' (கோழி) என்று தேவர்கள் சொல்லுகின்றனர். அவனுடைய அன்னமும் அபோஜ்யமாம். எவன் ஆபத்தில்லாத காலத்திலும், ஸ்வதர்மத்தை விட்டுப் பரதர்மத்தைச் செய்கின்றானோ, அவன் வித்வான்களால் 'பதிதன்' எனச் சொல்லப்படுகிறான். எவன் தேவர்களை விட்டு, மாதா பிதாக்களையும் விட்டு, குருக்களையும் பூஜிக்காதவனாய், பசு, ப்ராம்ஹணன், ஸ்த்ரீ இவர்களை வதம் செய்தவனோ, அவன் 'அபவித்தன்' என்று சொல்லப்படுகிறான். ஆசையை மட்டில் தூண்டி கொடாதவனும், கொடுப்பவனைத் தடுப்பவனும், சரணமடைந்தவனைக் காப்பாற்றாமல் விடுகிறவனும், 'சண்டாளன்' என்று சொல்லப்பட்டவன். இவர்களின் அன்னம் அபோஜ்யமாம்.

स्मृतिरत्ने — अवलिप्तस्य मूर्खस्य दुष्टवृत्तस्य दुर्मतेः । अन्नमश्रद्दधानस्य यो भुङ्क्ते भ्रूणहा स वै इति ।। अपरार्के — विभवे चाग्निहीनस्य न चाश्नीयादनापदि । स्मार्ताग्नेः वैदिकस्याग्नेः परिग्रहमकुर्वतः । विष्णुं जामातरं मन्ये तस्य मन्युं न कारयेत् ।

अप्रजायां तु कन्यायां नाश्नीयात्तस्य वै गृहे ।। भुञ्जीत यदि मोहात्मा श्वशुरो नरकं व्रजेत् इति।

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** கர்மவமுடையவன், மூர்க்கன், கெட்ட நடத்தையுள்ளவன், துர்ப்புத்தியுள்ளவன், ச்ரத்தையில்லாதவன் இவரின் அன்னத்தைப் புஜிப்பவன் கர்ப்பஹத்யையைச் செய்தவன் எனப்படுகிறான். **அபரார்க்கத்தில்:-** விபவமிருந்தும், அக்னியில்லாமல், ஸ்மார்த்தாக்னி, அல்லது வைதிகாக்னியைப் பரிக்ரஹிக்காமல் இருப்பவனின் அன்னத்தை, ஆபத்தில்லாத காலத்தில் புஜிக்கக் கூடாது. ஜாமாதாவை (மாப்பிள்ளையை) விஷ்ணுவாய் எண்ணுகிறேன். அவனுக்குக் கோபத்தைச் செய்யக் கூடாது. தன் பெண், குழந்தையில்லாமல் இருந்தால், அந்த மாப்பிள்ளையின் வீட்டில் மாமனார் புஜிக்கக் கூடாது. அறியாதவனாய்ப் புஜித்தானாகில் மாமனார் நரகத்தை அடைவான்.

आपस्तम्बः — त्रयाणां वर्णानां क्षत्रियप्रभृतीनां समावृत्तेन न भोक्तव्यं, प्रकृत्या ब्राह्मणस्य भोक्तव्यम्, कारणादभोज्यं यत्राप्रायश्चित्तं कर्मासेवते प्रायश्चित्तवति चरितनिर्वेषस्य भोक्तव्यं सर्ववर्णानां स्वधर्मे वर्तमानानां भोक्तव्यं शूद्रवर्जमित्येके इति ।। अस्यार्थः – समावृत्तः क्षत्रियादीनां गृहे न भुञ्जीत। ब्राह्मणस्य त्वन्नं स्वभावेनैव भोक्तव्यम्। यत्र - यदा प्रायश्चित्तवत्यात्मनि चोदितं प्रायश्चित्तं मुक्त्वा कर्मान्तरमासेवते, तदैतस्मात् कारणादभोज्यम्। चरितनिर्वेषस्य - कृतप्रायश्चित्तस्य तु भोक्तव्यम्। एतन्महापातक-व्यतिरिक्तप्रायश्चित्तविषयम्। नास्यास्मिन् लोके प्रत्यापत्तिर्विद्यते कल्मषं तु निर्हण्यते इति स्मरणात्। शूद्रवर्जितानां सर्ववर्णानां अन्नं भोज्यमित्येके मन्यन्ते इति।

**ஆபஸ்தம்பர்:-** ஸமாவர்த்தனம் செய்த ப்ராம்ஹணன், க்ஷத்ரியன் முதலிய மூன்று வர்ணத்தாரின்

க்ருஹத்தில் புஜிக்கக் கூடாது. ப்ராம்ஹணனுடைய அன்னம் ஸ்பாவத்தாலேயே புஜிக்கத் தகுந்ததாகும். காரணமிருந்தால் அபோஜ்யம். எக்காலத்தில், தான் ப்ராயச்சித்திற்கு அர்ஹனுயிருக்க, அதைச் செய்யாமல் விட்டு, வேறு கர்மத்தைச் செய்கின்றானோ அப்பொழுது இக்காரணத்தால், அவனது அன்னம் அபோஜ்யம். அவன் ப்ராயச்சித்தம் செய்து கொண்டால் பிறகு அவனது அன்னம் போஜ்யம். இது மஹாபாதகம் தவிர மற்றப் பாபத்தின் விஷயம். (ஏனெனில்) 'மஹாபாதகிக்கு ப்ராயச்சித்தம் அனுஷ்டித்த பிறகும் இவ்வுலகில் சுத்தி இல்லை. பாபம் மட்டில் நசிக்கின்றது' என்றுள்ளது. 'சூத்ரன் தவிர, ஸ்வதர்மத்திலிருக்கும் எல்லா வர்ணத்தினருடையவும் அன்னம் புஜிக்கத் தகுந்தது' என்று சிலர் எண்ணுகின்றனர்.

स एव — सङ्घान्नमभोज्यं परिक्रुष्टं च सर्वेषां च शिल्पाजीवानां ये च शस्त्रमाजीवन्ति ये चाधिं भिषग्वार्धुषिको दीक्षितोऽक्रीतराजकोऽग्नीषोमसंस्थायामेव हुतायां वा वपायां दीक्षितस्य भोक्तव्यं यज्ञार्थे वा निर्दिष्टे शेषाद्भुञ्जीरन्निति हि ब्राह्मणं क्लीबो राज्ञां प्रैषकरोऽहविर्याजी चार्यविधिना च प्रव्रजितो यश्चाग्नी-नपास्यति यश्च सर्वान् वर्जयते सर्वान्नी च श्रोत्रियो निराकृतिर्वृषलीपतिर्मत्त उन्मत्तो बद्धोऽणिकः प्रत्युपविष्टो यश्च प्रत्युपवेशयते तावन्तं कालम् इति। अभिचारादौ अहविषा रुधिरादिना यो जुहोति, सोऽहविर्याजी। चारी - चारः। अविधिना प्रव्रजितः - शाक्यादिः यश्च सर्वान् भोजने वर्जयति, यश्च सर्वेषामन्नं भुङ्क्ते, तावप्यभोज्यान्नौ। निराकृतिः - निस्स्वाध्यायः। अणिकः - पुत्रात् श्रुतग्राही। प्रत्युपविष्टः - ऋणादिना कारणेन अधमर्णादिकं निरुध्य तत्पार्श्वे उपविष्टः। तस्य परिहारमकुर्वन् तेन सहासीनः प्रत्युपवेशयिता। एते मत्तादयः यावन्मदाद्यनुवृत्तिः तावन्तं कालमभोज्यान्नाः इत्यर्थः॥

ஆபஸ்தம்பரே:- கூட்டத்தின் அன்னம் அபோஜ்யம். பரிக்ருஷ்டமும் (சாப்பிட விரும்பியவர் வாருங்கள் என்று கூவி அழைத்துக் கொடுக்கப்படும் அன்னம்) அபோஜ்யம், சித்ரம் எழுதுவது முதலிய சில்பத்தால் ஜீவிப்பவரின் அன்னமும், ஆயுதத்தால் ஜீவிப்பவரின் அன்னமும், வீட்டில் பிறரை வஸிக்கச் செய்து அவரிடமிருந்து தனத்தை க்ரஹித்து ஜீவிப்பவரின் அன்னமும், வைத்யனின் அன்னமும், வட்டியால் பிழைப்பவனின் அன்னமும் அபோஜ்யமாம். தீக்ஷணீயேஷ்டி செய்த பிறகு ஸோமக்ரயணம் செய்வதற்கு முன் தீக்ஷிதனின் அன்னம் அபோஜ்யம். அக்னீஷோமீய பசுயாகம் ஆனபிறகுதான் புஜிக்கலாமென்று மற்றொரு பக்ஷம். அக்னீஷோமீய பசுவின் வபாஹோமம் செய்த பிறகு புஜிக்கலாமென்று மற்றொரு பக்ஷம். இது யாகத்திற்காக என்று பிரித்துவிட்டால், மீதியுள்ளதிலிருந்து புஜிக்கலாம் என்று வேதம் சொல்லுகிறது. நபும்ஸகன், அரசரின் வேலைக்காரன், அஹவிர்யாஜீ (மனுஷ்ய ரக்தம் முதலியதால் அபிசாராதிகளில் ஹோமம் செய்பவன்) சாரன் (வேவுகாரன்) சாக்யன் (விதியில்லாமல் ஸன்யாஸி யானவன்) முதலியவன், விதியில்லாமல் அக்னிகளை விட்டவன், எவன் ச்ரோத்ரியனாயினும் எல்லோரையும் வர்ஜிக்கின்றானோ, ஓரிடத்திலும் புஜிப்பதில்லையோ, அவன், எவன் ச்ரோத்ரியனாயினும் எல்லோருடைய அன்னத்தையும் புஜிக்கின்றானோ அவன், வேதாத்யயனம் இல்லாதவன், வ்ருஷளீபதி (நான்கு வர்ணத்திலும் விவாஹம் செய்து கொண்டவனுக்கு முதல் மூன்று வர்ண ஸ்த்ரீகளும் இறந்து, சூத்ரவர்ண ஸ்த்ரீ மட்டில் பிழைத்திருந்தால் அவன் வ்ருஷளீபதியாம்) இவர்களின் அன்னம் அபோஜ்யமாம். மத்யம் முதலியதால் மதித்தவன், ப்ராந்தசித்தன், விலங்கிடப்பட்டவன், புத்ரனிடமிருந்து சாஸ்த்ரத்தைக் கற்றவன், ப்ரத்யுபவிஷ்டன், (கடன்காரனை மறித்து அவன் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவன்) அவ்விதம் உட்காரச் செய்த கடன்

வாங்கியவன், இவர்களின் அன்னம் அபோஜ்யமாம். இந்த மத்தன் முதலியவர் மதம் முதலியது உள்ள காலம் வரையில் அபோஜ்யான்னர்கள். பிறகு அவர்களின் அன்னம் போஜ்யமாகும். இங்கு 'அணிகன்' என்ற பதத்திற்குக் கடன் கொடுத்தவன் என்று சிலர் பொருள் சொல்லுகின்றனர்.

स एव— चिकित्सकस्य मृगयोः शल्यकृन्तस्य पाशिनः । कुलटायाः षण्डकस्य च तेषामन्नमनाद्यमथाप्युदाहरन्ति - अन्नादे भ्रूणहा मार्ष्टि अनेना अभिशंसति । स्तेनः प्रमुक्तो राजनि याचन्ननृतसङ्करे इति ।। भ्रूणहा स्वीयं पापमन्नादे मार्ष्टि - लिम्पति । अनेनाः - निष्पापः मिथ्यावादिनि मार्ष्टि - याचन् असत्यप्रतिज्ञे मार्ष्टि इत्यर्थः ।

ஆபஸ்தம்பரே:- வைத்யன், வேடன், சஸ்த்ரத்தால் கட்டி முதலியதைச் சேதிப்பவன், வலையன், வ்யபிசாரிணீ, நபும்ஸகன் இவர்களின் அன்னம் அபோஜ்யமாகும். முன்னோர் இவ்விதம் சொல்லுகின்றனர். - ஆறு அங்கங்களுடன் கூடிய வேதத்தைக் கற்றவன் 'ப்ரூணன்' அவனைக் கொன்றவன் 'ப்ரூணஹா' அவன், தன் அன்னத்தைப் புஜித்தவனிடத்தில் தன் பாபத்தைச் சேர்த்து விடுகிறான். ஆகையால் அவனது அன்னம் அபோஜ்யமாம். பாபம் செய்யாதவனை எவன் உன்னால் பாபம் செய்யப்பட்டதென்று பொய்யாகச் சொல்லுகின்றானோ அவனிடத்தில் பாபம் செய்யாதவன் தன் பாபத்தைச் சேர்த்துவிடுகிறான். தண்டிக்கப்படாமல் விடப்பட்ட திருடன், அரசனிடத்தில் தன் பாபத்தைச் சேர்க்கிறான். கொடுப்பதாகச் சொல்லிப் பிறகு கொடாத, பொய் ப்ரதிக்ஞைக்காரனிடத்தில் யாசிப்பவன், தன் பாபத்தைச் சேர்க்கிறான்.

व्यासः — निहन्त्यन्नं मनः प्राणान् चक्षुः श्रोत्रे तथैव च । स्मृतिं मेधां धृतिं शुक्लं पारक्यं योऽन्नमश्नुते ।। परपाकान्नपुष्टस्य सततं

गृहमेधिनः । इष्टं दत्तं तपोऽधीतं यस्यान्नं तस्य तद्भवेत् ।। यस्यान्नेन तु भुक्तेन भार्यां समधिगच्छति । यस्यान्नं तस्य ते पुत्राः अन्नाद्रेतः प्रजायते इति ।

**வ்யாஸர்:-** எவன் பரான்னத்தைப் புஜிக்கின்றானோ, அவனது அன்னம், மனம், ப்ராணன்கள், கண் - காதுகள், ஸ்ம்ருதி, மேதை, த்ருதி, சுக்லம் என்ற இவைகளைப் பரான்னம் கொல்லுகின்றது. எப்பொழுதும் பரான்னத்தால் புஷ்டனான க்ருஹஸ்தனின், யாகம், தானம், தபஸ், அத்யயனம் என்ற இவையெல்லாம் எவனின் அன்னத்தைப் புஜித்தானோ, அவனுடையதாய் ஆகிறது. எவனின் அன்னத்தைப் புஜித்து அதனுடன் பார்யையைச் சேருகிறானோ, அந்தப் புத்ரர்கள் அந்த அன்னஸ்வாமியின் உடையவர்களாகின்றனர். அன்னத்தினின்றும் ரேதஸ் உண்டாகின்றது.

यमः —— किल्बिषं हि मनुष्याणा मन्नमाश्रित्य तिष्ठति । यो हि यस्यान्नमश्नाति स तस्याश्नाति किल्बिषम् ।। स्वपाके वर्तमाने यः परपाकं निषेवते । स श्वत्वं सूकरत्वं च गर्दभत्वं च गच्छति ।। परपाकं परगृहे नाद्याद्विप्रो विचक्षणः । गृहस्थपतनं ह्येतत् परपाकोप जीवनम् इति । मनु :- उपासते ये गृहस्थाः परपाकमबुद्धयः । तेन ते प्रेत्य पशुतां व्रजन्त्यन्नादि दायिनाम् इति ।

**யமன்:-** மனுஷ்யரின் பாபம் அன்னத்தை அண்டி இருக்கிறது. எவன் எவனின் அன்னத்தைப் புஜிக்கின்றானோ, அவன் அவனின் பாபத்தையே புஜிக்கின்றான். எவன், தனது அன்னமிருக்கும் பொழுது, பரான்னத்தை ஸேவிக்கின்றானோ, அவன், நாய், பன்றி, கழுதை இவைகளின் தன்மையை அடைகின்றான். அறிந்த ப்ராம்ஹணன், பரக்ருஹத்தில் பரான்னத்தைப் புஜிக்கக் கூடாது. பரான்னத்தால் பிழைப்பதென்பது, க்ருஹஸ்தனுக்குப் பாதித்யஹேதுவாகும். மனு:-

புத்தியற்ற எந்த க்ருஹஸ்தர்கள் பரான்னத்தையே உபாஸிக்கின்றரோ, அவர், மறுஜன்மத்தில் அன்னம் முதலியதைக் கொடுத்தவரிடம் பசுவாக சென்றடைகின்றனர்.

जमदग्निः – पितृदेवक्रियां कृत्वा परपाकरतिस्तु यः । दातुः कर्मफलं याति भोक्ता भुञ्जीत किल्बिषम् इति । यमः – परपाकं सदा नाद्याद्धुत्वाप्यग्निं यथाविधि । न हि हित्वा स्वकार्याणि परकार्यरतो भवेत् । परान्नेनोदरस्थेन यः करोति शुभाशुभम् । अन्नदस्य त्रयो भागाः कर्ता भागेन लिप्यते ।। भूमिं गां च सुवर्णं च रत्नानि विविधानि च । सर्वतः परिगृह्णीयात् भोजनं तु विवर्जयेत् इति ।

ஜமதக்னி:- எவன், பித்ருக்களுடையவும், தேவர்களுடையவும், க்ரியையை முடித்து, பரபாகத்தைப் புஜிக்கின்றானோ, அவனது கர்மபலம் அன்னதாதாவைச் சேருகிறது. புஜிப்பவன் பாபத்தைப் புஜிக்கிறான். யமன்:- விதிப்படி அக்னியில் ஹோமம் செய்து விட்டு, எப்பொழுதும் பரான்னத்தைப் புஜிக்கக் கூடாது. தன் கார்யங்களை விட்டு, பிறர் கார்யத்தில் முயல்பவனாய் இருக்கக் கூடாதல்லவா? வயிற்றிலிருக்கும் பரான்னத்துடன் எவன் சுபாசுபகார்யங்களைச் செய்கின்றானோ அவனது, கர்மபலன்களின் மூன்று பாகங்கள் அன்ன தாதாவினுடையதாய் ஆகின்றன. ஒரு பாகம் கர்த்தாவைச் சேருகிறது. பூமி, பசு, ஸுவர்ணம், பலவிதமான ரத்னங்கள் இவைகளை எல்லோரிடமிருந்தும் வாங்கலாம். போஜனத்தை மட்டும் எல்லோரிடமும் வர்ஜிக்க வேண்டும்.

उशनाः—परान्नं परवस्त्रं च पराम्बु परयोषितः । परवेश्मनिवासश्च हरन्त्येतानि सम्पदम् इति ।। रत्नावल्याम्—सर्वं तु तरितुं शक्य मन्नलेपो हि दुस्तरः । दुष्कृतं हि मनुष्याणामन्नमाश्रित्य तिष्ठति इति । लिखितपराशरौ — परपाकनिवृत्तस्य परपाकरतस्य

च। अपचस्य च भुक्त्वाऽन्नं द्विजश्चान्द्रायणं चरेत् ।। गृहीत्वाग्निं समारोप्य पञ्च यज्ञान्न निर्विपेत् । परपाकनिवृत्तोऽसौ मुनिभिः परिकीर्तितः ।। पञ्चयज्ञान् स्वयं कृत्वा परान्नेनोपजीवति । सततं प्रातरुत्थाय परपाकरतस्तु सः ।। गृहस्थधर्मा यो विप्रो ददातिपरिवर्जितः । ऋषिभिर्धर्मतत्वज्ञैरपचः परिकीर्तितः ।। अपचाय च यद्दानं दातुश्चास्य कुतः फलम् । दाता प्रतिग्रहीता च द्वौ तौ निरयगामिनौ ।। परिवित्तेस्तु यच्चान्नं परिवेत्रन्नमेव च । कुण्डान्नं गोलकान्नं च देवलान्नं तथैव च ।। पुरोहितस्य यच्चान्नं भुक्त्वा चान्द्रायणं चरेत् इति।

உசநஸ்:- பிறனின் அன்னம், பிறனின் வஸ்த்ரம், பிறனின் ஜலம், பிறனின் ஸ்த்ரீ, பிறனின் வீட்டில் வாஸம் இவை ஸம்பத்தை அபஹரிக்கின்றன. ரத்னாவளியில்:- எல்லாப் பாபத்தையும் தாண்ட முடியும். அன்னத்தாலுண்டாகும் பாபம் தாண்டமுடியாது. மனிதரின் பாபம் அன்னத்தை அண்டி இருக்கின்றது. லிகிதரும், பராசரரும்:- பரபாகநிவ்ருத்தன், பரபாகரதன், அபசன் இவரின் அன்னத்தை ப்ராம்ஹணன் புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். அக்னியை க்ரஹித்து, ஸமாரோபணம் செய்து, பஞ்சமஹாயக்ஞங்களைச் செய்யாமலிருப்பவன் 'பரபாகநிவ்ருத்தன்' என்று முனிகளால் சொல்லப்பட்டுள்ளான். எவன் காலையிலெழுந்து, பஞ்சயக்ஞங்களைத் தான் செய்து விட்டு, எப்பொழுதும் பரான்னத்தினாலேயே பிழைக்கின்றானோ அவன் 'பரபாகரதன்' எனப்படுகிறான். க்ருஹஸ்த தர்மமுள்ள எந்த ப்ராம்ஹணன் தானம் செய்யாமல் இருக்கின்றானோ அவன், தர்மதத்வத்தை அறிந்த முனிகளால் 'அபசன்' எனப்படுகிறான். அபசனுக்குக் கொடுக்கப்படும் தானமெதுவோ அதற்குப் பலம் ஏது? கொடுத்தவன் வாங்கியவன் என்ற அவ்விருவரும் நரகத்தை அடைகின்றனர். பரிவித்தி, பரிவேத்தா,

குண்டன், கோளகன், தேவலன், புரோஹிதன் இவரின் அன்னத்தைப் புஜித்தால் ப்ராம்ஹணன் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

अभ्यासाभिप्रायेणेदं चान्द्रायणव्रतम् । अनभ्यासे त्वीदृशान्न भोजने भरद्वाजः — निराचारस्य विप्रस्य निषिद्धाचरणस्य च । अन्नं भुक्त्वा द्विजः कुर्याद्दिनमेकम भोजनम् इति ॥ पराशरः – सदाचारस्य विप्रस्य तथा वेदान्तवेदिनः । भुक्त्वाऽन्नं मुच्यते पापा दहोरात्रान्तरान्नरः इति ॥ शातातपः — यो हि हित्वा विवाहाग्निं गृहस्थ इति मन्यते । अन्नं तस्य न भोक्तव्यं वृथापाको हि स स्मृतः ॥ वृथापाकस्य भुक्त्वाऽन्नं प्रायश्चित्तं चरेद् द्विजः । प्राणायामांस्त्रिरभ्यस्य घृतं प्राश्य विशुध्यति इति ।

இங்கு சாந்த்ராயணம் சொல்லியது அப்யாஸம் (தொடர்ந்து செய்வது) செய்த விஷயத்தில் அபிப்ராயமுடையது. அப்யாஸமில்லாமல் இவ்விதமான அன்னத்தைப் புஜித்த விஷயத்தில், பரத்வாஜர்:- ஆசாரமற்றவனும், நிஷித்த கர்மத்தை அனுஷ்டிப்பவனுமான ப்ராம்ஹணனுடைய அன்னத்தைப் புஜித்தால் ப்ராம்ஹணன் ஒருநாள் முழுவதும் உபவாஸம் செய்ய வேண்டும். பராசரர்:- நல்ல ஆசாரமுடையவனும், வேதாந்தமறிந்தவனுமான ப்ராம்ஹணனின் அன்னத்தைப் புஜித்தால், மனிதனின் ஒரு நாள் முழுவதும் செய்த பாபத்தினின்றும் விடுபடுகிறான். சாதாதபர்:- எவன் விவாஹாக்னியை விட்டு, தன்னை க்ருஹஸ்தன் என்று எண்ணுகின்றானோ அவனது அன்னத்தைப் புஜிக்கக் கூடாது. அவன் 'வ்ருதாபாகன்' எனச் சொல்லப்படுகிறான். வ்ருதாபாகனின் அன்னத்தை ப்ராம்ஹணன் புஜித்தால் ப்ராயச்சித்தம் அனுஷ்டிக்க வேண்டும். மூன்று முறை ப்ராணாயாமம் செய்து, நெய்யைப் பருகினால் சுத்தனாகிறான்.

अपरार्के— अभोज्यं ब्राह्मणस्यान्नं वृषलेन निमन्त्रितम्। तथैव वृषलस्यान्नं ब्राह्मणेन निमन्त्रितम् इति। गौतमः – ब्राह्मणान्नं ददच्छूद्रः शूद्रान्नं ब्राह्मणो ददत्। अभोज्यं तु तयोरन्नं भुक्त्वा चान्द्रायणं चरेत् इति।

அபரார்க்கத்தில்:- சூத்ரனால் அழைத்துக் கொடுக்கப்பட்ட ப்ராம்ஹணான்னமும், ப்ராம்ஹணனால் அழைத்துக் கொடுக்கப்பட்ட சூத்ரனுடைய அன்னமும் அபோஜ்யமாகும். கௌதமர்:- ப்ராம்ஹணான்னத்தைக் கொடுக்கும் சூத்ரன், சூத்ரான்னத்தைக் கொடுக்கும் ப்ராம்ஹணன் என்ற இவ்விருவரின் அன்னமும் அபோஜ்யமேயாம். புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

पराशरः — आमं वा यदि वा पक्वं शूद्रान्नमुपभोजयेत्। किल्बिषं भजते भोक्तो यश्च विप्रः पुरोहितः ।। आमं शूद्रस्य विप्रार्थं यस्तु पाचयते द्विजः। त्रयस्ते नरकं यान्ति दाता भोक्ता च पाचकः ।। गुर्वर्थमतिथीनां च भृत्यानां च विशेषतः। प्रतिगृह्य तु दातव्यं न भुञ्जीत स्वयं ततः ।। अकृत्वैव निवृत्तिं यः शूद्रान्नान् म्रियते द्विजः। आहिताग्निर्विशेषेण स शूद्रगतिभाग्भवेत्। शूद्रान्नरसपुष्टस्य ह्यधीयानस्य नित्यशः। जपतो जुह्वतो वाऽपि गतिरूर्ध्वा न विद्यते ।। शूद्रान्नं शूद्रसंपर्कः शूद्रेण तु सहासनम्। शूद्रात् ज्ञानागमश्चापि ज्वलन्तमपि पातयेत् ।। मृतसूतकपुष्टाङ्गं द्विजं शूद्रान्नभोजिनम्। अहं तं न विजानामि कां कां योनिं गमिष्यति ।। गृध्रो द्वादशजन्मानि दश जन्मानि सूकरः ।। श्वयोनौ सप्त जन्म स्यादित्येवं मनुरब्रवीत् इति ।।

பராசரர்:- ஆமமாயினும், பக்வான்னமாயினும், சூத்ரான்னத்தைப் புஜிப்பித்தானாகில், புஜிப்பவன் பாபத்தைப் புஜிக்கின்றான். கொடுத்த புரோஹிதனும் பாபத்தைப் புஜிக்கின்றான். எந்த ப்ராம்ஹணன் சூத்ரனின்

ஆமத்தை ப்ராம்ஹணனுக்காகச் சமைக்கின்றானோ அவனும், அன்னத்தைப் புஜித்தவனும், ஆமத்தைக் கொடுத்தவனும், அம்மூவரும் நரகத்தை அடைகின்றனர். குருவிற்காகவும், அதிதிகளுக்காவும், ப்ருத்யர்களுக்காகவும் ப்ரதிக்ரஹித்து அவர்களுக்குக் கொடுக்கலாம். அதிலிருந்து தான் புஜிக்கக் கூடாது. எந்த ப்ராம்ஹணன் சூத்ரான்னத்தினின்றும் நிவ்ருத்தியைச் செய்து கொள்ளாமலே இறக்கின்றானோ அவன் ஆஹிதாக்னி ஆனாலும் சூத்ரனின் கதியையடைவான். சூத்ரான்ன ரஸத்தினால் வளர்கின்ற ப்ராம்ஹணன் எப்பொழுதும் அத்யயனம். ஜபம், ஹோமம் இவைகளைச் செய்பவனாயினும் அவனுக்குச் சிறந்த கதி இல்லை. சூத்ரனின் அன்னம், சூத்ரனுடன் ஸம்பர்க்கம், சூத்ரனோடு சேர்ந்து உட்கார்தல், சூத்ரனிடமிருந்து அறிவை அடைதல் இவை (தவத்தினால்) ஜ்வலிப்பவனாயிருப்பவனையும் கீழே தள்ளிவிடும், ம்ருதாசௌசான்னம், ஜனனாசௌசான்னம், சூத்ரான்னம் இவைகளைப் புஜித்துப் பருத்துள்ள ப்ராம்ஹணன் எந்தெந்தப் பிறவியை அடைவானோ அதை நான் அறியவில்லை. அவன் கழுகாய்ப் பன்னிரண்டு பிறவிகளையும், பன்றியாய்ப் பத்துப் பிறவிகளையும், நாயாய் ஏழு பிறவிகளையும் அடைவான் என்று மனு சொன்னார்.

वसिष्ठः— शूद्रान्नेन तु भुक्तेन जठरस्थेन यो मृतः । स वै खरत्व मुष्ट्रत्वं शूद्रत्वं चैव गच्छति इति । स्मृतिभास्करे — आमं शूद्रस्य पक्वान्नं पक्वमुच्छिष्ट भोजनम् । तस्मादामं च पक्वं च दूरतः परिवर्जयेत् । षण्मासान् यो द्विजो भुङ्क्ते शूद्रस्यान्नं विगर्हितम् । स तु जीवन् भवेच्छूद्रो मृतः श्वा चाभिजायते ॥ सूतके मृतके भुक्त्वा गृहीते शशिभास्करे । जलादौ हस्ततो भुक्त्वा न भूयः पुरुषो भवेत् इति ।

வஸிஷ்டர்:- எவன் சூத்ரான்னத்தைப் புஜித்து அது வயிற்றிலிருக்க அத்துடன் இறந்தானோ அவன், கழுதைத் தன்மையையும், ஒட்டகத் தன்மையையும், சூத்ரத்

தன்மையையும் அடைகின்றான். ஸ்ம்ருதிபாஸ்கரத்தில்:- சூத்ரனின் ஆமமான வஸ்து பக்வான்னமாகும். அவனின் பக்வான்னம் உச்சிஷ்ட போஜனமாகும். ஆகையால் சூத்ரனின் ஆமத்தையும், பக்வத்தையும் தூரத்தில் வர்ஜிக்க வேண்டும். எந்த ப்ராம்ஹணன் ஆறு மாதம் முழுவதும் நிஷித்தமான சூத்ரான்னத்தைப் புஜிக்கின்றானோ அவன் பிழைத்திருக்கும்போதே சூத்ரனாவான். இறந்த பிறகு நாயாய்ப் பிறப்பான். ஸூதகத்திலும், ம்ருதகத்திலும், சந்த்ர ஸூர்ய க்ரஹணத்திலும், ஜலம் முதலியதிலும், கையில் வைத்துக் கொண்டும் புஜித்தால் மறுபடி புருஷனாய்ப் பிறக்க மாட்டான்.

शूद्राद्यन्नभोजने प्रायश्चित्तमाह पराशरः — शूद्रान्नं सूतकस्यान्नं अभोज्यस्यान्नमेव च। शङ्कितं प्रतिषिद्धान्नं पूर्वोच्छिष्टं तथैव च ।। यदि भुक्तं तु विप्रेण अज्ञानादापदाऽपि वा । ज्ञात्वा समाचरेत् कृच्छ्रं ब्रह्मकूर्चं तु पावनम् इति ।। अज्ञाने आपदि च ब्रह्मकूर्चम् । ज्ञात्वा भोजने प्राजापत्यमित्यर्थः । एतच्च ब्रह्मकूर्चमविद्वद्विषयम् ।

சூத்ரன் முதலியவர்களின் அன்னத்தைப் புஜித்தால் ப்ராயச்சித்தம் சொல்லுகிறார். பராசரர்:- சூத்ரனின் அன்னம், ஸூதகியின் அன்னம், அபோஜ்யனின் அன்னம், ஸந்தேஹமுள்ள அன்னம், விலக்கப்பட்ட அன்னம், முன் உச்சிஷ்டமான அன்னம் இவைகளை ப்ராம்ஹணன் அறியாமையாலாவது, ஆபத்தினாலாவது புஜித்தானாகில், அறிந்து புஜித்தால் க்ருச்ரமும், ப்ரம்ஹகூர்ச்சமும் சுத்திகரமாம். அக்ஞானத்திலும், ஆபத்திலும் ப்ரம்ஹகூர்ச்சம். அறிந்து புஜித்தால் ப்ராஜாபத்யம் என்பது பொருள். இந்த ப்ரம்ஹகூர்ச்சம் அறியாமல் புஜித்தவனைப் பற்றியது.

विद्वांसं प्रत्याह स एव — आपत्काले तु विप्रेण भुक्तं शूद्रगृहे यदि । मनस्तापेन शुध्येत द्रुपदां वा शतं जपेत् ।। शुष्कान्नं गोरसं स्नेहं शूद्रगेहाद्यदागतम् । पक्वं विप्रगृहे भक्तं भोज्यं तन्मनुरब्रवीत् ।। शुष्कान्नं

- व्रीहितण्डुलादि ।। स एव — घृतं क्षीरं तथा तैलं गुडं स्नेहेन पाचितम् । गत्वा नदीतटे विप्रो भुञ्जीयाच्छूद्रभोजनम् इति ।। एतच्च मार्गश्रान्त्यादौ पूर्ववर्णासम्भवे वेदितव्यमिति माधवीये ।।

அறிந்து புஜித்தவனைப் பற்றிச் சொல்லுகிறார், பராசரரே:- ப்ராம்ஹணன் ஆபத்காலத்தில் சூத்ரனின் க்ருஹத்தில் புஜித்தாலுகில் பச்சாத்தாபத்தால் சுத்தனுவான். அல்லது 'த்ருபதா' என்கிற ருக்கை நூறு முறை ஜபிக்க வேண்டும். சுஷ்கமான அன்னம், மோர், நெய் முதலிய இவை சூத்ரனின் க்ருஹத்திலிருந்து வந்து ப்ராம்ஹணனின் க்ருஹத்தில் பக்வமானுல் அது புஜிக்கத் தகுந்தது என்று மனு சொன்னுர். சுஷ்கான்னம் - நெல், அரிசி முதலியது. பராசரரே:- நெய், பால், தைலம், வெல்லம், நெய் முதலியதோடு பக்வமானது, இது சூத்ரனுடையதானுலும் ப்ராம்ஹணன் நதியின் கரையில் சென்று அங்கே புஜிக்கலாம். இது வழியில் ச்ரமம் முதலியது நேர்ந்து முந்திய மூன்று வர்ணத்தார்கள் இல்லாவிடில் என்று அறியத்தகுந்தது என்று மாதவீயத்தில் உள்ளது.

चतुर्विंशतिमते— आरनालं तथा क्षीरं कान्दुकं दधिसक्तवः । स्नेहपक्व मपक्वं च शूद्रस्यापि न दुष्यति इति ।। अङ्गिराः — स्वपात्रे यच्च विन्यस्तं द्रव्यं तच्छुचि नित्यशः । पात्रान्तरगतं ग्राह्यं शूद्राद्यद्गृहमागतम् ।। शूद्रस्य वेश्म विप्रेण क्षीरं वा यदि वा दधि । निवृत्तेन न भोक्तव्य मित्युक्तं स्मृतिवेदिभिः इति ।। निवृत्तेन - शूद्रान्न निवृत्तेनेत्यर्थः ।। मनुः - गोरसं चैव सक्तूंश्च तैलं पिण्याकमेव च । अपूपान् भक्षयेच्छूद्राद्यच्चान्यत् पयसा कृतम् इति ।

சதுர்விம்சதிமதத்தில்:- கஞ்சி, பால், காந்துகம், தயிர்மாவு, எண்ணெயில் பக்வமாகியது, பக்வமாகாதது இவை சூத்ரனுடையதானுலும் தோஷமுடையவையல்ல. அங்கிரஸ்:- தன்னுடைய பாத்ரத்தில் எந்த த்ரவ்யம்

போடப்பட்டதோ அது எப்பொழுதும் சுத்தமாகும். சூத்ரனுல் வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட த்ரவ்யத்தை வேறு பாத்ரத்தில் வாங்கிக் கொள்ள வேண்டும். சூத்ரான்னத்தை நிவர்த்தித்த ப்ராம்ஹணன் சூத்ரனின் வீட்டையடைந்து பால் அல்லது தயிர் இவைகளேயும் புஜிக்கக் கூடாது என்று ஸ்ம்ருதி அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். மனு- மோர், மாவு, தைலம், பிண்ணுக்கு, அப்பம், பாலினுல் செய்யப்பட்ட வஸ்து இவைகளேச் சூத்ரனிடமிருந்து வாங்கிப் புஜிக்கலாம்.

हारीतः —— कण्डूपक्कं स्नेहपक्कं पायसं दधिसक्तवः । एतानि शूद्रान्नभुजो भोज्यानि मनुरब्रवीत् इति ।। अपूपादिपचनार्थं परिमण्डलतया कृतमयोमयं पात्रं कण्डूः । तत्र पक्कं कण्डूपक्कमित्यर्थः ।। शङ्खः ——गृहाश्वरथभूम्यर्थे गवार्थे तु विशेषतः । श्रोत्रियेण तु भोक्तव्यं शूद्राणां तु यमोऽब्रवीत् इति ।। शातातपः – तैलं घृतं दधि क्षीरं तथैवेक्षुरसं गुडम् । शूद्रभाण्डस्थितं तक्रं तथा मधु न दुष्यति इति ।। सङ्ग्रहे – हैयङ्गवीनं गोक्षीरं पिण्याकं दधिसक्तवः । स्नेहपक्कं च तक्रं च शूद्रादपि न दुष्यति इति ।

ஹாரீதர்:- கண்டூவில் பக்வமானது, எண்ணெயில் பக்வமானது, பாயஸம், தயிர்மாவு இவைகளே, சூத்ரான்னத்தைப் புஜிக்கும் ப்ராம்ஹணன் புஜிக்கலாம் என்று சொன்னுர் மனு. அபம் முதலியதைப் பாகம் செய்வதற்கு வர்துளமாய்ச் செய்யப்பட்ட இரும்புப் பாத்ரம் கண்டூ (கந்து) எனப்படும். அதில் பக்வமானது கண்டூபக்வம் எனப்பொருள். சங்கர்:- வீடு, குதிரை, ரதம், பூமி இவைகளுக்காகவும், விசேஷமாய்ப் பசுவிற்காகவும், ச்ரோத்ரியன், சூத்ரர்களின் த்ரவ்யங்களேப் புஜிக்கலாம் என்று யமன் சொன்னுர். சாதாதபர்:- எண்ணெய், நெய், தயிர், பால், கரும்புச்சாறு, வெல்லம், மோர், தேன் இவை சூத்ரனின் பாண்டத்தில் இருந்தாலும் தோஷமுள்ளதல்ல. ஸங்க்ரஹத்தில்:- நெய், பசுவின், பால், பிண்ணுக்கு, தயிர்

மாவு, எண்ணெயில் பக்வமானது, மோர் இவை சூத்ரனிடமிருந்து வாங்கப்பட்டாலும் தோஷமுள்ளதல்ல.

घृतादिभोजने हेयोपादेयौ शूद्रौ विविनक्ति पराशरः - मद्यमांसरतं नित्यं नीचकर्मप्रवर्तकम्। तं शूद्रं वर्जयेद्विप्रः श्वपाकमिव दूरतः ॥ द्विजशुश्रूषणरतान् मद्यमांसविवर्जितान्। स्वकर्मनिरतान्नित्यं तान् शूद्रान् न त्यजेद्द्विजः इति ॥ एतत् सर्वमापद्विषयम् ॥ तथा च मनुः—आममेवाददीतास्मादवृत्तावैकरात्रिकम् ॥ जीवितात्ययमापन्नो योऽन्नमत्ति यतस्ततः। लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा इति।

நெய் முதலியதைப் புஜிப்பதில் வர்ஜிக்க வேண்டியவனும், ஸ்வீகரிக்கத் தகுந்தவனுமாகிய சூத்ரர்களைப் பிரித்துச் சொல்லுகிறூர். பராசரர்:- எப்பொழுதும் மத்யம், மாம்ஸம் இவைகளில் பற்றுள்ளவனும், தாழ்ந்த தொழில் செய்பவனுமான சூத்ரனை, ச்வபாகனைப் போல் தூரத்தில் ப்ராம்ஹணன் விலக்க வேண்டும். ப்ராம்ஹணசுச்ரூஷையில் பற்றுள்ளவரும், மத்யமாம்ஸங்களை வர்ஜித்தவரும், தம் கர்மங்களில் பற்றுள்ளவருமான சூத்ரர்களை ப்ராம்ஹணன் வர்ஜிக்க வேண்டியதில்லை. இது முழுவதும் ஆபத் விஷயமாம். அவ்விதமே, மனு:- வ்ருத்தியில்லாவிடில் ஒரு நாளைக்குப் போதுமான அபக்வமான வஸ்துவை மட்டில் சூத்ரனிடமிருந்து க்ரஹிக்கலாம். உயிரின் ஆபத்தை அடைந்தவனான ப்ராம்ஹணன் எவனெவனிட மிருந்தாவது அன்னத்தைப் புஜித்தாலும், அவன் தாமரை இலை ஜலத்தினால் போல், பாபத்தினால் பற்றப்படுவதில்லை.

याज्ञवल्क्यः – शूद्रेषु दासगोपालकुलमित्रार्धसीरिणः। भोज्यान्ना नापितश्चैव यश्चात्मानं निवेदयेत् इति ॥ देवलः —स्वदासो नापितो गोपः कुम्भकारः कृषीवलः। ब्राह्मणेनापि भोज्यान्नाः पञ्चैते शूद्रयोनयः इति।

யாக்ஞவல்க்யர்:- சூத்ரர்களுள் தாஸர், கோபாலன், குலமித்ரன், அர்த்தஸீரீ, நாபிதன், ஆத்மநிவேதகன் (தன்னைக் கொடுத்தவன்) இவர்களின் அன்னத்தைப் புஜிக்கலாம். தாஸன் - கர்ப்பதாஸன். கோபாலன் - மாடுகளைக் காப்பாற்றி ஜீவிப்பவன். குலமித்ரன் - பித்ருபிதாமஹாதிக்ரமமாய் வந்தவன். அர்த்தஸீரீ - க்ருஷியில் பாகத்தை க்ரஹித்து க்ருஷி செய்பவன். நாபிதன் - க்ருஹ வ்யாபாரங்களைச் செய்பவன். தேவலர்:- தனது தாஸன் (அடிமை), நாபிதன், கோபாலன், குயவன், க்ருஷி செய்பவன் இவ்வைந்துபேரும் சூத்ரராலுைம் அவரின் அன்னத்தை ப்ராம்ஹணன் புஜிக்கலாம்.

पराशरः—दासनापितगोपालकुलमित्रार्धसीरिणः । एते शूद्रेषु भोज्यान्नाः यश्चात्मानं निवेदयेत् ।। शूद्र कन्यासमुत्पन्नो ब्राह्मणेन तु संस्कृतः । स संस्काराद्भवेद् दासो ह्यसंस्कारात्तु नापितः । क्षत्रियाच्छूद्रकन्यायां सूतो जायेत नामतः । स गोपाल इति ज्ञेयो भोज्यो विप्रैर्न संशयः ।। वैश्यकन्या समुद्भूतो ब्राह्मणेन तु संस्कृतः । स ह्यर्धसीरी विज्ञेयो भोज्यो विप्रैर्न संशयः इति ।। एतानि याज्ञवल्क्यादिवचनानि युगान्तरविषयाणि । शूद्रेषु दासगोपालकुलमित्रार्धसीरिणाम् । भोज्यान्नता कलौ नास्ति तीर्थसेवा च दूरतः इति निषेधस्मरणात् ।

பராசரர்:- தாஸன், நாபிதன், கோபாலன், குலமித்ரன், அர்த்தஸீரீ, தன்னை ஒப்புவித்தவன் இவர்கள் சூத்ரர்களுள் போஜ்யான்னர்களாம். சூத்ர கன்னிகையை விவாஹம் செய்து கொண்டு அவளிடத்தில் ப்ராம்ஹணனால் உண்டாக்கப்பட்டவனும் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டவனுமாய் உள்ளவன் 'தாஸன்' எனப்படுவான். ஸம்ஸ்காரம் மட்டில் செய்யப்படாதவன் நாபிதன் எனப்படுவான். மணக்கப்பட்ட சூத்ர கன்னிகையிடத்தில் க்ஷத்ரியனிடமிருந்து பிறந்தவன் ஸூதன் எனப்படுவான். அவனே கோபாலன் என்று

அறியப்பட வேண்டும். இவன் ப்ராம்ஹணர்களால் போஜ்யான்னனே. ஸம்சயமில்லை. மணக்கப்பட்ட வைச்ய கன்னிகையிடத்தில் ப்ராம்ஹணனால் உண்டாகியவனும் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டவனும் எவனோ அவன் அர்த்தஸீரீ எனப்படுவான். அவன் ப்ராம்ஹணர்களால் போஜ்யான்னனே, ஸம்சயமில்லை. இந்த யாக்ஞவல்க்யாதி வசனங்கள் மற்ற யுகங்களைப் பற்றியதாம். "சூத்ரர்களுள் தாஸன், கோபாலன், குலமித்ரன், அர்த்தஸிரீ இவர்களுக்குப் போஜ்யான்னநிலை கலியில் கிடையாது. தூரத்தில் தீர்த்தஸேவையும் கூடாது" என்று நிஷேத ஸ்ம்ருதி உள்ளது.

अभोज्यानां नटादीनां जलादौ पीते प्रायश्चित्तमाह पराशरः— भाण्डस्थितमभोज्येषु जलं दधि घृतं पयः । अकामतस्तु यो भुंक्ते प्रायश्चित्तं कथं भवेत् ।। ब्राह्मणः क्षत्रियो वैश्यः शूद्रो वा उपसर्पति । ब्रह्मकूर्चोपवासेन याज्यवर्णस्य निष्कृतिः ।। शूद्राणां नोपवासः स्याच्छूद्रो दानेन शुध्यति ।। भाण्डस्थमन्त्यजानां तु जलं दधि पयः पिबेत् । ब्रह्मकूर्चोपवासेन द्विजातीनां तु निष्कृतिः ।। चण्डालघटसंस्थं तु यत्तोयं पिबति द्विजः । तत्क्षणात् क्षिपते यस्तु प्राजापत्यं समाचरेत् ।। यदि न क्षिप्यते तोयं शरीरे यस्य जीर्यते । प्राजापत्यं न दातव्यं कृच्छ्रं सान्तपनं चरेत् इति ।

அபோஜ்யான்னனர்களான நடன் முதலியவர்களின் ஜலம் முதலியதைப் பானம் செய்தால் ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார், பராசரர்:- அபோஜ்யான்னர்களின் பாண்டத்திலுள்ள ஜலம், தயிர், நெய், பால் இவைகளை அறியாமல் எவன் புஜிக்கின்றானோ அவனுக்கு ப்ராயச்சித்தம் எப்படி? ப்ராம்ஹணன், க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரனாவது கெட்டால், முதல் மூன்று வர்ணத்தாருக்கும் ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்யத்தாலும், உபவாஸத்தாலும் சுத்தி. சூத்ரர்களுக்கு உபவாஸமில்லை. சூத்ரன் தானத்தால் சுத்தனாகிறான். அந்த்யஜர்களுடைய

பாண்டத்திலுள்ள ஜலம், தயிர், பால் இவைகளைப் பருகினால் மூன்று வர்ணத்தாருக்கும் ப்ரம்ஹகூர்ச்ச பஞ்சகவ்யம், உபவாஸம் இவைகளால் ப்ராயச்சித்தம். சண்டாளனின் குடத்திலுள்ள ஜலத்தை ப்ராம்ஹணன் பருகினால் உடனே வெளியாக்கி விட்டால் அவன் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். வெளியாக்காமல் அந்த ஜலம் எவன் சரீரத்தில் ஜீர்ணமாகிறதோ அவனுக்கு ப்ராஜாபத்யத்தைச் சொல்லக் கூடாது. அவன் ஸாந்த்பன க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

श्वसृगालादिमरणोपहतकूपादिजलपाने वर्णविशेषेण प्रायश्चित्तमाह स एव— कूपे च पतितं दृष्ट्वा श्वसृगालादि मर्कटम्। अस्थिचर्मादि पतितं पीत्वाऽमेध्या अपो द्विजः ।। नारं तु कुणवं काकं विड्वराहं खरोष्ट्रकम्। गवयं सौप्रतीकं च मायूरं खाड्गकं तथा ।। वैयाघ्रमार्क्षं सैंहं वा कूपे यदि निमज्जति। तटाकस्याथ दुष्टस्य पीतं स्यादुदकं यदि ।। प्रायश्चित्तं भवेत् पुंसः क्रमेणैतेन सर्वशः । विप्रः शुद्ध्येत्त्रिरात्रेण क्षत्रियस्तु दिनद्वयम्। एकाहेन तु वैश्यस्तु शूद्रो नक्तेन शुध्यति। चण्डालखातवापीषु पीत्वा सलिलमग्रजः ।। अज्ञानाच्चैक- भक्तेन त्वहोरात्रेण शुद्ध्यति। चण्डालभाण्डसंस्पृष्टं पीत्वा कूपगतं जलम् ।। गोमूत्रयावकाहारस्त्रिरात्राच्छुद्धिमाप्नुयात् इति । महातटाकादिषु चण्डालादिसम्बन्धे न कश्चिद्दोषः । अल्पेषु कूपवन्न्यायः इति । माधवीये।

நாய், நரி முதலியதின் மரணத்தால் கெடுக்கப்பட்ட கிணறு முதலியதின் ஜலத்தைப் பருகுவதில் வர்ணத்திற்கு உரியபடி ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார். பராசரர்:- கிணற்றில் விழுந்துள்ள நாய், நரி முதலியதையும், குரங்கு, எலும்பு, தோல் முதலியதையும் பார்த்து அசுத்தமான அக்கிணற்றின் ஜலத்தை ப்ராம்ஹ்ணன் பருகினாலும், மனிதனின் பிணம், காக்கை, பன்றி, கழுதை, ஒட்டகம்,

கவயம், யானை, மயில், கட்கம், புலி, கரடி, சிங்கம் இவைகளின் பிணமாவது கிணற்றில் மூழ்கியிருந்தாலும், தடாகத்தில் மூழ்கியிருந்தாலும் அவைகளினால் துஷ்டமான ஜலம் குடிக்கப்படுமாகில் சொல்லப்படும் க்ரமமாய் ப்ராயச்சித்தமாகும். ப்ராம்ஹணன் மூன்று நாள் உபவாஸத்தாலும், க்ஷத்ரியன் இரண்டுநாள் உபவாஸத்தாலும், வைச்யன் ஒருநாள் உபவாஸத்தாலும், சூத்ரன் ஒருகாலம் உபவாஸத்தாலும் சுத்தனாகிறான். சண்டாளனால் வெட்டப்பட்ட வாபிகளில் ப்ராம்ஹணன் அறியாமல் ஜலத்தைப் பருகினால் ஒருநாள் உபவாஸத்தால் சுத்தனாகிறான். சண்டாளன் பாண்டத்தினால் தொடப்பட்ட கிணற்றின் ஜலத்தைப் பருகினால் கோமூத்ரத்துடன் கூடிய யவைக்கஞ்சியை ஆஹாரமாய் உடையவனாய் மூன்று தினங்களால் சுத்தனாகிறான். பெரிய தடாகம் முதலியவைவயில் சண்டாளாதி ஸம்பந்தமிருந்தால் தோஷம் ஒன்றுமில்லை. சிறிய தடாகங்களில் கிணற்றைப் போல் ந்யாயம் என்று மாதவீயத்தில் சொல்லப்பட்டுள்ளது.

यमः—अल्पानामेव पयसां महत्सु न तु दूषणम् । अक्षोभ्याणामपां नास्ति प्रसृतानां च धावताम्।। स्तोकानामुद्धृतानां च दोषदुष्टत्वमिष्यते । तथाऽक्षोभ्य तटाकादिनदीवापीसरांसि च । चण्डालाद्यशुचिस्पर्शे तीर्थतः परिवर्जयेत् इति ।। तीर्थं - जलावतरणप्रदेशः ।। हारीतः - क्लिन्ने भिन्ने शवे तोये तत्रस्थं यदि तत्पिबेत् । शुद्ध्यै चान्द्रायणं कुर्यात् तप्तकृच्छ्रमथापि वा । सीरखातप्रपातोयं पीत्वा चान्द्रायणं चरेत् । अज्ञानादापदा वाऽपि पञ्चगव्येन शुध्यति इति ।

யமன்:- அல்பமான ஜலங்களுக்குத்தான் தோஷம். அதிக ஜலங்களில் தோஷமில்லை. கலக்கமுடியாத ஜலங்களுக்கும், அகன்று ஓடுகின்ற ஜலங்களுக்கும் தோஷமில்லை. அல்பமான ஜலங்களுக்கும் எடுக்கப்பட்ட

ஜலங்களுக்குமே தோஷம் சொல்லப்படுகிறது. அப்படியே கலக்க முடியாத தடாகம் முதலியவை. நதீ, வாபீ, ஸரஸ் இவைகளில் சண்டாளர் முதலிய அசுத்தரின் ஸ்பர்சத்தில், அவைகளைத் தீர்த்தத்தை மட்டில் வர்ஜிக்க வேண்டும். தீர்த்தம் = ஜலத்தில் இறங்கும் ப்ரதேசம். (துறை) ஹாரீதர்:- ஜலத்தில் சவமானது நனைந்தோ, பின்னமாகவோ இருக்குமாகில், அங்குள்ள ஜலத்தைப் பருகுவானாகில் அவன், சுத்திக்குச் சாந்த்ராயணம் அல்லது தப்தக்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். கலப்பையின் பள்ளம், தண்ணீர்ப்பந்தல் இவைகளிலுள்ள ஜலத்தைப் பருகினால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். அறியாமையால் அல்லது ஆபத்தினால் பருகினால் பஞ்சகவ்ய பானத்தால் சுத்தனாகிறான்.

पराशरः— भुङ्क्तेऽज्ञानाद् द्विजश्रेष्ठश्चण्डालान्नं कथञ्चन । गोमूत्रयावकाहारो दशरात्रेण शुद्ध्यति ।। अमेध्यरेतोगोमांसं चण्डाला नामथापि वा । यदि भुक्तं तु विप्रेण कृच्छ्रं चान्द्रायणं चरेत् इति ।। अमेध्यं - विण्मूत्रादि । तदुपदुष्टस्यान्नस्य भोजनममेध्यभोजनम् ।। यत्तु चतुर्विंशतिमतेऽभिहितम् - विण्मूत्रभक्षणे विप्रः चरेच्चान्द्रायणद्वयम् । श्वादीनां चैव विण्मूत्रे चरेच्चान्द्रायणत्रयम् इति, एतदभ्यासविषयम् ।। अत्र विष्णुः – सर्वेष्वेतेषु द्विजानां प्रायश्चित्तान्ते पुनः संस्कारं कुर्यात् इति ।

பராசரர்:- ப்ராம்ஹணன் அறியாமையால் சண்டாளனின் அன்னத்தை எவ்விதத்தாலாவது புஜித்தானாகில், கோமூத்ரத்துடனுள்ள யவைக் கஞ்சியை ஆஹாரமாகக் கொண்டு பத்து நாட்களால் சுத்தனாகிறான். அமேத்யம், ரேதஸ், கோமாம்ஸம், சண்டாளான்னம் இவைகளை ப்ராம்ஹணன் புஜித்தால் சாந்த்ராயண க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். அமேத்யம் - மலம், மூத்ரம் முதலியது. அவைகளால் துஷ்டமான அன்னத்தைப் புஜிப்பது அமேத்ய போஜனமாம்.

சதுர்விம்சதிமதத்தில்:- "ப்ராம்ஹணன் மல மூத்ரங்களை பக்ஷித்தால் இரண்டு சாந்த்ராயணங்களை அனுஷ்டிக்க வேண்டும். நாய் முதலியதின் மல மூத்ரங்களைப் பக்ஷித்தால் மூன்று சாந்த்ராயணங்களை அனுஷ்டிக்க வேண்டும்" என்று உள்ளதேயெனில், இது அப்யாஸ விஷயமாம். (அப்யாஸம் = அடிக்கடி செய்வது) இங்கு, விஷ்ணு:- இவைகள் எல்லாவற்றிலும் ப்ராம்ஹணர்களுக்கு ப்ராயச்சித்ததின் முடிவில் புனருபநயனம் செய்ய வேண்டும்.

हारीतः—हस्तदत्तभोजने दुष्टपङ्क्तिभोजने व्यक्तमूत्र पुरीषकरणे मृतसूतकान्न भोजने शूद्रैः सह संसुप्ते त्रिरात्रमभोजनम् इति। इदं कामकृतविषयम् । अकामस्तु दिनमेकमभोजनं विज्ञानेश्वरोक्तं द्रष्टव्यम्। यत्तु मार्कण्डेयः - भुक्त्वा तु ब्राह्मणाशौचे चरेत् सान्तपनं द्विजः। शूद्रस्य तु तथा भुक्त्वा द्विजश्चान्द्रायणं चरेत् इति, एतत् कामकृताभ्यासविषयम्।। यच्च शङ्खेनोक्तम् - शूद्रस्य सूतके भुक्त्वा षण्मासान् व्रतमाचरेत्। ब्राह्मणस्य तथाऽशौचे भुक्त्वा मासं व्रतीभवेत् इति, तदत्यन्ताभ्यासविषयम्।

ஹாரீதர்:- கையால் கொடுக்கப்பட்ட அன்னத்தைப் புஜிப்பதிலும், துஷ்டரின் பங்க்தியில் புஜிப்பதிலும், ப்ரகாசமாய் மலமூத்ர விஸர்ஜனத்திலும், ம்ருதாசௌச, ஜனனாசௌச அன்ன போஜனத்திலும், சூத்ரர்களுடன் தூங்குவதிலும் மூன்றுநாள் உபவாஸம் ப்ராயச்சித்தமாம். இது அறிந்து செய்த விஷயம். அறியாமல் செய்த விஷயத்தில் ஒருநாள் உபவாஸம் என்று விக்ஞானேச்வரர் சொல்லியதை அறியவும். ஆனால், மார்க்கண்டேயர்:- "ப்ராம்ஹணன், ப்ராம்ஹணனுடைய ஆசௌசத்தில் புஜித்தானாகில் ஸாந்தபன க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஆசௌசியான சூத்ரனின் அன்னத்தைப் புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும்" என்று சொல்லியது புத்திபூர்வமாய் அப்யாஸம் செய்த

விஷயம். சங்கர்:- ''சூத்ரனுடைய ஜனனாசௌசத்தில் அவனுடைய அன்னத்தைப் புஜித்தால் ஆறுமாதம் நியமத்தை அனுஷ்டிக்க வேண்டும். ப்ராம்ஹணனுடைய ஆசௌசத்தில் அவனுடைய அன்னத்தைப் புஜித்தால் ஒருமாதம் முழுவதும் நியமத்தை அனுஷ்டிக்க வேண்டும்'' என்று சொல்லிய வசனமும் மிகவும் அப்யாஸம் செய்துள்ள விஷயமாம்.

पराशरः – अज्ञानाद्भुञ्जते विप्राः सूतके मृतकेऽपि वा । प्रायश्चित्तं कथं तेषां वर्णे वर्णे विनिर्दिशेत् ।। गायत्र्यष्टसहस्रेण शुद्धिः स्याच्छूद्रसूतके। वैश्ये पञ्चसहस्रेण त्रिसहस्रेण क्षत्रिये ।। ब्राह्मणस्य यदा भुङ्क्ते द्वे सहस्रे तु जापयेत् । अथवा वामदेव्येन साम्ना चैकेन शुध्यति इति । अत्र विकल्पः ।। सर्वत्र आशौचोत्तरकालमेव प्रायश्चित्तं द्रष्टव्यम् । तथा च विष्णुः - ब्राह्मणादीनामाशौचे यः सकृदेवान्नमश्नाति तस्य तावदेवाशौचं यावत्तेषाम् । अज्ञानेनापदा वा भोजने अहः । स्वाशौचापगमे प्रायश्चित्तं कुर्यात् इति ।

பராசரர்:- ப்ராம்ஹணர்கள் அறியாமையால் ஜனனாசௌசத்திலோ, மரணாசௌசத்திலோ புஜித்தார்களானால் அவர்களுக்கு ப்ராயச்சித்தம் எப்படி? ஒவ்வொரு வர்ணத்திற்கும் தனித்தனி விதிக்க வேண்டும். சூத்ரர்களின் ஸூதகத்தில் புஜித்தவனுக்கு 8,000- முறை காயத்ரீ ஜபத்தால் சுத்தி. வைச்யனின் ஆசௌசத்தில் புஜித்தவனுக்கு 5,000- முறை ஜபத்தால் சுத்தி. க்ஷத்ரியனின் ஆசௌத்தில் புஜித்தவனுக்கு 3,000- முறை ஜபத்தால் சுத்தி. ப்ராம்ஹணனின் ஆசௌசத்தில் புஜித்தால் 2,000- முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும். அல்லது 'வாமதேவ்ய' என்கிற ஒரு ஸாமத்தால் சுத்தனாகிறான். இங்கு விகல்பம். எல்லாவற்றிலும் ஆசௌசத்திற்குப் பிறகான காலத்திலேயே ப்ராயச்சித்தம் என்று அறியவேண்டும். அவ்விதமே, விஷ்ணு:- ப்ராம்ஹணர் முதலியவரின் ஆசௌசத்தில், அவர்

அன்னத்தை, எவன், ஒரே முறை புஜிக்கின்றானோ அவனுக்கு, ஆசௌசிகளின் ஆசௌசம் வரையில் ஆசௌசம். அறியாமையாலாவது, ஆபத்தாலாவது புஜித்தால் ஒருநாள் ஆசௌசம். தன் ஆசௌசம் சென்ற பிறகு, ப்ராயச்சித்தத்தைச் செய்ய வேண்டும்.

सङ्ग्रहेऽपि — अघे भोक्तुर्धियाऽऽशौचं शिष्टाहं चैन्दवं ततः। मोहात्तावदघं यावद्भुक्तं जीर्णं पतत्यधः॥ आपत्स्वहरघे भोक्तु रिदं ज्ञातेर्न दोषकृत् इति॥ अघे धीपर्वं भुक्तवतः शिष्टाहमघं भवति। अघानन्तरं चान्द्रायणादि। अज्ञानात्तत्र भोक्तुस्तदहरेवाघं यावद्भुक्तं जीर्णं सदधो व्रजति। आपत्काले धीपूर्वमेव भुक्तवतोऽपि दिनमेवाघम्। एतत् सर्वं सपिण्डस्य न दोषकृत् इत्यर्थः॥ अत्रिः - शूद्रान्नं सूतकान्नं च श्राद्धान्नं चैव वर्जयेत्॥ नग्नप्रच्छादनश्राद्धे नवश्राद्धे तथैव च। एकोदिष्टे महत्याद्ये न भूयः पुरुषो भवेत् इति।

ஸங்க்ரஹத்திலும்:- ஆசௌத்தில் ஆசௌசியின் அன்னத்தைப் புத்திபூர்வமாய்ப் புஜித்தவனுக்குப் பாக்கியுள்ள நாட்கள் வரை ஆசௌசமுண்டு. ஆசௌசத்திற்குப் பிறகு சாந்த்ராயணம் முதலியதை அனுஷ்டிக்க வேண்டும். அறியாமையால் ஆசௌசத்தில் புஜித்தவனுக்கு அந்த ஒருநாள் மட்டில் ஆசௌசம், புக்தமான அன்னம் ஜீர்ணமாய்க் கீழே செல்லும் வரை. ஆபத்காலத்தில் புத்தி பூர்வமாய் புஜித்தவனுக்கும் அந்தத் தினம் மட்டும் ஆசௌசம். இவையெல்லாம் ஜ்ஞாதிக்குத் தோஷத்தைச் செய்யாது' என்பது பொருள். அத்ரி:- சூத்ரான்னம், ஸூதகான்னம், ச்ராத்தசேஷான்னம் இவைகளை வர்ஜிக்க வேண்டும். நக்னப்ரச்சாதன ச்ராத்தத்திலும், நவ ச்ராத்தத்திலும், ஆத்யமஹை கோத்திஷ்டத்திலும் புஜித்தவன், மறபடி மனிதனாய்ப் பிறக்க மாட்டான்.

विष्णुः - प्राजापत्यं नवश्राद्धे पादोनं त्वाद्यमासिके। त्रैपक्षिके तदर्धं तु पञ्चगव्यं द्विमासिके। भुक्तं चेत् पार्वणश्राद्धे प्राणायामान्

षडाचरेत् ।। उपवासस्त्रिमासादि वत्सरान्तं प्रकीर्तितम् ।। प्राणायामत्रयं वृद्धावहोरात्रः सपिण्डने । आमरूपे स्मृतं नक्तं व्रतं पौराणिके तथा इति । इदमापद्विषयम् ।। अनापदि तु हारीतः - चान्द्रायणं नवश्राद्धे प्राजापत्यं तु मिश्रके । एकाहस्तु पुराणेषु प्रायश्चित्तं विधीयते इति ।। मिश्रके - आद्यमासिके ।

விஷ்ணு:- நவச்ராத்தத்தில் புஜித்தால் ப்ராஜாபத்யமும், ஆத்யமாஸிகத்தில் புஜித்தால் முக்கால் க்ருச்ரமும், த்ரைபக்ஷிகத்தில் புஜித்தால் பாதி க்ருச்ரமும், த்விதீயமாஸிகத்தில் பஞ்சகவ்யமும், பார்வண ச்ராத்தத்தில் புஜித்தால் ஆறு ப்ராணாயாமங்களும் ப்ராச்சித்தமாகும். த்ருதீயமாஸிகம் முதல் வர்ஷம் முடியும் வரையுள்ள மாஸிகங்களில் புஜித்தால் ஒருநாள் உபவாஸம், ப்ராயச்சித்தமாய்ச் சொல்லப்பட்டுள்ளது. வ்ருத்தி ச்ராத்தத்தில் புஜித்தால் மூன்று ப்ராணாயாமங் களும், ஸபிண்டனத்தில் ஒருநாளும், ஆமரூபஸ பிண்டனத்தில் ஒருகாலமும், பௌராணிகத்தில் ஒரு காலமும் வ்ரதம் ப்ராயச் சித்தமெனச் சொல்லப் பட்டுள்ளது. ஆபத்விஷயமாம். ஆபத்தில்லாத விஷயத்தில், ஹாரீதர்:- நவச்ராத்தத்தில் சாந்த்ராயணமும், ஆத்யமாஸிகத்தில் ப்ராஜாபத்யமும், ப்ரத்யாப்திகங் களில் ஒருநாளும் ப்ராயச்சித்தம் விதிக்கப்படுகின்றது.

चतुर्विंशतिमते — प्राजापत्यं नवश्राद्धे पादोनं तूनमासिके । त्रैपक्षिके तदर्धं स्यात् पादो द्वैमासिके ततः ।। पादोनकृच्छ्रमुद्दिष्टं षाण्मासे चाब्दिके तथा । त्रिरात्रं चाद्यमासेषु प्रत्यब्दं चेदहः स्मृतम् इति ।। तथैव — शूद्रस्य तु नवश्राद्धे चरेच्चान्द्रायणद्वयम् । सार्धचान्द्रायणं मासे त्रिपक्षे त्वैन्दवं स्मृतम् ।। मासद्वये पराकः स्यादूर्ध्वं सान्तपनं स्मृतम् इति ।

சதுர்விம்சதிமதத்தில்:- நவச்ராத்தத்தில் ப்ராஜா பத்யமும், ஊனமாஸிகத்தில் முக்கால் ப்ராஜாபத்ய

க்ருச்ரமும், த்ரைபக்ஷிகத்தில் பாதி க்ருச்ரமும், இரண்டாவது மாஸிகத்தில் , கால்க்ருச்ரமும், ஷாண்மாஸிகத்திலும், ஆப்திகத்திலும், முக்கால் க்ருச்ரமும், ஆத்யமாஸிகத்தில் த்ரிராத்ரமும், ப்ரத்யாப்திகத்தில் ஒருநாளும் ப்ராயச்சித்தமாம். சதுர்விம்சதிமதத்திலேயே:- சூத்ரனின் நவச்ராத்தத்தில் இரண்டு சாந்த்ராயணங்களும், மாஸிகத்தில் 1 1/2-சாந்த்ராயணமும், த்ரைபக்ஷிகத்தில் சாந்த்ராயணமும், 2-வது மாஸிகத்தில் பராகமும், அதற்கு மேல் மாஸிகத்தில் ஸாந்தபனமும் விதிக்கப்பட்டுள்ளன.

यत्तु शङ्खवचनम्—चान्द्रायणं नवश्राद्धे पराको मासिके स्मृतः। पक्षत्रयेऽतिकृच्छ्रः स्यात् षाण्मासे कृच्छ्र एवतु॥ आब्दिके पादकृच्छ्रः स्यादेकाहं पुनराब्दिके। अत ऊर्ध्वं न दोषः स्याच्छङ्खस्य वचनं यथा इति इदं दुर्मृतपतितादिश्राद्धविषयम्॥ भारद्वाजः - अपांक्तेयान् यदुद्दिश्य श्राद्धमेकादशेऽनि। ब्राह्मणस्तत्र भुक्त्वाऽन्नं शिशुचान्द्रायणं चरेत्॥ आमश्राद्धे तथा भुक्त्वा तप्तकृच्छ्रेण शुद्ध्यति। सङ्कल्पिते तथा भुक्त्वा त्रिरात्रं क्षपणं भवेत् इति।

சங்கர்:- ''நவச்ராத்தத்தில் சாந்த்ராயணமும், மாஸிகத்தில் பராகமும், த்ரைபக்ஷிகத்தில் அதிக்ருச்ரமும், ஷாண்மாஸிகத்தில் ஒரு க்ருச்ரமும், ஆப்திகத்தில் கால் க்ருச்ரமும், ப்ரத்யாப்திகத்தில் ஒருநாளும், அதற்குமேல் உள்ளதில் தோஷமில்லை சங்கரின் வசனப்படி'' என்று சொல்லியிருக்கின்றனரே எனில், இது துர்ம்ருதன், பதிதன் முதலியவனின் ச்ராத்தத்தைப் பற்றியதாகும். பரத்வாஜர்:- பங்க்திக்கு அர்ஹரில்லாதவரை உத்தேசித்து, 11-ஆவது தினத்தில் செய்யப்படும் ச்ராத்தத்தில் அன்னத்தை ப்ராம்ஹணன் புஜித்தால் சிசு சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். ஆமச்ராத்தத்தில் புஜித்தால் தப்தக்ருச்ரத்தால் சுத்தனாகிறான். ஸங்கல்ப்பத்தில் புஜித்தால் மூன்றுநாள் வ்ரதமனுஷ்டிக்க வேண்டும்.

ब्रह्मचारिणस्तु बृहद्यम आह—मासिकादिषु योऽश्नीयादसमाप्तव्रतो द्विजः । त्रिरात्रमुपवासोऽस्य प्रायश्चित्तं विधीयते ॥ प्राणायामत्रयं कृत्वा घृतं प्राश्य विशुध्यति इति। कामतस्तु स एवाह— मधु मांसं च योऽश्नीयात् श्राद्धं सूतक एव वा। प्राजापत्यं चरेत् कृच्छ्रं व्रतशेषं समापयेत् इति ॥ अभ्यासे पुनरुपनयनं बोधायनोक्तं द्रष्टव्यम्। आमश्राद्धे तु सर्वत्रार्धम्। आमश्राद्धे भवेदर्धमिति षट्त्रिंशन्मतेऽभिधानात्।

ப்ரம்ஹசாரி விஷயத்தில் சொல்லுகிறார், ப்ருஹத்யமர்:- ப்ரம்ஹசாரியான எந்த ப்ராம்ஹணன், மாஸிகம் முதலியதில் புஜிக்கின்றானோ அவனுக்கு, மூன்றுநாள் உபவாஸம் ப்ராயச்சித்தமாய் விதிக்கப்படுகிறது, தவிர மூன்று ப்ராணாயாமம் செய்து, நெய்யைப் பருகினால் சுத்தனாகிறான். ஜ்ஞானபூர்வமாய்ச் செய்த விஷயத்தில் சொல்லுகிறார். ப்ருஹத்யமரே:- எந்த ப்ரம்ஹசாரீ மது, மாம்ஸம் இவைகளைப் புஜிக்கின்றானோ, ச்ராத்தத்தையும், ஸூதகான்னத்தையும் புஜிக்கின்றானோ, அவன் ப்ராஜாபத்ய க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். பிறகு, வ்ரதத்தின் சேஷத்தை ஸமாப்தி செய்ய வேண்டும். அப்யாஸ விஷயத்தில் போதாயனர் சொல்லிய புனருபநயனம் ப்ராயச்சித்தம் என்று அறியவும். ஆமச்ராத்தம் எல்லாவற்றிலும் பாதி பிராயச்சித்தம். 'ஆமச்ராத்தத்தில் பாதி ப்ராயச்சித்தம் விதிக்கப்படுகிறது' என்று ஷட்த்ரிசன்மதத்தில் சொல்லப்பட்டுள்ளது.

यत्तूशनसोक्तम् — दशकृत्वः पिबेदापो गायत्र्या श्राद्धभुग्द्विजः । ततः सन्ध्यामुपासीत शुद्ध्येत् तु तदनन्तरम् इति तदनुक्तप्रायश्चित्तश्राद्धविषयमिति माधवीये ॥ संस्काराङ्गश्राद्धभोजने तु व्यासः – निर्वृत्ते चूडहोमे तु प्राङ्नामकरणात् तथा। चरेत् सान्तपनं भुक्त्वा जातकर्मणि चैव हि ॥ अतोऽन्येषु तु भुक्त्वाऽन्नं संस्कारेषु द्विजोत्तमः । नियोगादुपवासेन शुद्ध्यते निन्द्यभोजने इति ।

உசனஸ்:- "ச்ராத்தத்தில் புஜித்த ப்ராம்ஹணன் காயத்ரியால் அபிமந்த்ரிதமான ஜலத்தைப் பத்துமுறை பருகவேண்டும். பிறகு ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும். பிறகு அவன் சுத்தனாகிறான்" என்று சொல்லியிருக்கின்றாரே எனில், அது, 'ப்ராயச்சித்தம் சொல்லாத ச்ராத்தத்தைப் பற்றியது' என்று மாதவீயத்தில் உள்ளது. ஸம்ஸ்காராங்கமான ச்ராத்த போஜன விஷயத்திலோவெனில், வ்யாஸர்:- சௌளகர்ம ஹோமம் முடிந்த பிறகு, நாமகரணத்திற்கு முந்தியும், ஜாதகர்மத்திலும் அங்கமான நாந்தீச்ராத்தத்தில் புஜித்தால், ஸாந்தபன க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். இவைகளைத் தவிர்த்த மற்ற ஸம்ஸ்காராங்க நாந்தீச்ராத்தங்களில் புஜித்தாலும், நிந்திதான்னத்தைப் புஜித்தாலும் ப்ராம்ஹணன் உபவாஸத்தால் சுத்தனாகிறான்.

धौम्यः— ब्रह्मौदने च सोमे च सीमन्तोन्नयने तथा। जातश्राद्धे नवश्राद्धे भुक्त्वा चान्द्रायणं चरेत् इति ॥ शातातपः - वनस्पतिगते सोमे परान्नं ये तु भुञ्जते। तेषां मासकृतं पुण्यं दातारमधिगच्छति इति ॥ सनत्कुमारः - एकादश्यां मुनिश्रेष्ठ यो भुङ्क्ते मूढचेतनः। प्रतिग्रासमसौ भुङ्क्ते किल्बिषं श्वानविट्समम् ॥ निष्कृतिर्मद्यपस्योक्ता धर्मशास्त्रे मनीषिभिः। एकादश्यन्नकामस्य निष्कृतिः क्वापि नोदिता इति।

தௌம்யர்:- ப்ரம்ஹௌதனத்திலும், ஸோம யாகத்திலும், ஸீமந்தத்திலும், ஜாதச்ராத்தத்திலும், நவச்ராத்தத்திலும் புஜித்தால், சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். சாதாதபர்:- அமாவாஸ்யையில், எவர் பரான்னத்தைப் புஜிக்கின்றனரோ, அவரின், ஒரு மாதத்திய புண்யம் அன்னம் கொடுத்தவனை அடைகின்றது. ஸநத்குமாரர்:- ஓ முனிச்ரேஷ்டரே! எந்த மூடன் ஏகாதசியில் புஜிக்கின்றானோ, அவன், ஒவ்வொரு கபளத்திலும், நாயின் மலத்தைப் புஜித்த பாபத்திற்குச் சம்மான பாபத்தை அடைகின்றான். மத்யத்தைப்

பருகினவனுக்கு ப்ராயச்சித்தம் தர்மசாஸ்த்ரத்தில் புத்திமான்களால் சொல்லப்பட்டுள்ளது. ஏகாதசியில் அன்னத்தைப் புஜிப்பவனுக்கு ப்ராயச்சித்தம் எங்குமே சொல்லப்படவில்லை.

कात्यायनः — अष्टवर्षाधिको मर्त्यो ह्यपूर्णाशीतिवत्सरः । एकादश्यामुपवसेत् पक्षयोरुभयोरपि इति ॥ कण्वः - एकादशीमुपवसेन्न कदाचिदतिक्रमेत् इति ॥ विष्णुः — एकादश्यां न भुञ्जीत कदाचिदपि मानवः इति ॥ आपस्तम्बः — पर्वसु चोभयोरुपवास औपवस्तमेव कालान्तरे भोजनं तृप्तिश्चान्नस्य इति ॥ उभयोः - दम्पत्योः । यत् कालान्तरे भोजनं तदप्यौपवस्तमेव - उपवास एव । तदपि दिवा । न रात्रौ । न तस्य सायमश्नीयादिति श्रौते दर्शनात् ।

காத்யாயனர்:- எட்டு வயதிற்கு மேற்பட்டவனும் எண்பது வயதிற்குட்பட்டவனுமான மனிதன், இரண்டு பக்ஷங்களின் ஏகாதசியிலும் உபவாஸம் செய்ய வேண்டும். கண்வர்:- ஏகாதசியில் உபவாஸமிருக்க வேண்டும். ஒருகாலும் தவறக்கூடாது. விஷ்ணு:- மனிதன் ஒருகாலும் ஏகாதசியில் புஜிக்கக் கூடாது. ஆபஸ்தம்பர்:- தம்பதிகளான இருவருக்கும் பர்வ பக்ஷ ஸந்திகளில் உபவாஸம் விதிக்கப்படுகிறது. காலாந்தரத்தில் (ஏதாவதொரு காலத்தில்) புஜிப்பதும் உபவாஸமே யாகும். அதிலும் பகலில்தான் புஜிக்கலாம். ராத்ரியில் கூடாது. 'மறுநாள் ஹோமம் செய்யும் வஸ்துவை ஸாயங்காலத்தில் புஜிக்கக் கூடாது' என்று ச்ரௌதத்தில் காணப்படுவதால். ஒருவேளை போஜனத்தை த்ருப்தியாகும் வரை புஜிக்கலாம்.

स्मृत्यन्तरे — अर्कद्विपर्वरात्रौ च चतुर्दश्यष्टमी दिवा । एकादश्या महोरात्रं भुक्त्वा चान्द्रायणं चरेत् इति ॥ शौनकः — अष्टम्यां च चतुर्दश्यां न कुर्याद्भोजनं दिवा ॥ आदित्यपर्वसङ्क्रान्तौ व्यतीपाते पितुर्दिने । अभितश्चोपवासस्य न कुर्यान्निशि भोजनम् इति ।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- பானுவாரம், இரண்டுபர்வங்கள் இவைகளில் ராத்ரியிலும், சதுர்தசீ, அஷ்டமீ இவைகளில் பகலிலும், ஏகாதசியில் பகல், ராத்ரி இவ்விரண்டிலும் போஜனம் கூடாது. புஜித்தால் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். சௌனகர்:- அஷ்டமியிலும், சதுர்தசியிலும், பகலில் போஜனம் செய்யக் கூடாது. பானுவாரம், பர்வம், ஸங்க்ரமணம், வ்யதீபாதம், பித்ருச்ராத்ததினம், உபவாஸ தினத்தின் முன் பின் உள்ள தினங்கள் இவைகளில் ராத்ரியில் போஜனம் செய்யக்கூடாது.

अत्र प्रायश्चित्तमाह स एव — त्यंसुमेषं जपेन्मन्त्रं दशवारं जलेऽष्ट वा । अष्टम्यां वा चतुर्दश्यां दिवाभुक्तेरकल्मषम् ।। सपर्वतो जपेन्मन्त्रं पर्वान्ते दश चेज्जले । पर्वद्वये भानुवारे रात्रौ भुक्तेरकल्मषम् । स इद्वरो जपेन्मन्त्रं शतं वै विष्णुमन्दिरे । एकादश्यामहोरात्रं भुङ्क्ते यदि न पापकृत् ।। आयं पृणन्ति मन्त्रञ्च दशवारं न किल्बिषम् । रात्रौ भुक्ते वत्सरान्ते मन्वादिषु युगादिषु इति ।

இது விஷயத்தில் ப்ராயச்சித்தத்தைச் சொல்லுகிறார், சௌனகரே:- 'த்யம்ஸுமேஷம்' என்ற மந்த்ரத்தை ஜலத்திலிருந்து, பத்து, அல்லது எட்டுத் தடவை ஜபித்தால் அஷ்டமியிலோ, சதுர்தசியிலோ பகலில் புஜித்த பாபம் விலகும். 'ஸபர்வதோ' என்ற மந்த்ரத்தை, பர்வத்தின் முடிவில், ஜலத்திலிருந்து பத்துமுறை ஜபித்தால் இரண்டு பர்வங்களிலும் பானுவாரத்திலும் ராத்திரியில் புஜித்ததால் உண்டாகிய பாபம் விலகும். 'ஸஇத்வரோ' என்ற மந்த்ரத்தை விஷ்ணுவின் ஆலயத்திலிருந்து நூறுமுறை ஜபித்தால், ஏகாதசியில் இரண்டு வேளைகளிலும் புஜித்த பாபம் விலகும். 'ஆயம்ப்ருணந்தி' என்ற மந்த்ரத்தை, பத்து முறை ஜபித்தால், வர்ஷமுடிவு தினத்திலும், மன்வாதிகளிலும், யுகாதிகளிலும் ராத்ரியில் புஜித்ததால் உண்டான பாபம் விலகும்.

ग्रहणे भोजननिषेधमाह व्यासः — नाद्यात् सूर्यग्रहात् पूर्वमह्नि सायं शशिग्रहात्। ग्रहकाले च नाश्नीयात् स्नात्वाऽश्नीयाच्च मुक्तयोः। मुक्ते शशिनि भुञ्जीत यदि न स्यान्महानिशा। अमुक्तयोरस्तगयोरद्याद् दृष्ट्वा परेऽहनि ।। सूर्यग्रहे तु नाश्नीयात् पूर्वं यामचतुष्टयम्। चन्द्रग्रहे तु यामांस्त्रीन् बालवृद्धातुरैर्विना इति। बालादिषु विषये स एव – अपराह्णे न मध्याह्ने मध्याह्ने न तु सङ्गवे । भुञ्जीत सङ्गवे चेत् स्यान्न पूर्वं भुजिमाचरेत् इति।

க்ரஹணத்தில் போஜனநிஷேதத்தைச் சொல்லுகிறார் வ்யாஸர்:- ஸூர்யக்ரஹணத்திற்கு முன் பகலிலும், சந்த்ர க்ரஹணத்திற்கு முன் ஸாயங்காலத்திலும், க்ரஹண காலத்திலும் புஜிக்கக் கூடாது. அவர் முக்தர்களான பிறகு ஸ்நானம் செய்து புஜிக்கலாம். சந்த்ரன் விடப்பட்ட பிறகு, மஹாநிசி இல்லாவிடில், புஜிக்கலாம். அவர் முக்தர்களாகாமல் அஸ்தமயத்தை அடைந்தால் மறுநாளில் அவரைப் பார்த்துப் பிறகு புஜிக்க வேண்டும். ஸூர்யக்ரஹணத்தில், அந்த யாமத்திற்கு முன் நான்கு யாமங்களில் புஜிக்கக் கூடாது. சந்த்ரக்ரஹணத்தில் அந்த யாமத்திற்கு முன் மூன்று யாமங்களில் புஜிக்கக் கூடாது. பாலர், வ்ருத்தர், வ்யாதியுள்ளவரை விலக்கி. பாலர் முதலியவர் விஷயத்தில் சொல்லுகிறார், வ்யாஸரே:- அபராஹ்ணத்தில் க்ரஹணமானால், மத்யாஹ்னத்திலும், மத்யாஹ்னத்தில் க்ரஹணமானால் ஸங்கவத்திலும், ஸங்கவத்தில் க்ரஹணமானால் அதற்கு முந்தியும் போஜனம் செய்யக் கூடாது.

मार्कण्डेयः– ग्रहणं तु भवेदिन्दोः प्रथमादधियामतः । भुञ्जीतावर्तनात् पूर्वं प्रथमे प्रथमादधः ।। रात्रौ प्रथमयामे ग्रहणे दिवा प्रथमयामे भुञ्जीत । अन्यत्रावर्तनादध इत्यर्थः ।। स एव – रवेस्त्वावर्तनादूर्ध्वमर्वागेव निशीथतः । चतुर्थे प्रहरे चेत् स्यात् चतुर्थप्रहरादधः इति।

மார்க்கண்டேயர்:- ராத்ரியின் முதல் யாமத்தில் சந்த்ர க்ரஹணமானால், பகலில் முதல் யாமத்தில் புஜிக்கலாம். ராத்ரியின் முதல் யாமத்திற்குப் பிறகு க்ரஹணமானால் மத்யாஹ்னத்திற்கு முன் புஜிக்கலாம் என்று பொருள். மார்க்கண்டேயரே:- ஸூர்யக்ரஹணம் ஆவர்த்தனத்திற்குப் பிறகானால், முதல் நாளின் அர்த்தராத்ரிக்கு முன்பே புஜிக்கலாம். நான்காவது யாமத்திலானால், முதல்நாள் ராத்ரியின் நான்காவது யாமத்திற்கு முன்பே புஜிக்கலாம். (பிறகு கூடாது).

वृद्धगौतमः — चन्द्रसूर्यग्रहे नाद्यात् तस्मिन्नहनि पूर्वतः । राहोर्विमुक्तिं विज्ञाय स्नात्वा कुर्वीत भोजनम्। सन्ध्याकाले यदा राहुः ग्रसते शशिभास्करौ । तदहर्नैव भुञ्जीत रात्रावपि कदाचन इति ।। रवेर्ग्रस्तोदये पूर्वरात्रौ न भुञ्जीतेत्यर्थः । चन्द्रस्य ग्रस्तास्तमयेऽहर्न भुञ्जीत । भास्करे ग्रस्तास्तमिते रात्रावित्यपि व्याचक्षते ।। तथा च वसिष्ठः — ग्रस्तोदये विधोः पूर्वं नाहर्भोजनमाचरेत्। ग्रस्तोदिते तथा सूर्ये न रात्रौ भोजनं चरेत् इति ।।

வ்ருத்த கௌதமர்:- சந்த்ர, ஸூர்ய க்ரஹணங்களில், அந்தத் தினத்தில் அதற்குமுன் புஜிக்கக் கூடாது. ராஹு மோசனத்தைப் பார்த்துப் பிறகு ஸ்நானம் செய்து பிறகு போஜனம் செய்ய வேண்டும். ஸந்த்யா காலத்தில் ராஹுவானவன் சந்த்ரனையும், ஸூர்யனையும் க்ரஹிப்பானாகில், அந்தப் பகலிலும், அந்த ராத்ரியிலும், ஒருகாலும் புஜிக்கக் கூடாது. ஸூர்யனின் க்ரஸ்தோதயத்தில் முன்னிரவில் புஜிக்கக் கூடாது. சந்த்ரனின் க்ரஸ்தாஸ்தமயத்தில் பின்பகலில் புஜிக்கக் கூடாது என்பது பொருள். 'சந்த்ரனின் க்ரஸ்தாஸ்தமயத்தில் மறுபகலில் புஜிக்கக் கூடாது. ஸூர்யனின் க்ரஸ்தாஸ்தமயத்தில் அடுத்த ராத்ரியில் புஜிக்கக் கூடாது, என்றும் வ்யாக்யானம் செய்கின்றனர். அவ்விதமே, வஸிஷ்டர்:- சந்த்ரனின் க்ரஸ்தோதயத்தில்,

முன்பகலில் போஜனம் செய்யக் கூடாது. ஸூர்யனின் க்ரஸ்தோதயத்தில் முன் ராத்ரியில் போஜனம் செய்யக் கூடாது.

भृगुः— ग्रस्तावेवास्तमानं तु रवीन्दू प्राप्नुतो यदि । तयोः परेद्युरुदये स्नात्वाऽभ्यवहरेन्नरः इति ।। मार्कण्डेयः – चन्द्रस्य यदि वा भानोर्यस्मिन्नहनि भार्गव । ग्रहणं तु भवेत्तस्मिन् तत्पूर्वं भोजनं नरः ।। नाचरेत् सङ्ग्रहं चैव तथैवास्तमुपागते । यावत्तयोर्नोदयः स्यान्नाश्नीयात् तावदेव तु ।। मुक्तिं दृष्ट्वा तु भुञ्जीत स्नानं कृत्वा ततः परम् इति ।। मनुरपि – अमुक्तयोरस्तगयोर्दृष्ट्वा स्नात्वा परेऽहनि इति ।

ப்ருகு:- ஸூர்யனும், சந்த்ரனும், ராஹுவினால் பிடிக்கப்பட்டவராகவே அஸ்தமயத்தை அடைந்தால், மறுநாளில் அவ்விருவரின் உதயத்தில் ஸ்நானம் செய்து, மனிதன் புஜிக்க வேண்டும். மார்க்கண்டேயர்:- ஓ பார்க்கவ! சந்த்ரனுக்காவது, ஸூர்யனுக்காவது எந்தத் தினத்தில் க்ரஹணம் ஏற்படுமோ அந்தத் தினத்தில், அதற்குமுன் மனிதன் போஜனம் செய்யக் கூடாது. ஸங்க்ரஹமும் செய்யக் கூடாது. அவ்விதமே, க்ரஹணத்துடன் அவ்விருவரும் அஸ்தமயத்தை அடைந்தாலும், அவ்விருவரின் உதயம் வரையிலும் போஜனம் செய்யக் கூடாது. அவ்விருவரின் மோசனத்தைப் பார்த்து, ஸ்நானம் செய்து, அதற்குப் பிறகே போஜனம் செய்ய வேண்டும். மனுவும்:- க்ரஹணத்தால் விடுபடாமல் ஸூர்யனும், சந்த்ரனும் அஸ்தமயத்தை அடைந்தால், மறுநாளில் அவர்களைப் பார்த்து ஸ்நானம் செய்து போஜனம் செய்ய வேண்டும்.

विष्णुधर्मे—अहोरात्रं न भुञ्जीत चन्द्रसूर्यौ ग्रहेऽस्तगौ । मुक्तिं बुध्वा तु भोक्तव्यं स्नानं कृत्वा ततः परम् इति । ग्रहे - ग्रहणे । ग्रस्तास्तगे शशिनि ग्रहणात् पूर्वस्यां रात्रौ परस्मिन्नहि च न भुञ्जीत । ग्रस्तास्तगे सूर्ये ग्रहणात् पूर्वस्मिन्नह्नि परस्यां रात्रौ च न भुञ्जीतेत्यर्थः ।। दक्षः -

अयने विषुवे चैव चन्द्रसूर्यग्रहे तथा। अहोरात्रोषितः स्नात्वा सर्वपापैः प्रमुच्यते इति ॥ इदं पुत्रिव्यतिरिक्तविषयम्। सङ्क्रान्त्यामुपवासं च कृष्णैकादशिवासरे। चन्द्रसूर्यग्रहे चैव न कुर्यात् पुत्रवान् गृही इति स्मरणात् ॥ षट्त्रिंशन्मते — सर्वेषामेव वर्णानां सूतकं राहुदर्शने। सचेलं तु भवेत् स्नानं सूतकान्नं च वर्जयेत् इति ॥ सूतकान्नं - राहुसूतकान्नम्।

விஷ்ணுதர்மத்தில்:- க்ரஹணத்தில், சந்த்ரனும், ஸூர்யனும் க்ரஸ்தராகவே அஸ்தமயத்தை அடைந்தால், அவர்களின் மோக்ஷத்தைத் தெரிந்து, பிறகு ஸ்நானம் செய்து புஜிக்க வேண்டும். சந்த்ரன் க்ரஸ்தனாய் அஸ்தமயத்தை அடைந்தால், க்ரஹணத்திற்கு முன் ராத்ரியிலும், பின் பகலிலும் புஜிக்கக் கூடாது. ஸூர்யன் க்ரஸ்தனாய் அஸ்தமயத்தை அடைந்தால், க்ரஹணத்திற்கு முன் பகலிலும், பின் ராத்ரியிலும் புஜிக்ககூடாதென்று பொருள். தக்ஷர்:- 'அயனத்திலும், விஷுவத்திலும், சந்த்ரக்ரஹணத்திலும், ஸூர்யக்ரஹணத்திலும், பகல், இரவு இரண்டிலும் உபவாஸமிருந்து ஸ்நானம் செய்தால் எல்லாப் பாபங்களாலும் விடப்படுவான்' என்றார். இது புத்ரனுள்ளவனைத் தவிர்த்த மற்றவரைப் பற்றியதாகும். (ஏனெனில்) 'ஸங்க்ரமணம், க்ருஷ்ணபக்ஷைகாதசீ, சந்த்ர க்ரஹணம், ஸூர்யக்ரஹணம் இவைகளில் உபவாஸத்தைப் புத்ரனுள்ளவனான க்ருஹஸ்தன் செய்யக் கூடாது' என்று ஸ்ம்ருதி இருப்பதால். ஷட்த்ரிம்சன்மதத்தில் :- க்ரஹண காலத்தில், எல்லாப் வர்ணத்தாருக்கும் ஆசௌசமுண்டாகிறது. ஆகையால் ஸசேல ஸ்நானம் செய்ய வேண்டும். ஸூதகான்னத்தையும் வர்ஜிக்க வேண்டும். ஸூதகான்னம் - ராஹுஸூதகான்னம்.

वृद्धमनुः—आरनालं च तक्रं च पाथेयं घृतपाचितम्। उदकं च कुशच्छन्नं न दुष्येद्राहुसूतके इति ॥ स्मृतिरत्ने — आरनालं तथा क्षीरं

कन्दलं दधि सक्तवः । स्नेहपकं च न तैलं च न कदाचित् प्रदुष्यति इति ।। व्यासः — संवत्सरस्यैकमपि चरेत् कृच्छ्रं द्विजोत्तमः । अज्ञात भुक्तशुध्यर्थं ज्ञातस्य तु विशेषतः इति ।।

வ்ருத்தமனு:- கஞ்சி, மோர், நெய்யில் பக்வமான பாதேயம் (வழியில் கொண்டுபோய்ப் புஜிக்கக் கூடிய வஸ்து) ஜலம் இவை தர்ப்பத்தால் மறைக்கப் பட்டிருந்தால் ராஹு-ஸூதகத்தில் தோஷமுள்ளதாகாது. ஸ்ம்ருதிரத்னத்தில்:- கஞ்சி, பால், கிழங்கு, தயிர், மாவு, எண்ணெய் முதலியதில் பக்வமாகியது, எண்ணெய் இவை ஒருகாலும் தோஷமுள்ளதாகாது. வ்யாஸர்:- ப்ராம்ஹணன், அக்ஞானத்தால் செய்யப்படும் அபோஜ்ய போஜனத்தின் சுத்திக்காக ஒரு வர்ஷத்திற்கு ஒரு க்ருச்ரத்தையாவது அனுஷ்டிக்க வேண்டும். ஜ்ஞானத்தால் செய்யப்பட்டிருந்தால் அதற்காக விசேஷமாய் அனுஷ்டிக்க வேண்டும்.

## भक्ष्यमांसानि ।

भक्ष्यमांसमाह याज्ञवल्क्यः - भक्ष्याः पञ्चनखाः सेधा गोधा कच्छप शल्यकाः । शशश्च मत्स्येष्वपि हि सिंहतुण्डकरोहिताः ।। तथा पाठीन राजीव सशल्काश्च द्विजातिभिः इति ।। मनुरपि — श्वाविधं शल्यकं गोधा खड्ग कूर्मशशांस्तथा । भक्ष्यान् पञ्चनखेष्वाहुरनुष्ट्रांश्चैक-तोदतः इति ।। गौतमः – पञ्चनखाः शल्यकः श्वाविद्गोधा-खड्गकच्छपाः इति ।। याज्ञवल्क्यः – प्राणात्यये तथा श्राद्धे प्रोक्षितं द्विजकाम्यया । देवान् पितॄन्समभ्यर्च्य खादन् मांसं न दोषभाक् इति ।। प्रोक्षितम् - यागशिष्टम् ।

## பக்ஷ்யமான மாம்ஸங்கள்

பக்ஷிக்கத்தகுந்த மாம்ஸத்தைச் சொல்லுகிறார், யாக்ஞவல்க்யர்:- ஐந்து நகமுள்ள ப்ராணிகளுள், ஸேதா,

(ச்வாவித்) உடும்பு, ஆமை, சல்யகம், முயல் என்ற இவ்வைந்தும் பக்ஷ்யங்களாகும். மீன்களுள், ஸிம்ஹம், துண்டகம், ரோஹிதம், பாடீனம், ராஜீவம், ஸசல்கம் என்ற இவை மூன்று வர்ணத்தாருக்கும் பக்ஷ்யங்களாகும். மனுவும்:- ஐந்து நகங்களுள்ளவைகளுள், ச்வாவித், சல்யகம், உடும்பு, கட்கம், ஆமை, முயல் இவை பக்ஷ்யங்களாகும். ஒட்டகம் தவிர மற்ற ஒருவரிசைப் பல்லுள்ளவை பக்ஷ்யங்களாகும். கௌதமர்:- சல்யகம், ச்வாவித், உடும்பு, கட்கம், ஆமை என்ற இந்த ஐந்துநகமுள்ள ப்ராணிகள் பக்ஷ்யங்களாகும். யாக்ஞவல்க்யர்:- ப்ராணாபத் காலத்திலும், ச்ராத்தத்திலும் மாம்ஸத்தைப் பக்ஷிக்கலாம். யாகத்தில் ப்ரோக்ஷணமென்னும் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட பசுமாம்ஸத்தைப் புஜிக்கலாம். ப்ராம்ஹண போஜனத்திற்கும், தேவபித்ரு பூஜைக்கும் ஸாதிக்கப்பட்ட மாம்ஸத்தை, அவர்களைப் பூஜித்துப் பிறகு புஜிப்பவன் தோஷத்தை அடைவதில்லை. (ப்ரோக்ஷிதம் = யாகசிஷ்டம்.)

स्मृतिरत्ने—प्रोक्षितं भक्षयेन्मांसं ब्राह्मणस्य च काम्यया । यथाविधि नियुक्तं च प्राणानामेव चात्यये इति ।। मनुः— नियुक्तस्तु यथा न्यायं पललं यः परित्यजेत् । स प्रेत्य पशुतां याति सम्भवानेकविंशतिम् । इति ।। स एव – मधुपर्के च यज्ञे च पितृदैवतकर्मणि । अत्रैव पशवो हिंस्या नान्यत्रेत्यब्रवीन्मनुः इति ।।

ஸ்ம்ருதிரத்னத்தில்:- ப்ரோக்ஷிதமான மாம்ஸத்தையும், ப்ராம்ஹணனைப் பூஜிப்பதற்காக ஸாதிக்கப்பட்ட மாம்ஸத்தையும், ச்ராத்தத்தில் மாம்ஸத்தையும், ப்ராணாபத்காலத்தில் புஜிக்க வேண்டியதானால் அந்த மாம்ஸத்தையும் புஜிக்கலாம். மனு:- ச்ராத்தத்தில் விதிப்படி வரிக்கப்பட்ட எந்த ப்ராம்ஹணன், மாம்ஸத்தைப் புஜிக்காமல் விடுகின்றானோ, அவன் இறந்த பிறகு இருபத்தொரு பிறவிகளில் பசுவாய்ப் பிறப்பான்.

மனுவே:- மதுபர்க்கத்திலும், யாகத்திலும், பித்ரு கர்மத்திலும், தேவகர்மத்திலும் என்ற இவைகளில் மட்டும் பசுக்களை ஹிம்ஸிக்கலாம். மற்ற விஷயத்தில் ஹிம்ஸிக்கக் கூடாதென்றார் மனு.

यज्ञव्यतिरिक्ते सर्वत्र कर्मणि कलौ प्राणिवधो मांसभक्षणं च निषिद्धम्। वरातिथिपितृभ्यस्तु न पशूपाकृतिः कलौ इति स्मरणात्। यज्ञार्थे पशुवधे मांसभक्षणे न दोषोऽस्तीत्याह मनुः– यज्ञार्थं पशवः सृष्टाः स्वयमेव स्वयंभुवा । यज्ञो हि भूत्यै सर्वस्य तस्माद्यज्ञे वधोऽवधः । ओषध्यः पशवो वृक्षाः तिर्यञ्चः पक्षिणस्तथा । यज्ञार्थं निधनं प्राप्ताः प्राप्नुवन्त्युत्सृतीः पुनः । यज्ञाय जग्धिर्मांसस्येत्येष दैवो विधिः स्मृतः । अतोऽन्यथा प्रवृत्तिस्तु राक्षसो विधिरुच्यते ।। नाद्यादविधिना मांसं विधिज्ञोऽनापदि द्विजः । जग्ध्वा ह्यविधिना मांसं प्रेतस्तैरद्यतेऽवशः ।। असंस्कृतान् पशून् मन्त्रैर्नाद्याद्विप्रः कदाचन । मन्त्रैस्तु संस्कृतानद्यात् शाश्वतं धर्ममास्थितः ।। या वेदविहिता हिंसा नियताऽस्मिंश्चराचरे । अहिंसामेव तां विद्याद्वेदाद्धर्मो हि निर्बभौ ।। यावन्ति पशुरोमाणि तावत्कृत्वो हि मारणम्। वृथा पशुघ्नः प्राप्नोति प्रेत्य जन्मनि जन्मनि ।। योऽहिंसकानि भूतानि हिनस्त्यात्मसुखेच्छया । स जीवंश्च मृतश्चैव न कचित् सुखमेधते ।। नाकृत्वा प्राणिनां हिंसां मांसमुत्पद्यते कचित्। न च प्राणिवधः स्वर्ग्यः तस्मान्मांसं विवर्जयेत् । स्वमांसं परमांसेन यो वर्धयितुमिच्छति । अनभ्यर्च्य पितॄन् देवान् न ततोऽन्योऽस्त्य-पुण्यकृत् । मां स भक्षयिताऽमुत्र यस्य मांसमिहाद्म्यहम् । एतन्मांसस्य मांसत्वं प्रवदन्ति मनीषिणः ।। अनुमन्ता विशसिता निहन्ता क्रयविक्रयी । संस्कर्ता चोपहर्ता च खादकश्चेति घातुकाः इति ।। खादके हि सत्यनुमन्त्रादयो भवन्ति, तेन वधमकुर्वतोऽपि खादकस्य दोषो भवति । तस्मात् न खादकः स्यादित्यर्थः ।

யாகம் தவிர மற்றக் கார்யத்தில், கலியுகத்தில், ப்ராணிவதமும், மாம்ஸபக்ஷணமும் நிஷேதிக்கப் பட்டுள்ளது. 'வரன், அதிதி, பித்ருக்கள் இவருக்காகப் பசுவதம் செய்வது கலியில் இல்லை' என்று ஸ்ம்ருதி உள்ளது. யாகத்திற்காகச் செய்யும் பசுவதத்திலும், மாம்ஸ பக்ஷணத்திலும் தோஷமில்லை என்கிறார். மனு :- யாகத்திற்கென்று, ப்ரம்ஹதேவன் பசுக்களை ஆதரவுடன் ஸ்ருஷ்டித்திருக்கின்றார். யாகமென்பது எல்லோருக்கும் க்ஷேமத்தைப் பற்றியாகின்றது. ஆகையால் யாகத்தில், செய்யும் வதம் வதமல்ல. செடிகள், பசுக்கள், வ்ருக்ஷங்கள், திர்யக்ஜாதிகள், பக்ஷிகள் என்ற இவை யாகத்திற்காக மரணத்தை அடைந்தால், மறுபடி சிறந்த பிறப்புகளை அடைகின்றனர். யாகம் பூர்ணமாவதற்காக மாம்ஸத்தைப் பக்ஷிப்பதென்பது தைவானுஷ்டானம். இதைவிட வேறு ப்ரகாரத்தால் பக்ஷிப்பது ராக்ஷஸருக்கு சிதமான அனுஷ்டானம். விதியை அறிந்த ப்ராம்ஹணன், ஆபத்தில்லாத காலத்தில், விதியில்லாமல் மாம்ஸத்தைப் புஜிக்கக் கூடாது. விதியில்லாமல் புஜித்தானாகில், இறந்த பிறகு பரலோகத்தில், பரவசனாய், (எந்தப் பசுக்களின் மாம்ஸத்தைப் புஜித்தானோ) அந்தப் பசுக்களால் பக்ஷிக்கப் படுகிறான். ப்ராம்ஹணன் மந்த்ரங்களால் ஸம்ஸ்காரம் செய்யப்படாத பசுக்களை ஒருகாலும் பக்ஷிக்கக் கூடாது. சாச்வதமான (நித்யமான) யாகாதிவிதியை அடைந்து, மந்த்ரங்களால் ஸம்ஸ்க்ருதமான பசுக்களையே பக்ஷிக்க வேண்டும். ஸ்தாவர ஜங்கமரூபமான இவ்வுலகில், வேதத்தால் விதிக்கப்பட்ட ஹிம்ஸை எதுவோ அதை அஹிம்ஸையென்றே அறிய வேண்டும். தர்மம் வேதத்தினின்றும் ப்ரகாசமாகிறது. விதியில்லாமல் தனக்காகப் பசுவைக் கொன்றவன், இறந்து, பசுவின் மயிர்கள் எவ்வளவோ அவ்வளவு முறை ஒவ்வொரு ஜன்மத்திலும் மரணத்தை அடைகிறான். இது ஆகமப்ரஸித்தம். எவன் தனது ஸுகத்தின் விருப்பத்தால், தன்னை ஹிம்ஸிக்காத ப்ராணிகளை ஹிம்ஸிக்கின்றானோ,

அவன், பிழைத்திருந்தும், இறந்தும் ஒருகாலும் ஸுகமாய் இருக்கமாட்டான். ப்ராணிகளுக்கு ஹிம்ஸையைச் செய்யாமல் ஒருகாலும் மாம்ஸம் உண்டாவதில்லை. ப்ராணிகளின் வதம் ஸ்வர்க்கத்தைக் கொடுப்பதல்ல, நரகத்தைக் கொடுப்பதாகும். ஆகையால் மாம்ஸத்தை வர்ஜிக்க வேண்டும். எவன், பித்ருக்களேயும், தேவர்களையும் பூஜிக்காமல், தன் தேஹத்தின் மாம்ஸத்தை இதர ப்ராணியின் மாம்ஸத்தால் வளர்க்க விரும்புகிருனோ, அவனைவிடப் பாபம் செய்பவனுன மற்றொருவன் இல்லை. இவ்வுலகில் எந்த ப்ராணியின் மாம்ஸத்தை நான் பக்ஷிக்கின்றேனே, ஸ:= அந்த ப்ராணி, மாம் = என்னை, பரலோகத்தில் பக்ஷிக்கப் போகின்றான், என்ற இந்த நிர்வசனத்தை மாம்ஸ சப்தத்திற்குப் பண்டிதர்கள் சொல்லுகின்றனர். பசுவதத்தை அனுமதிக்கின்றவன், பசுவைக் கொல்லுகிறவன், சேதிக்கின்றவன், க்ரயம் செய்பவன், விலைக்கு வாங்குகிறவன், சமைப்பவன், பரிமாறுகிறவன், புஜிக்கின்றவன் என்ற இவர் எல்லோரும் காதகர்களாவர். மாம்ஸத்தைப் பக்ஷிப்பவன் இருந்தாலல்லவா அனுமதிப்பவன் முதலியவர் ஏற்படுகின்றனர். ஆகையால் நேரில் தான் வதம் செய்யா விடினும் மாம்ஸ பக்ஷகனுக்குத் தோஷமுண்டாகிறது. ஆகையால் மாம்ஸபக்ஷகனாய் இருக்கக் கூடாதென்பது பொருள்.

मांसवर्जने फलमाह स एव —वर्षे वर्षेऽश्वमेधेन यो यजेत शतं समाः । मांसानि च न खादेद्यस्तयोः पुण्यफलं समम् ॥ फलमूलाशनैर्मेध्यैर्मुन्यन्नानां च भोजनैः । न तत् फलमवाप्नोति यन्मांसपरिवर्जनात् इति ।

மாம்ஸத்தை வர்ஜிப்பதில் பலனைச் சொல்லுகிருர். மனுவே:- எவன், ஒவ்வொரு வர்ஷத்திலும் அச்வமேத யாகத்தை நூறு வருஷம் வரையில் செய்கின்றானோ, எவன் மாம்ஸத்தையே பக்ஷிக்காமல் இருக்கின்றானோ,

அவ்விருவருக்கும் புண்யபலம் ஸமமாகும். மாம்ஸ பக்ஷணத்தை வர்ஜிப்பதால் எந்தப் பலமோ, அந்தப் பலத்தை, பழம், கிழங்கு இவைகளைப் புஜிப்பதாலும், சுத்தமான முனிகளின் அன்னங்களைப் புஜிப்பதாலும், அடைவதில்லை.

स एव——न मांसभक्षणे दोषो न मद्ये न च मैथुने। प्रवृत्तिरेषा भूतानां निवृत्तिस्तु महाफला इति ॥ मद्ये - मदकरद्रव्ये अविहिताप्रतिषिद्धे ताम्बूलादिके। मैथुने - अविहिताप्रतिषिद्धे अनृतौ स्वदारगमन इत्यर्थः ॥ मांसभक्षणे दोषाभाववचनं प्राणात्ययविषयम्। नार्तो दुष्यत्यदन्नाद्यान् प्राणानामेव चात्यये इति च तेनैव स्मरणात् ॥ देशविशेषविषयं युगान्तरविषयं वेति स्मृतिरत्नादौ। तथा च व्यासः समुद्रयात्रा मांसस्य भक्षणं शस्त्रजीविका। शीधुपानमुदीच्यानामविगीतानि धर्मतः। मन्त्रेणासंस्कृतं मांसं नाद्याद्विप्रः कलौ युगे। यज्ञे तूपाकृतं मांसमश्नीयाद्विधिचोदितम् इति।

மனுவே:- மாம்ஸ பக்ஷணத்திலும், அவிஹிதமாயும் அப்ரதிஷித்தமாயுமுள்ள தாம்பூலம் முதலிய மதகர த்ரவ்யத்திலும், அவிஹிதமும் அப்ரதிஷித்தமுமான, ருதுகாலமில்லாத காலத்தில் ஸ்வதாரகமனமான மைதுனத்திலும் தோஷமில்லை. இது ப்ராணிகளுக்கு ஸ்வாபாவிகமானது. ஆனால், இவைகளை வர்ஜிப்பது மஹாபலத்தைக் கொடுப்பதாகும். மாம்ஸ பக்ஷணத்தில் தோஷமில்லையென்றது ப்ராணாபத்து விஷயம். 'வ்யாதியுள்ளவன் ப்ராணாபத் காலத்தில் நிஷித்த வஸ்துக்களைப் பக்ஷித்தாலும், தோஷத்தை அடையமாட்டான்' என்று மனுவே சொல்லி உள்ளார். 'இது தேச விசேஷத்தைப் பற்றியது, அல்லது வேறு யுகத்தைப் பற்றியது' என்று ஸ்ம்ருதிரத்னம் முதலியதில் சொல்லப்பட்டுள்ளது. அவ்விதமே, வ்யாஸர்:- ஸமுத்ரயாத்ரை, மாம்ஸபக்ஷணம், ஆயுதங்களால் ஜீவிப்பது, மத்யபானம் என்ற இவை வடக்குத்

தேசத்திலுள்ளவர்கட்குத் தர்மசாஸ்த்ரப்படி நிஷித்தமல்ல. ப்ராம்ஹணன் கலியுகத்தில் மந்த்ரத்தால் ஸம்ஸ்காரம் செய்யப்படாத மாம்ஸத்தைப் புஜிக்கக் கூடாது. யாகத்திலோவெனில் வேதத்தால் விதிக்கப்பட்ட மந்த்ரத்தால் ஸ்ம்ஸ்க்ருதமான மாம்ஸத்தைப் புஜிக்கலாம்.

பக்ஷ்ய மாம்ஸவிதி முற்றிற்று.

—★—

## उत्तरापोशनादि।

बोधायनः—अमृतापिधानमसीत्युपरिष्टादपः पीत्वाऽऽचान्तो हृदयमभिमृशति प्राणानां ग्रन्थिरसि रुद्रो माविशान्तकस्तेनान्नेनाप्यायस्वेति पुनराचम्य दक्षिणपादाङ्गुष्ठे पाणिं निस्रावयत्यङ्गुष्ठमात्रः पुरुषोऽङ्गुष्ठं च समाश्रितः। ईशः सर्वस्य जगतः प्रभुः प्रीणाति विश्वभुगित्यथानुमन्त्रणमूर्ध्वहस्तः समाचरेत् श्रद्धायां प्राणे निविश्यामृत९ं हुतं प्राणमन्नेनाप्यायस्व, श्रद्धायामपाने, श्रद्धायां व्याने, श्रद्धायामुदाने, श्रद्धाया९ंसमाने, निविश्येति यथालिङ्गमनुषङ्गः, ब्रह्मणि म आत्माऽमृतत्वायेत्यक्षरेणात्मानं योजयेत् सर्वक्रतुयाजिनामात्मयाजी विशिष्यते इति।

### உத்தராபோசனம் முதலியது

போதாயனர்:- 'அம்ருதாபிதானமஸி' என்று மேல் ஜலத்தைப் பருகி, ஆசமனம் செய்து, 'ப்ராணாநாம் + ப்யாயஸ்வ' என்ற மந்த்ரத்தால் ஹ்ருதயத்தை ஸ்பர்சித்து, மறுபடி ஆசமனம் செய்து, வலதுகாலின் பெருவிரலில் 'அங்குஷ்டமாத்ர:+ விச்வபுக்' என்ற மந்த்ரத்தால் கையிலுள் ஜலத்தை வடியவிடவேண்டும். பிறகு கையை உயர்த்தி வைத்துக் கொண்டு, 'ச்ரத்தாயாம் ப்ராணே நிவிச்யாம்ருதம் ஹுதம். ப்ராணமந்நேநாப்யாயஸ்வ' என்பது முதலிய ஐந்து மந்த்ரங்களால் அபிமந்த்ரணம் செய்து, பரமாத்மாவோடு ஜீவாத்மாவைச் சேர்க்க

வேண்டும். இவ்விதமனுஷ்டிக்கும் ஆத்மயாஜீ, எல்லா க்ரதுக்களையும் அனுஷ்டித்தவரைவிடச் சிறந்தவனாகிறான்.

गद्यव्यासोऽपि—ततस्तृप्तः सन्नमृतापिधानमसीत्यपः प्राश्य तस्माद् देशान्मनागपसृत्य विधिवदाचामेत् इति । भरद्वाजः— भुक्त्वाऽमृतापिधानमसीति च निपीय कम् । आचान्तः पुनराचामेद्यावन्मण्डलशोधनम् इति ।। देवलः – भुक्तोच्छिष्टं समादाय सर्वस्मात्किञ्चिदाचमन् । उच्छिष्ट भागधेयेभ्यः सोदकं निवपेद्भुवि इति ।। विष्णुः – न हस्तौ प्रक्षाल्य चुलुकं गृह्णीयात् इति ।। सङ्ग्रहे – अमृतापिधानमसीत्यवशिष्य जलं पिबेत् । तच्छेषं रौरवेत्युक्त्वा बलिप्रान्ते विसर्जयेत् इति ।

கத்யவ்யாஸரும்:- பிறகு த்ருப்தியுள்ளவனாய் 'அம்ருதாபி தானமஸி' என்று ஜலத்தைப் பருகி, அந்த இடத்தினின்றும் கொஞ்சம் நகர்ந்து, விதிப்படி ஆசமனம் செய்ய வேண்டும். பரத்வாஜர்:- புஜித்து 'அம்ருதாபி-தானமஸி' என்று ஜலத்தைப் பருகி, ஆசமனம் செய்து, போஜன பாத்ரத்திற்கு அடியிலுள்ள மண்டலத்தைச் சுத்தம் செய்த பிறகு மறுபடி ஆசமனம் செய்ய வேண்டும். தேவலர்:- உத்தராபோசனம் பருகுவதற்குமுன், உச்சிஷ்டமான எல்லாவற்றினின்றும் கொஞ்சம் எடுத்து ஜலத்துடன் உச்சிஷ்டபாகிகளுக்காகப் பூமியில் வைக்க வேண்டும். விஷ்ணு:- கைகளை அலம்பிய பிறகு ஆபோசனத்தைப் பருகக் கூடாது. ஸங்க்ரஹத்தில்:- 'அம்ருதாபிதானமஸி' என்று ஜலத்தைப் பருகும்போது கொஞ்சம் மீதிவைத்துப் பருகி, மீதி ஜலத்தை, பலியின் ஸமீபத்தில் 'ரௌரவே' என்ற மந்த்ரத்தால் விடவேண்டும்.

शातातपः—अर्धं पीत्वा तु गण्डूषमर्धं त्याज्यं महीतले । रसातलगता नागास्तेन प्रीणन्ति नित्यशः ।। हस्तं प्रक्षाल्य गण्डूषं यः पिबेत् पापमोहितः । स देवांश्च पितॄंश्चैव आत्मानं चैव घातयेत् इति ।। गण्डूषमत्रोत्तरापोशनम् ।।

சாதாதபர்:- பாதி கண்டூஷத்தைப் பருகவேண்டும். பாதியைப் பூமியில் விடவேண்டும். அதனால், பாதாளத்திலுள்ள நரகர்கள் எப்பொழுதும் த்ருப்தரா கின்றனர். எவன் பாபத்தால் மயங்கியவனாய், கையை அலம்பிப் பிறகு கண்டூஷத்தைப் பருகின்றானோ அவன். தேவர்களையும், பித்ருக்களையும், தன்னையும் ஹிம்ஸிக்கின்றான், இங்கு கண்டூஷம் உத்தராபோசனம் என்பதாம்.

तथा च मार्कण्डेयः - उत्तरापोशनात्पूर्वं हस्तं न क्षालयेद् द्विजः । अर्धं पिबति गण्डूषं अर्धं त्यजति भूतले । प्रीणन्ति पितरः सर्वे याश्चान्या भूमिदेवताः । हस्तं निर्लिह्य संक्षाल्य विधूयोद्धूय पात्रतः । गण्डूषं धारयेद्यस्तु सुरामिव स धारयेत् इति । गण्डूषार्धत्यागमन्त्रमाह स एव—रौरवेऽपुण्यनिलये पद्मार्बुदनिवासिनाम् । अर्थिनामुदकं दत्तमक्षय्यमुपतिष्ठतु ।। उत्तरापोशनात् पश्चात् पात्रं हस्तान्न संस्पृशेत् । यदि स्पृशेत्तु मोहेन सचेलस्नानमाचरेत् ।। पीत्वा भुक्त्वा च यो मर्त्यः शून्यं पात्रं परित्यजेत् । स भूयः क्षुत्पिपासार्तो भवेज्जन्मनि जन्मनि ।। अपसृत्य ततः पश्चात् गण्डूषान् षोडशाचरेत् ।। विप्रस्य दक्षिणे भागे देवास्तिष्ठन्ति यत्नतः । आसीन एव गण्डूषान् वामभागे विसर्जयेत् इति ।

மார்க்கண்டேயர்:- ப்ராம்ஹணன், உத்தராபோசனத்திற்கு முன் கையை அலம்பக்கூடாது. பாதி கண்டூஷத்தைப் பருகவேண்டும். பாதியைப் பூமியில் விடவேண்டும். ஸகலமான பித்ருக்களும், பூமியிலுள்ள மற்றத் தேவதைகளும் த்ருப்தராகின்றனர். எவன் கையை நக்கியாவது, அலம்பியாவது, உதறியாவது, பாத்ரத்தில் தேய்த்தாவது பிறகு கண்டூஷத்தைப் பருகின்றானோ அவன் ஸுரையைப் பானம் செய்பவன் போலாகிறான். கண்டூஷத்தின் பாதியைப் பூமியில் விடும் மந்த்ரத்தைச் சொல்லுகிறார், மார்க்கண்டேயரே:- 'ரௌரவே஽புண்ய + முபதிஷ்டது' என்று. இதன் பொருள் 'பாபிகளுக்கு

ஸ்தானமாகிய ரௌரவமெனும் நரகத்தில் வெகு காலமாய் வஸிப்பவரும், ஜலத்தை விரும்புகின்றவருமான நாரகிகளுக்கு என்னால் கொடுக்கப்பட்ட இந்த ஜலம் அழிவற்றதாய் அவரை அடையவேண்டும்' என்று. உத்தரா போசனத்திற்குப் பிறகு, போஜன பாத்ரத்தைக் கையால் தொடக்கூடாது. அறியாமல் தொட்டால் ஸசேலஸ்நானம் செய்ய வேண்டும். எந்த மனிதன் ஜலத்தைப் பருகிய பிறகும், போஜனம் செய்த பிறகும் அந்தப் பாத்ரத்தைச் சூன்யமாய் விடுகின்றானோ, அவன் பிறகு ஒவ்வொரு பிறவியிலும் மிகவும் பசி, தாஹங்களால் வருந்துகின்றவனாய் ஆவான். பிறகு அந்த இடத்திலிருந்து நகர்ந்து 16-முறை வாயைக் கொப்புளிக்க வேண்டும். ப்ராம்ஹணனின் வலது பாகத்தில் தேவர்கள் இருக்கின்றனர். ஆகையால் கவனமாய் உட்கார்ந்தவனாகவே, கண்டூஷங்களை இடது பாகத்தில் கொப்புளிக்க வேண்டும்.

शाण्डिल्यः— माषादिचूर्णैर्मृद्भिर्वा प्रक्षाल्य करयोर्द्वयम् । प्रक्षाल्य जानू पादौ च काष्ठैर्दन्तान् विशोधयेत् इति ।। और्वः– आस्यं प्रक्षाल्य गण्डूषं पिबेद्भुक्त्वा च यो द्विजः । दैवं श्राद्धमसौ हन्यात् पित्र्यमात्मानमेव च इति ।। गण्डूषकाले आस्यस्थजलं न पिबेदित्यर्थः । देवलः– भुक्त्वाऽऽचामेद्यथोक्तेन विधानेन समाहितः । शोधयेन्मुखहस्तौ च मृदद्भिर्घर्षणैरपि ।। तस्मिन्नाचमनं कुर्यात् यत्र भाण्डेऽथ भुक्तवान् । यद्युत्तिष्ठत्यनाचान्तो भुक्तवानासनात्ततः ।। स्नानं सद्यः प्रकुर्वीत सोऽन्यथाऽप्रयतो भवेत् इति ।। गौतमः – गण्डूषस्याथ समये तर्जन्या वक्त्रचालनम् । कुर्वीत यदि मूढात्मा रौरवे नरके पतेतद् इति । पराशरः – गण्डूषं पादशौचं च कृत्वा वै कांस्यभाजने । षण्मासान् भुवि निक्षिप्य उद्धृत्य पुनराहरेत् इति । स्मृत्यन्तरे – भुक्त्वोच्छिष्टस्त्वनाचान्तः शूद्रादीन् यदि पश्यति । ज्ञानतोऽज्ञानतो वापि तैः साकं भुक्तवानसौ इति ।

சாண்டில்யர்:- உளுந்து முதலியதின் மாவுகளாலாவது, மண்களாலாவது இரண்டு கைகளையும் அலம்பி, முழங்கால்வரை கால்களையும் அலம்பி, குச்சிகளால் பற்களையும் சுத்திசெய்ய வேண்டும். ஔர்வர்:- எந்த ப்ராம்ஹணன் புஜித்த பிறகு, வாயை அலம்பி, கண்டூஷத்தைப் பருகுகின்றனோ, அவன், தைவகார்யம், பித்ருகார்யம், ச்ராத்தம் இவைகளையும், தன்னையும் ஹிம்ஸித்தவனாகிறான். வாய்க் கொப்புளிக்கும்போது வாயிலுள்ள ஜலத்தைக் குடிக்கக் கூடாதென்பது பொருள். தேவலர்:- போஜனம் செய்து, சொல்லிய விதிப்படி, கவனத்துடன் உத்தராபோசனத்தைப் பருகவேண்டும். வாய், கைகள் இவைகளை மண் ஜலம் இவைகளால் தேய்ப்பதால் சோதிக்க வேண்டும். எந்தப் போஜன பாத்ரத்தில் புஜித்தானோ அங்கிருந்தே உத்தராபோசனத்தைப் பருகவேண்டும். புஜித்தவன் ஆபோசனத்தைச் செய்யாமல் அந்த ஆஸனத்திலிருந்து எழுந்தால், உடனே ஸ்நானம் செய்ய வேண்டும். இல்லாவிடில் அசுத்தனாகிறான். கௌதமர்:- கண்டூஷம் செய்யும் பொழுது தர்ஜனீ விரலினால் வாயைச் சோதித்தானாகில், அந்த மூடன் ரௌரவமெனும் நரகத்தில் விழுவான். பராசரர்:- வாய்க் கொப்புளித்தலையும், காலலம்புவதையும் வெண்கலப் பாத்ரத்தில் செய்தால், அதை ஆறுமாதம் முழுவதும் பூமிக்குள் வைத்திருந்து பிறகு எடுத்து உபயோகிக்க வேண்டும். மற்றொருஸ்ம்ருதியில்:- சாப்பிட்டு உச்சிஷ்டனாயிருப்பவன் ஆசமனம் செய்யாமல், அறிந்தோ, அறியாமலோ, சூத்ரன் முதலியவரைப் பார்த்தால், இவன் அவருடன் புஜித்தவனாய் ஆகிறான்.

रत्नावल्याम्—दन्तानां शोधनं कृत्वा पवित्रं तु विसर्जयेत्। विसृज्य भूमौ पात्रे वा पश्चाद्वा दन्तशोधनम् इति ॥ स्मृत्यर्थसारे—अमृतापिधानमसीति गण्डूषमर्धं पीत्वाऽर्धं भूमौ बहिर्निनीय वर्तुलपवित्रं विसृज्य भूमौ पात्रे वा क्षिप्त्वा सम्यगुच्छिष्टं प्रक्षाल्य

द्विराचामेत् ततो हस्तौ संमृज्य परिस्राव्याङ्गुष्ठाभ्यां चक्षुषोर्निषिच्य चक्षुषी स्पृष्ट्वाऽग्निमुपस्पृश्य इष्टदेवतां स्मरेत् इति।

ரத்னாவளியில்:- பற்களைச் சுத்திசெய்து பிறகு பவித்ரத்தை விஸர்ஜனம் செய்ய வேண்டும். பூமியிலாவது, போஜன பாத்ரத்திலாவது பவித்ரத்தை விஸர்ஜனம் செய்து பிறகாவது தந்தசுத்தி செய்து கொள்ளலாம். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- 'அம்ருதாபி-தானமஸி' என்ற மந்த்ரத்தால் ஆபோசன ஜலத்தைப் பாதி பருகிப் பாதியைப் போஜன பாத்ரத்திற்கு வெளியில் பூமியில் விட்டு, வர்த்துள பவித்ரத்தை விஸர்ஜனம் செய்து, பூமியிலாவது, போஜன பாத்ரத்திலாவது போட்டு, எச்சிலை நன்றாய் அலம்பி, இருமுறை ஆசமனம் செய்ய வேண்டும். பிறகு கைகளைத் துடைத்து, ஜலத்தைக் கீழேவிட்டு பெருவிரல்களால் கண்களில் விட்டு, கண்களைத் தொட்டு, அக்னியைத் தொட்டு இஷ்ட தேவதையை ஸ்மரிக்க வேண்டும்.

स्मृतिरत्ने — दन्तशोधनकाष्ठं तु भूमावेव समुत्सृजेत्। भुक्त्वा तत्र प्रयत्नेन किञ्चित् प्रक्षाल्य वारिणा। अनूढस्तु न कुर्वीत भुक्त्वा वै दन्तशोधनम्। पादुकारोहणं चैव तिलैश्च पितृतर्पणम् इति। गौतमः – आचान्तः पुनराचामेदायङ्गौरिति मन्त्रतः। द्रुपदां वा त्रिरावर्त्य सर्वपापप्रणाशिनीम्॥ हस्तौ निघृष्याङ्गुष्ठाभ्या मक्ष्णोरम्बु विनिक्षिपेत् इति। मन्त्रः – शर्यातिं च सुकन्यां च च्यवनं शक्रमश्विनौ। भुक्तमात्रः स्मरेद्यस्तु चक्षुस्तस्य न हीयते इति॥ स एव — प्राणानां ग्रन्थिरसीत्यालभेद्धृदयं ततः। अक्षरेण स्वमात्मानं योजयेत् ब्रह्मणीति हि इति।

ஸ்ம்ருதிரத்னத்தில்:- ப்ரயத்னத்துடன் தந்தங்களைக் கொஞ்சம் சோதித்து, அந்தத் தந்தசோதனக் குச்சியை ஜலத்தால், அலம்பி, பூமியிலேயே விடவேண்டும். விவாஹமாகாதவன், போஜனத்திற்குப் பிறகு தந்த

சோதனம், பாதுகைகளில் ஏறுவது, திலங்களுடன் பித்ரு தர்ப்பணம் இவைகளைச் செய்யக் கூடாது. கௌதமர்:- ஆசமனம் செய்து, மறுபடி ஆசமனம் செய்ய வேண்டும். 'ஆயங்கௌ:' என்ற மந்த்ரத்தை, அல்லது ஸகல பாபங்களையுமகற்றும் 'த்ருபதா' என்ற ருக்கை மூன்று முறை ஜபிக்க வேண்டும். கைகளைத் தேய்த்துப் பெரு விரல்களால் ஜலத்தைக் கண்களில் சேர்க்க வேண்டும். அதற்கு மந்த்ரம் - 'சர்யாதிம்ச + ஹீயதே' என்பது. இதன் பொருள் - 'சர்யாதி என்ற அரசனையும், ஸுகன்யை என்ற அவன் கன்யையையும், ச்யவனர் என்ற முனிவரையும், இந்த்ரனையும், அச்வினீதேவர்களையும் போஜனம் செய்தவுடன் எவன் ஸ்மரிக்கின்றானோ அவனுக்குப் பார்வை குறைவதில்லை' என்பது. கௌதமரே:- பிறகு 'ப்ராணானாம் க்ரந்திரஸி' என்ற மந்த்ரத்தால் மார்பைத் தொடவேண்டும். தன் ஆத்மாவைப் பரமாத்மாவோடு ப்ரம்ஹரத்திரனிடத்தில் சேர்க்க வேண்டும்.

कुत्सः— आचान्तो नाभिदेशं तु प्राणानां ग्रन्थिरसीति । विमृश्यादित्यमीक्षेत रात्रौ दीपमुखं ततः इति ।। व्यासः– आचम्याङ्गुष्ठमात्रेति पादाङ्गुष्ठे तु दक्षिणे । निःस्रावयेद्धस्तजल मूर्ध्वहस्तः समाहितः ।। हुतानुमन्त्रणं कुर्यात् श्रद्धायामिति मन्त्रतः इति ।। अत्रिः– आचान्तोऽप्यशुचिस्तावद्यावत्पात्रमनुद्धृतम् । उद्धृतेऽप्यशुचिस्तावद्यावन्मण्डलशोधनम् ।। भूमावपि हि लिप्तायां तावत्स्यादशुचिः पुमान् । आसनादुत्थितस्तस्माद्यावन्न स्पृशते महीम् इति ।। एतत् ब्रह्मचारिविषयम् । भार्याभृतकदासेभ्य उच्छिष्टं शेषयेत् ततः इति गृहस्थस्योक्तत्वादिति स्मृतिरत्ने ।

குத்ஸர்:- ஆசமனம் செய்து 'ப்ராணானாம் க்ரந்திரஸி' என்று நாபிதேசத்தை ஸ்பர்சித்து, ஸூர்யனைப் பார்க்க வேண்டும். ராத்ரியில் தீபத்தைப் பார்க்க வேண்டும். வ்யாஸர்:- ஆசமனம் செய்து, 'அங்குஷ்டமாத்ர:' என்ற

மந்த்ரத்தால், வலது காலில் பெருவிரலில் கையிலுள்ள ஜலத்தைக் கையை மேலாக வைத்துக் கொண்டு கவனமுடையவனாய் வழியவிட வேண்டும். 'ச்ரத்தாயாம்' என்ற மந்த்ரத்தால், புஜித்த அன்னத்தை அனுமந்த்ரணம் செய்ய வேண்டும். அத்ரி:- ஆசமனம் செய்தவனானாலும், போஜன பாத்ரம் எடுக்கப்படாதவரை, போக்தா அசுத்தனே. எடுத்த பிறகும். மண்டலத்தைச் சுத்தம் செய்யும் வரையில் அசுத்தனே. பூமி சுத்தம் செய்யப்படாதவரையில் அசுத்தனேயாம் என்றார். இது பிரும்மசாரியைப் பற்றியது. ஏனெனில் பார்யை பிருத்யர், தாஸர், இவர்கட்கு உச்சிஷ்டத்தை மீதி வைக்க வேண்டுமென்று க்ருஹஸ்தனுக்குச் சொல்லியிருக்கிறது என்று ஸ்மிருதிரத்னத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

शातातपः – आचम्य पात्रमुत्सृज्य किञ्चिदार्द्रेण पाणिना । मुख्यान् प्राणान् समालभ्य नाभिं पाणितलेन च । भुक्त्वा नैव प्रतिष्ठेत नैव चार्द्रेण पाणिना । पाणिं मूर्ध्नि समाधाय स्पृष्ट्वाऽग्निं च समाहितः इति ।

சாதாதபர்:- போஜன பாத்ரத்தை விட்டு ஆசமனம் செய்து கொஞ்சம் ஈரமான கையால் முகத்திலுள்ள இந்த்ரியங்களை ஸ்பரிசித்து உள்ளங்கையால் நாபியை ஸ்பர்சிக்க வேண்டும். பாணியைத் தலையில் வைத்து அக்னியையும் கவனமாகத் தொடவேண்டும். போஜனம் செய்த பிறகும் ஈரக் கையுடனும் வெளியிற் செல்லக்கூடாது.

आपस्तम्बः—यत्र भुज्यते तत् समूह्य निर्हृत्यावोक्ष्य तं देशममत्रेभ्यो लेपान् सङ्कृष्याद्भिः संसृज्योत्तरतः शुचौ देशे रुद्राय निनयेदेवं वास्तु शिवं भवति इति । यत्र स्थाने भुज्यते तत्रत्यमुच्छिष्टं समूह्य - राशीकृत्य अन्यतो निर्हृत्य तं देशमवोक्षेत् । येषु पाकः कृतः तान्यमत्राणि । तेभ्योऽन्नलेपान् व्यञ्जनलेपांश्च सङ्कृष्य -

काष्ठादिनापकृष्य अद्भिः संसृज्य गृहस्योत्तरतः शुचौ देशे रुद्राय निनयेत् - रुद्रायेदमस्त्विवति निनयेत्। एवं कृते सति वास्तु - गृहं, शिवं - समृद्धं भवतीत्यर्थः।

ஆபஸ்தம்பர்:- எந்த இடத்தில் புஜிக்கப்பட்டதோ அந்த இடத்திலுள்ள உச்சிஷ்டத்தை ஒன்று சேர்த்து வேறிடத்தில் போட்டுவிட்டுப் புஜித்த ஸ்தானத்தை ப்ரோக்ஷிக்க வேண்டும். எந்தப் பாத்ரங்களில் பாகம் செய்யப்பட்டதோ அவைகளினின்றும் அன்னம், வ்யஞ்ஜனம் இவைகளின் பற்றுகளைக் கட்டை முதலியதால் எடுத்து ஜலத்துடன் சேர்த்து வீட்டின் வடக்கில் சுத்தமான ப்ரதேசத்தில் 'ருத்ராயேதமஸ்து' என்று விடவேண்டும். இவ்விதம் செய்வதால் வீடானது நிறைந்ததாயாகிறது.

विष्णुपुराणे— भुक्त्वा सम्यग् द्विराचम्य प्राङ्मुखोदङ्मुखोऽपि वा। स्वस्थः प्रशान्तचित्तस्तु कृतासनपरिग्रहः ।। अभीष्टदेवतानां तु कुर्वीत स्मरणं नरः ।। अग्निराप्याययन् धातुं पार्थिवं पवनेरितः । दत्तावकाशो नभसा जरयेदस्तु मे सुखम् ।। अन्नं बलाय मे भूमे रपामग्न्यनिलस्य च । भवत्वेतत् परिणतं ममास्त्वव्याहतं सुखम् ।। प्राणापानसमानानामुदानव्यानयोस्तथा । अन्नं पुष्टिकरं चास्तु ममास्त्वव्याहतं सुखम् ।। आगस्तिरग्निर्बडबानलश्च भुक्तं मयाऽन्नं जरयन्त्वशेषम्। सुखं च मे तत् परिणामसम्भवं यच्छन्त्वरोगं मम चास्तु देहे।। विष्णुः समस्तेन्द्रियदेहदेही प्रधानभूतो भगवान् यथैकः। सत्येन तेनात्तमशेषमन्नमारोग्यदं मे परिणाममेतु ।। विष्णुरत्ता यथैवान्नं परिणामश्च वै यतः। सत्येन तेन मे भुक्तं जीर्यत्वन्नमिदं तथा। इत्युच्चार्य स्वहस्तेन परिमृज्य तथोदरम् । अनायासप्रदायीनि कुर्यात् कर्माण्यतन्द्रितः ।। सच्छास्त्रादिविनोदेन सन्मार्गादविरोधिना। दिनं नयेत्ततः सन्ध्यामुपतिष्ठेत् समाहितः इति।

விஷ்ணுபுராணத்தில்:- புஜித்து, நன்ருய் இருமுறை ஆசமனம் செய்து, கவலேயற்ற மனமுடையவனுய் கிழக்கு அல்லது வடக்கு நோக்கியவனுய் ஆஸனத்திலமர்ந்து, இஷ்ட தேவதைகளே ஸ்மரிக்க வேண்டும். அதன் மந்த்ரங்கள் - 'அக்னிராப்யாந்தாதும் + ஜீர்யத்வன்ன-மிதம்ததா' என்பவை. இவைகளின் பொருள் - ''தேஹத்திலுள்ள அக்னி, ப்ருதிவீ ஸம்பந்தமான தாதுவை, வாயுவினுல் வ்ருத்தி செய்யப்பட்டு, ஆகாசத்தால் அளிக்கப்பட்ட அவகாசமுடையதாய் புஜிக்கப்பட்ட வஸ்துவை ஜீர்ணமாகச் செய்ய வேண்டும். எனக்கு ஸுகமுண்டாக வேண்டும். நான் புஜித்த இந்த அன்னம் ஜீர்ணமாய், என் தேஹத்திலுள்ள பூமி, ஜலம், அக்னி, காற்று இவைகளுக்குப் பலத்தின் பொருட்டு ஆகவேண்டும். எனக்குத் தடையற்ற ஸுகமுண்டாக வேண்டும். ப்ராணன், அபானன், ஸமானன், உதானன், வ்யானன் என்ற இவர்களுக்கு, அன்னம் புஷ்டியைச் செய்வதாய் ஆகவேண்டும். எனக்குத் தடையற்ற ஸுகமுண்டாக வேண்டும். அகஸ்த்யரின் அக்னியும், படபாக்னியும் நான் புஜித்த அன்னம் முழுவதையும் ஜீர்ணமாக்க வேண்டும். அன்னத்தின் பரிணுமத்தால் உண்டாகும் ஸுகத்தையும் எனக்குக் கொடுக்க வேண்டும். என் தேஹத்தில் ஆரோக்யமுமிருக்க வேண்டும். எல்லா இந்த்ரியங்களுக்கும், தேஹங்களுக்கும் அந்தர்யாமியாயும், ப்ரதானனுயும், பகவானுயும், ஒருவனுயும் உள்ளவன் விஷ்ணு என்பது எப்படி ஸத்யமோ, அந்த ஸத்யத்தால், என்னுல் புஜிக்கப்பட்ட அன்னம் முழுவதும் ஆரோக்யத்தைக் கொடுப்பதாய், பரிணுமத்தை அடையவேண்டும். அன்னத்தைப் புஜிப்பவர் விஷ்ணுவே. பரிணுமமும் அவரிடமிருந்தே உண்டாகிறது. இந்த ஸத்யத்தால் என்னுல் புஜிக்கப்பட்ட இந்த அன்னம் ஜீர்ணமாக வேண்டும்'' என்பது. இவ்விதம் படித்து, தன் கையினுல் வயிற்றைத் தடவி, சோம்பலற்றவனுய், ச்ரமத்தைக்

கொடுக்காத கார்யங்களைச் செய்ய வேண்டும். ஸாது மார்க்கத்திற்கு விரோதமல்லாத நல்ல சாஸ்த்ரம் முதலியதைப் படிக்கும் விநோதத்தால் பகலைப் போக்க வேண்டும். பிறகு கவனமாய் ஸாயம் ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும்.

बाहटः—भुक्त्वोपविशतस्तुन्दमोजो भवति तिष्ठतः । आयुश्च क्रामतो मृत्युः धावतः स्वपतो वपुः ।। भुक्त्वा राजवदासीत गत्वा शतपदं शनैः इति ।। व्यासः – भुक्त्वा वै सुखमास्थाय तदन्नं परिणामयेत्।। इतिहासपुराणाभ्यां वेदार्थानुपबृंहयेत् इति ।। विष्णुः – भुक्त्वोपविष्टो विश्रान्तो ब्रह्म किञ्चिद्विचारयेत् इति ।। दक्षः - इतिहासपुराणाभ्यां षष्ठसप्तमकौ नयेत् ।। अष्टमे लोकयात्रा तु बहिः सन्ध्या ततः परम् इति ।

பாஹடர்:- புஜித்த பிறகு உட்கார்ந்திருப்பவனுக்கு வயிறு பெரிதாகும். நிற்பவனுக்கு ஓஜஸ் உண்டாகும். நடப்பவனுக்கு ஆயுஸ்வளரும். ஓடுகிறவனுக்கு ம்ருத்யு உண்டாகும். தூங்குகிறவனுக்குச் சரீரம் பருக்கும். புஜித்த பிறகு, மெதுவாய் நூறடி சென்று அரசன் போல் உட்கார்ந்திருக்க வேண்டும். வ்யாஸர்:- புஜித்த பிறகு ஸுகமாய் உட்கார்ந்து கொண்டு, புஜித்த அன்னத்தை ஜரிக்கச் செய்ய வேண்டும். இதிஹாஸம், புராணம் இவைகளுடன் சேர்த்து வேதத்தின் பொருள்களை விசாரிக்க வேண்டும். விஷ்ணு:- புஜித்து உட்கார்ந்தவனாய் ச்ரமத்தைப் பரிஹரித்தவனாய், வேதத்தைக் (அர்த்தத்தை) கொஞ்சம் விசாரிக்க வேண்டும். தக்ஷர்:- பகலின் ஆறாவது, ஏழாவது பாகங்களை இதிஹாஸ புராணங்களால் கடத்த வேண்டும். எட்டாவது பாகத்தில் லோக யாத்ரை (குடும்பத்திற்குரிய கார்யம்) செய்யப்பட வேண்டும். அதன் பிறகு வெளியில் ஸந்த்யோபாஸனம் செய்யப்பட வேண்டும்.

मार्कण्डेयः – भूयोऽप्याचम्य कर्तव्यं ताम्बूलस्य च भक्षणम्। श्रवणं चेतिहासस्य ततः कुर्यात् समाहितः इति ।। याज्ञवल्क्यः - अतिथिं श्रोत्रियं तृप्तमासीमान्तमनुव्रजेत् । अहः शेषं समासीत शिष्टैरिष्टैश्च बन्धुभिः इति ।। शङ्खः – विचार्य च पुराणार्थान् वेदार्थान् भक्तिमास्थितः । विष्णुं सदा हृदि ध्यायेत् सकलं निष्कलं तु वा इति ।। लिखितः – भुक्त्वोपस्थाय मार्ताण्डं पुराणानि सदा पठेत्। भावशुद्ध्या हरौ भक्तिः पुराणश्रवणाद्भवेत् इति ।। अत्रिः– दिवा स्वापं न कुर्वीत गच्छेन्नैव दिवा स्त्रियम्। आयुःक्षयकरी निद्रा दिवा स्त्री पुण्यनाशिनी ।। इतिहास पुराणानि धर्मशास्त्राणि चाभ्यसेत्। वृथा विविधवाक्यानि परिवादांश्च वर्जयेत् इति ।

**மார்க்கண்டேயர்:-** மறுபடி ஆசமனம் செய்து தாம்பூல சர்வணத்தைச் செய்ய வேண்டும். பிறகு, கவன முடையவனாய் இதிஹாஸங்களைக் கேட்க வேண்டும். **யாக்ஞவல்க்யர்:-** ச்ரோத்ரியனும், போஜனம் முதலியதால் த்ருப்தி அடைந்தவனுமான அதிதியை வீட்டின் எல்லை வரையில் பின் சென்று அனுப்ப வேண்டும். பிறகு மீதியுள்ள பகலில், இதிஹாஸ புராணாதிகளை அறிந்த சிஷ்டர்களுடனும், காவ்யகதைகளை அறிந்த சிஷ்டர்க ளுடனும், அனுகூலமாய்ப் பேசும் பந்துக்களுடனும் சேர்ந்து உட்கார்ந்திருக்க வேண்டும். **சங்கர்:-** புராணார்த்தங்களையும், வேதார்த்தங்களையும் விசாரித்து, பக்தியுடையவனாய், ஸகுணனாகவாவது, நிர்குண னாகவாவது விஷ்ணுவை மனதில் நித்யமும் த்யானிக்க வேண்டும். **லிகிதர்:-** புஜித்து, ஸூர்யோபஸ்தானம் செய்து, புராணங்களை, ப்ரதிதினமும் படிக்க வேண்டும். புராணங்களைக் கேட்பதால், மனச்சுத்தியுடன் விஷ்ணுவினிடம் பக்தி உண்டாகும். **அத்ரி:-** பகலில் நித்ரையைச் செய்யக் கூடாது. பகலில் ஸ்த்ரீயைச் சேரக்கூடாது. பகலில் செய்யப்படும் நித்ரை ஆயுளைக் குறைக்கும். பகலில் செய்யப்படும் ஸ்த்ரீஸங்கம்

புண்யத்தையகற்றும். இதிஹாஸங்கள், புராணங்கள், தர்மசாஸ்த்ரங்களிவைகளையும் அப்யஸிக்க வேண்டும். வீணுகிய பலவித வார்த்தைகளையும், பிறரின் நிந்தைகளையும் விலக்க வேண்டும்.

अखण्डादर्शे— भुक्त्वा तु सुखमासीनस्ताम्बूलेनास्यशोधनम् । शुण्ठ्यामलकधातूनामेकेनाथ विशोधनम्।। सुपूगं च सुपत्रं च चूर्णेन च समन्वितम् । प्रदद्याद्विजदेवेभ्यस्ताम्बूलं चर्वयेद्बुधः ।। एकपूगं सुखारोग्यं द्विपूगं निष्फलं भवेत् । अतिश्रेष्ठं त्रिपूगं तु अधिकं नैव दुष्यति । पर्णमूले भवेद्व्याधिः पर्णाग्रे पापसम्भवः । चूर्णपर्णं हरत्यायुः सिरा बुद्धिविनाशिनी ।। तस्मादग्रं च मूलं च सिरां चैव विशेषतः । चूर्णपर्णं वर्जयित्वा ताम्बूलं खादयेन्नरः ।। अखण्डितं च क्रमुकं पर्णमक्षालितं तथा । अशोधितं तथा चूर्णं भक्षयन् सर्वदोषभाक् ।। अनिधाय मुखे पर्णं पूगं खादति यो नरः । सप्तजन्मदरिद्रः स्यान्नरकेषु निमज्जति ।। चूर्णमन्तर्न कुर्वीत न बहिश्चावकुञ्चनम् ।। प्रातः काले फलाधिक्यं चूर्णं मध्यन्दिनेऽधिकम् । सायं पर्णस्य चाधिक्यं त्रिधा ताम्बूलभक्षणम् इति ।

அகண்டாதர்சத்தில்:- புஜித்த பிறகு, ஸுகமாய் உட்கார்ந்தவனாய், தாம்பூலத்தினால் முகத்தைச் சுத்தி செய்து கொள்ள வேண்டும். சுக்கு, நெல்லிக்கனி, தாது (சுண்ணாம்பு) இவைகளுள் ஒன்றினால் வாயைச் சோதிக்க வேண்டும். நல்ல பாக்கு, நல்ல இலை, சுண்ணாம்பு இவைகளுடன் கூடிய தாம்பூலத்தை ப்ராம்ஹணர் களுக்குக் கொடுக்க வேண்டும். தானும் பக்ஷிக்க வேண்டும். ஒரு பாக்குடன் கூடிய தாம்பூலம் ஸுகத்தையும், ஆரோக்யத்தையும் செய்வதாகும். இரண்டு பாக்குடையது பலனற்றதாகும். மூன்று பாக்குடையது மிகச்சிறந்ததாகும். மூன்றுக்கு மேல் உள்ளது தோஷமுள்ளதாகாது. வெற்றிலையின் அடியில் (அதைப் பக்ஷித்தால்) வ்யாதி உண்டாகும். இலையின்

நுனியில் பாபமுண்டாகும். சுண்ணும்பு வைத்திருந்த இலே, ஆயுளே அபஹரிக்கும், இலேயின் நரம்பு புத்தியை நாசப்படுத்துவதாகும். ஆகையால் அடி, நுனி, நரம்பு, சுண்ணும்பு வைத்திருந்த வெற்றிலே இவைகளைத் தள்ளித் தாம்பூலத்தைப் பக்ஷிக்க வேண்டும். உடைக்காத பாக்கையும், அலம்பாத வெற்றிலேயையும், சோதிக்காத சுண்ணும்பையும் பக்ஷிப்பவன் ஸகல தோஷங்களேயும் அடைவான். வாயில் இலேயைப் போட்டுக் கொள்ளாமல் பாக்கை எந்த மனிதன் பக்ஷிக்கின்ருனே, அவன் ஏழு ஜன்மங்களில் தரித்ரனுவான். நரகங்களிலும் முழுகுவான். சுண்ணும்பை வெற்றிலேயின் உட்புறத்தில் தடவக்கூடாது. வெளிப்புறமாய் மடிக்கக் கூடாது. காலேயில் பாக்கை அதிகமாகவும், மத்யாஹ்னத்தில் சுண்ணும்பை அதிகமாகவும் மாலேயில் வெற்றிலேயை அதிகமாகவும் உபயோகித்து, மூன்று விதமாய்த் தாம்பூலத்தைப் பக்ஷிக்க வேண்டும்.

बाहटः— ताम्बूलं कटुतिक्तमुष्णमधुरं क्षारं कषायान्वितं वातघ्नं कृमिनाशनं कफहरं कायाग्निसन्दीपनम् । स्त्रीसंभाषणभूषणं रुचिकरं शोकस्यविच्छेदनं ताम्बूलस्य तु ये त्रयोदश गुणाः स्वर्गेऽपि ते दुर्लभाः ।। प्रत्युषसि भुक्तसमये वरयुवतीनां च सङ्गमेऽभिमते । राजसु विद्वन्मध्ये ताम्बूलं यो न खादयेत् स पशुः ।। दन्तावलीदुर्बलताक्षिरोगौ जडत्वमङ्गे नयनादिकेषु । बलक्षयं वक्त्रगतं करोति ताम्बूल-मत्यन्तनिषेवणेन ।। आयुः प्रज्ञा बलं बुद्धी रेतः शक्तिर्विनश्यति । जिह्वा रसं न गृह्णाति सदा ताम्बूलचर्वणात् इति ।

பாஹடர்:- தாம்பூலமானது, காரமாயும், துவர்ப்பாயும், உஷ்ணமாயும், மதுரமாயும், உறைப்பாயும், கஷாயமாயும், வாதத்தை அகற்றுவதாயும், புழுவைக் கொல்வதாயும், கபத்தை ஹரிப்பதாயும், தேஹத்திலுள்ள அக்னியை ஜ்வலிக்கச் செய்வதாயும், ஸ்த்ரீகளுடன் பேசுவதில் அலங்காரமாயும், ருசியைச் செய்வதாயும்,

சோகத்தைப் போக்குவதாயுமுள்ளது. இவ்விதம் தாம்பூலத்திற்குள் பதின்மூன்று குணங்கள் எவையோ அவை ஸ்வர்க்கத்திலும் துர்லபங்களாம். விடியற் காலத்திலும், போஜனகாலத்திலும், சிறந்த ஸ்த்ரீகளைச் சேருங்காலத்திலும், அரசர்களிடத்திலும், வித்வான்களின் நடுவிலும், எவன் தாம்பூலத்தைப் பக்ஷிப்பதில்லையோ அவன் பசு ஆவான். தாம்பூலம் அதிகமாய் ஸேவிக்கப் பட்டால் பல்வரிசைக்குப் பலமின்மையையும், கண் ரோகத்தையும், தேஹத்திலும், கண் முதலியவைகளிலும், ஜாட்யத்தையும், வாயில் பலக்குறைவையும் செய்கின்றது. எப்பொழுதும் தாம்பூல சர்வணம் செய்வதால், ஆயுஸ், பரக்ஞை, பலம், புத்தி, ரேதஸ்ஸின் சக்தி இவைகள் நசிக்கின்றன. நாக்கு ரஸத்தை அறிவதில்லை

व्यासः—सूर्येऽस्तशिखरं प्राप्ते पादशौचक्रियान्वितः। बहिः सन्ध्यामुपासीत कुशपाणिः समाहितः॥ अनृतं मद्यगन्धं च दिवा मैथुनमेव च। पुनाति वृषलस्यान्नं बहिः सन्ध्या ह्युपासिता॥ आचम्य सन्ध्यां सङ्कल्प्य मार्जयित्वा च पूर्ववत्। अग्निश्च मेत्यपः पीत्वा गृह्योक्तैश्चैव मार्जयेत्॥ गायत्र्याऽपस्त्रिरुत्क्षिप्य प्रदक्षिणमथाचरेत्। सन्ध्यां ध्यात्वोपविष्टस्तु वाग्यतः सुसमाहितः॥ प्रणवव्याहृतियुतां गायत्रीं पूर्ववज्जपेत्। कृत्वा स्वशाखाविहितमादित्यमुपतिष्ठते॥ वारुणीभिरुपस्थाय दिशश्चैवोप तिष्ठते इति।

வ்யாஸர்:- ஸூர்யன் அஸ்தமலையின் சிகரத்தை அடைந்துள்ளபோது, கால்களைச் சுத்தம் செய்து கொண்டு, குசங்களைக் கையிலுடையவனாய், கவனமுடையவனாய் வெளியில் ஸந்த்யோபாஸனம் செய்ய வேண்டும். பொய் சொல்லுதல், மத்யத்தின் கந்தத்தை க்ரஹித்தல், பகலில் ஸ்த்ரீஸங்கம் செய்தல், சூத்ரான்னத்தைப் புஜித்தல் இவைகளாலுண்டாகும் பாபத்தை, வெளியில் செய்யப்பட்ட ஸாயங்கால ஸந்த்யாவந்தனம், அகற்றும்.

ஆசமனம் செய்து, ஸந்த்யாவந்தனத்தை ஸங்கல்ப்பித்து, காலையில் போல் மார்ஜனம் செய்து கொண்டு, 'அக்னிச்ச' என்பதால் ஜலத்தைப் பருகி, க்ருஹ்யோக்தமான மந்த்ரங்களால் மார்ஜனம் செய்து, காயத்ரியால் மூன்று முறை அர்க்யம் கொடுத்து, ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். ஸந்த்யையை த்யானம் செய்து உட்கார்ந்து, மௌனியாய், ஏகாக்ரனாய், ப்ரணவத்துடனும், வ்யாஹ்ருதிகளுடனும் கூடிய காயத்ரியை முன்போல் ஜபிக்க வேண்டும். தன் சாகையில் விதிக்கப்பட்டபடி செய்து, ஸூர்யனை உபஸ்தானம் செய்ய வேண்டும். வருணனுடையதான ருக்குகளால் உபஸ்தானம் செய்து, திக்குகளையும் உபஸ்தானம் செய்ய வேண்டும்.

याज्ञवल्क्यः—उपास्य पश्चिमां सन्ध्यां हुत्वाऽग्नीं स्तानुपास्य च। भृत्यैः परिवृतो भुक्त्वा नातितृप्याथ संविशेत् इति ।। स्मृतिरत्ने – हुताग्निर्वन्दितगुरुः कृतातिथ्यश्च शक्तितः । वैश्वदेवं बलिं चापि कृत्वाऽश्नीयाद्यथा दिवा इति ।। व्यासः – हुत्वाऽग्निं विधिवन्मन्त्रैर्भुक्त्वा यज्ञावशिष्टकम् । सभृत्यबान्धवजनः स्वपेच्छुष्कपदो निशि इति ।। बोधायनः – मेरुकाञ्चनदानानि वाजपेयशतानि च। कन्याकोटि प्रदानं च न समं सायमाहुतेः इति।

**யாக்ஞவல்க்யர்:-** ஸாயம் ஸந்த்யையை உபாஸித்து, அக்னிகளில் ஹோமம் செய்து, அவைகளை உபஸ்தானம் செய்து, ப்ருத்யர்களுடன் சேர்ந்து அதிகமாயில்லாமல் புஜித்து, பிறகு படுக்க வேண்டும். **ஸ்ம்ருதிரத்னத்தில்:-** ஹோமம் செய்து, குருக்களை நமஸ்கரித்து, யதாசக்தி அதிதி பூஜையைச் செய்து, வைச்வ தேவத்தையும், பலிஹரணத்தையும் செய்து, பகலில் போல் புஜிக்க வேண்டும். **வ்யாஸர்:-** விதிப்படி மந்த்ரங்களால் அக்னியில் ஹோமம் செய்து, வைச்வதேவ சேஷமான அன்னத்தை, ப்ருத்யருடனும் பந்துக்களுடனும் புஜித்து, உலர்ந்த கால்களுடன் இரவில் தூங்க வேண்டும்.

போதாயனர்:- மேருவைப் போன்ற பொன்னின் தானங்களும். நூறு வாஜபேய யாகங்களும், கோடி கன்யாதானங்களும் ஸாயங்காலத்தில் செய்யும் ஹோமத்திற்குச் சமமாகாது.

शाण्डिल्यः—अन्नैः प्रभूतैर्देवेशं विविधैः पृथगर्चयेत् । सन्ध्ययोरुभयोः कुर्यात् पूजां सर्वोपचारकैः । नक्तं कुटुम्बिकोऽश्नीयात् हितं पथ्यं सुतृप्तिमत् । नोत्तराभिमुखः स्वप्यात् पश्चिमाभिमुखो न च ॥ न चाकाशे न नग्नो वा नाशुचिर्नासने क्वचित् । न जीर्णायां तु खट्वायां शून्यागारे न चैव हि इति ।

சாண்டில்யர்:- பலவிதமாயும், அதிகமாயுள்ள அன்னங்களால் ஈச்வரனைப் பூஜிக்க வேண்டும். இரண்டு காலங்களிலும் எல்லா உபசாரங்களுடனும் பூஜையைச் செய்ய வேண்டும். க்ருஹஸ்தன், ராத்ரியில், ஹிதமாயும், பத்யமாயும், த்ருப்தியளிப்பதுமான அன்னத்தைப் புஜிக்க வேண்டும். வடக்கில் தலைவைத்தும், மேற்கில் தலைவைத்தும் தூங்கக் கூடாது. மேல் ஆவரணமில்லாத இடத்திலும், வஸ்த்ரமில்லாதவனாயும், அசுத்தனாயும், உட்காருமாஸனத்திலும், பழுதான கட்டிலிலும், பாழான வீட்டிலும் தூங்கக் கூடாது.

विष्णुपुराणे—पुनः पाकमुपादाय सायमप्यवनीपते । वैश्वदेवनिमित्तं वै पत्न्या सार्धं बलिं हरेत् ॥ तत्रापि श्वपचादिभ्य स्तथैवान्नविसर्जनम् । अतिथिं चागतं तत्र स्वशक्त्या पूजयेद्बुधः ॥ पादशौचासनप्रह्वस्वागतोक्त्या च पूजयेत् । ततश्चान्नप्रदानेन शयनेन च पार्थिव ॥ दिवाऽतिथौ तु विमुखे गते यत्पातकं नृप । तदेवाष्टगुणं पुंसां सूर्योढे विमुखे गते ॥ कृतपादादिशौचश्च भुक्त्वा सायन्तनं गृही । गच्छेच्छय्यामस्फुटितामपि दारुमयीं नृप ॥ नाविशालां न वै भग्नां नासमां मलिनां न च । न च जन्तुमयीं शय्यामधितिष्ठेदनास्तृताम् ॥ प्राच्यां दिशि शिरः शस्तं याम्यायामथवा नृप । सदैव स्वपतः पुंसो विपरीतं तु रोगदम् इति ।

விஷ்ணுபுராணத்தில் :- ஓ அரசனே! ஸாயங்காலத்திலும், வைச்வதேவத்திற்காகப் பாகம் செய்து, பத்னியுடன் வைச்தேவம், பலிஹரணம் இவைகளைச் செய்ய வேண்டும். அப்பொழுதும், ச்வபசன் முதலியவர்க்கு, முன்போலவே அன்னத்தைக் கொடுக்க வேண்டும். அக்காலத்தில் வந்த அதிதியையும் யதாசக்தி பூஜிக்க வேண்டும். கால்களை அலம்புவது, ஆஸனத்தைக் கொடுப்பது, வணங்குதல், நல்வரவு கூறுதல் இவைகளால் பூஜிக்க வேண்டும். பிறகு அன்னத்தைக் கொடுப்பதாலும், படுக்கையைக் கொடுப்பதாலும் பூஜிக்க வேண்டும். பகலில் வந்த அதிதி பூஜிக்கப்படாமல் வருந்தியவனாய்ச் சென்றால் எந்தப் பாபமோ அதுவே எட்டு மடங்கு ராத்ரியில் வந்த அதிதி பூஜிக்கப்படாமல் திரும்பிச் சென்றால், அதிகமாகும், கால் முதலியதைச் சுத்தம் செய்து கொண்டு, ஸாயங்காலத்தில் பூஜித்து, க்ருஹஸ்தன் படுக்கையைச் சேரவேண்டும். கட்டையால் செய்யப்பட்ட கட்டில் முதலியதானால் அது வெடித்திருக்கக் கூடாது. அகலமில்லாததும், ஒடிந்ததும், சரியில்லாததும், அழுக்குடையதும், ஜந்துக்கள் அடைந்துள்ளதும், விரிப்பு இல்லாததுமான கட்டிலில் படுக்கக் கூடாது. ஓ அரசனே! எப்பொழுதும், தூங்குகின்ற மனிதனுக்குக் கிழக்கு அல்லது தெற்கில் தலையை வைத்துப் படுப்பது சிறந்ததாகும். இதற்கு விபரீதமாய்ப் படுப்பது ரோகத்தைக் கொடுப்பதாகும்.

शौनकः—निशायाः प्रथमे यामे जपयज्ञार्चनादिकम् । स्वाध्यायो भोजनं प्रोक्तं वर्जयित्वा महानिशाम् ।। पश्चात्तने तथा यामे जपयज्ञार्चनादिकम् । ब्रह्माभ्यासोऽपि तत्रैव वर्जयित्वा तु भोजनम् इति । अनध्याये प्रदोषेषु च सायं गायत्रीजपे सङ्कोचमाचरन्ति शिष्टाः । आहुश्च— चतुर्थ्यां सप्रदोषायां शतार्धं सचतुष्टयम् । सप्तत्रिंशच्च सप्तम्यामष्टाविंशत्त्रयोदशे ।। अष्टाविंशदनध्याये इतरेषु यथोदितम् । शस्ता प्रदोषे दर्शे च गायत्रीदशसङ्ख्यया । अष्टम्यां च चतुर्दश्यां नित्यादर्धं जपेद्बुधः । प्रतिपत्सु तृतीयायां पर्वण्यल्पतरं जपेत् इति ।

சௌனகர்:- ராத்ரியின் முதல் யாமத்தில், ஜபம், யக்ஞம் பூஜை முதலியது, அத்யயனம், போஜனம் இவைகளைச் செய்யலாம் மஹாநிசையில் கூடாது. அவ்விதமே ராத்ரியின் கடைசி யாமத்தில், ஜபம், யாகம், பூஜை முதலியது, வேதாப்யாஸம் இவைகளைச் செய்யலாம். போஜனம் கூடாது. அனத்யாய தினத்திலும், ப்ரதோஷ காலங்களிலும் ஸாயங்காலத்தில் காயத்ரீ ஜபத்தில் சுருக்கத்தை சிஷ்டர்கள் ஆசரிக்கின்றனர். இவ்விதமும் சொல்லுகின்றனர் - "ப்ரதோஷத்துடன் கூடிய சதுர்த்தியில் 54- முறை காயத்ரீ ஜபம். ஸப்தமியில் 34-முறை. த்ரயோதசியில் 28-முறை. அனத்யாய தினத்தில் 28-முறை. மற்றகாலங்களில் சொல்லியபடி ஜபம். ப்ரதோஷத்திலும், தர்சத்திலும், 10-முறை காயத்ரீ ஜபம். அஷ்டமியிலும், சதுர்தசியிலும் 54-முறை. ப்ரதமைகளில் நித்ய ஜபத்தின் மூன்றிலொருபாகம், அதாவது 36-முறை. பர்வ தினத்தில் மிகக்குறைவாய் ஜபிக்க வேண்டும் என்று.

सङ्ग्रहान्तरे—नित्यादर्धं चतुर्थीवसुमनुतिथिषु स्याज्जपः सप्तमी या सप्तत्रिंशच्च तस्यां प्रतिपदि च पुनः षड्युता त्रिंशदेव। तद्वत् पर्वद्वयेऽपि त्रियुतदशतिथावष्टभिर्विंशतिः स्यादेवं विष्वादि-कालेष्वखिलमतमिदं सायमेवं न कल्ये इति ।। प्रदोषोऽपि दर्शितः – विघ्नार्ककामरात्र्यादौ द्व्येकार्धघटिकाः क्रमात्। रन्ध्रद्वियामोदयात् प्राक् प्रदोषः स्यात् कलादिभिः इति ।। विघ्नश्चतुर्थी। अर्कः सप्तमी। कामस्त्रयोदशी। रन्ध्रो नव। रात्र्यादौ चतुर्थी सप्तमीत्रयोदश्यः क्रमेण द्व्येकार्ध घटिकाः सन्ति चेत् प्रदोषः । तथा रात्र्यादौ तृतीया नवघटिका चेत् प्रदोषः । अधिका चेन्नास्ति । रात्र्यादौ षष्ठीयामद्वयाधिका चेन्न प्रदोषः। द्वादश्यामुदयात् प्राक् कलामात्र त्रयोदशी सत्वे प्रदोष इत्यर्थः।

மற்றொரு ஸங்க்ரஹத்தில்:- சதுர்த்தீ, அஷ்டமீ, சதுர்தசீ இந்தத் திதிகளில் நித்ய ஜபத்தில் பாதி ஜபம். அதாவது

54-முறை ஜபம். ஸப்தமியில் 37-முறை. ப்ரதமையில் 36-முறை. இரண்டு பர்வங்களிலும் அவ்விதமே 36-முறை. த்ரயோதசியில் 28-முறை. விஷு முதலிய காலங்களிலு மிவ்விதமே 28-முறை. இவ்விதமனுஷ்டிப்பது எல்லோருக்கும் ஸம்மதமானது. இது ஸாயங்காலத்தில். காலையில் இல்லை. ப்ரதோஷமும் சொல்லப்பட்டுள்ளது:- ராத்ரியின் ஆதியில் சதுர்தசீ இரண்டு நாழிகையும், ஸப்தமீ ஒரு நாழிகையும், த்ரயோதசீ அரைநாழிகையுமிருந்தால் ப்ரதோஷம். அவ்விதமே ராத்ரியின் ஆதியில் த்ருதீயை 9-நாழிகை இருந்தால் ப்ரதோஷம். அதிமாயிருந்தால் ப்ரதோஷமில்லை. ராத்ரியின் ஆதியில் ஷஷ்டீ இரண்டு யாமங்களுக்குமேல் இருந்தால் ப்ரதோஷமில்லை. த்வாதசியில் உதயத்திற்கு முன் ஒரு நாழிகை த்ரயோதசீ இருந்தால் ப்ரதோஷம் என்பது மூலச்லோகத்தின் பொருள்.

स्मृत्यन्तरे — षष्ठी च द्वादशी चैव अर्धरात्रोननाडिका । प्रदोषं तु प्रकुर्वीत तृतीया नवनाडिका इति ॥ गायत्रीजपसङ्कोचे मूलस्मृतिर्गवेषणीया ॥ स्मृतिरत्ने — प्रणवव्याहृतीनां च गायत्र्याः शिरसस्तथा । नित्ये नैमित्तिके काम्ये(यें)व्रते यज्ञक्रतौ तथा ॥ देवतार्चनमन्त्राणां नानध्यायः स्मृतः सदा इति ॥ धर्मोद्योतेऽपि— सौराणां रौद्रमन्त्राणां पैतृकाणां च नैत्यके । जपहोमादिकार्येषु नानध्यायो न काम्यके इति ।

மற்றொருஸ்ம்ருதியில்:- ஷஷ்டியும், த்வாதசியும், அர்த்தராத்ரத்திற்கு ஒரு நாழிகை குறைந்திருந்தால் ப்ரதோஷம். த்ருதீயை ஒன்பது நாழிகை இருந்தால் ப்ரதோஷம் அனுஷ்டிக்க வேண்டும். காயத்ரீ ஜபத்தைச் சுருக்குவதில் ப்ரமாணமான மூலஸ்ம்ருதி தேடக்கூடியதாயுள்ளது. ஸ்ம்ருதிரத்னத்தில்:- ப்ரணவம், வ்யாஹ்ருதிகள், காயத்ரீ, அதன் சிரஸ் இவைகளுக்கும், நித்யம், நைமித்திகம், காம்ய வ்ரதங்கள், யாகங்கள்

இவைகளிலும், தேவதார்ச்சன மந்த்ரங்களுக்கும் எப்பொழுதும் அனத்யாயமில்லை. தர்மோத்யோதத்திலும்:- ஸௌர மந்த்ரங்களுக்கும், ரௌத்ர மந்த்ரங்களுக்கும், பைத்ருக மந்த்ரங்களுக்கும், நித்ய கர்மங்களிலும், ஜபஹோமாதி கார்யங்களிலும், காம்ய கார்யங்களிலும் அனத்யாயமில்லை.

स्मृत्यर्थसारे—सायं सन्ध्यामुपास्य होमं वैश्वदेवमातिथ्यं च कृत्वा भृत्यैः परिवृतो लघु भुक्त्वा स्त्रिया सह सुगन्धानुलेपन-माल्यताम्बूलादि सेवमानः स्वपेत्। न सन्ध्यायां शून्यालये श्मशाने एकवृक्षे चतुष्पथे शिवमातृकायक्षयमस्कन्दभैरवाद्युपेतदेवगृहेषु देवकुले च न स्वपेत् । न धान्ये न योगिदेवविप्राग्रे गुरूणां चोपजीविनां नाशुचिरार्द्रवस्त्रपादो न नग्नः स्वपेत्। प्राक्छिरा वा दक्षिणाशिरा वा इष्टदेवतां नत्वा स्वपेत् । वैणवं दण्डं शयनीयसमीपे निधाय प्रक्षालितपादः कृतरक्षः स्वपेत् प्रदोषापरयामौ विद्यया नयेत् इति।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:- ஸாயங்கால ஸந்த்யோபாஸனம் செய்து, ஹோமம், வைச்வதேவம், அதிதிபூஜை இவைகளைச் செய்து, ப்ருத்யர்களுடன் சேர்ந்து லகுவாய் புஜித்து, ஸ்த்ரீயுடன் நல்ல சந்தனம், புஷ்பம், தாம்பூலம் இவைகளைச் சேவித்துத் தூங்க வேண்டும். ஸந்த்யா காலத்திலும், பாழான வீட்டிலும், ச்மசானத்திலும், ஒரு மரத்திலும், நாற்சந்தியிலும், சிவன், மாதாக்கள், யக்ஷன், யமன், ஸ்கந்தன், பைரவன் முதலியவருடன் கூடிய கோவில்களிலும், தேவ க்ருஹத்திலும் தூங்கக் கூடாது. தான்யத்தின் மேலும், யோகி, தேவதை, ப்ராம்ஹணன் இவரின் முன்னிலும், குருக்கள், உபஜீவிகள் முன்னிலும், அசுத்தனும், ஈரமுள்ள வஸ்த்ரம், கால் இவைகளுள்ளவனும், வஸ்த்ரமில்லாதவனும் தூங்கக் கூடாது. கிழக்கிலாவது, தெற்கிலாவது சிரஸ்ஸை வைத்தவனாய், இஷ்ட தேவதையை நமஸ்கரித்துத் தூங்க வேண்டும். மூங்கில் கழியைப் படுக்கையின் ஸமீபத்தில் வைத்துக்

கொண்டு, கால்களை அலம்பியவனாய், ரக்ஷை செய்து கொண்டு தூங்க வேண்டும். ப்ரதோஷ காலத்தையும், ராத்ரியின் கடைசி யாமத்தையும் வித்யையால் போக்க வேண்டும்.

आचारसारे—शुचिं देशं विविक्तं तु गोमयेनोपलेपयेत् । प्रागुदक्प्रवणे चैव संविशेत्तु सदा बुधः ॥ प्राक्छिरास्तु स्वपेन्नित्यं तथा वै दक्षिणाशिराः । उदक्छिरा न स्वपेत्तु तथा प्रत्यक्छिरा न च ॥ महादेवगृहे वाऽपि मातृवेश्मनि न स्वपेत् । न यक्षनागायतने स्कन्दस्यायतने तथा ॥ कूलच्छायासु च तथा शर्करास्थिषु पांसुषु । न स्वपेच्च तथा दर्भे विना दीक्षां कथञ्चन ॥ धान्यगोदेवविप्राणां गुरूणां च तथोपरि । न चापि भिन्नशयने नाशुचौ नाशुचिस्तथा ॥ नार्द्रवासा न नग्नश्च नोत्तराधरमस्तकः । नाकाशे पर्वते शून्ये न च चैत्यद्रुमे तथा इति । आकाशे - निरावरणप्रदेशे ।

ஆசாரஸாரத்தில்:- சுத்தமாயும், ஏகாந்தமாயுமுள்ள ப்ரதேசத்தைக் கோமயத்தால் மெழுக வேண்டும். எப்பொழுதும், வடகிழக்கில் சாய்வான ப்ரதேசத்தில் படுக்க வேண்டும். நித்யமும், கிழக்கில், அல்லது தெற்கில் தலையை வைத்துத் தூங்க வேண்டும். வடக்கிலும், மேற்கிலும் தலையை வைத்துத் தூங்கக் கூடாது. சிவாலயத்திலும், மாதாக்களின் ஆலயத்திலும் தூங்கக் கூடாது. யக்ஷன். நாகன் இவர்களின் ஆலயம், ஸ்கந்தனின் ஆலயம் இவைகளிலும், கரையிலும், நிழலிலும், சுக்கான், எலும்பு, புழுதி இவைகளிலும் தூங்கக் கூடாது. தீக்ஷையில்லாமல் தர்ப்பத்தின் மேல் எவ்விதத்தாலும் தூங்கக் கூடாது. தான்யம், பசு, தேவதை, ப்ராம்ஹணன் இவர்களின் மேல் ப்ரதேசத்திலும், ஒடிந்த படுக்கையிலும், அசுத்தமான படுக்கையிலும், அசுத்தனாயும், ஈரவஸ்த்ரமுடையவனாயும், வஸ்த்ரமில்லாதவனாயும், வடக்கிலாவது, தாழ்ந்த இடத்திலாவது தலையை

வைத்தவனும், ஆவரணமில்லாத இடத்திலும், மலையிலும், மனிதரில்லாத இடத்திலும், சைத்ய வ்ருக்ஷத்திலும் தூங்கக் கூடாது.

स्मृतिरत्ने – अक्षिरोगी ह्यपस्मारी ज्वरी कुष्ठी क्षयी तथा । श्वासकासीति तैर्युक्तामेकशय्यां तु वर्जयेत् ।। दन्तिदन्तमये विद्युद्दग्धे दग्धे पलाशजे । न शयीत नरो धान्ये शयने पञ्चदारुजे ।। अश्मपीठस्थिते चैव करिभग्नकृते तथा इति ।। पञ्च दारूणि - उदुम्बर वटाश्वत्थ प्लक्ष जम्बूद्रुमाः ।। गार्ग्यः – सुखानुकूले शयने वामपार्श्वे न संविशेत् । आयुर्वामकरे प्रोक्तमुत्तानं बलवर्धनम् । स्वगृहे प्राक्छिराः शेते श्वाशुरे दक्षिणाशिराः । प्रत्यक्छिराः प्रवासे तु न कदाचिदुदक्छिराः इति ।

ஸ்ம்ருதிரத்னத்தில்:- கண்ரோகம், அபஸ்மாரம், ஜ்வரம். குஷ்டம், க்ஷயரோகம். ச்வாஸரோகம், காசரோகம் இவையுள்ளவர்களுடன் சேர்ந்து ஒரு படுக்கையில் படுக்கக் கூடாது. யானையின் தந்தத்தால் செய்யப்பட்டதும், மின்னலால் பொசுங்கியதும், நெருப்பால் பொசுங்கியதும், புரசு மரத்தால் செய்யப்பட்டதுமான கட்டிலில் படுக்கக் கூடாது. தான்யத்தின் மேல் படுக்கக் கூடாது. அத்தி, ஆல், அரசு, இச்சி, நாவல் என்ற ஐந்து வ்ருக்ஷங்களுள் ஒன்றினால் செய்யப்பட்டதும், கருங்கல்லிலமைக்கப்பட்டதும், யானையால் முறிக்கப்பட்ட மரத்தினால் செய்யப் பட்டதுமான கட்டிலில் படுக்கக் கூடாது. கார்க்யர்:- ஸுகமாயும், அனுகூலமாயுமுள்ள படுக்கையில் இடது புறத்தைக் கீழேவைத்துப் படுக்க வேண்டும். இடது கையைக் கீழாகவைத்துப் படுப்பது ஆயுஸ்ஸைக் கொடுக்கும். உயர நோக்கிப் படுப்பது பலத்தை வ்ருத்தி செய்யும். தன் வீட்டில் கிழக்கில் தலையை வைத்துப் படுக்க வேண்டும். மாமனார் வீட்டில் தெற்கில் தலையை வைத்தும், தேசாந்தரத்திலிருக்கும் போது மேற்கில் தலையை வைத்தும் படுக்க வேண்டும். ஒருபொழுதும் வடக்கில் தலையை வைத்துப் படுக்கக் கூடாது.

विष्णुः—सुप्रक्षालितचरणतलो रक्षां कृत्वोदकपूर्णघटादिमङ्गलोपेतामात्माभिरुचितामनुपहतां सुत्रामाणमिति पठन् शय्यामधिष्ठाय रात्रिसूक्तं जपित्वा विष्णुं नमस्कृत्य अपसर्प सर्प भद्रन्त इति श्लोकं जपित्वा इष्टदेवतां स्मृत्वा समाधिमास्थाय अन्यांश्च दैविकान् मन्त्रान् सावित्रीं जपित्वा मङ्गलश्रुतं शङ्खं च शृण्वन्दक्षिणाशिराः स्वपेत् नार्द्रवासाः स्वपेन्न पलाशशयने न पञ्चदारुकृते न गजभग्नकृते न विद्युद्दग्धे नाग्निप्लुष्टे न बालमध्ये न नारीमध्ये न धान्ये न गोगुरुहुताशन देवविप्राणामुपरि नोच्छिष्टो न दिवा न तैलाभ्यक्तशिराः स्वपेन्नादीक्षितः कृष्णचर्मणि इति। श्लोकः – अपसर्प सर्प भद्रं ते दूरं गच्छ महायशः । जनमेजयस्य यज्ञान्ते अस्तीकवचनं स्मरन् इति।

விஷ்ணு:- கால்களை நன்றாய் அலம்பியவனாய், ரக்ஷையைச் செய்து கொண்டு, ஜலம் நிரம்பிய குடம் முதலிய மங்கள வஸ்துக்களுடன் கூடியதும், மனதிற்கு ருசித்ததும், பிறருபயோகிக்காததுமான படுக்கையில் 'ஸூத்ராமாணம்' என்ற ருக்கை ஜபிப்பவனாய் உட்கார்ந்து, ராத்ரி ஸூக்தத்தை ஜபித்து, விஷ்ணுவை நமஸ்கரித்து, 'அபஸர்ப்ப ஸர்ப்ப பத்ரம்தே' என்ற ச்லோகத்தை ஜபித்து, இஷ்ட தேவதையை ஸ்மரித்து, த்யானம் செய்து, வேறான தேவமந்த்ரங்களையும், காயத்ரியையும் ஜபித்து, மங்கள சப்தத்தையும், சங்க சப்தத்தையும் கேட்டு, தெற்கில் சிரஸ்ஸையுடையவனாய்ப் படுக்க வேண்டும். ஈரவஸ்த்ரமுடையவனாய்ப் படுக்கக் கூடாது. புரசு மரத்தால் செய்யப்பட்டதும், ஐந்து மரங்களிலொன்றினால் செய்யப்பட்டதும், யானை முறித்த கட்டையால் செய்யப்பட்டதும், மின்னலால் பொசுக்கப்பட்டதும், அக்னியால் பொசுக்கப்பட்டதுமான சயனத்தில் படுக்கக் கூடாது. சிறுவர்களின் நடுவிலும், ஸ்த்ரீகளின் நடுவிலும், தான்யத்தின் மேலும், பசு, குரு, அக்னி, தேவதை,

வேதியன் இவர்களுக்கு மேல் ப்ரதேசத்திலும், அசுத்தனுயும், பகலிலும், எண்ணெய் தடவியுள்ள தலையுடனும், தூங்கக் கூடாது. தீக்ஷையில்லாதவன் க்ருஷ்ணுஜினத்தில் தூங்கக்கூடாது. 'அபஸர்ப்ப' என்ற ச்லோகம் மூலத்திலுள்ளது. அதன் பொருள் - ஓ ஸர்ப்பனே! ஒதுங்கிச் செல். உனக்கு மங்களமுண்டாகும். ஓ மிக்க கீர்த்தியுள்ளவனே! தூரத்தில் செல்வாயாக. ஜனமேஜய மஹாராஜனின் யாகத்தின் முடிவில் அஸ்தீகரின் வார்த்தையை ஸ்மரித்துக் கொண்டு செல் என்பது.

रत्नावल्याम् — मङ्गल्यं पूर्णकुम्भं तु शिरःस्थाने निधाय तु। वैदिकैर्गारुडैर्मन्त्रैः रक्षां कृत्वा स्वपेन्निशि ।। रात्रिसूक्तं जपेत् स्मृत्वा सर्वांश्च सुखशायिनः । नमस्कृत्याव्ययं विष्णुं समाधिस्थः स्वपेन्निशि इति ।। सुखशायिनोऽपि गोभिलेन दर्शिताः — अगस्तिर्माधवश्चैव मुचुकुन्दो महाबलः । कपिलो मुनिरस्तीकः पञ्चैते सुखशायिनः ।। पादौ प्रक्षाल्य संमृज्य द्विराचम्य शुचिस्ततः । शुष्यत्पादास्यपाणिस्तु संविशेन्माधवं स्मरन् इति ।

ரத்னுவளியில்:- மங்கள்யமான பூர்ண கும்பத்தைத் தலையின் பக்கத்தில் வைத்து, வேதத்திற் சொல்லிய காருட மந்த்ரங்களால் ரக்ஷை செய்து கொண்டு இரவில் தூங்க வேண்டும். ஸுகசாயிகளான எல்லோரையும் ஸ்மரித்து, ராத்ரி ஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். அழிவற்ற விஷ்ணுவை நமஸ்கரித்து, ஸமாதியிலிருந்து இரவில் தூங்க வேண்டும். ஸுகசாயிகளைச் சொல்லுகிறுர். கோபிலர்:- அகஸ்தி, மாதவர், முசுகுந்தர், கபிலர், அஸ்தீகமுனி என்ற இந்த ஐவரும் ஸுகசாயிகளாம். கால்களை அலம்பித் துடைத்து, இருமுறை ஆசமனம் செய்து சுத்தனுய், உலர்ந்த கால்கள், கைகள், முகம் இவைகளையுடையவனுய், மாதவனை ஸ்மரித்தவனுய்த் தூங்க வேண்டும்.

पाठ्यश्लोकौ दर्शितौ चन्द्रिकायाम् – जरत्कारोर्जरत्कार्वां समुत्पन्नो महायशाः । अस्तीकः सत्यसन्धो मां पन्नगेभ्योऽभिरक्षतु ।। नर्मदायै नमः प्रातर्नर्मदायै नमो निशि । नमोऽस्तु नर्मदे तुभ्यं पाहि मां विषसर्पतः इति । दक्षः – प्रदोषपश्चिमौ यामौ वेदाभ्यासेन योजयेत् । यामद्वयं शयानस्तु ब्रह्मभूयाय कल्पते इति ।

படிக்கவேண்டிய ச்லோகங்கள் சொல்லப் பட்டுள்ளன, சந்த்ரிகையில்:- ஜரத்காருவென்னும், ருஷிக்கு, ஜரத்காரு என்பவளிடம் உண்டானவரும், மிக்க கீர்த்தியுடையவரும், ஸத்ய ஸந்தருமான அஸ்தீகர், ஸர்ப்பங்களினின்றும் என்னைக் காக்க வேண்டும். நர்மதைக்குக் காலையில் நமஸ்காரம். நர்மதைக்கு இரவில் நமஸ்காரம். ஓ நர்மதே! உனக்கு நமஸ்காரம் ஆகக்கடவது. நீ என்னை விஷமுடைய ஸர்ப்பத்தினின்றும் காப்பாயாக. தக்ஷர்:- ப்ரதோஷ காலத்தையும், இரவின் கடைசி யாமத்தையும் வேதாப்யாஸத்தோடு சேர்க்க வேண்டும். நடுவிலுள்ள இரண்டு யாமங்கள் படுத்திருப்பவன் ப்ரம்ஹஸாயுஜ்யத்திற்கு அர்ஹனாகிறான்.

मनुः—वेदोदितं स्वकं कर्म नित्यं कुर्यादतन्द्रितः । तद्धि कुर्वन् यथाशक्ति प्राप्नोति परमां गतिम् ।। ऋतुकालाभिगामी स्यात् स्वदारनिरतः सदा । पर्ववर्जं व्रजेच्चैनामनृतौ रतिकाम्यया ।। उपवीती स्त्रियं गच्छेदृतुकाले तु वै बुधः । निवीतमनृतौ कुर्याः तद्दोषस्य निवृत्तये । अमुक्तवसना योषि द्विमुक्तवसनः पुमान् । संविशेतामुभौ मुक्तवसनौ कलिराविशेत् ।। दारप्रियैरलङ्कारैरलङ्कृत्य प्रसन्नधीः । प्रियासमीपे शयने संविशेत् प्रहरद्वयम् इति ।। बोधायनः – जघन्ये रात्रिपर्याये सर्वर्तुगमनमुपदिशन्ति इति ।। वृद्धहारीतः – सुपुत्रकामो यः सोऽपररात्रे स्वदारमैथुनं कुर्या दृतुगमने यज्ञोपवीत मनृतौ तु निवीतम् इति ।। व्यासः– इत्येतदखिलेनोक्तमहन्यहनि वै मया । ब्राह्मणानां कृत्यजात मपवर्गफलप्रदम् ।। नास्तिक्यादथवाऽऽलस्यात् ब्राह्मणो न

करोति यः । स याति नरकान् घोरान् काकयोनिषु जायते । नान्यो विमुक्तये पन्थाः मुक्त्वाऽऽश्रमविधिं स्वकम् । तस्मात् कर्माणि कुर्वीत तुष्टये परमेष्ठिनः इति ॥

## आह्निककाण्डः समाप्तः

—*—

மனு:- வேதத்தில் சொல்லப்பட்டுள்ள தனது தர்மத்தைச் சோம்பலில்லாதவனுய் நித்யமும் செய்ய வேண்டும். அதைச் சக்திக்கியன்றவரை செய்பவன் சிறந்த கதியை (மோக்ஷத்தை) அடைவான். எப்பொழுதும், ருது காலத்திலேயே ஸ்த்ரீயை அடைபவனுயிருக்க வேண்டும். தன் பத்னியிடத்தில் மட்டில் நோக்கமுள்ளவனுயிருக்க வேண்டும். ருதுகாலம் தவிர்த்த காலத்தில் ரதியில் இச்சையிருந்தால் பர்வகாலத்தைத் தள்ளி மற்றக் காலத்தில் தன் மனைவியைச் சேரவேண்டும். அறிந்தவன், ருதுகாலத்தில் உபவீதியாய் மனைவியைச் சேரவேண்டும். மற்றக் காலத்திலானுல், அந்தத் தோஷத்தின் நிவ்ருத்திக்காக நிவீதம் செய்து கொள்ள வேண்டும். ஸ்த்ரீயானவள் வஸ்த்ரத்தை விடாதவளாயும், புருஷன் வஸ்த்ரத்தை விட்டவனுகவும் சேரவேண்டும். இருவரும் வஸ்த்ரமில்லாதவராயின், பாபம் அவர்களை அடையும். மனைவிக்குப் பிரியமான அலங்காரங்களால் தன்னை அலங்கரித்து, தெளிந்த மனமுடையவனுய், படுக்கையில் மனைவியின் ஸமீபத்தில் இரண்டு யாமங்கள் படுக்க வேண்டும். போதாயனர்:- பிந்தியதான ராத்ரி பாகத்தில், எல்லா ருதுகமனங்களையும் விதிக்கின்றனர். வ்ருத்தஹாரீதர் :- எவன் நல்ல புத்ரனை விரும்பியவனே அவன், பின் ராத்ரி பாகத்தில், தன் மனைவியைச் சேரவேண்டும். ருதுகாலகமனத்தில் உபவீதியாயும், மற்றக் காலத்தில் நிவீதியாயும் சேரவேண்டும். வ்யாஸர்:- இவ்விதமாக, ஒவ்வொரு நாளும் செய்ய வேண்டியதும்,

மோக்ஷத்தை அளிப்பதுமான ப்ராம்ஹணர்களின் நித்ய கர்மங்களை முழுவதும் நான் சொல்லியுளேன். எந்தப் ப்ராம்ஹணன், நாஸ்திக்யத்தாலோ, சோம்பலினுலோ இவைகளைச் செய்யவில்லையோ அவன் பயங்கரமான-நரகங்களை அடைவான். காக்கைப் பிறவிகளில் பிறப்பான். தனக்குரிய வர்ணாச்ரம விதியைத் தவிர்த்து, முக்திக்கு வேறு வழியில்லை. ஆகையால் பரமேச்வரனின் ப்ரீதிக்காக, அவனவன் கர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும்.

ஆஹ்நிக தர்ம நிரூபணம் என்னும்

இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று.

ஆஹ்நிககாண்டம் முற்றும்.

श्रीगुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम् - आह्निककाण्डः

## अनुबन्धः - १. अवशिष्टधर्माः

# ஸ்ம்ருதிமுக்தாபலம் - ஆஹ்நிக காண்டம் - அநுபந்தம்-1

## பொது நன்னெறி

—*—

तत्र मनुः—कृत्तकेशनखश्मश्रुर्दान्तः शुक्लाम्बरः शुचिः । स्वाध्याये चैव युक्तः स्यान्नित्यमात्महितेषु च ।। वैणवीं धारयेद्यष्टिं सोदकं च कमण्डलुम् । यज्ञोपवीतं वेदं च शुभे रौक्मे च कुण्डले ।। कमण्डलुस्ताम्रादिमयः । 'कलौ पञ्च न कुर्वीत भ्रातृजायां कमण्डलुम्' इति मृन्मयनालिकेरकमण्डलुनिषेधात् । वेदः - दर्भपुञ्जः ।। स एव— नेक्षेतोद्यन्तमादित्यं नास्तं यन्तं कदाचन । नोपसृष्टं न वारिस्थं न मध्यं नभसो गतम् ।। उपसृष्टं - राहुग्रस्तम् । इदं चन्द्रस्याप्युपलक्षणमिति वदन्ति । मृदं गां दैवतं विप्रं घृतं मधु चतुष्पथम् । प्रदक्षिणानि कुर्वीत प्रज्ञातं च वनस्पतिम् ।। मृदम् - मृत्कूटम् । प्रज्ञातम् - प्रसिद्धम् ।

## மீதியுள்ள ஸகல தர்மங்கள்

இனி மீதியுள்ள ஸகல தர்மங்களும் சொல்லப்படுகின்றன. அதில், மனு:- க்ருஹஸ்தனான ப்ராம்ஹணன் மயிர், நகம், மீசை இவைகளை வபனம் செய்து கொண்டவனாயும், தபஸ்ஸின் க்லேசத்தை ஸஹிப்பவனாயும், வெளுத்த வஸ்த்ரமுடையவனாயும், சுத்தனாயும், வேதாத்யயனத்திலும், நித்யம் தனக்கு ஹிதமான கார்யங்களிலும் கவனமுடையவனாகவும்

இருக்க வேண்டும். மூங்கிலின் கழியையும், ஜலத்துடன் கூடிய கமண்டலுவையும், பூணூலையும், வேதத்தையும் (தர்ப்பமுஷ்டி), அழகிய ஸ்வர்ண குண்டலங்களையும் தரிக்க வேண்டும். இங்கே கமண்டலு என்பது தாம்ரம் முதலியதால் செய்ததாம். (ஏனெனில்) 'கலௌபஞ்ச+ கமண்டலும்' என்று மண் கமண்டலுவுக்கும், தேங்காய் கமண்டலுவுக்கும் நிஷேதமுள்ளது மனுவே:- ஸூர்யனை உதயத்திலும், அஸ்தமயத்திலும், ராஹுக்ரஹண காலத்திலும், ஜலத்திலும், வானத்தின் நடுவிலும் பார்க்கக் கூடாது. இது சந்த்ரனுக்கும் உபலக்ஷணம் என்கின்றனர். மண் குவியலையும், பசுவையும், தேவபிம்பத்தையும், ப்ராம்ஹணனையும், நெய்யையும், தேனையும், நாற்சந்தியையும், ப்ரஸித்தமான மரத்தையும் வழியிற் செல்லும்போது ப்ரதக்ஷிணமாய்ச் செல்ல வேண்டும்.

नाग्निं मुखेनोपधमेन्नग्नां नेक्षेत च स्त्रियम्। नामेध्यं प्रक्षिपेदग्नौ न च पादौ प्रतापयेत्।। अमेध्यं - अशुद्धं वस्तु।। अधस्तान्नोपदध्याच्च न चैनमतिलङ्घयेत्। न चैनं पादतः कुर्यात् न प्राणाबाधमाचरेत्।। प्राणाबाधं - आत्मनः परस्य वा पीडाम्।। नाश्नीयात् सन्धिवेलायां न गच्छेन्नापि संविशेत्। न चैव विलिखेद्भूमिं नात्मनोऽ(भि)पहरेत् स्रजम्।। आत्मार्थे स्रजं स्वयं न हरेत्।। नाप्सु मूत्रं पुरीषं वा निष्ठीवं वा समुत्सृजेत्। अमेध्यलिप्तमन्यद्वा लोहितं वा विषाणि वा।। नैकः स्वपेच्छून्यगृहे न शयानं प्रबोधयेत्। नोदक्ययाऽभिभाषेत न यज्ञमवृतो व्रजेत्।। न शयानं - श्रेयांसं सुप्तम्। न श्रेयांसं प्रबोधयेदिति विशेषस्मरणात्। न यज्ञमवृतः - आर्त्विज्यं करिष्यन्।

அக்னியை வாயால் ஊதக்கூடாது. வஸ்த்ரமில்லாத ஸ்த்ரீயைப் பார்க்கக் கூடாது. அக்னியில் அசுத்தமான வஸ்துவைப் போடக் கூடாது. அக்னியில் கால்களைக் காய்ச்சக் கூடாது. அக்னியைக் கட்டில் முதலியதின் கீழே வைக்கக் கூடாது. அக்னியைத் தாண்டக்கூடாது.

அக்னியைக் கால்பக்கத்தில் வைக்கக் கூடாது. தனக்காவது பிறனுக்காவது ப்ராணனுக்குத் தொந்தரை செய்யும் கார்யத்தைச் செய்யக் கூடாது. ஸந்த்யாகாலத்தில் புஜிக்கக் கூடாது, வழி நடக்கவும் கூடாது, நித்ரை செய்யவும் கூடாது. பூமியில் கோடு முதலியவை வரையக் கூடாது. தான் தரித்த மாலையைத் தானுகவே அகற்றக் கூடாது. ஜலத்தில், மூத்ரம், மலம், கோழை, அசுத்தத்தால் பற்றப்பட்ட வஸ்து, ரக்தம், விஷங்கள் இவைகளைப் போடக்கூடாது. ஜனங்களில்லாத வீட்டில் ஒருவனுய்த் தூங்கக் கூடாது. தூங்குகின்றவனை எழுப்பக் கூடாது. ரஜஸ்வலையுடன் பேசக் கூடாது. வரிக்கப்படாமல் யாகத்திற்குச் செல்லக்கூடாது. தூங்குகின்றவனை எழுப்பக்கூடாதென்பதில் தன்னைவிட பெரியோரை என்று சேர்க்க வேண்டும். அவ்விதம் விசேஷஸ்ம்ருதி உள்ளது. ஆர்த்விஜ்யம் செய்யப் போகிறவன் வரிக்கப்படாமல் போகக் கூடாது. வரிக்கப்படாவிடினும் தர்சனத்திற்குப் போகலாம்.

न वारयेद्गां धयन्तीं नचाचक्षीत कस्यचित्। न दिवीन्द्रायुधं दृष्ट्वा कस्यचिद्दर्शयेत् बुधः ।। नैकः प्रपद्येताध्वानं न चिरं पर्वते वसेत्। न कुर्वीत वृथा चेष्टां न वार्यञ्जलिना पिबेत् ।। न नृत्येदथवा गायेन्न वादित्राणि वादयेत्। नास्फोटयेन्न च क्ष्वेलेत् संरक्तोऽपि न रावयेत् ।। स्फोटः - अङ्गुलिभङ्ग जातः शब्दः । क्ष्वेलः - अङ्गुल्यास्यसंयोगजातः शब्दः । संरक्तोऽपि - कामपरवशोऽपि मैथुनादिषु न रावयेत् - न शब्दं कुर्यात्। नृत्तादिविधायकवचनं प्रतिलोमशूद्रादिविषयमिति स्मृतिरत्ने ।

பாலை கன்றுக்கு ஊட்டுகிற பசுவைக் பிறனுக்குக் காட்டக் கூடாது. ஆகாசத்தில் வில்லைக் கண்டால் பிறனுக்குக் காண்பிக்கக் கூடாது. ஒருவனுய் வழியிற் செல்லக் கூடாது. வெகுகாலம் மலையில் வஸிக்கக் கூடாது. வீண் வ்யாபாரத்தைச் செய்யக் கூடாது. அஞ்சலியால் ஜலத்தைப் பருகக் கூடாது. கூத்தாடக் கூடாது,

பாடக்கூடாது. வாத்யங்களை வாசிக்கக் கூடாது. விரல்களை மடித்து, சப்தம் செய்யக் கூடாது. வாயில் விரலைச் சேர்த்துச் சப்தம் செய்யக் கூடாது. காமபரவசனாயினும் ஸ்த்ரீ ஸங்காதிகாலத்தில் சப்திக்கக் கூடாது. கூத்தாடுதல் முதலியதை விதிக்கும் வசனம் ப்ரதிலோம சூத்ராதிவிஷயம் என்று ஸ்ம்ருதிரத்னத்தில் உள்ளது.

न पादौ धावयेत् कांस्ये कदाचिदपि भाजने। उपानहौ च वासश्च धृतमन्यैर्न धारयेत् ।। उपवीतमलङ्कारं स्रजं करकमेव च ।। नाविनीतैर्व्रजेद्धुर्यैर्न च क्षुद्व्याधिपीडितैः ।। न भिन्नशृङ्गाक्षिखुरैर्न वालधिविरूपितैः ।। धुर्यैः - अश्वादिभिः ।। विनीतैस्तु व्रजेन्नित्य माशुगैर्लक्षणान्वितैः । वर्णरूपोपसंपन्नैः प्रतोदेनातुदन् भृशम् ।। बालातपं प्रेतधूमं वर्जयेद्भिन्नमासनम् । न छिन्द्यान्नखरोमाणि दन्तैर्नोत्पाटयेन्नखान्।। न मृल्लोष्टं च मृद्नीयान्न छिन्द्यात् करजैस्तृणम्। न कर्म निष्फलं कुर्यान्नायत्यामसुखोदयम्।। आयत्यां - कालान्तरे।।

வெண்கலப் பாத்ரத்தில் ஒருகாலும் கால்களை அலம்பக் கூடாது. பிறர் உபயோகித்த பாதரக்ஷை, வஸ்த்ரம், உபவீதம், அலங்காரம், மாலை, கமண்டலு இவைகளை உபயோகிக்கக் கூடாது. பழக்கப்படாததும், பசி, பிணி இவைகளால் வருந்தியதும், ஒடிந்த கொம்பு, கண், குளம்பு இவைகளையுடையதும், வாலில்லாததுமான குதிரை முதலிய வாஹனங்களால் செல்லக் கூடாது. பழக்கப்பட்டவையும், சீக்ரம் செல்லுகின்றவையும், நல்ல லக்ஷணமுடையவையும், நல்லவர்ணம் ரூபம் இவையுடன் கூடியவையுமான குதிரை முதலியவையால் செல்ல வேண்டும். போகும்போது கொரடா முதலியதால் அதிகமாய்த் தொந்தரை செய்யக் கூடாது. இளம் வெயில், பிணப்புகை, ஒடிந்த ஆஸனம் இவைகளை வர்ஜிக்க வேண்டும். நகங்களையும் ரோமங்களையும் வெட்டக் கூடாது. பற்களால் நகங்களைப் பெயர்க்கக் கூடாது. காரணமில்லாமல் மண்கட்டியை உடைக்கக் கூடாது.

நகங்களால் புல்லைக் கிள்ளக் கூடாது. ப்ரயோஜன மற்ற கார்யத்தைச் செய்யக் கூடாது. வரும் காலத்தில் துக்கத்தைக் கொடுக்கும் கார்யத்தைச் செய்யக் கூடாது.

लोष्टमर्दी तृणच्छेदी नखखादी च यो नरः। स विनाशं व्रजत्याशु सूचकोऽशुचिरेव च॥ न विग्रह कथां कुर्यात् बहिर्माल्यं न धारयेत्। गवां च यानं पृष्ठेन सर्वथैव विगर्हितम्॥ अद्वारेण तु नातीयात् ग्रामं वा वेश्म वाऽऽवृतम्॥ रात्रौ तु वृक्षमूलानि दूरतः परिवर्जयेत्॥ नाक्षैः क्रीडेत् कदाचिच्चस्वयं नोपानहौ हरेत्॥ अचक्षुर्विषयं दुर्गं न प्रपद्येत कर्हिचित्। न विण्मूत्रमुदीक्षेत न बाहुभ्यां नदीं तरेत्। अधितिष्ठेन्न केशांस्तु न भस्मास्थि कपालिकाः॥ न कार्पासं च न तुषान् दीर्घमायुर्जिजीविषुः। अधितिष्ठेत् पदा। कपालिकाः - भिन्नभाण्ड शकलान्॥

மண்கட்டியை உடைப்பவன், புல்லைக்கிள்ளுகின்றவன், நகத்தைக் கடித்துமெல்பவன், கோட் சொல்பவன், உள் வெளி சௌசமில்லாதவன் எவனோ, அவன் விநாசத்தை அடைகிறான். சாஸ்த்ரீய விஷயங்களிலும், லௌகிக விஷயங்களிலும் பிடிவாதத்துடன் பேசக்கூடாது. குடுமியின் வெளியில் புஷ்பத்தைத் தரிக்கக் கூடாது. எருது(பசுக்)களின் முதுகில் ஏறிச்செல்வது எவ்விதத்தாலும் நிந்திக்கப்பட்டுள்ளது. சுவர் முதலியதால் வளைக்கப்பட்ட க்ராமம் அல்லது வீட்டை குறுக்கு வழியில் நுழையக் கூடாது. ராத்ரியில் மரத்தின் அடியை முற்றிலும் பரிஹரிக்க வேண்டும். பாச்சிக் காய்களால் ஒருகாலும் விளையாடக் கூடாது. தன் பாதரக்ஷைகளைத் தானாகவே கைகளால் கொண்டு போகக் கூடாது. கண்ணுக்குப் புலப்படாத (அடர்ந்துள்ள) காடு முதலியதை ஒருகாலும் அடையக் கூடாது. மல மூத்ரங்களைப் பார்க்கக் கூடாது. கைகளால் நதியைத் தாண்டக் கூடாது. மயிர், சாம்பல், எலும்பு, ஓட்டுச் சல்லிகள், பருத்தி, உமி இவைகளின் மேல் காலால் வெகுகாலம் பிழைத்திருக்க விரும்பியவன். நிற்கக் கூடாது.

न संवसेच्च पतितैर्न चण्डालैर्न पुल्कसैः । न मूर्खैर्नावलिप्तैश्च नान्त्यैर्नान्त्यावसायिभिः ॥ अन्त्याः - प्रतिलोमाः । अन्त्यावसायिनः - श्वपाकादयः । न शूद्राय मतिं दद्यान्नोच्छिष्टं न हविष्कृतम् । न चास्योपदिशेद्धर्मं न चास्य व्रतमादिशेत् ॥ यस्तस्य धर्ममाचष्टे यश्चैवादिशति व्रतम् । सोऽसंवृतं नाम तमः सह तेनैव गच्छति ॥ न संहताभ्यां पाणिभ्यां कण्डूयेतात्मनः शिरः । न स्पृशेच्चैतदुच्छिष्टो न च स्नायाद्विना ततः ॥ ततः - शिरसा विना । अदृष्टार्थ स्नानविषयमेतत् ।

பதிதர், சண்டாளர், புல்க்கஸர், மூர்க்கர், பணம் முதலியதால் கர்வமுடையவர், ப்ரதிலோமஜாதீயர்கள், ச்வபாகாதிகள் இவர்களுடன் நெருங்கிப் பழகக் கூடாது. சூத்ரனுக்கு நன்மையை உரைக்கக் கூடாது. உச்சிஷ்டத்தைக் கொடுக்கக் கூடாது. ஹவிஸ்ஸின் மீதியையும் கொடுக்கக் கூடாது. இவனுக்குத் தர்மத்தை உபதேசிக்கக் கூடாது. ப்ராயச் சித்தரூபமான வ்ரதத்தையும் உபதேசிக்கக் கூடாது. எவன் சூத்ரனுக்குத் தர்மத்தைச் சொல்லுகிறானோ, வ்ரதத்தை உபதேசிக்கின்றானோ அவன், சூத்ரனுடன் கூடவே 'அஸம்வ்ருதம்' (மூடாதஅ

) நரகத்தில் முழுகுகிறான். சேர்க்கப்பட்டுள்ள இரண்டு கைகளாலும் தன் தலையைச் சொரியக் கூடாது. அசுத்தனாய்த் தலையைத் தொடக் கூடாது. அழுக்கைப் போக்கும் ஸ்நானத்தைத் தலையை நனைக்காமலும் செய்யலாம்.

केशग्रहप्रहारांश्च शिरस्येतानि वर्जयेत् । शिरःस्नातस्तु तैलेन नाङ्गं किञ्चिदपि स्पृशेत् ॥ देवतानां गुरो राज्ञः स्नातकाचार्ययोस्तथा । नाक्रामेत् कामतश्छायां बभ्रुणो दीक्षितस्य च ॥ बभ्रुः - कपिला गौः । छाग इत्यन्ये ॥ मध्यन्दिने चार्धरात्रे श्राद्धं भुक्त्वा च सामिषम् ।

रक्तमेव च। श्लेष्मनिष्ठ्यूतवान्तानि नाधितिष्ठेच्च कामतः ॥ उद्वर्तनम् - शरीरात् त्यक्तं मलम्। अपस्नानं - मृतस्नानजलम्।

தலையில் மயிரைப் பிடித்தல் அடித்தல் இவைகளை வர்ஜிக்க வேண்டும். தலையில் எண்ணெய் சேர்த்து ஸ்நானம் செய்தால், பிறகு தைலத்தால் மற்ற அங்கங்களை ஸ்பர்சிக்கக் கூடாது. தேவபிம்பங்கள், பிதா முதலிய குருக்கள், அரசன், ஸ்நாதகன், ஆசார்யன், பப்ரு, தீக்ஷிதன் இவர்களின் நிழலை, புத்திபூர்வமாய் மிதிக்கக் கூடாது. பப்ரு - காராம்பசு, ஆடு என்று சிலர். மத்யாஹ்னத்திலும், அர்த்தராத்ரத்திலும், மாம்ஸத்துடன் கூடிய ச்ராத்தம் புஜித்த பிறகும், ஸந்த்யாகாலங்களிலும் நாற்சந்தியில் இருக்கக் கூடாது. உடம்பில் தேய்த்துக் கொண்ட மாவு முதலியது, ம்ருதஸ்தான ஜலம், மலம், மூத்ரம், ரக்தம், கோழை, உமிழ்ந்த தாம்பூலம் முதலியது, வாந்தி செய்யப்பட்ட வஸ்து இவைகளின் மேல் புத்தி பூர்வமாய் நிற்கக் கூடாது.

वैरिणं नोपसेवेत सहायं चैव वैरिणः । अधार्मिकं तस्करं च परस्यैव च योषितम् । क्षत्रियं चैव सर्पं च ब्राह्मणं च बहुश्रुतम् । नावमन्येत वै भूष्णुः कृशानपि कदाचन ॥ एतत्त्रयं हि पुरुषं निर्दहेदवमानितम् ॥ नात्मानमवमन्येत पूर्वाभिरसमृद्धिभिः । आमृत्योः श्रियमाकाङ्क्षेन्नैनां मन्येत दुर्लभाम्॥ सत्यं ब्रूयात् प्रियं ब्रूयात् न ब्रूयात् सत्यमप्रियम्। प्रियं च नानृतं ब्रूयादेष धर्मः सनातनः ॥ भद्रं भद्रमिति ब्रूयात् भद्रमित्येव वा वदेत्। शुष्कवैरं विवादं च न कुर्यात् केनचित्सह।

சத்ருவையும், சத்ருவின் ஸஹாயனையும், பாபசீலனையும், திருடனையும், பிறனின் ஸ்த்ரீயையும் ஸேவிக்கக் கூடாது. வ்ருத்தியை அடையவிரும்பியவன். இளைத்தவராயினும் க்ஷத்ரியன், பாம்பு, சாஸ்த்ரமதிகமாயறிந்த ப்ராம்ஹணன் இவர்களை

ஒருகாலும் அவமதிக்கக் கூடாது. அவமதிக்கப்பட்ட இம்மூன்றும், மனிதனைத் தஹித்துவிடும். முன்செய்த பாபங்களால் தனக்குக் கஷ்டம் நேர்ந்ததென்று தன்னை அவமதித்துக் கொள்ளக் கூடாது. மரணம் வரையில் ஸம்பத்தை எதிர்பார்த்து முயற்சியைச் செய்ய வேண்டும். ஸம்பத்து கிடைக்காதென்று நினைக்க கூடாது. உண்மையானதையே பேசவேண்டும். ப்ரியமாகியதையே பேசவேண்டும். உண்மையானாலும் அப்ரியமாகியதைப் பேசக்கூடாது. ப்ரியமானாலும் பொய்யைப் பேசக் கூடாது. இது நித்யமான தர்மமாம். மங்களமானதையும், மங்களம் மேலானது என்றுவது, மங்களம் என்றுவது சொல்ல வேண்டும். ப்ரயோஜன மற்ற சண்டை வ்யவஹாரம் இவைகளை ஒருவனுடனும் செய்யக் கூடாது.

शुभाशुभेषु सर्वत्र भद्रं भद्रमितीरयेत् ।। नातिकल्यं नातिसायं नैको न वृषलैः सह ।। हीनाङ्गानतिरिक्ताङ्गान् विद्याहीनान् वयोधिकान् । रूपद्रविणहीनांश्च जातिहीनांश्च नाक्षिपेत् ।। न स्पृशेत् पाणिनोच्छिष्टो विप्रो गोब्राह्मणानलान् । न चापि पश्येदशुचिः स्वस्थो ज्योतिर्गणान् दिवि ।। अनातुरः स्वानि खानि न स्पृशेदनिमित्ततः । रोमाणि च रहस्यानि सर्वाण्येतानि वर्जयेत् ।। मैत्रं प्रसाधनं स्नानमञ्जनं दन्तधावनम् । पूर्वाह्ण एव कुर्वीत देवतानां च पूजनम् ।। मैत्रं - उच्चारः ।

சுபாசுபவிஷயங்கள் எல்லாவற்றிலும் மங்களம் மங்களம் என்றே சொல்ல வேண்டும். அதிகாலையிலும், அதிமாலையிலும், நடு மத்யாஹ்னத்திலும், அறியப் படாதவனுடனும், ஒருவனாயும், சூத்ரருடனும் செல்லக் கூடாது. அங்கக் குறைவுடையவர், அதிகாங்க முடையவர், வித்யையில்லாதவர், வயததிகமானவர், ரூபம் குறைந்தவர், பணம் குறைந்தவர், ஜாதிகுறைந்தவர் இவர்களை அவமதிக்கக் கூடாது. அசுத்தனாயிருக்கும் ப்ராம்ஹணன், பசு, ப்ராம்ஹணன், அக்னி இவர்களைக் கையால் தொடக் கூடாது. அசுத்தனாயிருப்பவன்,

ஸ்வஸ்தனுயிருந்தால், ஆகாசத்திலுள்ள ஸூர்யன் முதலிய ஒளிக் கூட்டங்களைப் பார்க்கக் கூடாது. வ்யாதியில்லாதவன், காரணமின்றி, கண், மூக்கு முதலிய இந்த்ரியங்களைத் தொடக் கூடாது. ரஹஸ்ய ஸ்தானங்களிலுள்ள ரோமங்களையும் தொடக் கூடாது. மலவிஸர்ஜனம், அலங்காரம் ஸ்நானம், மைதீட்டல், தந்ததாவனம், தேவபூஜை இவைகளைப் பகலின் முன்பாகத்திலேயே செய்ய வேண்டும்.

दैवतान्यभिगच्छेत्तु धार्मिकांश्च द्विजोत्तमान्। ईश्वरं चैव रक्षार्थं गुरूनेव च पर्वसु। ईश्वरं - राजानम्।। यद्यत् परवशं कर्म तत्तद्यत्नेन वर्जयेत्। यद्यदात्मवशं तु स्यात्तत् सेवेत प्रयत्नतः।। सर्वं परवशं दुःखं सर्वमात्मवशं सुखम्। एतद्विद्यात् समासेन लक्षणं सुखदुःखयोः।। आचार्यं च प्रवक्तारं पितरं मातरं गुरुम्। न हिंस्यात् ब्राह्मणं गां च सर्वांश्चैव तपस्विनः।। न हिंस्यात् - प्रतिकूलं न कुर्यात्।

தேவதாபிம்பங்களையும், தர்மிஷ்டரான ப்ராம்ஹணர்களையும், காப்பதற்காக அரசனையும், பெரியோரையும் தர்சிக்கப் பர்வகாலங்களில் செல்ல வேண்டும். எதெது பராதீனமான கார்யமோ அததை முயற்சியுடன் தவிர்க்க வேண்டும். எதெது தன் தேஹத்தால் ஸாத்யமோ அததை ப்ரயத்னத்துடன் ஸேவிக்க வேண்டும். பராதீனமாகியது எதுவும் துக்ககாரணம். ஸ்வாதீனமாகியது எதுவும் ஸுககாரணமாம், ஸுகதுக்கங்களின் இந்தக் காரணத்தைச் சுருக்கமாய் அறியவும், உபநயனம் செய்து வேதத்தைக் கற்பித்த ஆசார்யனையும், வேதார்த்தத்தைக் கற்பித்த ப்ரவக்தாவையும், பிதாவையும், மாதாவையும், குருவையும், ப்ராம்ஹணரையும், பசுக்களையும், எல்லாத் தபஸ்விகளையும் ஹிம்ஸிக்கக் கூடாது. (ப்ரதிகூலம் செய்யக் கூடாது).

नास्तिक्यं वेदनिन्दां च देवतानां च कुत्सनम्। द्वेषं दम्भं च मानं च क्रोधं तैक्ष्ण्यं च वर्जयेत्।। परस्य दण्डं नोद्यच्छेत् क्रुद्धो नैव

निपातयेत्। अन्यत्र पुत्राच्छिष्याद्वा शिष्ट्यर्थं ताडयेत्तु तौ। ब्राह्मणायापगूर्यैव द्विजातिर्वधकाङ्क्षया। शतं वर्षाणि तामिस्रे नरके परिवर्तते ॥ अपगूर्य - दण्डमुद्यम्य। ताडयित्वा तृणेनापि संरम्भान्मतिपूर्वकम्। एकविंशतिमा जातीः पापयोनिषु जायते ॥ अयुध्यमानस्योत्पाद्य ब्राह्मणस्यासृ-गङ्गतः। दुःखं सुमहदाप्नोति प्रेत्याप्राज्ञतया नरः ॥ यावतः शोणितं पांसून् सङ्गृह्णाति द्विजन्मनः। तावतोऽब्दानमुत्रान्यैः शोणितोत्पादकोऽद्यते ॥ अन्यैः - इह लोके हिंसितैः ॥

நாஸ்திக்யம், வேதங்களை நிந்தித்தல், தேவதைகளை நிந்தித்தல், மாத்ஸர்யம், தம்பம், கர்வம், கோபம், க்ரௌர்யம் இவைகளை தவிர்க்க வேண்டும். கோபமுடையவனுய்ப் பிறனை அடிப்பதற்குக் கழியை ஓங்கக் கூடாது. அடிக்கவும் கூடாது. புத்ரன், சிஷ்யன் இவரைத் தவிர்த்து. குற்றமுடையவராயின், இவ்விருவரை மட்டில் சிக்ஷிப்பதற்காக கயிறு அல்லது மூங்கிலின் சிம்பு இவைகளால் அடிக்கலாம். ப்ராம்ஹணன், ப்ராம்ஹணனை அடிக்க விருப்பத்தால் கழி முதலியதை ஓங்கினுல், தாமிஸ்ரமென்னும் நரகத்தில் நூறு வருஷம் முழுவதும் சுற்றுவான். கோபத்தால், புத்தி பூர்வமாய்ப் புல்லால் அடித்தானுலும், இருபத்தொரு பிறவிகளில் நாய் முதலிய பிறவிகளில் பிறப்பான். மனிதன் அறியாமையால், சண்டை செய்யாத ப்ராம்ஹணனின் அங்கத்திலிருந்து ரக்தத்தை வெளியிடச் செய்தால், பரலோகத்தில் மிகப் பெரியதான துக்கத்தை அடைவான். அடிக்கப்பட்ட ப்ராம்ஹணனின் அங்கத்தினின்று சிந்திய ரக்தம் பூமியில் எவ்வளவு பரமாணுக்களைச் சேருகின்றதோ, அவ்வளவு வருஷங்கள்வரை, பரலோகத்தில், இவ்வுலகில் ஹிம்ஸிக்கப்பட்டவரால், ரக்தத்தை வெளியிட்டவன் புஜிக்கப்படுகிறுன். (நாய் நரி முதலியவையால் என்றும் மற்றொரு வ்யாக்யானம்)

न पाणिपादचपलो न नेत्रचपलोऽनृजुः । न स्याद्वाक्चापलश्चैव न परद्रोहकर्मधीः ।। ऋत्विक् पुरोहिताचार्य मातुलातिथिसंश्रितैः । बालवृद्धातुरैर्वैद्यैर्ज्ञाति सम्बन्धिबान्धवैः । मातापितृभ्यां जामीभिर्भ्रात्रा पुत्रेण भार्यया ।। दुहित्रा दास वर्गेण न विवादं समाचरेत् । एतैर्विवादं सन्त्यज्य सर्वपापैः प्रमुच्यते ।। जामीभिः - भगिनीभिः । 'तस्मादेतैरधिक्षिप्तः सहेतासंज्वरः सदा इति ।

கைகள், கால்கள், கண்கள், வாக்கு இவைகளின் சாபலத்தை விடவேண்டும். உபயோகமில்லாத வஸ்துக்களை எடுப்பது முதலியது கையின் சாபலம், வீணாய்த்திரிவது முதலியது பாத சாபலம். பரஸ்த்ரீகளைப் பார்ப்பது முதலியது நேத்ர சாபலம். கெட்ட வார்த்தையைப் பேசுவது வாயின் சாபலம். குடிலனாய் இருக்கக் கூடாது. பிறரை ஹிம்ஸிப்பதற்கான கார்யத்தையும், எண்ணத்தையும் செய்யக் கூடாது. ருத்விக்கு, புரோஹிதன் (சாந்தி முதலியதைச் செய்விப்பவன்), ஆசார்யன், அம்மான், அதிதி, அண்டியவன், சிறுவன், வ்ருத்தன், ரோகி, வைத்யர், ஜ்ஞாதிகள் (தகப்பனைச் சேர்ந்தவர்), ஸம்பந்திகள் (மாப்பிள்ளை, மைத்துனன் முதலியவர்), பாந்தவர் (தாயைச் சேர்ந்தவர்), மாதா, பிதா, ஜாமிகள் (பகினீ, நாட்டுப் பெண் முதலியவர்), ப்ராதா, புத்ரன், பார்யை, பெண், தாஸர்கள் இவர்களுடன் விவாதம் செய்யக் கூடாது. இவர்களுடன் விவாதம் செய்யாவிடில் ஸகல பாபங்களாலும் விடப்படுவான். ஆகையால் இவர்களால் அதிக்ஷேபமடைந்தவனாயினும் ஸந்தாபமில்லாமல் எப்பொழுதும் பொறுமையுடனிருக்க வேண்டும்.

याज्ञवल्क्यः — देवर्त्विक्स्नातकाचार्यराज्ञां छायां परस्त्रियाः । नाक्रामेद्रक्तविण्मूत्रष्ठीवनोद्वर्तनानि च । विप्राहिक्षत्रियात्मानो नावज्ञेयाः कदाचन । आमृत्योः श्रियमन्विच्छेत् न कञ्चिन्मर्मणि स्पृशेत् । विप्रः बहुश्रुतः । अहिः - सर्पः ।। गोब्राह्मणानलान्नानि

नोच्छिष्टो न पदा स्पृशेत्। न निन्दाताडने कुर्यात् पुत्रं शिष्यं च ताडयेत्। पादेन त्वनुच्छिष्टोऽपि।

**யாக்ஞவல்க்யர்:-** தேவதாபிம்பங்கள், ருத்விக்கு, ஸ்நாதகன், ஆசார்யன், அரசன், அன்யனுடைய ஸ்த்ரீ இவர்களின் நிழலை மிதிக்கக் கூடாது. ரக்தம், விஷ்டை, மூத்ரம், கோழை, தேஹத்தில் தேய்த்த கல்க்கங்கள், இவை முதலியவைகளையும் மிதிக்கக் கூடாது. ப்ராம்ஹணன் (மிகக்கற்றவன்), ஸர்ப்பம், க்ஷத்ரியன் இவர்களையும், தன்னையும் அவமதிக்கக் கூடாது. மரணம் வரையில் ஸம்பத்தை எதிர்பார்க்க வேண்டும். எவனுடைய தோஷத்தையும் வெளியிடக் கூடாது. பசு, ப்ராம்ஹணன், அக்னி, அன்னம் (சாப்பிடக் கூடிய வஸ்து), இவைகளை அசுத்தனாயிருந்து தொடக் கூடாது. சுத்தனாயிருப்பவனும் காலால் தொடக் கூடாது. ஒருவனையும் நிந்திக்கக் கூடாது, அடிக்கக் கூடாது. புத்ரனையும், சிஷ்யனையும் சிக்ஷைக்காக (வித்யையைக் கற்பிப்பதற்காக) அடிக்கலாம்.

मातापित्रतिथिभ्रातृजामिसम्बन्धिमातुलैः। वृद्धबालातुराचार्य वैद्यसंश्रितबान्धवैः॥ ऋत्विक् पुरोहितापत्य भार्यादाससनाभिभिः। विवादं वर्जयित्वा तु सर्वान् लोकान् जयेद्गृही॥ परशय्यासनोद्यान गृहयानानि वर्जयेत्। अदत्तान्यग्निहीनस्य नान्नमद्यादनापदि इति।

மாதா, பிதா, அதிதி, ப்ராதா, ஜாமிகள், (ஸுமங்கலிகள்), ஸம்பந்திகள், மாதுலன், வ்ருத்தன் (70 - வயதுக்கு மேலானவன்), பாலன் (16 - வயதிற்குட்பட்டவன்), ரோகமுள்ளவன், ஆசார்யன் (உபநயனம் செய்தவன்), வைத்யன் (வித்வான், அல்லது வைத்யன்), தன்னை அண்டிப்பிழைப்பவன், பாந்தவர் (மாதாவையும் பிதாவையும் சேர்ந்த உற்றார்), ருத்விக்கு, புரோஹிதன், பிள்ளை, பெண்கள், பார்யை, வேலைக்காரன், ஸநாபிகள் (ஸஹோதரர்கள்) என்ற இவர்களுடன் வாயால்

கலஹம் செய்யாமலிருந்தால், க்ருஹஸ்தன் புண்ய லோகங்களெல்லாவற்றையும் அடைவான். படுக்கை, ஆஸனம், தோட்டம், வீடு, வாஹனம் இவைகள் பிறருடையதாயின், அவர் அனுமதியின்றி அவைகளை அனுபவிக்கக் கூடாது. அக்னியில்லாதவனின் அன்னத்தை ஆபத்தில்லாத காலத்தில் புஜிக்கக் கூடாது.

शाण्डिल्यः — शुद्धिं कुर्यात्तथा विद्वान्मलानां देहजन्मनाम्। कृत्तकेशनखश्मश्रुस्त्रिपक्षेषु गृही भवेत् ।। नाप्सु स्वप्रतिबिम्बं तु तेजस्कामो निरीक्षयेत्। निष्फलं वर्जयेत् कर्म प्रेतधूमं नदीतरम् ।। नान्तरा गमनं कुर्यात् देवताबलिपीठयोः इति।

சாண்டில்யர்:- அறிந்தவன் தேஹத்திலுண்டாகும் அழுக்குகளைச் சுத்தி செய்து கொள்ள வேண்டும். க்ருஹஸ்தன் மூன்று பக்ஷங்களுக்கொருமுறை க்ஷௌரம் செய்து கொள்ள வேண்டும். தேஜஸ்ஸை விரும்புகிறவன், தன் நிழலை ஜலத்தில் பார்க்கக் கூடாது. பயனற்ற கார்யத்தைச் செய்யக் கூடாது. பிணப்புகை நதியைத் தாண்டுதல் இவைகளை வர்ஜிக்க வேண்டும். தேவதா பிம்பம், பலிபீடம் இவைகளுக்கு நடுவில் போகக் கூடாது.

व्यासः— न कुर्यात् बहुभिः सार्धं विरोधं ब्राह्मणैस्तथा । आत्मनः प्रतिकूलानि परेषां न समाचरेत्।। तिथिपक्षांश्च न ब्रूयात् न नक्षत्राणि निर्दिशेत्। न चात्मानं प्रशंसेत परनिन्दां च वर्जयेत्।। यस्तु देवानृषीन् विप्रान् देवान् वा निन्दति द्विजः । न तस्य निष्कृतिर्दृष्टा शास्त्रेषु च मुनीश्वरैः ।। निन्दयेद्यो गुरून् देवान् न वेदांश्चोपबृंहयेत्। कल्पकोटिशतं साग्रं रौरवे पच्यते नरः ।। तूष्णीमासीत निन्दायां न ब्रूयात् किञ्चिदुत्तरम्। कर्णौ पिधाय वस्तव्यं न चैतानवलोकयेत् ।। वर्जयेद्वा रहस्यानि परेषां ग्राहयेद्द्विजः । विवादं स्वजनैः सार्धं न कुर्याद्वै कदाचन । न पापं पापिनं ब्रूयादपापं वा द्विजोत्तमः । सत्येन तुल्यदोषः स्यान्मिथ्या द्विर्दोषवान् भवेत्।

வ்யாஸர்:- பலருடன் விரோதம் செய்யக் கூடாது. ப்ராம்ஹணர்களுடன் விரோதம் செய்யக் கூடாது. தனக்கு ப்ரதிகூலமாயுள்ளவைகளைப் பிறருக்கும் செய்யக் கூடாது. திதி பக்ஷம் இவைகளைச் சொல்லக் கூடாது. நக்ஷத்ரங்களைக் காட்டக் கூடாது. தன்னைப் புகழக் கூடாது. பிறனை நிந்திக்கக் கூடாது. எவன், தேவர், ருஷிகள், ப்ராம்ஹணர்கள், வேதங்கள் இவர்களுள் எவரையாவது நிந்திக்கின்றானோ அவனுக்கு மஹர்ஷிகளாலும் சாஸ்த்ரங்களில் ப்ராயச் சித்தம் சொல்லப்படவில்லை. எவன், குருக்களையும், தேவர்களையும் நிந்திக்கின்றானோ, வேதார்த்தங்களையும் விசாரிக்க வில்லையோ அவன் அநேக கோடி கல்பம் முழுவதும், ரௌரவமென்னும் நரகத்தில் வருந்துகிறான். பிறர் நிந்தித்தாலும் மௌனமாய் இருக்க வேண்டும். மறுப்பொன்றும் சொல்லக் கூடாது. காதுகளை மூடிக்கொண்டு இருக்க வேண்டும். இவர்களைப் பார்க்கக் கூடாது. பிறரின் ரஹஸ்யங்களை தவிர்க்க வேண்டும். க்ரஹித்தாலும், ஒருகாலும் தன் ஜனங்களுடன் விவாதம் செய்யக் கூடாது. பாபியைப் பாபியென்று சொல்லக் கூடாது. பாபமில்லாதவனையும் பாபியென்று சொல்லக் கூடாது. பாபம் யதார்த்தமானால், பாபிக்குச் சமமான பாபியாவான். பாபம் பொய்யானால் இரு மடங்கு பாபமுள்ளவனாவான்.

नेक्षेतोद्यन्तमादित्यं शशिनं चानिमित्ततः । नास्तं यन्तं न वारिस्थं नोपसृष्टं न मध्यगम् ।। तिरोहितं वाससा वा नादर्शयान्यनुगामिनम् । न नग्नां स्त्रियमीक्षेत पुरुषं वा कदाचन ।। न पश्येत् प्रेतसंस्पर्शं न क्रुद्धस्य गुरोर्मुखम् । न तैलोदकयोश्छायां न पत्नीं भोजने सतीम् ।। नोदके चात्मनो रूपं न कूपे श्वभ्र एव वा । न लङ्घयीत मतिमान्नाधितिष्ठेत् कथञ्चन । नात्मानं चावमन्येत दैन्यं यत्नेन वर्जयेत् ।। न सर्पशस्त्रैः क्रीडेत स्वानि खानि न च स्पृशेत् । नाभिहन्यात् जलं पद्भ्यां पाणिना वा कदाचन ।। न शातयेदिष्टकाभिः फलानि न फलेन च ।

உதய காலத்தில் ஸூர்யனையும், சந்த்ரனையும் காரணமின்றிப் பார்க்கக் கூடாது அஸ்தமயத்திலும், ஜலத்திலும், க்ரஹணகாலத்திலும், ஆகாசத்தின் நடுவிலும், வஸ்த்ரத்தால் மறைத்துக் கொண்டும், கண்ணாடி முதலியதின் வழியாகவும். ஸூர்யனையும், சந்த்ரனையும் பார்க்கக் கூடாது. வஸ்த்ரமில்லாத ஸ்த்ரீயையும், புருஷனையும் பிணத்தைச் சேர்ந்ததையும், கோபத்துடனிருக்கும் குருவின் முகத்தையும், பார்க்கக் கூடாது. எண்ணெயிலும், ஜலத்திலும் நிழலையும், சாப்பிடும் பத்னியையும் பார்க்கக் கூடாது. கிணறு, குழி இவைகளைத் தாண்டக் கூடாது. அவைகளின் மேல் நிற்கக் கூடாது. நீசர்களை ஸேவிக்கக் கூடாது. க்ரூர புத்தியுள்ளவனாகக் கூடாது. தன்னை அவமதிக்கக் கூடாது. ஏழைத் தன்மையை அவச்யம் தள்ள வேண்டும். ஸர்ப்பங்களாலும், ஆயுதங்களாலும் விளையாடக் கூடாது. தனது இந்த்ரியங்களைத் தொடக்கூடாது. கைகளாலாவது, கால்களாலாவது ஜலத்தை அடிக்கக் கூடாது. செங்கற்களால், அல்லது பழங்களால் பழங்களை உதிர்க்கக் கூடாது.

न म्लेच्छभाषां शिक्षेत न कर्षेत् च पदाऽऽसनम् ।। न दन्तैर्नखरोमाणि छिन्द्यात् सुप्तं न बोधयेत् । न बालातपमासेवेत् प्रेतधूमं विवर्जयेत् । नाकारणाद्वा निष्ठीवेत् स्वयं नोपानहौ हरेत् । न पादक्षालनं कुर्यात् पादेनैव कदाचन ।। नाग्नौ प्रतापयेत् पादौ न कांस्ये धावयेद्बुधः । नातिप्रसारयेद्देवं ब्राह्मणं गामथापि वा ।। वार्यग्निगुरुविप्रान् वा सूर्यं वा शशिनं प्रति ।। नाशुद्धोऽग्निं परिचरेन्न देवप्रतिमां स्पृशेत् ।। नावगाहेदगाधाम्बु नाप्सु रेतः समुत्सृजेत् । व्यतिक्रामेन्न प्रपन्नान्नाप्सु मैथुनमाचरेत् ।। चैत्यवृक्षं न वै छिन्द्यान्नाप्सु ष्ठीवनमुत्सृजेत् । न चाग्निं लङ्घयेद्धीमान्नोपदध्यादधः क्वचित् । न कूपमवरोहेत न वीक्षेताशुचिः क्वचित् ।

மிலேச்சர்களின் பாஷையைக் கற்கக் கூடாது. ஆஸனத்தைக் காலால் இழுக்கக் கூடாது. பற்களால் நகங்களையாவது, ரோமங்களையாவது நறுக்கக் கூடாது. தூங்குகின்றவனை எழுப்பக் கூடாது. இளம் வெயிலை ஸேவிக்கலாகாது. பிணப்புகையைத் தவிர்க்க வேண்டும். காரணமில்லாமல் துப்பக் கூடாது. பாதரக்ஷைகளைத் தானாகவே எடுத்துச் செல்லலாகாது. காலால் காலைத் தேய்த்து அலம்பக் கூடாது. அக்னியில் கால்களைக் காய்ச்சக் கூடாது. வெண்கலத்தில் கால்களை அலம்பக் கூடாது. தேவபிம்பம், ப்ராம்ஹணன், பசு, ஜலம், அக்னி, குரு, ஸூர்யன், சந்த்ரன் இவர்களுக்கு எதிராய்க் கால்களை நீட்டக் கூடாது. அசுத்தனாய் அக்னியில் ஹோமம் செய்யக் கூடாது. தேவதா ப்ரதிமைகளைத் தொடக் கூடாது. அதிக ஆழமுள்ள ஜலத்தில் முழுகக் கூடாது. ஜலத்தில் சுக்லத்தை விடக் கூடாது. சரணடைந்தவரைக் கைவிடக் கூடாது. ஜலத்தில் மைதுனம் செய்யக் கூடாது. அடையாளத்திற்காக உள்ள மரத்தை வெட்டக் கூடாது. ஜலத்தில் கோழையை உமியக் கூடாது. அக்னியைத் தாண்டக் கூடாது. அக்னியை அடியில் வைக்கக் கூடாது. கிணற்றில் இறங்கக் கூடாது. அசுத்தனாய் எங்கும் பார்க்கக் கூடாது.

अग्नौ न प्रक्षिपेदग्निं नाग्निं प्रशमयेत् तथा ॥ सुहृन्मरणमार्तिं वा न स्वयं श्रावयेत्परान्। न भिन्द्यात् पूर्वसमयमभ्युपेतं कदाचन ॥ परस्परं पशून् बालान् पक्षिणो नावबोधयेत् । सायं प्रातर्गृहद्वारं भिक्षार्थं नावघाटयेत् ॥ स्वमग्निं नैव हस्तेन स्पृशेन्नाप्सु चिरं वसेत्। न वीजयेच्च वस्त्रेण समवायं च वर्जयेत् ॥ नोपानद्वर्जितो यायान्न विना च कमण्डलुम् । नाग्नेर्ग्रोर्ब्राह्मणादीनामन्तरेण व्रजेत् कचित् ॥ वर्जयेन्मार्जनीरेणुं स्नानवस्त्रं घटोदकम् इति।

நெருப்பில் நெருப்பைப் போடக் கூடாது. அக்னியை அணைக்கக் கூடாது. ஸுஹ்ருத்தின் மரணத்தையாவது

கஷ்டத்தையாவது பிறருக்குத் தான் சொல்லக் கூடாது. முன் ஒப்புக் கொண்ட உடன் படிக்கையை மாற்றக் கூடாது. பசுக்கள், சிறுவர், பக்ஷிகள் இவர்களை ஒருவருக்கொருவர் சண்டைக்காக ஏவக்கூடாது. மாலையிலும் காலையிலும் பிச்சைக்காக வீட்டின் வாயிலை மூடக் கூடாது. தன் அக்னியைக் கையால் தொடக் கூடாது. ஜலத்தில் வெகுகாலமிருக்கக் கூடாது. அக்னியை வஸ்த்ரத்தால் வீசக் கூடாது. கூட்டத்தில் சேரக் கூடாது. பாதரக்ஷையில்லாமலும், கமண்டலு இல்லாமலும் வெளியிற் செல்லக் கூடாது. அக்னிகள், பசுக்கள், ப்ராம்ஹணர்கள் முதலியவரின் நடுவில் ஒருகாலும் போகக் கூடாது. துடைப்பத்தின் புழுதி, ஸ்நான வஸ்த்ரம், மட்குடத்திலெடுத்த ஜலம் இவைகளைப் பரிஹரிக்க வேண்டும்.

विष्णुपुराणे—नावगाहेत् जलौघस्य वेगमध्ये नरेश्वर। प्रदीप्तं वेश्म न विशेन्नारोहेच्छिखरं तरोः ।। न कुर्याद् दन्तसङ्घर्षं न कुर्यान्नासिकारवम्। नासंवृतमुखो जृम्भेत् श्वासकासौ विवर्जयेत् ।। नोच्चैर्हसेत् सशब्दं च श्मश्रूणि च न भक्षयेत्। दुष्टस्त्रीसन्निकर्षं च वर्जयेन्निशि सर्वदा ।। नैकः शून्याटवीं गच्छेन्न च शून्यगृहे वसेत्। स्नानार्द्रधरणीं चैव दूरतः परिवर्जयेत् ।। उपसर्पेन्न च व्यालान् चिरं तिष्ठेन्न चोत्थितः। अतीव जागरस्वप्ने तद्वत् स्थानासने बुधः ।। न सेवेत तथा शय्यां व्यायामं च नरेश्वर। दंष्ट्रिणः शृङ्गिणश्चैव प्राज्ञो दूरेण वर्जयेत्। बालातपमवश्यायं पुरोवातं च वर्जयेत्। विरोधं नोत्तमैर्गच्छेत् नाधमैश्च सदा बुधः ।। विवाहश्च विवादश्च तुल्यशीलैस्तथेष्यते। अप्यल्पहानिः सोढव्या वैरादर्थागमं त्यजेत् ।। योषितो नावमन्येत न चासां विश्वसेद्बुधः। नोर्ध्वं न तिर्यग्दूरं वा निरीक्षन् पर्यटेद्बुधः। युगमात्रं महीपृष्ठं नरो गच्छेद्विलोकयन् इति।

விஷ்ணு புராணத்தில்:- ஜல ப்ரவாஹத்தின் வேகத்தின் நடுவில் முழுகக் கூடாது. அரசனே! எரியும்

வீட்டில் நுழையக் கூடாது. மரத்தின் உச்சியில் ஏறக் கூடாது. பற்களை ஒன்றுக்கொன்று உரசக் கூடாது. மூக்கினால் சப்தம் செய்யக் கூடாது. வாயை மூடாமல் கொட்டாவி விடக் கூடாது. இருமல், தும்மல் இவைகளை விடவேண்டும். அதிகமாயும், சப்தத்துடனும் சிரிக்கக் கூடாது. மீசையைக் கடிக்கக் கூடாது. எப்பொழுதும் இரவில் துஷ்ட ஸ்த்ரீகளின் ஸமீபத்தை தவிர்க்க வேண்டும். சூன்யமான காட்டில் ஒருவனாய்ச் செல்லக் கூடாது. சூன்யமான வீட்டில் வஸிக்கக் கூடாது. ஸ்நான ஜலத்தால் நனைந்த பூமியைத் தூரத்தில் பரிஹரிக்க வேண்டும். பாம்புகளின் ஸமீபத்திற் செல்லக் கூடாது. எழுந்தவன் வெகுகாலம் நின்றிருக்கக் கூடாது. அதிகமாய் விழிப்பது, அதிகமாய்த் தூங்குவது, அதிகமாய் நிற்பது, அதிகமாய் உட்கார்ந்திருப்பது, அதிகமாய்ப் படுக்கையிலிருப்பது, அதிகமாய் தேஹப்பயிற்சி செய்வது இவைகளையும் தவிர்க்க வேண்டும். பற்களுள்ளதும், கொம்புள்ளதுகளுமான துஷ்ட ப்ராணிகளைத் தூரத்தில் பரிஹரிக்க வேண்டும். இளம் வெயில், பனி, கீழ்காற்று இவைகளை தவிர்க்க வேண்டும். அறிவுடையவன், சிறந்தவருடனும், தாழ்ந்தவருடனும் விரோதிக்கக் கூடாது. விவாஹமும், விவாதமும் தனக்குச் சமமானவருடன் செய்யப்பட வேண்டும். கொஞ்சமும் குறைவானாலும் அதைப் பொறுக்க வேண்டும், விரோதத்தால் பணத்தின் வரவை விடவேண்டும். ஸ்த்ரீகளை அவமதிக்கக் கூடாது. அவர்களை நம்பக் கூடாது. ஆகாசத்தையோ, பக்கங்களையோ, தூரத்திலுள்ள ஸ்தலத்தையோ பார்த்துக் கொண்டு திரியக் கூடாது. நுகத்தடி அளவுள்ள பூமிபாகத்தைப் பார்த்துக் கொண்டு நடக்க வேண்டும்.

स्मृत्यन्तरे — दिगम्बरं मुक्तकच्छं तथा कौपीनधारिणम् । गृहस्थं भजते तावदलक्ष्मीः कलहोत्सुका ॥ दीपच्छाया नरच्छाया वस्त्रकेशनखोदकम् । अजारजः खररजः तथा संमार्जनीरजः ॥ स्त्रीणां

पादरजश्चापि शक्रस्यापि श्रियं हरेत् ॥ हविर्गन्धो गवां रेणुः वेदानां ध्वनिरेव च । अपि गोदोहमात्रेण सर्वपापं व्यपोहति ॥ द्रव्याणामुत्तमानां च लङ्घने श्रीर्विनश्यति । तथाऽधमानां गृह्णाति तमलक्ष्मीश्च सत्वरम् । यद्गृहे लक्ष्यते नित्यं रङ्गवल्ल्यनुलेपनम् । तद्गृहे वसते लक्ष्मीर्नित्यं पुण्यकलान्विता इति ।

மற்ருெரு ஸ்ம்ருதியில்:- வஸ்த்ரமில்லாதவனும், கச்சமில்லாதவனும், கௌபீனம் மட்டில் தரித்தவனுமான க்ருஹஸ்தனைக் கலஹத்தில் ப்ரீதியுள்ளவளான மூதேவி அடைகின்ருள். தீபத்தின் நிழல், மனிதன் நிழல், வஸ்த்ரஜலம், கேசஜலம், நகஜலம், ஆட்டின் புழுதி, கழுதையின் புழுதி, துடைப்பத்தின் புழுதி, ஸ்த்ரீகளின் கால்புழுதி இவைகள் இந்த்ரனின் ஸம்பத்தையும் அகற்றும். ஹவிஸ்ஸின் வாஸனை, பசுக்களின் தூளி, வேதங்களின் ஒலி இவை கால்நாழிகையளவு ஸேவிக்கப்பட்டாலும் ஸகல பாபங்களையுமகற்றும். சிறந்த வஸ்துக்களைத் தாண்டினல் ஸம்பத்து விலகும். தாழ்ந்த வஸ்துக்களைத் தாண்டினல் அவனை மூதேவி சீக்கிரமாய்ப் பிடித்துக் கொள்கிருள். எந்த வீட்டில் நித்யமும் மெழுகுதலும், கோலமும் காணப்படுகிறதோ அந்த வீட்டில் புண்யகலைகளுடன் கூடிய லக்ஷ்மீ எப்பொழுதும் வஸிக்கின்ருள்.

सङ्ग्रहे— अजखरकरभश्वपादपांसुः तुषकणिका गृहमार्जनीरजश्च । परमुखपरवस्त्रशूर्पजातो मरुदपि देहभृतां करोत्यलक्ष्मीम् ॥ अनवधानतया गृहमार्जनी स्पृशति यद्यपि गात्रमथ क्षणात् । शिरसि दीपशिखा च यदा भवेत् कनकयुक्तजलेन विशोधयेत् । अच्छिद्रकुम्भस्रुततोयधारास्नानं नखश्मश्रुशिरोरुहाम्भः । स्नानाम्बु देहाम्बु परस्य पुंसां दारिद्र्य दुःखाजयमृत्युदं स्यात् इति ।

ஸங்க்ரஹத்தில்:- ஆடு, கழுதை, ஒட்டகம், நாய் இவைகளின் கால் புழுதியும், உமி, தவிடு இவையும்,

துடைப்பத்தின் தூளியும், பிறரின் வாய், பிறரின் வஸ்த்ரம், முறம் இவைகளின் காற்றும் மனிதரின் தேஹத்தில் ஸம்பந்தித்தால் தாரித்ரியத்தைச் செய்யும். கவனமின்மையால் வீட்டின் துடைப்பம் தேஹத்தில் பட்டாலும், தீபத்தின் ஜ்வாலை தலையில் பட்டாலும் உடனே ஸ்வர்ணத்துடன் கூடிய ஜலத்தால் சுத்தி செய்ய வேண்டும். மூக்கு த்வாரமில்லாத குடத்தினின்றும் வெளிவரும் ஜலத்தால் ஸ்நானம் செய்வதும், நகம், மீசை, தலைமயிர் இவைகளின் ஜலமும், பிறரின் ஸ்நானஜலமும், தேஹ ஜலமும், தேஹத்துடன் ஸம்பந்திப்பதும், மனிதனுக்கு, தரித்ரத்தன்மை, துக்கம், அபஜயம், மரணம் இவைகளைக் கொடுப்பதாகும்.

आपस्तम्बः — पूर्वेण ग्रामान्निष्क्रमणप्रवेशनानि शीलयेदुत्तरेण वा। सर्वान् रागान् वाससि वर्जयेत् कृष्णं च स्वाभाविकम्। दिवा च शिरसः प्रावरणं वर्जयेन्मूत्रपुरीषयोः कर्म परिहाप्य। स्पृहतीं च गां नाचक्षीत संसृष्टां च वत्सेनानिमित्ते । नाधेनुमधेनुरिति ब्रूयाद्धेनुभव्येत्येव ब्रूयात्। न भद्रं भद्रमिति ब्रूयात् पुण्यं प्रशस्तमित्येव ब्रूयात्। वत्सतन्तीं च नोपरि गच्छेत् प्रेङ्खावन्तरेण च नातीयात्। नासौ मे सपत्न इति ब्रूयाद्यद्यसौमे सपत्न इति ब्रूयाद्द्विषन्तं भ्रातृव्यं जनयेत्। नेन्द्रधनुरिति परस्मै प्रब्रूयान्न पततः संचक्षीत इति । स्पृहतीं - सस्यधान्यादिकं भक्षयन्तीं गावं स्वामिने न ब्रूयात् । भविष्यन्ती धेनुर्धेनुभव्या। वत्सानां बन्धनी रज्जुर्वत्सतन्ती। प्रेङ्खौ - डोलास्तम्भौ। तयोर्मध्ये न गच्छेत्। पततः - पक्षिणः सङ्घीभूय स्थितान् न सञ्चक्षीत - इयन्त एत इति न गणयेदित्यर्थः।

ஆபஸ்தம்பர்:- க்ராமத்திலிருந்து வெளியிற் சென்றாலும், வெளியிலிருந்து க்ராமத்திற்குள் ப்ரவேசித்தாலும், கிழக்கு அல்லது வடக்கு வழியாய்ச் செல்ல வேண்டும், நுழைய வேண்டும். வஸ்த்ரத்தில் எவ்விதமான சாயத்தையும் தவிர்க்க வேண்டும்.

இயற்கையால் கறுப்பான கம்பளி முதலியதையும் உடுத்தக் கூடாது. பகலில் வஸ்த்ரம் முதலியதால் தலையைச் சுற்றிக் கொள்ளக் கூடாது. மலமூத்ர விஸர்ஜனத்தைத் தவிர்த்து. பயிர், தான்யம் முதலியதைத் தின்னும் பசுவை உடையவனிடம் சொல்லக் கூடாது. கன்று ஊட்டும்போதும் சொல்லக் கூடாது, காரணமில்லாவிடில். கறவை இல்லாத பசுவை அவ்விதம் சொல்லக் கூடாது. கறக்கப் போகும் பசு என்றே சொல்ல வேண்டும். (பத்ரம் மங்களம்) பத்ரமல்லாததை பத்ரமென்று சொல் வேண்டும். புண்யம், ப்ரசஸ்தம் என்ற பதங்களால் சொல்ல வேண்டும். கன்றின் தும்பைத் தாண்டிச் செல்லக் கூடாது. ஊஞ்சல் ஆடுவதற்காக நிறுத்தப்பட்டுள்ள தூண்களின் நடுவில் போகக் கூடாது. ஒருவனையும், 'இவன் எனக்குச் சத்ரு' என்று சொல்லக் கூடாது. அவ்விதம் சொல்வானாகில், த்வேஷிப்பவனாகிய சத்ருவை உண்டாக்கிக் கொள்வான். 'இதோபார் இந்த்ரதனுஸ்' என்று பிறனுக்குச் சொல்லக் கூடாது. வானத்தில் பறக்கும் பறவைகளை எண்ணக் கூடாது.

स एव — नित्यमुदधानान्यद्भिररिक्तानि स्युर्गृहमेधिनो व्रतम् इति ।। गृहे यावन्त्युदधानानि - उदपात्राणि घटकरकादीनि, तानि सदा अद्भिररिक्तानि स्युरित्यर्थः ।। नगरप्रवेशनानि च वर्जयेत् प्रश्नं च न विब्रूया दथाप्युदाहरन्ति - मूलं तूलं वृहति दुर्विवक्तुः प्रजां पशूनायतनं हिनस्ति । धर्मप्रह्लाद न कुमालनाय रुदन् ह मृत्युर्व्युवाच प्रश्नमिति । गार्दभं यानमारोहणे विषमारोहणावरोहणानि च वर्जयेत् बाहुभ्यां च नदीतरं नावं च सांशयिकीम् इति ।। प्रश्नं - पृष्टं दुर्निरूपमर्थ मिदमित्थमिति विविच्य न ब्रूयात् । अपि च अस्मिन्नर्थे श्लोकमुदाहरन्ति । दुर्विवक्तुः तदेव दुर्वचनं मूलं तूलं च वृहति । मूलं - पित्रादयः । तूलं - आगामिनी संपत् । तदुभयमप्युत्पाटयति । प्रजादिकं च हिनस्ति । अतो दुर्विवचनसम्भवात् प्रश्नमात्रमेव न विब्रूयात् ।

**ஆபஸ்தம்பரே:-** குடம், சருவம் முதலிய ஜல பாத்ரங்களெல்லாம் ப்ரதிதினம் ஜலத்தால் நிறைந்திருக்க வேண்டும். இது க்ருஹஸ்தரான தம்பதிகளின் வ்ரதமாம்.
**ஆபஸ்தம்பரே:-** நகரத்தில் அடிக்கடி ப்ரவேசிப்பதை வர்ஜிக்க வேண்டும். கேள்வியை, 'இவ்விதம்தான் இது' என்று நிச்சயமாய்ச் சொல்லக் கூடாது. இவ்விஷயத்தில் ச்லோகத்தை முன்னோர்கள் இவ்விதம் சொல்லுகின்றனர். 'மூலம் தூலம் + ப்ரச்னம்' என்று. இதன் பொருள் - நிர்ணயிக்க முடியாத விஷயத்தை நிர்ணயித்து எவன் மாறுதலாய்ச் சொல்லுகின்றானோ அவனது துஷ்ட நிர்ணயம், அவனது மூலத்தையும் (பிதா முதலியவர்களையும்), தூலத்தையும் (வரப்போகும் ஸம்பத்தையும்), ப்ரஜைகளையும், பசுக்களையும், வீடு முதலியதையும் அழிக்கும். ஆகையால், பிசகான நிர்ணயத்தைச் சொல்ல நேரிடுமாகையால், எவ்வித தர்ம ப்ரச்னத்தையும் நிர்ணயித்துச் சொல்லக் கூடாது.

इतिहासोऽत्र—कस्यचिदृषेः धर्मप्रह्लादः कुमालनश्च द्वौ शिष्यावास्ताम् । तौ कदाचिदरण्यात् महान्तौ समिद्भारावाहृत्य श्रमादाचार्यगृहे प्राक्षिपताम् । तयोरेकेनाचार्यपुत्रः शिशुराक्रान्तो मृतः । ततः शिष्यावाहूयाचार्यः पप्रच्छ केनायं मारित इति । तावुभावपि न मयेत्यूचतुः । ततो मुनिर्मृत्युमाहूय पप्रच्छ । केनायं व्यापादित इति । ततो मृत्युः रुदन्नेव प्रश्नं व्युवाच - विविच्य कथितवान् । हे धर्मप्रह्लाद ! न कुमालनाय- कुमालनस्य नेदं पतनीयमिति । तवास्तीत्यर्थाद्गम्यत इति रुदन् व्युवाचेत्यर्थः ।

இவ்விஷயத்தில் இதிஹாஸம் இவ்விதமுளது - ஒரு ருஷிக்குத் தர்ம ப்ரஹ்லாதன் என்றும், குமாலனன் என்று இரு சிஷ்யர்கள் இருந்தனர். அவ்விருவரும் ஒருநாளில் காட்டினின்றும் பெரிதாகிய இரண்டு ஸமித்துக் கட்டுகளைக் கொண்டு வந்து, ச்ரமத்தால் கண்ணால் கீழே பாராமலே ஆசார்யன் க்ருஹத்தில் எறிந்தனர். ஒரு

கட்டினால் ஆக்ரமிக்கப்பட்டு அங்கிருந்த ஆசார்யனின் ஆண் குழந்தை மரித்து விட்டது. பிறகு ஆசார்யன் சிஷ்யர்களை அழைத்து 'எவனால் இந்தச் சிசு கொல்லப்பட்டது' என்று கேட்டார். அவ்விருவரும் 'என்னாலல்ல' என்றனர். பிறகு பதிதனான சிஷ்யனைத் தள்ளுவதற்கும், தோஷமில்லாதவனை க்ரஹிப்பதற்கும் முடியாதவராய் அந்த ருஷி, ம்ருத்யு தேவனைக் கூப்பிட்டு 'எவனால் இக்குழந்தை கொல்லப்பட்டது' என்று கேட்டார். பிறகு தர்ம ஸங்கடத்தில் விழுந்துள்ள ம்ருத்யுதேவன், கண்ணீர் விட்டுக் கொண்டே கேள்வியை விளக்கினான். எவ்விதமெனில், 'ஹே தர்ம ப்ரஹ்லாத! இந்தப் பதனீயகார்யம் குமாலனுடையதல்ல' என்று 'ஹே தர்ம ப்ரஹ்லாத! உன்னால் இது செய்யப்பட்டது' என்று சொல்ல வேண்டியதில் அன்யனுக்கு இல்லை என்று சொல்லப்பட்டது. ஆனாலும் மற்றவனுக்கு இருக்கிறது என்பது பொருளால் தோன்றுகிறது என்று நினைத்துக் கண்ணீர் விட்டவனாய்ச் சொன்னான் ம்ருத்யுதேவன் என்று.

स एव — दिवाऽऽदित्यः सत्वानि गोपायति नक्तं चन्द्रमा स्तस्मादमावास्यायां निशायां स्वाधीय आत्मनो गुप्तिमिच्छेत्, प्रायत्यब्रह्मचर्याभ्यां काले चर्यया च सह ह्येतां रात्रिं सूर्याचन्द्रमसौ वसतो न कुसृत्या ग्रामं प्रविशेद्यदि प्रविशेन्नमो रुद्राय वास्तोष्पतय इत्येतामृचं जपेदन्यां वा रौद्रीम् इति ।। स्वाधीयः - भृशतरं आत्मनो गुप्तिं - रक्षामिच्छेत् । केन प्रकारेण ? प्रायत्येन, ब्रह्मचर्येण, काले चर्यया - कालकृतदेवार्चन जपादिकया च । कुसृत्या - कुमार्गेण । अन्यां वा रौद्रीं - इमां रुद्राय तवस इत्यादिकामित्यर्थः ।।

**ஆபஸ்தம்பரே:-** பகலில் ஸூர்யன் ப்ராணிகளைக் காக்கிறான். ராத்ரியில் சந்த்ரன் காக்கிறான். ஆகையால் அமாவாஸ்யையில் ராத்ரியில் அதிகமாகத் தன்னைக்காக்க விரும்ப வேண்டும், சுத்தியாலும், ப்ரம்ஹசர்யத்தாலும், காலத்தில் செய்யப்படும் தேவார்ச்சனம், ஜபம்

முதலியதாலும். இந்த அமாவாஸ்யையின் ராத்ரி முழுவதும், ஸூர்யனும், சந்த்ரனும் சேர்ந்து வஸிக்கின்றார்கள். குறுக்கான வழியால் க்ராமத்திற்குள் ப்ரவேசிக்கக் கூடாது. ப்ரவேசித்தால் பிறகு 'நமோ ருத்ராய வாஸ்தோஷ்பதயே' என்ற ருக்கை ஜபிக்க வேண்டும். அல்லது ருத்ர தேவதாகமான வேறு ருக்கையாவது ஜபிக்கலாம். 'இமாம் ருத்ராய' என்பது முதலியதை என்பது பொருள்.

अत्र वाजसनेयिनां गृह्ये —— वनं प्रवेक्ष्यन्ननुमन्त्रयते नमो रुद्राय वनसदे स्वस्ति मा संपारयेति पन्थानमारोक्ष्यन्ननुमन्त्रयते नमो रुद्राय पथिषदे स्वस्ति मा संपारयेति, अपः प्रवेक्ष्यन्ननुमन्त्रयते नमो रुद्रायाप्सुषदे स्वस्ति मा संपारयेति, तस्माद्यत् किञ्चन कर्म कुर्वन् स्यात् तत्सर्वं नमो रुद्रायेत्येव कुर्यात् सर्वो ह्येष रुद्र इति श्रुतिः इति।

இதில், வாஜஸநேயிகளின் க்ருஹ்யத்தில்:- வனத்தில் நுழையும் போதும், வழியில் நடக்கும் போதும், ஜலத்தில் இறங்கும் போதும், தனித்தனியே சொல்லப்பட்டுள்ள ருத்ர மந்த்ரங்களை ஜபிக்க வேண்டும். ஆகையால் எந்தக் கார்யத்தைச் செய்யப் போகிறவனாயினும், 'நமோ ருத்ராய' என்று சொல்லியே செய்ய வேண்டும். எதுவும் இந்த ருத்ரனே என்கின்றது வேதம்.

गौतमः – न रूढश्मश्रुरकस्मान्नाग्निमपश्च युगपद्धारयेत् न भस्मकेश तुषकरीषकपालामेध्यान्यधितिष्ठेन्न म्लेच्छाशुच्यधार्मिकैः सह सम्भाषेत सम्भाष्य पुण्यकृतो मनसा ध्यायेत् ब्राह्मणेन वा सह सम्भाषेत । अधेनुं धेनुभव्येति ब्रूयादभद्रं भद्रमिति । कपालं भगालमिति । मणिधनुरितीन्द्रधनुर्गां धयन्तीं परस्मै नाचक्षीत न चैनां वारयेद्विगृह्य वादं बहिर्गन्धमाल्यधारण पापीयसावलेखन कुद्वारप्रवेशन भार्यासहभोजनाञ्जन्त्यवेक्षण पादपादधावनासन्दीस्थभोजन

नदीबाहुतरण वृक्षविषमारोहणावरोहण प्राणव्यायच्छनानि च वर्जयेन्न सन्दिग्धां नावमधिरोहेत् सर्वत एवात्मानं गोपायेन्न प्रावृत्य शिरोऽहनि पर्यटेत् प्रावृत्य तु रात्रौ मूत्रोच्चारे च इति ॥ पापीयसाऽवलेखनम् - अशुचिना काष्ठादिना शिरःप्रभृतेः कण्डूयनम् । अत्र तृतीयाया अलुक्छान्दसः । अञ्जन्त्यवेक्षणम् - तैलाभ्यङ्गं कुर्वन्त्या अवेक्षणम् । पादपादधावनम् - पादेन पादस्य प्रक्षालनम् । आसन्दी पीठिकादिः । प्राणव्यायच्छनम् - प्राणोपरोध्युल्लङ्घनम् । सर्वतः - सर्वेभ्योऽप्यपायेभ्यः । प्रावृत्य तु रात्राविति, प्रावृत्यैव पर्यटेदित्यर्थः ।

கௌதமர்:- காரணமின்றி மீசையை வளர்த்திருக்கக் கூடாது. நெருப்பையும், ஜலத்தையும் ஒரே ஸமயத்தில் தரிக்கக் கூடாது. சாம்பல், மயிர், உமி, உலர்ந்த சாணம், ஓடு. அசுத்த வஸ்துக்கள் இவைகளில் நிற்கக் கூடாது. ம்லேச்சர், அசுத்தர், பாபிகள் இவருடன் பேசக் கூடாது. பேசினால் புண்யம் செய்தவர்களை மனதால் த்யானிக்க வேண்டும். அல்லது ப்ராம்ஹணனுடன் பேச வேண்டும். கறவை இல்லாத பசுவைக் கறக்கப் போகும் பசு என்று சொல்லவும். அபத்ரமானதையும் பத்ரமென்று சொல்லவும். கபாலத்தைப் பகாலமென்று சொல்லவும். இந்த்ர தனுஸ்ஸை மணிதனுஸ் என்று சொல்லவும். கன்றினால் ஊட்டப்படும் பசுவைப் பிறனுக்குக் காட்ட கூடாது. அதைத் தடுக்கவும் கூடாது ஆக்ரஹத்துடன் பேசுதல், வெளியில் சந்தனம், புஷ்பம் இவைகளைத் தரித்தல், அசுத்தமான கட்டை முதலியதால் தலை முதலியதைச் சொரிந்து கொள்வது, குறுக்கு வழியாய் ப்ரவேசித்தல், பார்யையுடன் சேர்ந்து புஜித்தல், எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் பார்யையைப் பார்ப்பது, காலால் காலைத் தேய்த்து அலம்புதல், பீடம் முதலியதில் வைத்ததைப் புஜித்தல், நதியை நீந்தித் தாண்டுவது, வ்ருக்ஷத்திலும், மேடுபள்ளங்களிலும் ஏறுவது இறங்குவது, மூச்சை அடக்கித் தாண்டுவது

முதலியதைத் தவிர்க்க வேண்டும். ஸந்தேஹத்திற்கிடமான ஓடத்தில் ஏறக் கூடாது. எவ்வித அபாயங்களினின்றும் தன்னைக் காக்க வேண்டும். பகலில் தலையை மறைத்துக் கொண்டு நடக்கக் கூடாது. ராத்ரியில் மறைத்துக் கொண்டே நடக்க வேண்டும். மலமூத்ரவிஸர்ஜனத்திலுமப்படியே.

स एव—सोपानत्कश्चाशनासनाभिवादननमस्कारान् वर्जयेन्न पूर्वाह्णमध्यन्दिनापराह्णानफलान् कुर्याद्यथाशक्ति धर्मार्थकामेभ्य स्तेषु तु धर्मोत्तरः स्यान्न नग्नां परयोषितमीक्षेत न पदाऽऽसनमाकर्षेन्न शिश्नोदरपाणिपादवाक्चक्षुश्चापलानि कुर्याच्छेदन भेदन विलेखन विमर्दनावस्फोटनानि नाकस्मात् कुर्यान्नोपरि वत्सतन्त्रीं गच्छेत् न कुलं कलः स्यान्न यज्ञमवृतो गच्छेत् दर्शनाय तु कामं प्रशस्तमङ्गल्यदेवायतनचतुष्पथान् प्रदक्षिणमावर्तेत मनसा वा तत् समग्रमाचारमनुपालयेदापत्कल्पो यच्चात्मवन्तो वृद्धाः सम्यग्विनीता डम्भलोभमोहवियुक्ता वेदविद आचक्षते तत् समाचरेत् इति ।।

கௌதமரே:- பாதரக்ஷை தரித்தவனாய், போஜனம், உட்காருதல், அபிவாதனம், நமஸ்காரம் இவைகளைச் செய்யக் கூடாது. முன்பகல், நடுப்பகல், பின்பகல் இவைகளை, தர்மார்த்த காமங்களை யதாசக்தி ஸம்பாதிக்காமல் வீணாக்கக் கூடாது. அம்மூன்றிலும் தர்மத்தை அதிகமாய் ஸம்பாதிக்க வேண்டும். வஸ்த்ரமில்லாத அன்ய ஸ்த்ரீயைப் பார்க்கக் கூடாது. காலால் ஆஸனத்தை இழுக்கக் கூடாது. சிச்னம், வயிறு, கைகள், கால்கள், வாய், கண் இவைகளில் சபலத் தன்மையைச் செய்யக் கூடாது. புல் முதலியதைக் கிள்ளுதல், உடைத்தல், நகங்களால் கீறுதல், தூள் செய்தல், சப்தம் செய்தல், அங்கங்களைச் சொடுக்குதல் இவைகளை அகாரணமாய்ச் செய்யக் கூடாது. கன்றின் தும்பைத் தாண்டிச் செல்லக் கூடாது. ஒருகுலத்திலிருந்து மற்றொரு குலத்திற்குப் புத்ரனாய்ப் போகக் கூடாது.

வரிக்கப்படாமல் யாகத்திற்குத் தனுசையால் போகக் கூடாது. தர்சனத்திற்கு மட்டில் போகலாம். பசு முதலிய சிறந்த வஸ்துக்களேயும், பூர்ணகும்பம் முதலிய மங்கள வஸ்துக்களேயும், தேவாலயங்களேயும், நாற்சந்தியையும் ப்ரதக்ஷிணமாய்ச் செல்ல வேண்டும். முடியாவிடில் மனதினுலாவது அந்த ஆசாரத்தை அனுஷ்டிக்க வேண்டு. அது புஷ்கலமாய் ஆகின்றது. இது ஆபத்கல்பம். ஜிதேந்த்ரியரும், குருக்களால் நன்கு சிக்ஷிக்கப்பட்டவரும், வஞ்சனே, பேராசை, தவருன ஜ்ஞானம் இவை இல்லாதவரும், வேதமறிந்தவருமான வ்ருத்தர்கள் எதைச் சொல்லுகின்றனரோ அதைச் செய்ய வேண்டும்.

बोधायनः — वैणवं दण्डं धारयेद्रुक्मकुण्डले च पदा पदस्य प्रक्षालनमधिष्ठानं च वर्जयेच्छुक्ता रूक्षाः परुषवाचो न ब्रूयान्न कूपमवेक्षेत न गर्तमवेक्षेत न तत्रोपविशेद्यत एनमुत्थापयेत् पुररेणु कुण्ठितशरीरस्तत्परिपूर्णनेत्रवदनस्तु नगरे वसन् सुनियतात्मा सिद्धिमवाप्स्यतीति न तदस्ति । रथाश्वगजधान्यानां गवां चैव रजः शुभम् । अप्रशस्तं समूहन्याः श्वाजाविखरवाससाम् । पूज्यान् पूजयेत् इति ।

**போதாயனர்:-** வேணு தண்டத்தையும், ஸ்வர்ண குண்டலங்களேயும் தரிக்க வேண்டும். காலால் தேய்த்துக் காலே அலம்பக் கூடாது. காலின்மேல் காலே வைத்துக் கொள்ளக் கூடாது. அசுத்தங்களும், கடினமாயும், இரைச்சலுள்ளதாயுமுள்ள வார்த்தைகளே தவிர்க்க வேண்டும். கிணற்றையும், பள்ளத்தாக்கையும் எட்டிப் பார்க்கக் கூடாது. எங்கு உட்கார்ந்தால் இவனே எழுப்புவானே அங்கு உட்காரக் கூடாது. பட்டணத்துப் புழுதியால் பூசப்பட்ட சரீரமுடையவனும், அதனுல் நிறைந்த கண், வாய் இவைகளே உடையவனுமாய் நகரத்தில் வஸிப்பவன் சுத்தனுயிருந்தால் ஸித்தியை அடைவான் என்பதில்லே. (ஏனெனில்) தேர், குதிரை,

யானை, தான்யம், பசுக்கள் இவைகளின் புழுதி சுபமாகும். துடைப்பம், நாய், ஆடு, செம்மறி ஆடு, கழுதை, வஸ்த்ரம் இவைகளின் புழுதி அசுத்தமாம். பூஜ்யர்களைப் பூஜிக்க வேண்டும்.

देवलः—आत्मानं न शपेद् दोषा न व्रजेन् न स्वपेद्दिवा । न नक्तं विलिखेद्भूमिं गाश्च रात्रौ तु न स्पृशेत् ।। ब्राह्मणान्नृपतीन् वृद्धान् स्वांश्च शान्तान् यतीनपि । नाक्रोशेन्नावमन्येत पूजयेद् दैवतं तथा ।। यः काष्ठपादुकारूढो गृहात् परगृहं व्रजेत् । तं तु दृष्ट्वा दुराचारं सूर्यश्चैव निमीलति इति । अपरार्के– छाया स्याद्दासवर्गस्तु दुहिता कृपणस्तथा । तस्मादेतैरधिक्षिप्तः सहेत ह्यज्वरः सदा इति ।। मार्कण्डेयः- असत्प्रलापमनृतं वाक्पारुष्यं च वर्जयेत् । असच्छास्त्रमसद्वादम-सत्सेवां च वै नरः इति ।

தேவலர்:- குற்றத்தால் தன்னைத் திட்டிக் கொள்ளக் கூடாது. இரவில் வழிநடக்கக் கூடாது. பகலில் தூங்கக் கூடாது. இரவில் பூமியைக் கீறக் கூடாது. பசுக்களையும் தொடக் கூடாது. ப்ராம்ஹணர், அரசர், வ்ருத்தர், பந்துக்கள், சாந்தரான யதிகள் இவர்களை நிந்திக்கக் கூடாது. அவமதிக்கவும் கூடாது. தேவதையைப் போலப் பூஜிக்க வேண்டும். எவன் கட்டையினால் செய்யப்பட்ட பாதுகைகளிலேறி ஒரு வீட்டிலிருந்து மறு வீட்டிற்குச் செல்கின்றானோ, அந்தச் துராசாரனைக் கண்டு ஸூர்யனும் கண்களை மூடிக்கொள்கிறான். அபரார்க்கத்தில்:- வேலைக்காரர்களும், பெண்ணும், ஏழையும் தனது நிழலுக்குச் சமமானவர்கள். ஆகையால் அவர்கள் ஒருக்கால் அதிக்ஷேபமாய்ச் சொன்னாலும் பொறுத்துக் கொள்ள வேண்டும். தாபத்தை அடையக் கூடாது. மார்க்கண்டேயர்:- கெட்ட வார்த்தை, பொய்ப் பேசுதல், வார்த்தையில், கடுமை, கெட்ட சாஸ்த்ரம், கெட்ட விவாதம், அஸத்துக்களைச் சேவித்தல் இவைகளை தவிர்க்க வேண்டும்.

चतुर्विंशतिमते — कृष्णसर्पं द्विजं दुष्टं शूद्रं च प्रतिवादकम्। गर्दभं जारजातं च दूरतः परिवर्जयेत्।। नोद्यानादावकालेषु प्राज्ञस्तिष्ठेत् कदाचन इति ।। स्मृतिरत्ने — वासस्तिरोहितं सूर्यमादर्शेऽम्बुनि बिम्बितम्। आयुष्कामो न वीक्षेत न च्छायामात्मनो जले।। नाञ्जयन्तीं स्त्रियं नेत्रे न चाभ्यक्तामनावृताम्। न पश्येत् प्रस्वपन्तीं च तेजस्कामो द्विजोत्तमः ।। नासहायो व्रजेद्रात्रावुत्पथे न चतुष्पथे। न यज्ञमवृतो गच्छेदार्त्विज्यार्थं क्वचिद्द्विजः ।। नमस्कर्तुं व्रजेत् कामं दिदृक्षुर्यज्ञमेव वा। दिवा स्वप्नं तथाऽऽलस्यं पैशुन्यं च तथा मदम्।। अभियोगमयोगं च श्रेयोऽर्थी परिवर्जयेत् इति।

*சதுர்விம்சதிமதத்தில்:-* கரும்பாம்பு, துஷ்ட ப்ராம்ஹணன், எதிர்த்துப் பேசும் சூத்ரன், கழுதை, ஜாரனுக்குப் பிறந்தவன் இவர்களைத் தூரத்தில் பரிஹரிக்க வேண்டும். அறிந்தவன் தோட்டம் முதலியவிடங்களில் அகாலங்களில் ஒருகாலும் இருக்கக் கூடாது. *ஸ்ம்ருதிரத்னத்தில்:-* வஸ்த்ரத்தால் மறைக்கப்பட்டதும், கண்ணாடியிலும், ஜலத்திலும் தோன்றுவதுமான ஸூர்யமண்டலத்தையும், ஜலத்தில் தன் நிழலையும், ஆயுளை விரும்பியவன் பார்க்கக் கூடாது. தேஜஸ்ஸை விரும்பும் ப்ராம்ஹணன், தன் ஸ்த்ரீயை, மை இட்டுக் கொள்ளும் போதும், எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் போதும், வஸ்த்ரமில்லாத போதும், தூங்கும் போதும் பார்க்கக் கூடாது. இரவில் துணையில்லாமல் போகக் கூடாது. வேறு மார்க்கமாய்ச் செல்லக் கூடாது. நாற்சந்தியில் இருக்கக் கூடாது. ப்ராம்ஹணன் ருத்விக் ஆகும் ஆசையால், அழைக்கப்படாமல் யாகத்திற்குப் போகக் கூடாது; யாகத்தைப் பார்ப்பதற்காகவோ, நமஸ்கரிப்பதற்காகவோ இஷ்டப்படி போகலாம். பகலில் நித்ரை, சோம்பல், கோட்சொல்லுதல், மதம், துஷ்டருடன் சேர்க்கை, ஸாதுக்களுடன் சேராதிருத்தல் இவைகளை நன்மையை விரும்புவோன் தவிர்க்க

வேண்டும்.

अपरार्के—निन्दा मृत्युपदं ज्ञेयं निकृतिस्तमसः पदम् । सर्वभूतात्मभूतत्वादार्जवं ब्रह्मणः पदम्।। द्वौ मासौ पाययेद्वत्सं तृतीये द्विस्तनं दुहेत्। चतुर्थे त्रिस्तनं शेषं यथान्यायं यथाबलम्।। अन्तःपुरं वित्तगृहं परद्रोहिगृहं तथा। न गच्छेद्बन्धनागारं वध्यभूमिं च गर्हिताम्। गोपयेत् जन्मनक्षत्रं धनमायुर्गृहे बलम्। वेगरोधो न कर्तव्यस्त्वन्यत्र क्रोधवेगतः ।। नोपेक्षितव्यो व्याधिः स्यान्मृदुरल्पोऽपि वा नृणाम्।। विभीतककपित्थार्कस्नुहिच्छायां न चाश्रयेत्। स्तम्भदीपमनुष्याणा मन्येषां प्राणिनां तथा ।। गोगजाश्वाजपुच्छेषु मुखेषु च विशेषतः । यल्लग्नमुदकं तस्य विप्रुषो दूरतस्त्यजेत् इति।

அபரார்க்கத்தில்:- பிறரை நிந்திப்பது மரணத்திற்கு அடையாளம், கபடம் பாபத்திற்கு அடையாளம். ஸர்வ ப்ராணிகளுக்கும் ஆத்மாவாய் இருப்பதால் ருஜுவாயிருக்கும் தன்மை ப்ரம்ஹப்ராப்திக்கு அடையாளமாம். பசு ஈன்றபிறகு இரண்டு மாதம் வரையில் கன்றையே ஊட்டச் செய்ய வேண்டும். மூன்ருவது மாஸத்தில் இரண்டு முலைகளை மட்டும் கறக்க வேண்டும். நான்காவது மாஸத்தில் மூன்று முலைகளை மட்டும் கறக்க வேண்டும். பிறகு, ந்யாயத்தையும், பலத்தையும் அனுஸரித்துக் கறக்க வேண்டும். அந்தঃபுரம், பணமிருக்குமிடம், பிறருக்கு த்ரோஹம் செய்பவனின் க்ருஹம், காராக்ருஹம், கொலை செய்யுமிடம் இவ்விடங்களுக்குப் போகக் கூடாது. பிறந்த நக்ஷத்ரம், பணம், ஆயுஸ், வீட்டிலுள்ள பலம் இவைகளை ரஹஸ்யமாய் வைத்துக் கொள்ள வேண்டும். கோபத்தின் வேகத்தைத் தவிர்த்து மற்றவையின் வேகத்தைத் தடுக்கக் கூடாது. மனிதரின் வ்யாதி மெதுவானுலும், அல்பமானுலும் அதை உபேக்ஷிக்கக் கூடாது. தானி, விளா, எருக்கு, கள்ளி இவைகளின் நிழலை அண்டக் கூடாது. தூண், தீபம், மனிதன், மற்ற ப்ராணிகள்

இவைகளின் நிழலையும் அண்டக் கூடாது. பசு, யானை, குதிரை, ஆடு இவைகளின் வாலினின்றுவது, வாயினின்றுவது, தெறிக்கும் ஜலத்திவலைகளைத் தூரத்தில் தவிர்க்க வேண்டும்.

धर्मसारे— खगवातः शूर्पवातो वातो घ्राणमुखोत्थितः । सुकृतानि निहन्त्यते संस्पृष्टाः पुरुषस्य च इति ।। शातातपः – रेणवः शुचयः सर्वा वायुना समुदीरिताः । अन्यत्र रासभाजाविसमूहाजिन-वाससाम् ।। अजाविरेणुसंस्पर्शादायुर्मर्त्यस्य हीयते । श्वकाकोष्ट्र-खरोलूकसूकरग्रामपक्षिणाम् इति ।।

தர்மஸாரத்தில்:- பக்ஷியின் காற்று, முறத்தின் காற்று, மூக்கு, வாய் இவைகளின் காற்று, இவைகள் ஸ்பர்சிக்கப்பட்டால் மனிதனின் புண்யங்களை அழிக்கின்றன. சாதாதபர்:- காற்றினால் கிளப்பப்பட்ட தூளிகள் எல்லாம் சுத்தங்களே. கழுதை, வெள்ளாடு, செம்மறியாடு, துடைப்பம், தோல், வஸ்த்ரம் இவைகளின் தூளிகளைத் தவிர்த்து, ஆடுகள், நாய், காக்கை, ஒட்டகம், கழுதை, கோட்டான், பன்றி, க்ராமப் பறவைகள் இவைகளின் தூளிகளை ஸ்பர்சித்தால் மனிதன் ஆயுள் குறைகின்றது.

धर्मसारे—गोविप्रयोर्ब्राह्मणाग्न्योर्दम्पत्योर्गुरुशिष्ययोः । अन्तरेण न गच्छेत्तु हरस्य वृषभस्य च इति ।। देवलः— विद्या वित्तं तपश्चेति त्रीणि तेजांसि देहिनः । इह चामुत्र च श्रेयः सदैतैः साध्यते त्रिभिः ।। विद्यया विमलं ज्योतिर्वित्तत्यागात् सुखोदयम् । तपसा विमलां भूतिं प्राप्नुयान्मानवस्त्रिभिः इति ।। शङ्खलिखितौ — आपत्स्वपि हि कष्टासु परस्वं कामयेत न । नाभक्ष्यं भक्षयेत् किञ्चिन्नापूर्वचरितं चरेत् ।। कर्तव्यं न कर्तव्यं प्राणैः कण्ठगतैरपि ।। कर्तव्यमेव अकर्तव्यं प्राणैः कण्ठगतैरपि इति ।

**தர்மஸாரத்தில்:-** பசு, ப்ராம்ஹணன் இவரின் நடுவிலும், ப்ராம்ஹணன், அக்னி இவர்களின் நடுவிலும், தம்பதிகளின் நடுவிலும், குருசிஷ்யர்களின் நடுவிலும், சிவன் வ்ருஷபம் இவரின் நடுவிலும் போகக் கூடாது. **தேவலர்:-** மனிதனுக்கு, வித்யை, பணம், தபஸ் என்ற இம்மூன்றும் தேஜஸ்ஸுகளாம். இவ்வுலகத்திலும், பரலோகத்திலும் நன்மை இவைகளால் எப்பொழுதும் ஸாதிக்கப்படுகிறது. வித்யையால் நிர்மலமான ஒளியையும், பணத்தைக் கொடுப்பதால் ஸுகத்தின் உத்பத்தியையும், தபஸ்ஸினால் நிர்மலமான ஐச்வர்யத்தையும் மனிதன் அடைகிறான். **சங்கலிகிதர்கள்:-** கஷ்டமான ஆபத்துகளிலும், பிறனின் பொருளை விரும்பக்கூடாது. பக்ஷிக்கக் கூடாததையும் பக்ஷிக்கக் கூடாது. புதிதான நடத்தையை அனுஷ்டிக்கக் கூடாது. உயிர் செல்லும் தருணத்திலும் நிஷித்தமான கார்யத்தைச் செய்யக் கூடாது. சாஸ்த்ர விஹிதமான கார்யத்தையே செய்ய வேண்டும்.

बृहस्पतिः — यथा विद्या यथा कर्म यथा वित्तं यथा वयः । जानंस्तथैव कुर्वीत न वेषादिभिरुद्धतः ॥ यद्यपि स्यात्त्रिलोकज्ञस्त्रैलोक्याकर्षणक्षमः । तथाऽपि लौकिकाचारं मनसाऽपि न लङ्घयेत् इति । यमः — परकीयरहस्यानि नैवोपशृणुयात् क्वचित् । दुष्टव्याक्यं न च ब्रूयात् ब्राह्मणानां विशेषतः ॥ तूष्णीमासीत निन्दायां न ब्रूयात् किञ्चिदुत्तरम् ॥ यानि मिथ्याभिशस्तानां पतन्त्यश्रूणि रोदनात् । तानि मित्रपशून् घ्नन्ति तेषां मिथ्याभि- शंसिनाम् । शपता यत् कृतं पुण्यं शप्यमानं तु गच्छति ॥ शप्यमानस्य यत् पापं शपन्तमनुगच्छति इति ।

**ப்ருஹஸ்பதி:-** தன்னுடைய வித்யை எவ்வளவோ, கார்யம் எவ்வளவோ, பணம் எவ்வளவோ, வயது எவ்வளவோ அதற்கு அனுகுணமாகக் கார்யத்தை அறிந்து செய்ய வேண்டும். வேஷம் முதலியதால்

கர்வமுள்ளவனாய் இயலாதபடி செய்யக் கூடாது. மூன்று உலகங்களை அறிந்தவனாயினும், மூன்றுலகங்களையும் வசப்படுத்தச் சக்தனாயினும், உலகத்திலுள்ள நல்ல ஆசாரத்தை மனதாலும் தாண்டக்கூடாது. யமன்:- பிறருடையதான ரஹஸ்யங்களை ஒருகாலும் கேட்கக் கூடாது. துஷ்ட வார்த்தையைச் சொல்லக் கூடாது. ப்ராம்ஹணர்களின் விஷயத்தில் சொல்லவேகூடாது. நிந்தித்தால் மௌனமாய் இருக்க வேண்டும். பதிலொன்றையும் சொல்லக் கூடாது. பொய்யான பாபம் ஒருவர் மீது ஏற்றப்பட்டுத் தூஷிக்கப்பட்டவர் வருந்தி அழுவதால் எந்தக் கண்ணீர்த் துளிகள் விழுகின்றனவோ அவை, பொய்யான அபவாதத்தைச் சொல்லியவரின் பந்துக்களையும், பசுக்களையும் அழிக்கின்றன. பிறனைத் திட்டினால், திட்டுகிறவன் செய்த புண்யமெல்லாம், திட்டப்படுகிறவனை அடைகின்றது. திட்டப் படுகிறவனின் பாபமெலாம் திட்டுகிறவனை அடைகின்றது.

बृहस्पतिः— उपकाराय यो ब्रूयात् ब्राह्मणार्थे गवामपि । ब्रह्मयोनिशतं प्राप्य देवत्वमधिगच्छति इति । व्यासः— वेदशास्त्रविवादेन कालो गच्छति धीमताम् । व्यसनेनैव मूर्खाणां निद्रया कलहेन वा इति ।। याज्ञवल्क्यः — वयोबुद्ध्यर्थवाग्वेषश्रुताभिजन-कर्मणाम् । आचरेत् सदृशीं वृत्तिमजिह्मामशठां तथा इति ।

ப்ருஹஸ்பதி:- எவன் ப்ராம்ஹணர்களுக்கும், பசுக்களுக்கும். உபகாரத்திற்காசக நல்வார்த்தையைப் பேசுகின்றானோ, அவன் நூறுமுறை ப்ராம்ஹண ஜன்மத்தை அடைந்து, பிறகு தேவத்தன்மையை அடைகிறான். வியாஸர்:- நல்லபுத்தி உள்ளவருக்கு, வேதம், சாஸ்த்ரம் இவைகளை ஆராய்வதால் காலம் செல்லும், மூர்க்கருக்கு வ்யஸனம் (சூதாட்டம், மத்யபானம், ஸ்த்ரீஸங்கம் முதலியது), நித்ரை, கலஹம் இவைகளாலேயே காலம் செல்லும். (வ்யஸனம் -

பொழுதுபோக்கு) யாக்ஞவல்க்யர்:- வயது, புத்தி, தனம், வார்த்தை, வேஷம், சாஸ்த்ரம், குலம், தொழில் இவைகளுக்கு அனுகுணமாயும், வக்ரமில்லாததும், மாத்ஸர்யமில்லாததுமான ஆசாரத்தை ஸ்வீகரிக்க வேண்டும்.

स्मृत्यर्णवे—सर्वेषां ब्राह्मणो विद्यावृत्त्याचारान् यथाविधि। प्रब्रूयादितरेभ्यश्च स्वयं चैव तथा भवेत्॥ अहिंसयैव भूतानां कार्यं श्रेयोऽनुशासनम्। वागेव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्ममीप्सता॥ संमानात् ब्राह्मणो नित्यमुद्विजेत भयादिव। अमृतस्येव चाकाङ्क्षेदमवमानस्य सर्वतः॥ अवमानात्तपोवृद्धिः संमानाच्च तपः क्षयः। अर्चितः पूजितो विप्रो दुग्धा गौरिव गच्छति इति॥ व्यासः — प्रथमा गतिरात्मैव द्वितीया गतिरात्मजः। सन्तो गतिस्तृतीयोक्ता चतुर्थी धर्मसङ्ग्रहः इति। दक्षः — पैशुन्यमनृतं मायां कामं क्रोधं तथाऽप्रियम्। द्वेषं सङ्गं परद्रोहं विकर्माणि विवर्जयेत्॥ आयुर्वित्तं गृहच्छिद्रं मन्त्रो मैथुनमौषधम्। आयो दानावमानौ च नव गोप्यानि सर्वदा इति।

ஸ்ம்ருத்யர்ணவத்தில்:- ப்ராம்ஹணன் மற்ற எல்லோருக்கும், வித்யை, வ்ருத்தி, ஆசாரம் இவைகளை உபதேசிக்க வேண்டும். தானும் அனுஷ்டிக்க வேண்டும். ப்ராணிகளை ஹிம்ஸிக்காத முறையிலேயே நன்மையை உபதேசிக்க வேண்டும். தர்மத்தை அடைய விரும்புவோன், மதுரமாயும், ப்ரியமாயுமுள்ள வார்த்தையையே பேசவேண்டும். ப்ராம்ஹணன், பிறரால் செய்யப்படும் ஸம்மானத்தினின்றும், பயத்தைக் கொடுக்கும் வஸ்துவினின்று போலப் பயப்பட வேண்டும். எவரிடமிருந்தும் அவமானத்தை அம்ருதத்தைப் போல் எதிர்பார்க்க வேண்டும். அவமானத்தினின்றும் தபஸ்ஸிற்கு வ்ருத்தி உண்டாகிறது. ஸம்மானத்தினின்றும் தபஸ்ஸுக்கு நாசமுண்டாகிறது,

புகழப்பட்டும் பூஜிக்கப்பட்டமுள்ள ப்ராம்ஹணன் கறக்கப்பட்ட பசுபோல் (சோர்ந்து) செல்கின்றான். வ்யாஸர்:- தன் சரீரமே முதலாவது கதி, இரண்டாவது கதி புத்ரன், மூன்றாவது கதி ஸாதுக்கள், நான்காவது கதி தர்மத்தைச் சேர்ப்பதேயாம். தக்ஷர்:- கோட்செல்லுதல், பொய், மாயை, ஆசை, கோபம், அப்ரியம், த்வேஷம், பற்றுதல், பரத்ரோஹம், கெட்ட கார்யங்கள் இவைகளை வர்ஜிக்க வேண்டும். ஆயுள், தனம், க்ருஹச்சித்ரம், (வீட்டினுள் குறை) மந்த்ரம், மைதுனம், ஔஷதம், வரவு, தானம், அவமானம் என்ற ஒன்பதையும் எப்பொழுதும் மறைக்க வேண்டும்.

स्मृतिसारे— रक्तमाल्यं न धार्यं स्याच्छुक्लमाल्यं तु पण्डितैः। वर्जयित्वा तु कमलं तथा कुवलयं विभो। रक्तं शिरस्यधार्यं तु तथाऽनाघ्रेयमित्यपि इति॥ वामनपुराणे — देशानुशिष्टं कुलधर्ममग्र्यं स्वगोत्रधर्मं च न सन्त्यजेत। नानर्थसिद्धिं समुपाचरेत नासत्प्रलापं न च सत्यहीनम्॥ न निष्ठुरं नाम न शास्त्रहीनं वाक्यं वदेत् साधुजनेन येन। निन्द्यो भवेन्नैव च धर्मवेदी सङ्गं न चासत्सु जनेषु कुर्यात्॥ वृथाऽटनं वृथा दानं वृथा च पशुमारणम्। न कर्तव्यं गृहस्थेन वृथा दारपरिग्रहः इति॥ बोधायनः— यद्यौवने चरति विभ्रमेण सद्वाऽसद्वा यादृशं वा यथा वा। उत्तरे चेद्वयसि साधुवृत्तस्तदेवास्य भवति नेतराणि इति।

ஸ்ம்ருதிஸாரத்தில்:- அறிந்தவர்கள் சிவப்புப் புஷ்பங்களையும், வெள்ளைப் புஷ்பங்களையும் தரிக்கக் கூடாது. தாமரை, செங்கழுநீர் இவைகளைத் தவிர்த்து. சிவப்புப் புஷ்பத்தைத் தலையில் தரிக்கக் கூடாது, முகரக் கூடாது. வாமனபுராணத்தில்:- தேசத்திலுள்ளவரால் சொல்லப்பட்ட தர்மத்தையும், தன் குலதர்மத்தையும், தனது கோத்ரதர்மத்தையும் விடக்கூடாது. அனர்த்தத்தை விளைவிக்கும் கார்யத்தைச் செய்யக் கூடாது. கெட்ட வார்த்தை, பொய் வார்த்தை, நிஷ்டுரமான வார்த்தை, சாஸ்த்ரமில்லாத வார்த்தை இவைகளைப் பேசக் கூடாது.

எந்த வார்த்தையைப் பேசுவதால் ஸாதுஜனங்களால் நிந்த்யனுவானோ, தர்மக்ஞனாய் ஆவதில்லையோ அந்த வார்த்தையைப் பேசக்கூடாது. அஸஜ்ஜனங்களிடம் சேரக்கூடாது. வீணாய்ச்சுற்றுதல், வீணாய்த் தானம், வீணாய்ப் பசுஹிம்ஸை, வீணாய் விவாஹம் செய்து கொள்ளல் இவைகளை க்ருஹஸ்தன் தவிர்க்க வேண்டும். போதாயனர்:- மனிதன் யௌவனகாலத்தில் விசேஷப்ரமத்தால் நல்ல, அல்லது பொல்லாததான கார்யத்தை எதையோ எவ்விதமோ செய்தாலும், பின் வயதில் நல்ல நடத்தையுடையவனாயிருந்தால், அதுவே இவனுக்குப் பலனையளிப்பதாகும். மற்றவை பலனளிப்பதாகாது.

देवलः—अग्नेर्वृषलभुक्तस्य ग्रहणं नास्त्यनापदि । श्वपाको वृषलो भोक्तुं ब्राह्मणाग्निं च नार्हतः ।। चण्डालाग्नेरमेध्याग्नेः सूतकाग्नेश्च कर्हिचित् । पतिताग्नेश्चिताग्नेश्च न शिष्टैर्ग्रहणं स्मृतम् इति । आश्वमेधिके – पचनाग्निं न गृह्णीयात् परवेश्मनि जातुचित् । तेन पक्केन चान्नेन यत् कर्म कुरुते शुभम् । तच्छुभस्य फलस्यार्धमग्निदस्य भवेद्ध्रुवम् इति ।

தேவலர்:- ஆபத்தில்லாத காலத்தில், ப்ராம்ஹணன் சூத்ராக்னியை உபயோகிக்கக் கூடாது. ப்ஸவபாகன், சூத்ரன் இவர்களும் ப்ராம்ஹணாக்னியை உபயோகிக்க அர்ஹரல்லர். சண்டாளாக்னி, அசுத்தாக்னி, ஸூதகாக்னி, பதிதாக்னி, சிதா (மயானா)க்னி இவைகளைச் சிஷ்டர்கள் க்ரஹிக்கக் கூடாது. ஆச்வமேதிகத்தில்:- பிறர் வீட்டிலிருந்து பாகாக்னியை ஒருகாலும் க்ரஹிக்கக் கூடாது. க்ரஹித்து அதனால் பக்வமான அன்னத்தால் எந்தச் சுபகர்மத்தைச் செய்கின்றானோ, அந்தச் சுபகர்மத்தின் பலனின் பாதிப்பாகம் அக்னியைக் கொடுத்தவனைச் சேரும். நிச்சயம்.

दक्षः—मेखलाजिनदण्डेन ब्रह्मचारीति लक्ष्यते । गृहस्थो यष्टिवेदाद्यैर्नखरोम्णा वनाश्रितः ।। यतिः काषायदण्डाभ्यां लक्षणानि

पृथक् पृथक्। यस्यैतल्लक्षणं नास्ति प्रायश्चित्ती न चाश्रमी ।। कुटुम्बी वर्जयेत् बिम्बं दार्वं शैलं च मृन्मयम् । गृहभित्तिषु संस्थं च योगनिद्रारसोत्सुकम्।। कुटुम्बिनो विनाऽन्येषां तीर्थयात्रा विशिष्यते। कुटुम्बिनो गृहे सर्वं निर्गतो विकलो भवेत् इति।

தக்ஷர்:- மேகலை, மான்தோல், தண்டம் இவைகளால் ப்ரம்ஹசாரீ என்று அறியப்படுகிறான். மூங்கில்கழி, வேதம் (தர்ப்பம்) இவைகளால் க்ருஹஸ்தன் என்று அறியப்படுகிறான். வளர்ந்துள்ள நகங்களாலும், ரோமங்களாலும் வானப்ரஸ்தன் என்று அறியப்படுகிறான். காஷாயவஸ்த்ரம், தண்டம் இவைகளால் ஸன்யாஸீ என்று அறியப்படுகிறான். இவர்களுக்கு அடையாளங்கள் தனித்தனியேயாம். எந்த ஆச்ரமிக்கு இந்த அடையாளமில்லையோ அவன் ப்ராயச்சித்தத்திற்கு அர்ஹன். அவன் ஆய்ரமியல்ல. குடும்பமுடையவன் கட்டையினுலும், சிலையினுலும், மண்ணினுலும் செய்யப்பட்ட பிம்பத்தையும், வீட்டின் சுவர்களிலுள்ள பிம்பத்தையும், யோக நித்ரையில் இருக்கும் பிம்பத்தையும் வர்ஜிக்க வேண்டும். குடும்பியைத் தவிர்த்த மற்றவர்க்கே தீர்த்தயாத்ரை ய்லாக்யமாகியது. குடும்பிக்கு ஸகலதீர்த்தமும் வீட்டிலேயே உள்ளது. குடும்பமில்லாதவனே வீட்டை விட்டு வெளியிற் செல்ல வேண்டும்.

सायणीये — पुंसां दीपप्रशमनात् स्त्रीणां कूश्माण्डखण्डनात्। अचिरेणैव कालेन वंशच्छेदो भविष्यति ।। क्षुतस्खलित जृम्भेषु नृणा मायुः प्रहीयते। तत्क्षणात् परिहर्तव्यं जीवधूल्यङ्गुलिस्वनैः ।। क्षुते शतं जीवेति । स्खलिते पांसूनादाय ललाटे निधाय परिहार्यम् । जृम्भेण अङ्गुलिस्फोटेन परिहर्तव्यमित्यर्थः । अयोबीजजलान्नाग्निक्षीर-धान्यौषधादिकम् । रात्रौ दातुर्गृहं शून्यं प्रतिसङ्ग्रहणं शुभम् इति ।। किञ्चित् द्रव्यादानेन क्षीरादिदाने नक्तं न दोष इत्यर्थः ।। स्मृत्यन्तरे

— तृतीयमासादारभ्य न कुर्याद्गर्भिणीपतिः । क्षौरं शवानुगमनं दूरयात्रां प्रतिग्रहम् ।। श्राद्धं च सागरस्नानं प्रे(व्र)तनिर्हरणं तथा । गृहारम्भप्रवेशौ च देवतास्थापनं तथा ।। केशश्मश्रुनखादींस्तु धारयेद्गर्भिणीपतिः इति ।

ஸாயணீயத்தில்:- புருஷர்கள் விளக்கை அணைத்தாலும், ஸ்த்ரீகள் பூசனிக்காயை உடைத்தாலும், ஸ்வல்பகாலத்திலேயே வம்சக்ஷயம் ஏற்படும். தும்மல், தடுக்கிவிழுதல், கொட்டாவி விடுதல் இவைகள் ஏற்பட்டால், மனிதரின் ஆயுள் குறைகின்றது. ஆகையால், அவைகளை உடனே- பரிஹரிக்க வேண்டும். (எவ்விதமெனில்) தும்மலை, 'சதம்ஜீவ' என்று சொல்வதாலும், தடுக்கிவிழுதலைப் புழுதியை எடுத்து நெற்றியில் இடுவதாலும், கொட்டாவியை விரலைச் சொடுக்குவதாலும் பரிஹரிக்க வேண்டும் என்பது பொருள். இரும்பு, விதை, ஜலம், அன்னம், அக்னி, பால், தான்யம், ஔஷதம் முதலியதை ராத்ரியில் பிறருக்குக் கொடுக்கக் கூடாது. கொடுத்தால், கொடுத்தவனின் க்ருஹம் சூன்யமாகும். ஏதாவது த்ரவ்யத்தைக் கொஞ்சம் வாங்கிக் கொண்டு பால் முதலியதைக் கொடுத்தால் ராத்ரியில் தோஷமில்லை என்பது பொருள். மற்றொரு ஸ்ம்ருதியில்:- கர்ப்பிணியின் பதியானவன், மூன்றாவது மாதம் முதற்கொண்டு, க்ஷௌரம், பிணத்தின் பின் போகுதல், தூரதேசயாத்ரை, ப்ரதிக்ரஹம், ச்ராத்த போஜனம், ஸமுத்ர ஸ்நானம், சவத்தை வஹித்தல், க்ருஹாரம்பம், க்ருஹப்ரவேசம், தேவப்ரதிஷ்டை இவைகளைச் செய்யக் கூடாது. கர்ப்பிணியின் பதி, மயிர், மீசை, நகம் இவைகளை நறுக்கக் கூடாது. தரிக்க வேண்டும்.

पुराणे—धर्मो मित्रं प्रमीतस्य विद्या मित्रं प्रवासिनः । भार्या मित्रं गृहस्थस्य दानं मित्रं मरिष्यतः । केशान् मासत्रयादूर्ध्वं गर्भवान् वापयेद्यदि । गर्भध्वंसेन तत्तुल्यं ब्रह्महत्यासमं भवेत् ।। क्षौरं शवानुगमनं

नखकृन्तनं च श्राद्धं च वास्तुकरणं ह्यतिदूरयानम्। उद्वाहवारिधि-जलस्नपनोपयोगमायुःक्षयं भवति गर्भिणिकापतीनाम् इति ॥ सारसमुच्चये—बीजानां वापनं क्षौरं वास्तुकर्म कृषिं तथा। रात्रौ विप्रो न कुर्वीत कुर्वन् क्षिप्रं विनश्यति। चौलाब्दे च विवाहाब्दे ह्यौपनायनिके तथा॥ मातापित्रोर्मृताब्दे च क्षौरं नैव समाचरेत् इति।

புராணத்தில்:- இறந்தவனுக்குத் தர்மம் மித்ரனும், அன்யதேசம், செல்பவனுக்கு வித்யை மித்ரனும், க்ருஹத்தில் இருப்பவனுக்குப் பார்யை மித்ரனும். இறக்கப் போகிறவனுக்குத் தானம் மித்ரனும். கர்ப்பிணீபதியானவன், மூன்று மாதத்திற்கு மேல் வபனம் செய்து கொண்டால், அது கர்ப்பத்தை அழிப்பதற்குச் சமமாம். ப்ரம்ஹஹத்யைக்கும் ஸமமாகும். க்ஷௌரம், சவானுகமனம், நகங்களைச் சேதித்தல், ச்ராத்த போஜனம், க்ருஹநிர்மாணம், தூரதேசகமனம், விவாஹம், ஸமுத்ரஜலஸ்நானம் இவைகளைச் செய்தால் கர்ப்பிணீ பதிகளுக்கு ஆயுள் குறையும். ஸாரஸமுச்சயத்தில்:- ப்ராம்ஹணன், ராத்ரியில், விதை விதைத்தல், க்ஷௌரம், க்ருஹாரம்பம், க்ருஷி இவைகளைச் செய்யக் கூடாது. செய்தவன் சீக்ரத்தில் நசிப்பான். சௌளம் செய்து கொண்ட வர்ஷம், விவாஹம் செய்து கொண்ட வர்ஷம், உபநயனம் செய்து கொண்ட வர்ஷம், மாதாபிதாக்கள் இறந்த வர்ஷம் இவைகளில் க்ஷௌரம் கூடாது.

चन्द्रिकायाम्—नोदन्वदम्भसि स्नायान्नखश्मश्रुनिकृन्तनम्। अन्तर्वत्न्याः पतिः कुर्वन् व्रजेत नरकं ध्रुवम्॥ वापयेन् न कृतोद्वाहो वर्षं वर्षार्धमेव वा। भुञ्जीत पार्वणं नैव श्राद्धं तत्र विशेषतः॥ एकोदराणां पुत्राणां पितुश्चैकदिने तथा। श्राद्धे तु भोजनं नैव क्षुरकर्म च नैव हि॥ पितुः पुत्रस्य चैकस्मिन् दिने क्षौरं कृतं यदि। पुत्रस्य चायुर्हीयेत पितुश्च तदनन्तरम्॥ नित्यं नैमित्तिकं चैव कर्म कुर्वन्नतन्द्रितः। निषिद्धं वर्जयन् धीमा निहामुत्र सुखी भवेत् इति॥



—*—

சந்த்ரிகையில்:- கர்ப்பணியின் பதி, ஸமுத்ர ஸ்நானம், க்ஷௌரம் இவைகளைச் செய்தால் நரகத்தை அடைவான், நிச்சயம். விவாஹம் செய்து கொண்டவன் ஒரு வர்ஷம், அல்லது அரைவர்ஷம் வரையில் க்ஷௌரம், ச்ராத்த போஜனம் இவைகளைச் செய்யக் கூடாது. ஒரே வயிற்றில் பிறந்த புத்ரர்களுக்கும், பிதாவுக்கும், ஒரே தினத்தில், ச்ராத்த போஜனமும், க்ஷௌரமும் கூடாது. பிதாவும் புத்ரனும் ஒரே நாளில் க்ஷௌரம் செய்து கொண்டால், புத்ரனுக்கும், பிதாவுக்கும் ஆயுள் குறையும். புத்தியுள்ளவன், சோம்பல் இல்லாதவனாய், நித்ய நைமித்திக கர்மங்களை அனுஷ்டிப்பவனும், நிஷித்தத்தை வர்ஜிப்பவனுமானால், அவன் இவ்வுலகிலும், மேலுலகிலும் ஸுகமுடையவனாய் ஆவான்.

आह्निकाण्डे अवशिष्टधर्मप्रकरणं समाप्तम्।

ஆஹ்னிக காண்டத்தில் அவசிஷ்டதர்மம் முற்றிற்று.

—•—

## अनुबन्धः—२

## द्रव्यशुद्धिप्रकरणम्

तत्र शुद्धिहेतूनाह पराशरः— कालोऽग्निः कर्म मृद्वायुः मनो ज्ञानं तपो बलम्। पश्चात्तापो निराहारः सर्वेऽमी शुद्धिहेतवः ॥ त्रीणि देवाः पवित्राणि ब्राह्मणानामकल्पयन्। अदृष्टमद्भिर्निर्णिक्तं यच्च वाचा प्रशस्यते ॥ ब्राह्मणो जङ्गमं तीर्थं तीर्थभूता हि साधवः । तेषां वाक्योदकेनैव शुद्ध्यन्ति मलिना जनाः इति।

## அநுபந்தம்—2

### த்ரவ்ய சுத்திப்ரகரணம்

இனி த்ரவ்யசுத்தி ப்ரகரணம் சொல்லப்படுகிறது. அதில், சுத்திகாரணங்களைச் சொல்லுகிறார் பராசரர்:-

காலம், அக்னி, கர்மம், மண், வாயு, மனது, க்ஞானம், தபஸ், பலம், பச்சாத்தாபம், உபவாஸம் என்ற இவை எல்லாம் சுத்திகாரணங்களாம். தேவர்கள், ப்ராம்ஹணர் களுக்கு, அத்ருஷ்டம், ஜலத்தால் அலம்பியது, வாக்கினுல் அனுக்ரஹிக்கப்பட்டது என்ற இம்மூன்றையும் சுத்தி காரணங்களாகக் கல்பித்தனர். அத்ருஷ்டம் = (காணுதது) காக்கை முதலியதால் தொடப்பட்ட வஸ்து தன்னுல் பார்க்கப்படவில்லையோ, பிறனுலும் சொல்லப்படவில்லை எனில் அதை உபயோகித்தால் தோஷமில்லை. எந்த இடத்தில் அதற்காகச் சுத்தி சொல்லப்படவில்லையோ. அவ்விடத்தில் அந்த வஸ்து ஜலத்தால் சுத்தமாகிறது. எந்த வஸ்துவில் சொல்லியபடி சுத்தி செய்த பிறகும் மனதிற்கு ஸந்தோஷமில்லாததால் சுத்தியில் ஸந்தேஹமுள்ளதோ அந்த வஸ்து, ப்ராம்ஹணர்களால் 'இது சுத்தமாகியது' என்று சொல்லப்பட்டால் சுத்தமாகின்றது என்பது பொருள். (இது விக்ஞானேச்வரீயத்திலுள்ளது.) ப்ராம்ஹணர்கள் ஜங்கமமான தீர்த்தமாம். அவர்களின் வசனமெனும் ஜலத்தாலேயே மலினரான (அழுக்குள்ள) ஜனங்கள் சுத்தராகின்றனர்.

बोधायनः—कालोऽग्निर्मनसः शुद्धिरुदकाद्युपलेपनम् । अविज्ञातं च भूतानां षड्विधं शौचमुच्यते ।। कालं देशं तथाऽऽत्मानं द्रव्यं द्रव्यप्रयोजनम् । उपपत्तिमवस्थां च ज्ञात्वा शौचं प्रकल्पयेत् ।। पञ्चेन्द्रियस्य देहस्य बुद्धेश्च मनसस्तथा । द्रव्यदेशक्रियाणां च शुद्धिराचार्य इष्यते इति ।। मनुः – ज्ञानं तपोऽग्निराहारो मृन्मनो वार्युपाञ्जनम् । वायुः कर्मार्ककालौ च शुद्धेः कर्तॄणि देहिनाम् इति ।। आहारः - पञ्चगव्यादिः । उपाञ्जनं - गोमयादिकम् ।। स एव — क्षान्त्या शुद्ध्यन्ति विद्वांसो दानेनाकार्यकारिणः प्रच्छन्नपापा जप्येन तपसा वेदवित्तमाः ।। अद्भिर्गात्राणि शुद्ध्यन्ति मनः सत्येन शुध्यति । विद्यातपोभ्यां भूतात्मा बुद्धिर्ज्ञानेन शुद्ध्यति इति ।।

போதாயனர்:- காலம், அக்னி, மனச்சுத்தி, ஜலம் முதலியது, உபலேபனம், அவிக்ஞாதம் என்று ஆறுவிதமுள்ளது பூதங்களின் சுத்தி என்று சொல்லப்படுகிறது. காலம், தேசம், ஆத்மா, த்ரவ்யம், த்ரவ்யப்ரயோஜனம், உபபத்தி, அவஸ்தை என்ற இவைகளை அறிந்து சுத்தியைக் கல்பிக்க வேண்டும். ஐந்து இந்த்ரியங்களுடைய தேஹத்திற்கும், புத்திக்கும், மனதிற்கும், த்ரவ்யம், தேசம், க்ரியை இவைகளுக்கும் சுத்தியே ஆசார்யன் (முக்யன்) எனப்படுகிறது. மனு:- க்ஞானம், தபஸ், அக்னி, ஆஹாரம் (பஞ்சகவ்யம் முதலியது), மண், மனஸ், உபாஞ்ஜனம் (கோமயம் முதலியது), வாயு, கர்மம், ஸூர்யன், காலம் என்ற இவை எல்லாம் ப்ராணிகளுக்கு சுத்திகரங்களாம். மனுவே:- வித்வான்கள் பொறுமையால் சுத்தராகின்றனர். அகார்யத்தைச் செய்தவர்கள் தானத்தாலும், பாபத்தை மறைத்து வைத்திருப்பவர் ஜபத்தாலும், வேதத்தை நன்றாய் அறிந்தவர்கள் தபஸ்ஸினாலும் சுத்தராகின்றனர். அங்கங்கள் ஜலத்தினால் சுத்தங்களாகின்றன. மனது ஸத்யத்தால் சுத்தமாகிறது. ஜீவன் வித்யையாலும் தபஸ்ஸினாலும் சுத்தனாகிறான். புத்தி ஜ்ஞானத்தால் சுத்தமாகிறது.

अशुद्धिहेतवो दर्शिताः स्मृत्यर्थसारे—विण्मूत्रशुक्लरक्तवसा-सुरामद्यादीन्यत्यन्तोपहति कारणानि। नखश्लेष्माश्रुस्वेदादीन्यल्पो-पहतिकारणानि । अल्पकाले अल्पस्पर्शे अल्पोपहतिः । बहुकाले अधिकस्पर्शे अत्यन्तोपहतिः इति ।। मनुः – तैजसानां मणीनां च सर्वस्याश्ममयस्य च। भस्मनाऽद्भिर्मृदा चैव शुद्धिरुक्ता मनीषिभिः ।। निर्लेपं काञ्चनं भाण्डमद्भिरेव विशुध्यति। अब्जमश्ममयं चैव राजतं चानुपस्कृतम् इति। अब्जं - शङ्खमुक्तादि। अनुपस्कृतं - निर्लेपम्। एवं विशेषणात् सलेपविषयः पूर्वश्लोकः ।। ताम्रायःकांस्यरौप्याणां त्रपुणः सीसकस्य च। शौचं यथार्हं कर्तव्यं क्षाराम्लोदकवारिभिः इति।

அசுத்தியின் காரணங்கள் சொல்லப்பட்டுள்ளது, ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- விஷ்டை, மூத்ரம், சுக்லம், ரக்தம், வஸை (ஊன்நீர்), ஸுரை, மத்யம் முதலியவை அதிகமான உபஹதிக்கு (அசுத்திக்கு)க் காரணங்கள். நகம், கோழை, கண்ணீர், வேர்வை முதலியவை ஸ்வல்ப உபஹதிக்குக் காரணங்கள். ஸ்வல்ப்ப காலத்தில் ஸ்வல்ப்ப ஸ்பர்சமேற்பட்டால் அல்ப்போபஹதி. வெகுகாலம் அதிகஸ்பர்சம் ஏற்பட்டால் அத்யந்தோபஹதி எனப்படும். மனு:- உலோகங்களுக்கும், மணிகளுக்கும் (ரத்னங்கள்), கல்லால் உண்டாகிய எல்லாவற்றுக்கும், சாம்பல், ஜலம், மண் இவைகளால் சுத்தியை அறிந்தவர் சொல்லுகின்றனர், அசுத்த வஸ்துவின் பற்றில்லாத ஸ்வர்ணமயமான பாண்டம் ஜலத்தினுலேயே சுத்தமாகிறது. பற்றில்லாத சங்கு முத்து முதலியதும், கல்மயமானதும், வெள்ளிப்பாத்ரம் முதலியதும் ஜலத்தாலேயே சுத்தமாகிறது. 'லேபமில்லாத' என்ற விசேஷணத்தால், முன் ச்லோகம் லேபமுடையதின் விஷயமாகிறது. தாம்ரம், இரும்பு, வெண்கலம், பித்தளை, காரீயம், ஈயம் இவைகளுக்குத் தகுந்தபடி, உப்பு ஜலம், புளி ஜலம் இவைகளால் சுத்தி செய்ய வேண்டும்.

उशनाः—मूत्रपुरीषरेतःकुणपोपहतानामावर्तनमुल्लेखनं भस्मना त्रिः सप्तकृत्वः परिमार्जनमतैजसानामेवं भूतानामुत्सर्गः इति। कण्वः – श्लेष्माद्युपहतानां प्रतिलोमस्पर्शोपहतानामेकविंशतिकृत्वो मार्जनं, रजस्वलोच्छिष्टानामेकदिनं पञ्चगव्यं प्रक्षिप्यैकविंशति कृत्वो मार्जनमस्पृश्योपहतानामावर्तनम् इति। पराशरः – भस्मना शुद्ध्यते कांस्यं ताम्रमाम्लेन शुद्ध्यति। भस्मना शुद्ध्यते कांस्यं सुरया यन्न लिप्यते। सुरामात्रेण संस्पृष्टं शुद्ध्यतेऽग्न्युपलेखनैः ।। उपलेखनम् - शस्त्रेण उपरिभागस्य तक्षणम्। मूत्रपुरीषलेपेऽप्येषैव शुद्धिः ।।

உசனஸ்:- மூத்ரம், மலம், சுக்லம், பிணம் இவைகளால் அசுத்தமானவைகளுக்குத் தேய்த்தல், கடைதல், சாம்பலினுல் 21- முறை துடைத்தல் இது சுத்திஹேதுவாகும். இது தாதுபாத்ரங்களுக்கு. மற்றவைகளை த்யாகம் செய்ய வேண்டியது. கண்வர்:- கோழை முதலியதால் அசுத்தமானவைகளுக்கும், ப்ரதிலோமஜாதீய ஸ்பர்சத்தால் அசுத்தமானவைக்கும் 21-முறை துடைப்பதால் சுத்தி. ரஜஸ்வலையால் உச்சிஷ்டமானவைக்கு, ஒருநாள் முழுவதும் பஞ்சகவ்யத்தைப் போட்டு 21- தடவை தேய்ப்பது சுத்திகரம், தீண்டக்கூடாதவரால் அசுத்தமானவைக்கு இவை அதிகப்படுத்துதல் சுத்திகாரணம். பராசரர்:- வெண்கலம் சாம்பலினுல் சுத்தமாகிறது. தாம்ரம் புளியினுல் சுத்தமாகிறது. வெண்கலம் கள்ளால் ஸ்பர்சிக்கப்படாமலிருந்தால் மட்டில் சாம்பலினுல் சுத்தமாகும். கள்ளால் ஸ்பர்சிக்கப்பட்டதாகில் அக்னியில் காய்ச்சுவதாலும் சாணையினுல் தேய்ப்பதாலும் சுத்தமாகும். மூத்ரமலங்களால் பற்றப்பட்டாலும் இதே சுத்தி.

गवाघ्रातादीनां दशकृत्वो भस्मकर्षणेन शुद्धिरित्याह स एव — गवाघ्रातानि कांस्यानि श्वकाकोपहतानि च। शुद्ध्यन्ति दशभिः क्षारैः शूद्रोच्छिष्टानि यानि च ।। (क्षारैः - लवणसहितैस्तोयैः) गण्डूषं पादशौचं च कृत्वा वै कांस्यभाजने। षण्मासान् भुवि निक्षिप्य उद्धृत्य पुनराहरेत्। दन्तमस्थि तथा शृङ्गं रूप्यसौवर्णभाजनम्। मणिपात्राणि शङ्खं चेत्येतान् प्रक्षालयेत् जलैः ।। आयसेष्वायसानां च सीसस्याग्नौ विशोधनम्। स्नेहो वा गोरसो वाऽपि तत्र शुद्धिः कथं भवेत् ।। अल्पं परित्यजेत् तत्र स्नेहस्य पचनेन च । अनलज्वालया शुद्धिर्गोरसस्य विधीयते इति।

பசுவினுல் முகரப்பட்டது முதலியவைக்குப் பத்துத் தடவை சாம்பலினுல் தேய்ப்பதால் சுத்தி என்கிருர்.

பராசரரே:- பசுவினுல் முகரப்பட்டதும், அல்லது, நாய், காக்கை இவைகளால் அசுத்தமாக்கப்பட்டதும், சூத்ரனுல் உச்சிஷ்டமாகியதுமான வெண்கலங்கள், பத்துத் தடவை உப்பு ஜலங்களால் சுத்தமாகின்றன. வெண்கலத்தில் வாயைக் கொப்புளித்தாலும், கால்களை அலம்பினுலும், அதை ஆறு மாதம் மண்ணிற்குள் வைத்து எடுத்து உபயோகிக்க வேண்டும். ம்ருகங்களின், தந்தம், எலும்பு, கொம்பு, வெள்ளிப்பாத்ரம், ஸ்வர்ண பாத்ரம், ரத்ன பாத்ரங்கள், சங்கு இவைகளுக்கு ஜலத்தால் அலம்புவதால் சுத்தி. இரும்புகளுக்கு இரும்புகளால் தேய்ப்பதால் சுத்தி, ஈயத்திற்கு நெருப்பில் காய்ச்சுவது சுத்திகரமாகும். அதில் எண்ணெய், அல்லது பால் மோர் முதலியது இருந்தால் அதற்கு எப்படி சுத்தி எனில், அது அல்பமாயிருந்தால் பரிஹரிக்கவும், அதிகமாயிருந்தால், எண்ணெய்க்குக் காய்ச்சுவதாலும், மோர் முதலியவைக்கு அக்னி ஜ்வாலையால் சுற்றுவதாலும் சுத்தி விதிக்கப்படுகிறது.

याज्ञवल्क्यः—त्रपुसीसकताम्राणां क्षाराम्लोदकवारिभिः । भस्माद्भिः कांस्यलोहानां शुद्धिः प्लावो द्रवस्य तु इति ॥ एतच्चाम्लोदकादिभिः शुद्धिविधानं न नियमार्थम् । मलं संयोगजं तज्जं यस्य येनोपहन्यते । तस्य तच्छोधनं प्रोक्तं सामान्यं द्रव्यशुद्धिकृत् इत्यविशेषेण स्मरणात् । शुद्धिः प्लावो द्रवस्य तु । द्रवद्रव्यस्य घृतादेः प्रस्थप्रमाणाधिकस्य श्वकाकाद्युपहतस्य अमेध्यसंस्पृष्टस्य च प्लावः - प्लावनम् । शक्तिविषये ततोऽल्पस्य त्याग इत्यर्थः ॥

யாக்ஞவல்க்யர்:- காரீயம்; ஈயம், தாம்ரம் ரீதி, (பித்தளை) இவைகளுக்கு க்ஷாரஜலத்தாலும், புளி ஜலத்தாலும், ஜலத்தாலும் சுத்தி. வெண்கலம் லோஹம் இவைகளுக்குச் சாம்பல் ஜலம் இவைகளால் சுத்தி. த்ரவத்ரவ்யமயமான நெய் முதலியதற்கு அதற்கு ஸமானமான த்ரவ்யத்தால் பூரணம் செய்வது சுத்தி, (அலப்பமாயிருந்தால் பரித்யாகம் செய்ய வேண்டும்.) புளி

ஜலம் முதலியதால் சுத்தி விதிக்கப்பட்டது நியமத்திற்கல்ல. (ஏனெனில்) 'எந்த த்ரவ்யத்தின் மலம், சேர்க்கையால் உண்டாகியதாயினும், அதிலேயே உண்டாகியதாயினும், எந்த வஸ்துவினுல் அகற்றப் படுகின்றதோ, அதற்கு அது சுத்திகரமாகும். இது எல்லா த்ரவ்யங்களின் சுத்தியிலும் ஸாதாரணம்' என்று ஸ்ம்ருதி உள்ளது. த்ரவத்ரவ்யமான நெய் முதலியது ஒரு படிக்கு மேலிருந்தால் நாய் காக்கை முதலியதால் அசுத்தமாயிருந்தால், அல்லது அசுத்த வஸ்துவுடன் கலந்திருந்தால் அதை ஸமான த்ரவ்யத்தால் பூரணம் செய்ய வேண்டும். அதை விட அல்பமாயிருந்தால் சுத்தி விஷயத்தில் தவிர்க்க வேண்டும். என்பது பொருள்.

तथा शङ्खः—अभ्यवहार्याणां घृतेनाभिघारितानां पुनः पचनमेवं प्रस्थाधिकानां स्नेहानां स्नेहद्रवरसानाम् इति ॥ कीटाद्युपहतस्य उत्पवनमेव। यथाऽऽह मनुः—द्रवाणां चैव सर्वेषां शुद्धिररुत्पवनं स्मृतम् इति ॥ उत्पवनं - वस्त्राद्यन्तरितपात्रे प्रक्षेपः ॥ मधूदकादेः पात्रान्तरानयनाच्छुद्धिः । मधूदके पयस्तद्विकाराश्च पात्रात् पात्रान्तरनयनाच्छुद्धाः इति बोधायनस्मरणात् ॥ वर्णापशदहस्तात् प्राप्तस्य मधुघृतादेः पात्रान्तरानयनं पुनःपचनं च कार्यम्।

சங்கர்:- புஜிக்கத் தகுந்த வஸ்துக்களை நெய்யால் அபிகாரம் செய்து மறுபடி பாகம் செய்வதால் சுத்தி. இவ்விதம், ஒரு படிக்கு மேலுள்ள ஸ்நேஹங்களுக்கும் த்ரவத்ரவ்யங்களுக்கும் சுத்தி. புழு முதலியதால் அசுத்தமாகியதற்கு உத்பவனமே, சுத்தி, ஏனெனில், மனு:- த்ரவமான எல்லா வஸ்துக்களுக்கும் உத்பவனமே சுத்தி என்று சொல்லப்பட்டுள்ளது. உத்பவனம் - வஸ்தரம் முதலியதால் மறைக்கப்பட்ட வேறுபாத்ரத்தில் வடிக்கட்டிச் சேர்ப்பது. தேன், ஜலம் முதலியதற்கு, வேறு பாத்ரத்தில் சேர்ப்பதால், சுத்தி. 'தேன், ஜலம், பால், அதன்

விகாரங்கள் இவை பாத்ரத்திலிருந்து மற்றொரு பாத்ரத்தில் விடுவதால் சுத்தங்களாகின்றன'' என்று போதாயன ஸ்ம்ருதி. நீசவர்ணத்தானின் கையிலிருந்து கிடைத்த தேன், நெய் முதலியதற்கு வேறு பாத்ரத்தில் சேர்ப்பதும், மறபடி காய்ச்சுதலும் செய்யப்பட வேண்டும்.

बोधायनः—तैजसानामुच्छिष्टानां गोशकृन्मृद्भस्मभिः परिमार्जनमन्यतमेन वा ताम्ररजतसुवर्णानामम्लैः मूत्र पुरीषलोहितरेतःप्रभृत्युपहतानां तैजसानां पात्राणां पुनःकरणं गोमूत्रे वा सप्तरात्रं परिशायनं महानद्यां वा इति ॥ याज्ञवल्क्यः – अमेध्याक्तस्य मृत्तोयैः शुद्धिर्गन्धादिकर्षणात् इति ॥ आदिग्रहणाल्लेपस्यापि ग्रहणम् ॥ यथाऽऽह गौतमः – लेपगन्धापकर्षणे शौचममेध्यलिप्तस्य इति ॥ सर्वशुद्धिषु च प्रथमं मृत्तोयैरेव लेपगन्धापकर्षणं कार्यम् । अशक्तावन्येन । अद्भिः पूर्वं मृदा इति गौतमवचनात् ।

போதாயனர்:- தைஜஸ (உலோக) பாத்ரங்கள் உச்சிஷ்டங்களானால் பசுவின் சாணம், மண், சாம்பல் இவைகள், அல்லது ஒன்றினால், துடைப்பதால் சுத்தி. தாம்ரம், வெள்ளி, பொன் இவைகளுக்குப் புளிகளால் சுத்தி. மூத்ரம், மலம், ரக்தம், சுக்லம் முதலியவையால் அசுத்தமான தைஜஸபாத்ரங்களுக்கு புன:கரணம் (புதிதாக்குதல்), அல்லது கோமூத்ரத்தில் 7-நாள் வைத்திருப்பது, அல்லது மஹா நதியில் வைத்திருப்பது, சுத்திகரமாம். யாக்ஞவல்க்யர்:- அசுத்தங்களால் பற்றப்பட்ட த்ரவ்யத்திற்கு, மண்ணாலும், ஜலத்தாலும், நாற்றம் முதலியதை அகற்றுவதால் சுத்தி. இங்கு ஆதிசப்தத்தால் பற்றுக்கும் க்ரஹணம். அவ்விதமே. கௌதமர்:- அசுத்தவஸ்துவினால் பூசப்பட்ட த்ரவ்யத்திற்கு, பற்று, நாற்றம் இவைகளை அகற்றுவது சுத்தி. எல்லாச் சுத்திகளிலும், முதலில், மண்ணாலும்

ஜலத்தாலும், பற்று நாற்றம் இவைகளைப் போக்க வேண்டும். முடியாவிடில் மற்றொன்றால். 'முதலில் ஜலத்தாலும், மண்ணாலும்' என்று கௌதமர் சொல்கிறார்.

आपस्तम्बः—परिमृष्टं लौहं प्रयतं निर्लिखितं दारुमयं यथागमं यज्ञे इति ॥ लौहं - कांस्यादि भस्मादिभिः परिमृष्टं प्रयतं भवति । दारुमयं निर्लिखितं - तष्टं प्रयतम् । यज्ञपात्रं तु यथागमं शोधितं प्रयतं भवति ॥ तद्यथा — अग्निहोत्रहवणी दर्भैरद्भिः प्रक्षालिता । सोमपात्राणि मार्जालीये प्रक्षालितानि । आज्यपात्राण्युष्णेन वारिणा ।

ஆபஸ்தம்பர்:- வெண்கலம் முதலிய பாத்ரம் சாம்பல் முதலியதால் தேய்க்கப்பட சுத்தமாகிறது. கட்டையால் செய்யப்பட்ட பாத்ரம் செதுக்கப்பட்டால் சுத்தமாகிறது. யாகத்திலுள்ள பாத்ரம் சாஸ்த்ரப்படி சோதிக்கப்பட்டால் சுத்தமாகிறது. அது எவ்விதமெனில், அக்னிஹோத்ர ஹவணீ, தர்ப்பங்களுடன் ஜலத்தால் அலம்பப்பட்டால் சுத்தமாகிறது. ஸோம பாத்ரங்கள் மார்ஜாலீயத்தில் அலம்பப்பட்டால் சுத்தங்கள். ஆஜ்யபாத்ரங்கள் உஷ்ணோதகத்தால் அலம்பப்பட்டால் சுத்தங்கள்.

स्मृत्यर्थसारे—सौवर्णं राजतं लौहं विण्मूत्रादिस्पृष्टमात्रं निर्लेपं जलप्रक्षालनाच्छुद्ध्येत् । सलेपं भस्मजलाभ्यां शुध्येत् अत्यन्तोपहतं वह्नितप्तं जलप्रक्षालनाच्छुद्ध्येत् । सौवर्णं राजतं ताम्रं चण्डालोक्याद्युच्छिष्टं त्रिःसप्तभस्मभिरम्लोदकेन शुद्ध्यति । कांस्यादेरावर्तनं बहूपघाते सर्वेषामावर्तनं तैजसानां गोमूत्रपरिवासने लेपापगमेऽप्यावर्तनं ताम्रस्य विण्मूत्रादिचण्डालदूषितस्याम्लोदकाभ्यां शुद्धिः । कांस्यपित्तलयोः विण्मूत्रादिगण्डूषपादप्रक्षालनादिचण्डालादिस्पर्शेऽपि त्रिः सप्तकृत्वोऽपि भस्मना परिमृज्य प्रक्षालनाच्छुद्धिः । अल्पकालोपहतौ तापन परिलेखनाभ्यां शुद्धिः । बहुकालोपहतौ आवर्तनम् ।

ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- தங்கள், வெள்ளி, லோஹம் இவைகள் மலம் மூத்ரம் முதலியதால் ஸ்பர்சிக்கப்பட்ட உடனே பற்றில்லாவிடில் ஜலத்தால் அலம்புவதால் சுத்தங்களாகும். பற்றுடனிருந்தால் சாம்பலாலும் ஜலத்தாலும் சுத்தி. அதிகம் அசுத்தமானல் அக்னியில் காய்ச்சி ஜலத்தினல் அலம்புவதால் சுத்தி. தங்கம், வெள்ளி, தாம்ரம் இவை சண்டாளன் ரஜஸ்வலை முதலியவரால் அசுத்தமானல் 21- தடவை சாம்பலாலும், புளி ஜலத்தாலும் சுத்தியால் சுத்தமாகும். வெண்கலம் முதலியதற்கு அதிக அசுத்தியானல் சுத்தியை ஆவ்ருத்தி செய்யவும். தைஜஸபாத்ரங்கள் எல்லாவற்றிற்கும் அதிக அசுத்தியில் சுத்தியை ஆவ்ருத்தி செய்யவும். கோமூத்ரத்தில் வைத்திருந்தால் பற்று இல்லாவிடினும் சுத்தியைச் செய்யவும். விஷ்டை மூத்ராதிகளாலும் சண்டாள ஸ்பர்சத்தாலும் அசுத்தமான தாம்ரத்திற்குப் புளி ஜலமிவைகளால் சுத்தி. வெண்கலம், பித்தளை இவைகளுக்கு, விஷ்டா மூத்ராதிகளாலும், கண்டூஷத்தாலும், காலலம்பியதாலும், சண்டாளாதி ஸ்பர்சத்தாலும் அசுத்தியானல் 21- தடவை சாம்பலால் துடைத்து அலம்புவதால் சுத்தி. ஸ்வல்பகாலம் அசுத்தியானல், காய்ச்சுவதாலும், உறைப்பதாலும் சுத்தி. வெகுகாலம் அசுத்தமானல் ஆவ்ருத்தி செய்யவும்.

यद्वा—भूमौ निखाय षण्मासे गते परिमार्जनम् कांस्यपित्तलयोः श्वकाकोपस्पर्शे शूद्रस्पर्शे च दशकृत्वो भस्मभिः प्रक्षालवमल्पकालोपहतौ लवणतैलापघर्षणैः शुद्धिः । बहुकाले त्वावर्तनम् । त्रपुसीसायसानां भस्मजलाभ्यां शुद्धिः । सर्वं तैजसं स्वल्पोपहतं गोमूत्रगोमयमृद्भस्माम्लोदकैः शुचि यथार्हं स्यात् । शुक्तिशङ्खपाषाणमणीनामब्जानां विण्मूत्रचण्डालाद्युच्छिष्टस्पर्शनमात्रे जलप्रक्षालनाच्छुद्धिः । सलेपानां भस्मजलाभ्याम् । अत्यन्तोपहतानां सप्ताहं भूमौ निखाय प्रक्षालनाच्छुद्धिः ।

அல்லது, பூமியில் புதைத்து, ஆறு மாதத்திற்குப் பிறகு எடுத்துச் சுத்தி செய்யவும். வெண்கலம், பித்தளை இவைகளுக்கு, நாய், காக்கை, சூத்ரன் இவர்களால் ஸ்பர்சமேற்பட்டால் 10- தடவை சாம்பலால் அலம்பவும். ஸ்வல்பகாலம் அசுத்தியானால் உப்பு, எண்ணெய், உறைத்தல் இவைகளால் சுத்தி. வெகுகாலம் அசுத்தியானால், ஆவ்ருத்தி, காரீயம், ஈயம், இரும்பு இவைகளுக்குச் சாம்பல் ஜலம் இவைகளால் சுத்தி. தைஜஸமான எந்த த்ரவ்யமும் ஸ்வல்ப அசுத்தியுடையதானால், கோமூத்ரம், கோமயம், மண், சாம்பல், புளி, ஜலம் இவைகளால் தகுந்தபடி சுத்தமாகும். சிப்பி, சங்கு, கல், ரத்னம் ஜலத்திலுண்டாகும் வஸ்துக்கள் இவைகளுக்கு மலம் மூத்ரம், சண்டாளாதிகள், உச்சிஷ்டம் இவைகளால் ஸ்பர்சமேற்பட்டால் ஜலத்தால் அலம்புவதால் சுத்தி. பற்றுடனிருந்தால் சாம்பலாலும் ஜலத்தாலும் சுத்தி. மிகவும் அசுத்தங்களாயின், ஏழு நாள் பூமிக்குள். புதைத்துப் பிறகு அலம்புவதால் சுத்தி.

घृतस्य नवनीतस्य वा आढकप्रमाणस्य श्वकाकपिपीलिकादि दुष्टस्य दुष्टांशं समुद्धृत्य वस्त्रेण परिशोध्य तज्जातीयेन तद्भाण्डं पूरयित्वा तत् सर्वमग्नौ प्रताप्य गायत्र्यभिमन्त्रणजलाभ्युक्षणाच्छुद्धिः । तक्रतैलक्षीरदध्नां द्रोणप्रमाणानां काकाद्युपहतौ घृतवच्छुद्धिः । दधिक्षीराणि शूद्रभाण्डस्थानि द्विजभाण्डप्रक्षेपाच्छुद्धानि भवन्ति । नवनीतं घृतं तैलं क्षौद्रं दासादिभाण्डस्थं विप्रभाण्डे क्षिप्तं शुद्ध्येत् । चण्डालेन प्रमादतः स्पृष्टं नवनीतादि जले क्षिप्त्वा उद्धृतं शुद्ध्येत् । आढकप्रमाणान्न्यूनघृतादीनां च द्रोणप्रमाणान्न्यूनतक्रादीनां च पूर्वोक्तापहतौ परित्यागोऽनापदि । आपदि तु पूर्वोक्तविधिभिः शुद्धिः । गुडलवणादीनामिति पर्यग्नि करणम् इति ।

நெய், அல்லது எண்ணெய் குறுணி அளவுள்ளது, நாய், காக்கை, எறும்பு முதலியதால் துஷ்டமானால்,

துஷ்டமான பாகத்தை எடுத்துவிட்டு மீதியை வஸ்திரத்தால் வடிகட்டி, அந்த வஸ்துவை வேறு கொண்டு வந்து அந்தப் பாத்ரத்தை நிரப்பி, அது முழுவதையும் அக்னியில் காய்ச்சி, காயத்ரியால் அபிமந்த்ரித்து ஜலத்தால் ப்ரோக்ஷிப்பதால் சுத்தி. மோர், எண்ணெய், பால், தயிர் இவை பதக்கு அளவுள்ளவையானுல், காக்கை முதலியதால் அசுத்தி ஏற்பட்டால், நெய்யைப் போல் சுத்தி செய்யவும். தயிர், பால் இவை சூத்ரனின் பாத்ரத்திலிருந்தால், ப்ராம்ஹணனின் பாத்ரத்தில் போடப்படுவதால் சுத்தங்களாகின்றனர். வெண்ணெய், நெய், எண்ணெய், தேன் இவை தாஸன் முதலியவரின் பாண்டத்திலிருந்தால் ப்ராம்ஹணனின் பாண்டத்தில் போடப்பட்டால் சுத்தமாகின்றன. சண்டாளனுல் கவனமில்லாமல் தொடப்பட்ட வெண்ணெய் முதலியது ஜலத்தில் வைத்து எடுக்கப்பட்டால் சுத்தமாகும். குறுணி அளவுக்குக் குறைந்த நெய் முதலியவைக்கும், பதக்குக்குக் குறைந்த மோர் முதலியதற்கும் முன் சொல்லிய அசுத்தி ஏற்பட்டால், ஆபத்தில்லாவிடில் பரித்யாகம் செய்ய வேண்டும். ஆபத்திலானுல் முன் சொல்லிய ப்ரகாரங்களால் சுத்தி. வெல்லம், உப்பு முதலியவைக்கு பர்யக்னி கரணம் (அக்னிஜ்வாலையால் சுற்றுவது) செய்ய வேண்டும்.

मनुः—प्रोक्षणं संहतानां च दारवाणां च तक्षणम् इति। संहतानां पृथक् द्रव्यसमवायरूपाणाम्॥ तथा चाङ्गिराः – शयनासनयानानि रोमबद्धानि यानि च। वस्त्राणि तानि सर्वाणि संहतानि प्रचक्षत इति॥ मनुः – अद्भिस्तु प्रोक्षणं शौचं बहूनां धान्यवाससाम्। प्रक्षालनेन त्वल्पानामद्भिः शौचं विधीयते इति॥ संहतानां धान्यवाससां मध्ये बहूनां चण्डालादि स्पर्शे प्रोक्षणम्। स्पृष्टानामल्पत्वे तेषां स्पृष्टानां प्रक्षालनमित्यर्थः।

மனு:- ஸம்ஹதங்களான வஸ்துக்களுக்கு ப்ரோக்ஷணம் சுத்திகரம். மரத்தால் செய்யப்பட்ட வஸ்துக்களுக்குச் செதுக்குவது சுத்திகரம். ஸம்ஹதங்கள் - தனியான த்ரவ்யங்கள் சேர்ந்து ஒன்ருய் இருப்பவை. அவ்விதமே, அங்கிரஸ்:- படுக்கை, ஆஸனம், வாஹனம் முதலியவை மயிரால் செய்யப்பட்ட (கம்பளம் முதலிய)வை, வஸ்திரங்கள் இவைகளையெலாம் 'ஸம்ஹதம்' என்கின்றனர். மனு:- வெகுவான தான்யங்கள், வஸ்தரங்கள் இவைகளுக்கு, ஜலத்தால் ப்ரோக்ஷிப்பதால் சுத்தி அவை அல்பமாளுல் ஜலத்தால் அலம்புவதால் சுத்தி ஸம்ஹதங்களான தான்யங்கள், வஸ்த்ரங்கள் இவைகளுள், அதிகங்களானவைக்குச் சண்டாளாதி ஸ்பர்ச மேற்பட்டால் ப்ரோக்ஷணத்தால் சுத்தி. ஸ்வல்பங்களுக்காளுல் தொடப்பட்டவைகளை அலம்புவதால் சுத்தி.

स्मृत्यन्तरे— वस्त्राधान्यादिराशीनामेकदेशस्य दूषणे । तावन्मात्रं समुद्धृत्य शेषं प्रोक्षणमर्हति ।। स्पृष्टास्पृष्टसमत्वे च सर्वं प्रोक्षणमर्हति इति ।। इयत् स्पृष्टं इयदस्पृष्टमित्यविवेके तु प्रक्षालनमेव ।। स्पृष्टानां बहुत्वे सर्वेषां क्षालनमुक्तं विज्ञानेश्वरेण ।। अनेकपुरुषैर्धार्यमाणानां धान्यवासःप्रभृतीनां स्पृष्टानामस्पृष्टानां च प्रोक्षणमेवेति निबन्धकृतः इति ।

மற்ருெரு ஸ்ம்ருதியில்:- வஸ்த்ரம், தான்யம் முதலியவையின் குவியல்களின் ஸ்வல்பபாகத்திற்குத் தோஷமேற்பட்டால், அந்தத் துஷ்ட பாகத்தை மட்டில் எடுத்து விட்டு, மீதியுள்ளதை ப்ரோக்ஷித்தால் அது சுத்தமாகும். தொடப்பட்ட பாகமும், தொடப்படாத பாகமும் ஸமமாயிருந்தால் முழுவதும் ப்ரோக்ஷணத் தாலேயே சுத்தமாகிறது. இவ்வளவு தொடப்பட்டது; இவ்வளவு தொடப்படாதது என்று அறியமுடியாவிடில், எல்லாவற்றிற்கும் அலம்புவதாலேயே சுத்தி. தொடப்பட்ட பாகம் அதிகமாளுல், எல்லாவற்றிற்கும்

ப்ரக்ஷாளனம் சொல்லப்பட்டுள்ளது, விக்ஞானேச்வரரால் "அனேக மனிதர்களால் சுமக்கப்படும் தான்யம் வஸ்த்ரம் முதலியவைகள் தொடப்பட்டாலும் தொடப்படா விட்டாலும் அவைகளுக்கு ப்ரோக்ஷணம் மட்டுமே என்கின்றனர் நிபந்தனக் காரர்கள்" என்று விக்ஞானேச்வரர்

याज्ञवल्क्यः — प्रोक्षणं संहतानां च बहूनां धान्यवाससाम्। तक्षणं दारुशृङ्गास्थ्नां गोवालैः फलसंभुवाम् ।। मार्जनं यज्ञपात्राणां पाणिना यज्ञकर्मणि इति ।। दारूणां मूत्रपुरीषादिना दृढवासितौ गन्धलेपौ यदि मृज्जलप्रक्षालने नापगच्छेताम्, तदा वाश्यादिना तक्षणम् । तक्षणेनाप्यनपगमे परित्यागः । यज्ञपात्राणां स्रुगादीनां दक्षिणेन हस्तेन दर्भादिना वा यथाशास्त्रं मार्जनमित्यर्थः ।

யாக்ஞவல்க்யர்:- ஸம்ஹதங்களான அநேகம் தான்யம் வஸ்த்ரம் இவைகளுக்கு ப்ரோக்ஷணம் சுத்திஹேதுவாகும். கட்டை, கொம்பு, எலும்பு இவைகளுக்குச் செதுக்குவது சுத்தி, பில்வம் முதலிய பழங்களால் செய்யப்பட்ட பாத்ரங்களுக்கு கோவாலஙகளால் தேய்ப்பது சுத்தி. யாககார்யங்களில் உபயோகிக்கப்படும் யக்ஞபாத்ரங்களுக்கு கையால் துடைப்பது சுத்தி. கட்டையால் செய்யப்பட்டவைகளுக்கு மல மூத்ராதிகளால் ஏற்பட்ட நாற்றமும் பற்றும் மண்ணாலும் ஜலத்தாலும் போகாவிடில், அப்பொழுது வாச்சி முதலியதால் அந்த இடத்தைச் செதுக்கவும். செதுக்கியும் போகாவிடில் பாத்ரங்களை தவிர்க்கவும். யக்ஞ பாத்ரங்களான ஸ்ருக் முதலியவைக்கு வலது கையாலாவது தர்ப்பம் முதலியதாலாவது சாஸ்த்ரப்படி துடைப்பது சுத்தி என்பது பொருள்.

सलेपानामेव केषाञ्चिल्लेपापकर्षणे विशेष हेतूनाह स एव— सोषैरुदकगोमूत्रैः शुद्ध्यत्याविककौशिकम्। सश्रीफलैरंशुपट्टं सारिष्टैः

कुतपं तथा ।। सगौरसर्षपैः क्षौमं पुनः पाकेन मृन्मयम् इति ।। सोषैः ऊषमृत्तिकासहितेन गोमूत्रेण उदकेन वा । लेपापेक्षया आविकं - ऊर्णामयं, कौशिकं - कोशप्रभवं पट्टादि प्रक्षालितं शुध्यति । अंशुपट्टं - वल्कलतन्तुकृतं, सश्रीफलैः - बिल्वफलसहितैः, कुतपः - पार्वतीयच्छागरोमनिर्मितः कम्बलः सारिष्टैः - अरिष्टफलसहितैः उदकगोमूत्रैः शुद्ध्यतीत्यर्थः ।

பற்றுள்ள சிலவற்றிற்குப் பற்றை அகற்றுவதற்கு விசேஷ காரணங்களைச் சொல்லுகிறார். யாக்ஞவல்க்யரே:- ஆட்டு மயிராலுண்டாகிய கம்பளி, பட்டு இவை உழவு மண்ணுடன் கூடிய ஜலம், கோமூத்ரம் இவைகளால் அலம்புவதால் சுத்தமாகும். நார்மடி, வில்வப்பழத்துடன் கூடிய ஜலகோமூத்ரங்களால் அலம்புவதால் சுத்தமாகும். மலையிலுள்ள ஆடுகளின் ரோமத்தால் நெய்யப்பட் கம்பளம் அரிஷ்டமெனும் (வேம்பு) பழத்துடன் கூடிய ஜலகோமூத்ரங்களால் அலம்புவதால் சுத்தமாகும். க்ஷௌமையின் நாரினால் உண்டாகிய வஸ்தரம் வெண்கடுகுடன் கூடிய ஜலகோமூத்ரங்களால் அலம்புவதால் சுத்தமாகும். மண்பாத்ரம் அக்னியில் மறுபடி பாகத்தால் சுத்தமாகும்.

अल्पोपघाते प्रोक्षणादिना शुद्धिमाह देवलः — और्णकौशेयकुतपपट्ट क्षौमदुकूलजाः । अल्पशौचा भवन्त्येते शोषणप्रोक्षणादिभिः ।। तान्येवामेध्ययुक्तानि क्षालयेच्छोधनैः स्वकैः । धान्यकल्कैस्तु फलजै रसैः क्षारानुगैरपि ।। तूलिकामुपधानं च पुष्परक्ताम्बरं तथा । शोषयित्वाऽऽतपे किञ्चित् करैः संमार्जयेन्मुहुः । पश्चाः च वारिणा प्रोक्ष्य विनियुञ्जीत कर्मणि । तान्यप्यतिमलिष्ठानि यथावत्परिशोधयेत् इति ।। पुष्परक्तानि - कुङ्कुमकुसुम्भादि रक्तानि ।

ஸ்வல்பமான அசுத்தி விஷயத்தில் ப்ரோக்ஷணம் முதலியதால் சுத்தியைச் சொல்லுகிருர், தேவலர்:- கம்பளி, வெண்பட்டு, குதபம், பட்டு, நார்மடி, துகூலம் இவைகளுக்கு வெயிலில் காய்ச்சுவது ப்ரோக்ஷிப்பது முதலியதால் ஸ்வல்பசுத்தியே போதுமானது. அவைகளே அசுத்த வஸ்துக்களுடன் ஸம்பந்தித்திருந்தால், அவைகளுக்கு உசிதமான சோதக வஸ்துக்களால் அலம்ப வேண்டும். தான்யத்தின் கல்கங்கள், பழங்களில் உண்டாகும் ரஸங்கள், உப்பு இவை முதலியவை சோதகங்கள். மெத்தை, தலையணை, குங்குமம் குஸும்பம் முதலிய புஷ்பச்சாயமேற்றிய வஸ்த்ரம் இவைகளை வெயிலில் கொஞ்சம் உலர்த்தி, கையால் அடிக்கடி துடைக்க வேண்டும். பிறகு ஜலத்தால் ப்ரோக்ஷித்து, கார்யத்தில் உபயோகிக்க வேண்டும். அவைகளே மிகவும் அசுத்தமானுல் சொல்லியபடி சுத்தி செய்ய வேண்டியது.

शङ्खः – रागद्रव्याणि प्रोक्षितानि शुचीनि इति ।। पराशरः – वेणुवल्कलचीराणां क्षौमकार्पासवाससाम् । और्णनेत्रपटानां च प्रोक्षणाच्छुद्धिरिष्यते इति ।। वेणुशब्देन तत्कार्याणि कटव्यजनादीनि गृह्यन्ते । नेत्रपटाः - भूर्जत्वगादयः ।। स एव – तूलिकाद्युपधानानि रक्तवस्त्रादिकानि च । शोषयित्वाऽऽतपेनैव प्रोक्षणाच्छुचितामियुः इति ।। तूलेन निर्मिता शय्या तूलिका । आदिशब्देन आसनोपाश्रयादीनि गृह्यन्ते । उपधानम् - उच्छीर्षकम् । तूलिकादीनि च उपधानानि च तूलिकाद्युपधानानीत्यर्थः ।।

சங்கர்:- சாயத்ரவ்யங்கள், ப்ரோக்ஷிப்பதால் சுத்தங்களாகின்றன. பராசரர்:- மூங்கிலால் செய்யப்பட்ட பாய், விசிறி முதலியவை, மரப்பட்டை, மரவுரி, நார்ப்பட்டு, பஞ்சு வஸ்தரம், கம்பளி, பூர்ஜ மரப்பட்டை இவைகளுக்கு ப்ரோக்ஷணத்தாலேயே சுத்தி சொல்லப்படுகிறது. பராசரரே:- மெத்தை முதலியதும், தலையணைகளும், சாயமுள்ள வஸ்த்ரம் முதலியவையும்,

வெயிலில் உலர்த்தி ப்ரோக்ஷிப்பதாலேயே சுத்தியை அடைகின்றன. ஆதிசப்தத்தால், ஆஸனம், சாய்வதற்கான திண்டு முதலியவை சொல்லப்படுகின்றன.

स एव—मुञ्जोपस्करशूर्पाणां शणस्य फलचर्मणाम्। तृणकाष्ठस्य रज्जूनामुदकाभ्युक्षणं मतम्।। मृन्मये दहनाच्छुद्धिर्धान्यानां मार्जनादपि इति ।। मृन्मये दहनादित्येतत् उच्छिष्टाद्युपहतिविषयम् । चण्डालादिस्पर्शे त्याग एव। यथाह पराशरः – चण्डालाद्यैस्तु संस्पृष्टं धान्यं वस्त्रमथापि वा। प्रक्षालनेन शुद्ध्येत परित्यागान्महीमयम् इति।

பராசரரே:- முஞ்சப்புல்லினால் செய்யப்பட்ட ஆஸனம் முதலியவை, முறம், சணலால் செய்யப்பட்டவை, பழங்கள், தோல், புல், கட்டை, கயிறு இவைகளுக்கு ப்ரோக்ஷணத்தால் சுத்தி. மண் பாத்ரத்திற்குப் பொசுக்குவதால் சுத்தி. தான்யங்களுக்குத் துடைப்பதால் சுத்தி. மண் பாத்ரத்திற்குப் சொல்லிய சுத்தி உச்சிஷ்டம் முதலிய அசுத்தி விஷயம். சண்டாளாதிகளின் ஸ்பர்ச மேற்பட்டால் விலக்க வேண்டியதே. ஏனெனில், பராசரர்:- 'சண்டாளர் முதலியவரால் தொடப்பட்ட தான்யம், வஸ்த்ரம் இவை அலம்புவதால் சுத்தமாகும், மண்ணினுலுள்ளவைகளை விட்டுவிட வேண்டியது' என்று சொல்லியிருக்கிறார்.

स्मृत्यन्तरेऽपि — अङ्गारेण भवेत् छुद्धिस्ताम्राणां काञ्चनस्य च। जलशौचं च वस्त्राणां परित्यागेन मृन्मयम्।। मार्जनं यज्ञपात्राणां पाणिना यज्ञकर्मणि। चमसानां ग्रहाणां च शुद्धिः प्रक्षालनेन तु।। चरूणां स्रुक्स्रुवाणां च शुद्धिरुष्णेन वारिणा। स्फ्यशूर्पशकटानां च मुसलोलूखलस्य च ।। चेलवच्चर्मणां शुद्धिर्वैदलानां तथैव च। शाकमूलफलानां च धान्यवच्छुद्धिरिष्यते ।। वैदलानां - वेणुदलनिर्मितानाम्। कौशेयाविकयोरूषैः कुतपानामरिष्टकैः। श्रीफलै रंशुपट्टानां क्षौमाणां गौरसर्षपैः ।। क्षौमवच्छङ्खशृङ्गाणा

मस्थिदन्तमयस्य च । शुद्धिर्विजानता कार्या गोमूत्रेणोदकेन वा ॥ प्रोक्षणात् तृणकाष्ठानि पलालं च विशुध्यति । मार्जनोपाञ्जनैर्वेश्म परित्यागेन मृन्मयम् इति ॥ उपाञ्जनं - उपलेपनम् ॥

மற்ளெரு ஸ்ம்ருதியில்:- தாம்ர பாத்ரங்களுக்கும், தங்கத்திற்கும் நெருப்பினுல் சுத்தி. வஸ்த்ரங்களுக்கு ஜலத்தால் சுத்தி. மண் பாத்ரத்தை கைவிட வேண்டும். யாகத்தில் உபயோகிக்கப்படும் யக்ஞபாத்ரங்களுக்குக் கையால் அலம்புவதால் சுத்தி. சமஸபாத்ரங்கள், க்ரஹபாத்ரங்கள் இவைகளுக்கு அலம்புவதால் சுத்தி. சருக்களுக்கும், ஸ்ருக், ஸ்ருவம் இவைகளுக்கும் உஷ்ணோதகத்தால் சுத்தி. ஸ்ப்யம், சூர்ப்பம், சகடம், உலக்கை, உரல் முதலிய வைக்கும் உஷ்ணோதகத்தால் சுத்தி. தோல்களுக்கும், மூங்கிலால் முடையப் பட்டவைக்கும் வஸ்த்ரத்திற்குப் போல் சுத்தி. கீரை, வேர், பழம் இவைகளுக்கு, தான்யத்திற்குப் போல் சுத்தி. வெண்பட்டு, ஆட்டுமயிர்க் கம்பளி இவைகளுக்கு உவர்மண்ணுலும், குதபங்களுக்கு (நேபாள கம்பளம்) அரிஷ்டங்களாலும், அம்சுபட்டங்களுக்கு வில்வப் பழங்களாலும், க்ஷௌமங்களுக்கு வெண் கடுகுகளாலும் சுத்தி. சங்கு, கொம்பு, எலும்பு, தந்தம் இவைகளால் செய்யப்பட்டவைக்கும் க்ஷௌமத்திற்குப் போல் சுத்தி. கோமூத்ரம், ஜலம் இவைகளாலாவது அசுத்திக்குத் தகுந்த படி அறிந்தவன் சுத்தியைச் செய்ய வேண்டும். புல், கட்டை, வைக்கோல் இவை ப்ரோக்ஷணத்தால் சுத்தமாகின்றன. வீடு, மெழுகுதல் மண்பூசுதல் இவைகளால் சுத்தமாகும். மண்பாத்ரம் முதலியதை தவிர்க்க வேண்டும்.

बोधायनः—मृन्मयानां पात्राणा मुच्छिष्टसमन्वारब्धाना मवकूलनमुच्छिष्टलेपोपहतानां पुनर्दहनं, मूत्रपुरीषलोहितरेतः प्रभृत्युपहतानामुत्सर्गः, फलमयानामलाबुबिल्वनालिकेराणां गोवालैः परिमार्जनं, नलवेणुशरकुशव्यूतानां गोमयेनाद्भिः प्रक्षालनं,

व्रीहीणामुपघाते प्रक्षालनं, बहूनां तु प्रोक्षणं, तण्डुलानामुत्सर्गः । असंस्कृतानयां भूमौ न्यस्तानां तृणानां प्रक्षालनं परोक्षोपहतानामभ्युक्षणं, एवं क्षुद्रसमिधां, महतां काष्ठानामुपघाते प्रक्षाल्यावशोषणं दारुमयाणां पात्राणा मुच्छिष्टसमन्वारब्धाना मवलेखन मुच्छिष्टलेपोपहतानामवतक्षणं, मूत्रपुरीषलोहितरेतः प्रभृत्युपहतानामुत्सर्गः तदेतदन्यत्र निर्देशाद्यथैतदग्निहोत्रे घर्मोच्छिष्टे ब्रह्मौदनेषु च तेषु सर्वेषु दर्भैरद्भिः प्रक्षालनं सर्वेष्वेव सोमभक्षेष्वद्भिरेव मार्जालीये प्रक्षालनं मूत्रपुरीषलोहितरेतःप्रभृत्युपहतानामुत्सर्गः इति।

போதாயனர்:- மண்மயமான பாத்ரங்கள் உச்சிஷ்டத்தால் தொடப்பட்டிருந்தால் அவைக்குக் தேய்ப்பதால் சுத்தி. உச்சிஷ்டத்தின் பற்றுதலால் அசுத்தமானுல் நெருப்பில் மறுபடி தஹிப்பதால் சுத்தி. மூத்ரம், மலம், சுக்லம், முதலியதால் அசுத்தமானுல் த்யாகம் செய்யவும். பழங்காளாலாகிய பாத்ரங்களுக்கும், சுரை, பில்வம், தென்னை இவைகளின் பழங்களுக்கும் கோவாலங்களால் துடைப்பதால் சுத்தி. நளமென்னும் புல், மூங்கில், நாணல், குசம் இவைகளால் பின்னப்பட்டவைகளுக்குக் கோமூத்ரத்தாலும் ஜலத்தாலும் அலம்புவதால் சுத்தி. நெல்களுக்கு அசுத்தியானுல் அலம்புவதால் சுத்தி. அதிகமான நெல்களுக்கு ப்ரோக்ஷணத்தால் சுத்தி. அரிசிக்கு அசுத்தியானுல் தள்ள வேண்டியது. சுத்தி செய்யாத பூமியில் வைக்கப்பட்ட புல்களுக்கு ப்ரோக்ஷணத்தால் சுத்தி. காணுத இடத்தில் அசுத்தியானுல் ப்ரோக்ஷணத்தால் சுத்தி. இவ்விதமே சிறிய ஸமித்துக்களுக்கு. பெரிய கட்டைகளுக்கு அசுத்தியானுல் அலம்பிக் காயவைப்பதால் சுத்தி. மரப்பாத்ரங்களுக்கு உச்சிஷ்ட ஸம்பர்க்கமானுல் தேய்ப்பதால் சுத்தி. உச்சிஷ்டத்தின் பற்றுடையவையானுல் செதுக்குவதால் சுத்தி. மூத்ரம், மலம், ரக்தம், சுக்லம் முதலியதால் அசுத்தியானுல்

கைவிட வேண்டியது. இவ்விதம் சொல்லியது, சொல்லப் போகும் விஷயத்தைத் தவிர்த்து மற்ற இடத்தில். எவ்விதமெனில், அக்னிஹோத்ரம், கர்மோச்சிஷ்டம் இவைகளில் தர்ப்பங்களுடன் ஜலத்தால் அலம்புவதால் சுத்தி. ஸோமபக்ஷணங்கள் எல்லாவற்றிலும் ஜலத்தினல் மார்ஜாலீயத்தில் அலம்புவதால் சுத்தி. மூத்ரம், மலம், ரக்தம், சுக்லம் முதலியதால் அசுத்தமானவைகளை தவிர்க்க வேண்டும் என்று.

गौतमः—परिमार्जनप्रवाहतक्षणनिर्णेजनानि तैजसमार्तिक-दारवतान्तवानां तैजसवदुपलमणि शङ्खशुक्तीनां दारुवदस्थि-भूम्योरावपनं च भूमेश्चैलवद्रज्जुविदलचर्मणामुत्सर्गो वाऽत्यन्तोपहता-नाम् इति ।। आवपनं - अन्यदानीय पूरणम् ।

கௌதமர்:- தேய்ப்பது, தஹிப்பது, செதுக்குவது, துவைப்பது என்ற இவைகள், முறையே, தைஜஸங் களுக்கும், மண்பாத்ரங்களுக்கும், மரப்பாத்ரங்களுக்கும், நூலால் உண்டாகியவைகளுக்கும் சுத்தி காரணங்கள். கல், ரத்னம், சங்கு, சிப்பி இவைகளுக்குத் தைஜஸங்களுக்கு போலும், எலும்பு, பூமி இவைகளுக்கு மரத்திற்குப் போலும் சுத்தி. பூமிக்கு ஆவபனம் அதிகம். ஆவபனம் - மண்ணை எடுத்துப் புதிய மண்ணால் நிரப்புவது. கயிறு, மூங்கிலாலாகிய கூடை முதலியது, தோல் இவைகளுக்குக் கயிறுக்குப் போலும் சுத்தி. அதிக அசுத்தி உடையவவைகளுக்குப் பரித்யாகமே செய்யப்பட வேண்டும்.

स्मृत्यर्थसारे—मृन्मयानां पात्राणा मीषदुपहतौ पुनर्दाहाच्छुद्धिः । विण्मूत्राद्युपहतानां चण्डालसूतिकाशवोदक्यास्पृष्टानां त्याग एव । आविककम्बलस्य अल्पदोषे सूर्यरश्मिभिः शुद्धिः । विण्मूत्रादिदोषे वल्मीकमृत्तिकया प्रक्षालनाच्छुद्धिः । नीलसंयुक्तवस्त्रं स्वरूपेण त्याज्यम् । कुसुम्भादिरञ्जितं वस्त्रमुपहतं चेच्छोषणाच्छुद्ध्यति ।

विण्मूत्रादिसंस्पृष्टौ तदंशं संशोध्य संशोषणाच्छुद्ध्यति। ऊर्णाकार्पास तूलकुसुम्भकुङ्कुमकर्पूर निर्यासादीनां चैवम्। श्वेतवस्त्रं चण्डालादि स्पृष्टं प्रक्षालनाच्छुध्येत्। धान्यमशुद्धमृत्तिकायुक्तं तण्डुलीकरणाच्छुध्येत्। धान्यराशौ मूत्रादियुक्ते तमंशमपास्य शिष्टमभ्युक्षणाच्छुध्येत्। धान्ये गृहेस्थिते गृहदाहे सति तत्र पशुमरणे तद्धान्यं त्याज्यमेव। भूमिगर्भस्थं कुसूलस्थं च धान्यमभ्युक्षणाच्छुध्येत्। मुद्गमाषादिधान्यानामल्पोप-हतौ प्रोक्षणाच्छुद्धिः। अत्युपहतौ त्यागः। चण्डालपतितादिसंस्पृष्टं पुस्तकं प्रोक्षयेत् इति।

ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- மண் பாத்ரங்களுக்கு ஸ்வல்ப அசுத்தியில் மறுபடி பொசுக்குவதால் சுத்தி. விஷ்டாமூத்ராதிகளால் அசுத்தங்களானாலும், சண்டாளன், ஸூதிகா, சவம், ரஜஸ்வலை இவர்களால் தொடப்பட்டாலும் அவைகளை த்யஜிக்க வேண்டும். ஆட்டுமயிர்க் கம்பளிக்கு ஸ்வல்ப அசுத்தி யானால் வெயிலால் சுத்தி. விஷ்டா மூத்ராதிகளால் தோஷமானால் புற்றின் மண்ணால் அலம்புவதால் சுத்தி. நீலிச்சாயமுள்ள வஸ்த்ரத்தையே தவிர்க்க வேண்டும். குஸும்பம் முதலிய சாயமுடைய வஸ்த்ரம் அசுத்தமானால் உலர்த்துவதால் சுத்தமாகும். மலமூத்ராதிஸ்பருஷ்டமானால் அந்தப் பாகத்தைச் சோதித்து உலர்த்துவதால் சுத்தமாகும். கம்பளம், பருத்தி, பஞ்சு, குஸும்பம், குங்குமம், கர்ப்பூரம், பிசின் இவைகளுக்கும் இவ்விதமே. வெளுப்பு வஸ்த்ரம் சண்டாளாதிகளால் தொடப்பட்டால் அலம்புவதால் சுத்தமாகும். தான்யம் அசுத்த மண்ணுடன் கலந்திருந்தால் அரிசியாக்குவதால் சுத்தமாகிறது. தான்யக்குவியல் மூத்ராதிகளுடன் சேர்ந்தால் அந்தப் பாகத்தை எடுத்துவிட்டு, மீதியுள்ளதை ப்ரோக்ஷித்தால் சுத்தமாகிறது. வீட்டில் தான்யமிருக்கும் பொழுது, வீடு பற்றியெரிந்தால், அதில் பசு இறந்தால் அந்தத் தான்யம் த்யஜிக்கத் தகுந்ததே, பூமிக்குள், அல்லது

குதிரினுள்ளிருந்தாலும் அந்தத் தான்யம் ப்ரோக்ஷணத்தால் சுத்தமாகும். பயறு, உளுந்து முதலிய தான்யங்களுக்கு ஸ்வல்பமான அசுத்தியானல் ப்ரோக்ஷணத்தால் சுத்தி. அதிக அசுத்தியானல் த்யஜிக்க வேண்டும். சண்டாளாதிகளால் தொடப்பட்ட புஸ்தகத்தைப் ப்ரோக்ஷிக்க வேண்டும்.

विष्णुः —— मृत्पिण्ड तृणकाष्ठानां श्वभिश्चण्डालवायसैः । स्पर्शेन विहितं शौचं सोमसूर्यांशुमारुतैः इति ।। भूमिशुद्धिमाह याज्ञवल्क्यः – भूशुद्धिर्मार्जनाद्दाहात् कालाद्गोक्रमणात् तथा । सेकादुल्लेखनाल्लेपाद्गृहं मार्जनलेपनात् इति ।। मार्जन्या पांसु तृणादीनां प्रोत्सारणं मार्जनम् । दाहः - तृणकाष्ठाद्यैः । कालः - यावता कालेन लेपादिक्षयो भवति तावान् । गोक्रमणं - गवां पादपरिघट्टनम् । सेकः - गोमूत्रादिभिः । क्षीरगोमूत्रगोमयवारिभिः प्रवर्षणाद्वा । उल्लेखनं - तक्षणं खननं वा । लेपः गोमयादिभिः । गृहं मार्जनानुलेपाभ्यां शुध्यति । गृहस्य पृथगुपादानं संमार्जनानुलेपयोः प्रतिदिवसप्राप्त्यर्थम् ।

விஷ்ணு:- மண்கட்டி, புல், கட்டை இவைகளுக்கு நாய், சண்டாளன், காக்கை இவர்களால் ஸ்பர்சமேற்பட்டால், சந்த்ர, ஸூர்ய கிரணங்களாலும், காற்றினலும் சுத்தி விதிக்கப்பட்டுள்ளது. பூமிக்குச் சுத்தியைச் சொல்லுகிருர் யாக்ஞவல்க்யர்:- அசுத்தமான பூமிக்கு, துடைப்பத்தால் பெருக்குவதாலும், நெருப்பினல் தஹிப்பதாலும், அசுத்தி விலகும். காலத்தாலும், பசுக்களின் காலால் நடப்பதாலும், க்ஷீர கோமூத்ர கோமய ஜலங்களால், அல்லது மழையால், நனைவதாலும், செதுக்குவது, அல்லது வெட்டுவதாலும், சாணி முதலியதால் மெழுகுவதாலும் சுத்தி உண்டாகும். வீடானது, பெருக்குவதாலும், மெழுகுவதாலும் சுத்தமாகிறது. க்ருஹத்தைத் தனியாய்ச் சொல்லியது, ப்ரதிதினமும் செய்ய வேண்டும் என்பதற்காம்.

स्मृत्यन्तरे — प्रातः प्रतिदिनं गेहं सिञ्चेद्गोमयवारिभिः । मार्जयेच्च तथा सायं दीपैरुज्ज्वालयेद्गृहम् इति ॥ मनुरपि — संमार्जनेनाञ्जनेन सेकेनोल्लेखनेन च । गवां च परिवासेन भूमिः शुध्यति पञ्चभिः इति ॥ बोधायनः – भूमेस्तु संमार्जनप्रोक्षणोपलेपनावत्सरणोल्लेखनैर्यथास्थानं दोषविशेषात् प्रायत्यमथाप्युदाहरन्ति - गोचर्ममात्रमब्बिन्दुर्भूमौ शुध्यति पातितः । समूढमसमूढं वा यत्रामेध्यं न लक्ष्यते इति ।

மற்றொரு ஸ்ம்ருதியில்:- ப்ரதிதினமும் காலையில் வீட்டைச் சாணி ஜலங்களால் நனைக்க வேண்டும், பெருக்கவும் வேண்டும். மாலையில் தீபங்களால் ப்ரகாசப்படுத்த வேண்டும். மனுவும்:- பெருக்குவது, மெழுகுவது, கோமயாதிகளால் நனைப்பது, பறித்துப் புதியமண் போடுவது, பசுக்களை ஒருநாள் முழுவதும் வஸிக்கச் செய்வது என்ற இந்த ஐந்து கார்யங்களாலும், அசுத்தமான பூமி சுத்தமாகிறது. அசுத்திக்குத் தக்கபடி ஒன்றையோ, சிலவற்றையோ, எல்லாவற்றையுமோ உபயோகிக்கவும். போதாயனர்:- பூமிக்குப் பெருக்குவது, ப்ரோக்ஷிப்பது, மெழுகுவது, மண்பூசுவது, (அவஸ்தரணம்,) மண்ணைச் சுரண்டுவது என்றவைகளால், ஸ்தலத்திற்குத் தக்கபடி, தோஷத்தை அனுஸரித்துச் சுத்தி உண்டாகிறது. முன்னோர் இவ்விதமும் சொல்லுகின்றனர் - 'பெருக்கப்பட்டதாயினும், பெருக்கப்படாததாயினும், அசுத்தவஸ்து காணப்படாத பூமியில் ஜலத்தின் ஒருதுளி விழுந்தாலும், அது கோசர்ம ப்ரமாணமுள்ள ஸ்தலத்தைச் சுத்தமாக்குகிறது' என்று.

वसिष्ठः— खननाद्दहनादद्भिर्घर्षणाद्गोभिराक्रमात् । चतुर्भिः शुध्यते भूमिः पञ्चमाच्चोपलेपनात् इति ॥ याज्ञवल्क्योनाभिहितैः मार्जनादिभिः समस्तैर्व्यस्तैर्वा अमेध्या दुष्टा मलिना च भूमिः शुध्यति । तथा देवलः – यत्र प्रसूयते नारी म्रियते दह्यतेऽपि वा ।

चाण्डालाध्युषितं यत्र यत्र विष्ठादिसङ्गतिः ।। एवं कश्मलभूयिष्ठा भूरमेध्या प्रकीर्तिता । श्वसूकरखरोष्ट्रादि संस्पृष्टा दुष्टतां व्रजेत् ।। अङ्गारतुषकेशास्थि भस्माद्यैर्मलिना भवेत् । पञ्चधा वा चतुर्धा वा भूरमेध्या विशुध्यति ।। दुष्टान्विता त्रिधा द्वेधा शुध्यते मलिनैकधा इति ।

வஸிஷ்டர்:- பறிப்பது, தஹிப்பது, ஜலத்தாலலம்புவது, பசுக்களை வஸிக்கச் செய்வது, என்ற நான்காலும், மெழுகுவதான ஐந்தாவதாலும் பூமி சுத்தமாகிறது. யாக்ஞவல்க்யர் சொல்லிய மார்ஜனம் முதலிய எல்லாவற்றினுலுமோ, சிலவற்றினுலோ, அமேத்யா, துஷ்டா, மலினு என்று மூன்றுவிதமான பூமி சுத்தமாகின்றது. அவ்விதமே, தேவலர்:- எந்த இடத்தில், ஸ்த்ரீ ப்ரஸவித்தாளோ, மனிதன் இறந்தானோ, தஹிக்கப்பட்டானோ, சண்டாளன் வஸித்தானோ, மலம் முதலிய வஸ்து இருந்ததோ இவ்விதம் கச்மலமதிகமான அந்தப் பூமி 'அமேத்யா' எனப்படுகிறது. நாய், பன்றி, கழுதை, ஒட்டகை முதலியதுடன் சேர்ந்த பூமி 'துஷ்டா' எனப்படுகிறது. கரி, உமி, மயிர், எலும்பு, சாம்பல் முதலியதுடன் கூடிய பூமி 'மலினு' எனப்படும். அமேத்யையான பூமி, ஐந்து அல்லது நான்கு ப்ரகாரங்களால் சுத்தமாகிறது. துஷ்டையான பூமி மூன்று அல்லது இரண்டு ப்ரகாரங்களால் சுத்தமாகிறது. மலினையான பூமி ஒரு ப்ரகாரத்தால் சுத்தமாகிறது.

अत्र विज्ञानेश्वरः — यत्र मनुष्या दह्यन्ते, यत्र चाण्डालैरध्युषितं, तयोः पञ्चभिः दाहकालगोक्रमणसेकोल्लेखनैः शुद्धिः । यत्र मनुष्या जायन्ते, यत्र वा म्रियन्ते, यत्र चात्यन्तं विष्ठादिसङ्गतिः, तासां दाहवर्जितैस्तैरेव चतुर्भिः । श्वसूकरखरैश्चिर-कालमध्युषितायाः गोक्रमणसेकोल्लेखनैस्त्रिभिः । उष्ट्रग्रामकु-क्कुटादिभिश्चिरकालमधिवासितायाः सेकोल्लेखनाभ्यां शुद्धिः । अङ्गार तुषादिभिश्चिरकालमधिवासिताया मलिनाया उल्लेखनेन शुद्धिः । मार्जनानुलेपने तु सर्वत्र समुच्चीयेते इति ।।

விக்ஞானேச்வரர்:- எந்த இடத்தில் மனிதர் தஹிக்கப் படுகின்றனரோ, எந்த இடத்தில் சண்டாளர் வஸித்தனரோ, அவ்விரண்டுக்கும் ஐந்துகளால் - தஹித்தல், காலம், பசுவை இருக்கச் செய்தல், கோமயாதிகளால் நனைத்தல், மண்ணை எடுத்தல் இவைகளால் - சுத்தி. எந்த இடத்தில் மனிதர் பிறந்தனரோ, எங்கு இறந்தனரோ, எங்கு அதிகமாய் மலமூத்ராதிகளின் சேர்க்கையோ அந்த இடங்களுக்குத் தாஹம் ஒன்றில்லாத மற்ற நான்கினாலும் சுத்தி. நாய், பன்றி, கழுதை இவைகளால் வெகுகாலம் வஸிக்கப்பட்ட இடத்திற்கு, பசுவை வஸிக்கச் செய்தல், கோமயாதிகளால் நனைத்தல், பூமியைப் பறித்தல் என்ற மூன்றினாலும் சுத்தி. ஒட்டகை, ஊர்க்கோழி முதலியதால் வெகுகாலம் வஸிக்கப்பட்ட இடத்திற்கு, கோமயாதிகளால் நனைத்தல், மண்ணைப் பறித்தல், என்ற இரண்டினாலும் சுத்தி. கரி, உமி முதலியதுடன் வெகுகாலம் இருக்கப்பட்ட மலின பூமிக்குச் சுரண்டுவதால் சுத்தி. பெருக்குவதும், மெழுகுவதும் எல்லாச் சுத்திகளிலும் சேர்க்கப் படுகின்றன.

वृद्धगौतमः — सेचनान्मार्जनाद्वेश्म शुध्येत्सूतिगृहं पुनः । खननोल्लेखमृल्लेपपुण्याहैर्विंशतेः परम् इति ।। स्मृत्यर्थसारे – भूतलं नारीप्रसवदूषितं चेत् तत्स्थानान्मृत्तिकामुद्धृत्य अन्यां मृत्तिकामापूर्य गवाक्रमणमार्जनाभ्युक्षणैः पुण्याहवाचनाच्च शुध्यति। अत्यन्तोपहतौ तृणाग्निना दाहश्च । भूतलस्य चिरकालं विण्मूत्रादिवासितस्य श्मशानत्वं गतस्य अतिवृष्टिप्रक्षालनात्पश्चात् पूर्वोक्तविधानाच्छुद्धिः। आरामे क्षेत्रे वा श्मशानत्वं गते, अत्यन्तवृष्टेरूर्ध्वं हलकर्षणाच्छुद्धिः। गृहे विप्रक्षत्रियविशां मरणे तत्रत्यं मृन्मयं भाण्डं पक्वमन्नं च सन्त्यजेत्। मृतदेशं गोमयेनोपलिप्य अजाघृतेन वा पुण्याहवाचनैर्वा कुशसुवर्णमिश्रोदकैः प्रोक्षणाद्वा शोधयेत्। गृहे जनने मरणे वा जाते

आशौचादूर्ध्वं मेध्यमृत्तिकाप्रक्षेपात् पुण्याहवाचनाच्च शुद्धिः । गृहे दग्धे तत्र मार्जारादिमृतौ तद्गृहस्य कर्षणात् प्रोक्षणाच्च शुद्धिः इति ।

வ்ருத்த கௌதமர்:- வீடு தண்ணீர் தெளிப்பதாலும், பெருக்குவதாலும் சுத்தமாகும். ப்ரஸவித்த இடமானது, பறிப்பது, பசுவின் குளம்பினுல் சுறண்டுவது, புதியமண் பூசுவது, புண்யாஹவாசனம் இவைகளாலும் இருபது நாட்களுக்குப் பிறகு சுத்தமாகும். ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில்:- பூமி, ஸ்த்ரீயின் ப்ரஸவத்தால் அசுத்தமாயிருந்தால், அந்த இடத்திலிருந்து மண்ணை எடுத்து விட்டு, புதிய மண்ணை நிரப்பி, பசுவை இருக்கச் செய்து, பெருக்கி, ப்ரோக்ஷித்துப் புண்யாகவாசனமும் செய்தால் சுத்தமாகிறது. அதிக அசுத்தியாஞல் புல்களின் நெருப்பால் தஹித்தலுமதிகம். பூதலமானது வெகுகாலம் மல மூத்ராதிகளில் அசுத்தமாயிருந்தால், ச்மசானத்தன்மையை அடைந்திருந்தால், அதிக மழையினுல் அலம்பப்பட்ட பிறகு, முன் சொல்லிய விதியால் சுத்தி செய்யவும். பூந்தோட்டம், அல்லது நெல்வயல் ச்மசானத்தன்மையை அடைந்திருந்தால். பெரும் மழைக்குப் பிறகு கலப்பையால் உழுவதால் சுத்தி. வீட்டில், ப்ராம்ஹணன், க்ஷத்ரியன், வைச்யன் இவருள் யாராவது மரித்தால், அங்குள்ள மட்பாண்டத்தையும், பக்குவமான அன்னத்தையும் பரிஹரிக்க வேண்டும். இறந்த இடத்தைப் பசுவின் சாணத்தால் மெழுகி, ஆட்டின் நெய்யாலாவது, புண்யாஹ ஜலத்தாலாவது, குசத்துடனும், ஸ்வர்ணத்துடனும் கூடிய ஜலத்தாலாவது ப்ரோக்ஷிப்பதால் சுத்தி செய்ய வேண்டும். வீட்டில் ஜனனமாவது, மரணமாவது ஏற்பட்டால், ஆசௌசத்திற்குப் பிறகு, சுத்த மண்ணைப் போடுவதாலும், புண்யாஹவாசனத்தாலும் சுத்தி. வீடு நெருப்பினுல் தஹிக்கப்பட்டு, அதில் பூனை முதலியன இறந்தால், அந்த வீட்டிற்கு, உழுவதாலும், ப்ரோக்ஷணத்தாலும் சுத்தி.

चण्डालस्य सकृद्गृहप्रवेशे कर्तव्यां शुद्धिमाह पराशरः— गृहस्याभ्यन्तरं गच्छेच्चण्डालो यदि कस्यचित्। तमगाराद्विनिर्वास्य मृद्भाण्डं तु विसर्जयेत्॥ रसपूर्णं गृहे भाण्डं न त्यजेत्तु कदाचन। गोमयेन तु संमिश्रैर्जलैः प्रोक्षेद्गृहं तथा॥ प्रवेशयेत्ततः पश्चात् गृहे गां चाप्यजामपि इति॥ कश्चित् कालमेकस्मिन् सहवासेऽपि स एव – अविज्ञातस्तु चण्डालो यत्र वेश्मनि तिष्ठति। विज्ञाते तूपसन्नस्य द्विजाः कुर्वन्त्यनुग्रहम् इति।

சண்டாளன் ஒருமுறை வீட்டின் நுழைந்தால் செய்ய வேண்டிய சுத்தியைச் சொல்லுகிறார் பராசரர்:- சண்டாளன் ஒருவனின் க்ருஹத்தினுள் நுழைந்தால், அவனை வீட்டினின்றும் வெளியேற்றி, மண்பாண்டங்களைப் பரிஹரிக்க வேண்டும். ரஸ வஸ்துவால் நிரம்பிய பாண்டத்தை ஒருகாலும் த்யஜிக்க வேண்டியதில்லை. கோமயத்துடன் கூடிய ஜலத்தால் வீடுமுழுவதும் ப்ரோக்ஷிக்க வேண்டும். பிறகு வீட்டில் பசுவையும், வெள்ளாட்டையும் நுழையச் செய்ய வேண்டும். கொஞ்சகாலம் ஒரு வீட்டின் சண்டாளனின் ஸஹவாஸமேற்பட்டால், அது விஷயத்தில், பராசரரே:- சண்டாளன் அறியப்படாமல் எந்த வீட்டிலாவது இருந்தால், பிறகு தெரிந்தால், ப்ராம்ஹணர்களிடம் சென்று ப்ராயச் சித்தத்தைக் கேட்க வேண்டும். அவர்கள் ப்ராயச் சித்தத்தை உபதேசித்து அனுக்ரஹிப்பார்கள்.

परिषदा विधेयं व्रतविशेषं दर्शयति स एव — दध्ना च सर्पिषा चैव क्षीरगोमूत्रयावकम्। भुञ्जीत सह भृत्यैश्च त्रिसन्ध्यमवगाहनम्॥ त्र्यहं भुञ्जीत दध्ना च त्र्यहं भुञ्जीत सर्पिषा। त्र्यहं क्षीरेण भुञ्जीत एकैकेन दिनत्रयम्॥ दध्ना संयुक्तं गोमूत्रयावकं दिनत्रयम्। घृतक्षीरयोरप्येवम्। पुनरप्येकैकेन युक्तमेकस्मिन् दिने। मिलित्वा द्वादशरात्रम्॥ दध्यादीनां परिमाणमाह स एव — दधिक्षीरस्य त्रिपलं पलमेकं घृतस्य तु। यावकस्य परीमाणं ग्रासमात्रमिति स्मृतम् इति।

பரிஷத்து விதிக்க வேண்டிய வ்ரதத்தையும் சொல்லுகிறார். பராசரரே:- தயிருடன் கூடிய கோமூத்ர யாவகத்தை மூன்று நாள் புஜிக்க வேண்டும். நெய்யுடன் சேர்ந்த ஷி யாவகத்தை மூன்று நாளும், க்ஷீரத்துடன் கூடிய ஷி யாவகத்தை மூன்று நாளும் புஜிக்க வேண்டும். பிறகு, ஒவ்வொன்றுடன் கூடிய ஷி யாவகத்தை ஒவ்வொரு நாளும் உபயோகிக்க வேண்டும். மொத்தம் 12-நாள் வ்ரதம். தயிர் முதலியவைக்கு அளவைச் சொல்லுகிறார். பராசரரே:- தயிரும், பாலும் மும்மூன்று பலம், நெய் ஒரு பலம், கோமூத்ர யாவகம் ஒரு கபள மாத்ரம்.

एवं चेतनानां शुद्धिमभिधाय अचेतनानामप्याह स एव– भस्मना तु भवेच्छुद्धिरुभयोस्ताम्रकांस्ययोः । जलशौचेन वस्त्राणां परित्यागेन मृन्मयम् । कुसुम्भगुडकार्पासलवणं तैलसर्पिषी । द्वारे कृत्वा तु धान्यानि दद्याद्वेश्मनि पावकम् ।। एवं शुद्धास्ततः पश्चात् कुर्यात् ब्राह्मणतर्पणम् । त्रिशतं गोवृषं चैकं दद्याद्विप्रेषु दक्षिणाम् ।। पुनर्लेपनखाताभ्यां होमजप्येन शुध्यति । आधारेण च विप्राणां भूमिदोषो न विद्यते इति ।

இவ்விதம் சேதனங்களுக்குச் சுத்திசைச் சொல்லி, அசேதனங்களுக்கும் சுத்தியைச் சொல்லுகிறார், பராசரரே:- தாம்ரம், வெண்கலம் இவைகளுக்குச் சாம்பலினால் சுத்தி. வஸ்த்ரங்களுக்கு ஜலத்தினால் சுத்தி. மண் பாத்ரங்களைப் பரிஹரிக்கவும். குஸும்பம், வெல்லம், பஞ்சு, உப்பு, எண்ணெய், நெய், தான்யங்கள் இவைகளை வெளியில் வைத்து, வீட்டில் நெருப்பை வைக்க வேண்டும். இவ்விதம் செய்வதால் அசேதன பதார்த்தங்கள் சுத்தங்களாகின்றன. பிறகு ப்ராம்ஹணர்களைப் புஜிப்பிக்க வேண்டும். 300 - பசுக்களையும், ஒரு எருதையும், ப்ராம்ஹணர்களுக்குத் தக்ஷிணை கொடுக்க வேண்டும். மறுபடி மண்ணைப் பறித்து, புதிய மண் போடுவதாலும், சுவற்றில் புதிய மண்

பூசுவதாலும், ஹோமத்தாலும், ஜபத்தாலும், ப்ராம்ஹணர்கள் இருப்பதாலும் பூமி சுத்தமாகிறது. அதற்குத் தோஷமில்லை.

रजक्यादिभिः सह संवासेऽप्याह स एव – रजकी चर्मकारी च लुब्धकी वेणुजीवनी । चातुर्वर्ण्यस्य तु गृहे ह्यविज्ञाता तु तिष्ठति ॥ ज्ञात्वा तु निष्कृतिं कुर्यात् पूर्वोक्तस्यार्धमेव च । गृहदाहं न कुर्वीत शेषं सर्वं च कारयेत् इति ॥ क्षेत्रारामादौ अज्ञानेन चण्डालसहवासेऽप्याह स एव – चण्डालैः सह संपर्कं मासं मासार्धमेव वा । गोमूत्रयावकाहारो मासार्धेन विशुध्यति इति ॥ मासं च अर्धमासं च मासार्धम् । माससङ्करे मासव्रतेन शुद्धिः । अर्धमाससङ्करे अर्धमासेन शुद्धिरित्यर्थः ।

ரஜகீ (வண்ணாத்தி) முதலியவருடன் ஸஹவாஸம் ஏற்பட்ட விஷயத்திலும் சொல்லுகிறார், பராசரரே:- ரஜகீ (வண்ணாத்தி), சர்மகாரீ (சக்கிலியஸ்த்ரீ), லுப்தகீ (வேடஸ்த்ரீ), வேணுஜீவநீ (குறத்தி), இவர்களுள் எவளாவது, நான்கு வர்ணத்தாரின் வீட்டில் அறியப்படாதவளாய் வஸித்துப் பிறகு அறியப்பட்டால், முன் சொல்லிய ப்ராயச்சித்தத்தில் பாதியை அனுஷ்டிக்க வேண்டும். வீட்டை மட்டில் தஹிக்க வேண்டியதில்லை. மற்றது எல்லாவற்றையும் அனுஷ்டிக்க வேண்டும். வயல், பூந்தோட்டம் முதலியதில் அறியாமல், சண்டாளனுடன் ஸஹவாஸம் ஏற்பட்டால் அது விஷயத்திலும், பராசரரே :- சண்டாளருடன் ஸம்பர்க்கத்தை, ஒரு மாதம், அல்லது அரை மாதம் செய்தால், கோமூத்ர யாவகத்தைப் புஜித்துச் சுத்தனாகிறான். ஒரு மாதம் ஸம்பர்க்கம் செய்திருந்தால் ஒரு மாதம் வ்ரதம். அரைமாதம் ஸம்பர்க்கம் செய்திருந்தால் அரை மாதம் வ்ரதம் என்பது பொருள்.

माधवीये–ग्रामाद्दण्डशतं त्यक्त्वा नगराच्च चतुर्गुणम् । भूमिः सर्वत्र शुद्धा स्यात् यत्र लेपो न विद्यते इति ॥ मनुः – आपः शुद्धा भूमिगता वैतृष्ण्यं यासु गोर्भवेत् । अव्याप्ताश्चेदमेध्येन

गन्धवर्णरसान्विताः इति । याज्ञवल्क्यः – शुचि गोतृप्तिकृत्तोयं प्रकृतिस्थं महीगतम् । तथा मांसं श्वचण्डालक्रव्यादादिनिपातितम् इति । प्रकृतिस्थं - रूपरसगन्धान्तरमनापन्नमुच्छिष्टाद्यनुपहतं, शुचि आचमनयोग्यं भवति ।। एतच्च युगान्तरविषयम् । गोतृप्तिशिष्टे पयसि कलौ नाचमनक्रिया इति कलौ निषेधस्मरणात् ।।

மாதவீயத்தில் :- க்ராமத்திற்கு வெளியில் நூறுகோல் தூரத்திற்கு அப்புறமும், நகரத்திற்கு வெளியில் நானூறுகோல் தூரத்திற்கு அப்புறமும் பூமி எங்கும் சுத்தமேயாம், அசுத்த வஸ்துக்களின் பற்றுதல் இல்லாத இடத்தில். மனு :- எவ்வளவு அளவுள்ள ஜலத்தில் ஒரு பசுவுக்குத் தாஹம் அடங்குமோ அவ்வளவு ஜலம் சுத்தமான பூமியிலிருந்து, ஸ்வாபாவிகமான கந்தம், வர்ணம், ரஸம் இவைகளுடன் கூடியிருந்தால், அசுத்த வஸ்துடன் சேராதிருந்தால் அது சுத்தமாகும். யாக்ஞவல்க்யர் :- பசுவுக்குத் திருப்தி செய்விக்கக் கூடிய ஜலம், இயற்கையிலிருந்து, பூமியிலிருந்தால் சுத்தமாகும். அவ்விதமே, நாய், சண்டாளன், புலி முதலிய ஜந்துக்கள் இவர்களால் தள்ளப்பட்ட மாம்ஸமும் சுத்தமாகும். ஜலமானது, ரூபம், ரஸம், கந்தம் இவை மாறாமல், அசுத்த வஸ்துக்கள் முதலியவைகளால் கெடுக்கப்படாம லிருந்தால், அது சுத்தம் - ஆசமனாதிகளுக்கு யோக்யம் ஆகிறது என்பது பொருள். இவ்விதம் சொல்லியது மற்ற யுகங்களைப் பற்றியது. ஏனெனில், 'பசு குடித்து மீந்த ஜலத்தில் சிஷ்டர்கள் ஆசமனம் செய்வது கலியில் இல்லை' என்று கலியில் நிஷேதிக்கும் ஸ்ம்ருதியிருக்கிறது.

यमः– तथाऽक्षोभ्यतटाकादि नदी वापी सरांसि च । चण्डालाद्यशुचिस्पर्शे तीर्थतः परिवर्जयेत् ।। अन्त्यजैः स्वीकृते तीर्थे तटाकेषु नदीषु च । शुध्यते पञ्चगव्येन पीत्वा तोयमकामतः ।। तीर्थमत्र अवतरणप्रदेशः । अक्षुद्राणामपां नास्ति प्रभूतानां च दूषणम् । स्तोकानामुद्धृतानां च कश्मले दूषणं भवेत् इति ।। देवलः –

उद्धृताश्चापि शुद्ध्यन्ति शुद्धैः पात्रैः समुद्धृताः । एकरात्रोषिता आपस्त्याज्याः शुद्धा अपि स्वयम् इति ।। पराशरः – नदी वेगेन शुध्येत लेपो यदि न दृश्यते । वापी कूपतटाकेषु दूषितेषु कथञ्चन ।। उद्धृत्य वै कुम्भशतं पञ्चगव्येन शुध्यति इति ।। श्वमार्जारादीनां तत्र पतितानां मरणमात्रे इयं शुद्धिः ।

**யமன் :-** கலக்க முடியாத தடாகம் முதலியவை, நதீ, வாபீ, ஸரஸ்ஸு இவைகளுக்குச் சண்டாளாதிகளான அசுத்தர்களின் ஸ்பர்சமேற்பட்டால், அவர்கள் இறங்கும் துறையைப் பரிஹரிக்க வேண்டும். சண்டாளாதிகளால் ஸ்வீகரிக்கப்பட்ட துறையில் தடாகங்களிலோ, நதிகளிலோ அறியாமல் ஜலத்தைப் பருகினால், பஞ்சகவ்ய பானத்தால் சுத்தனாகிறான். அதிகமான ஜலங்களுக்குத் தோஷமில்லை. ஸ்வல்பமாய் உள்ளதும், எடுக்கப்பட்டதுமான ஜலத்திற்குத்தான் தோஷமுண்டு. **தேவலர் :-** சுத்தமான பாத்ரங்களால் எடுக்கப்பட்டால், உத்த்ருத ஜலமும் சுத்தமேயாம். சுத்த ஜலமாயினும், ஒரு ராத்ரி அதிக்ரமித்தால் அதைப் பரிஹரிக்க வேண்டும். **பராசரர் :-** அசுத்த வஸ்துவின் பற்றுக் காணப்பட்டால் நதீ ஜலம் வேகத்தால் சுத்தமாகும். வாபீ, கூபம், தடாகம் இவைகள் அசுத்தங்களானால், நூறு குடம் ஜலத்தை இறைத்து விட்டுப் பஞ்சகவ்யத்தைச் சேர்த்துச் சுத்தி செய்யவும். நாய், பூனை முதலியவை விழுந்து இறந்தது மட்டிலானால் இது சுத்தி.

मृतशरीरक्षरणकृतायामत्यन्तोपहतौ विष्णुराह– मृतपञ्चनखात् सर्वाः शेषं शास्त्रेण शोधयेत् ।। वह्नि प्रज्वलनं कृत्वा कूपे पक्वेष्टकाचिते । पञ्चगव्यं न्यसेत्तत्र नवतोयसमुद्भवे इति ।

இறந்த சரீரம் ஊறியதால் அதி அசுத்தி ஏற்பட்ட விஷயத்தில் சொல்லுகிறார், **விஷ்ணு :-** பஞ்சநக ப்ராணி ஏதாவது விழுந்து, இறந்து, அதிகம் அசுத்தமாகிய கிணற்றினின்றும் ஜலம் முழுவதையும் இறைத்து

விடவேண்டும். மற்றதைச் சாஸ்த்ரப்படி சுத்தம் செய்ய வேண்டும். சுட்ட செங்கற்களால் கட்டப்பட்ட கிணருனல் அதில் நெருப்பை எரியச் செய்து, புது ஜலம் ஊறியபின் பஞ்சகவ்யத்தைப் போடவேண்டும்.

मनुष्यशरीरक्षरणेऽप्येषैव शुद्धिः । महत्सु तटाकादिषु नास्ति दोषः । वापी कूपतटाकानामेवं शुद्धिर्विधीयते । अल्पानामेव पयसां महत्सु न तु दूषणम् इति स्मरणात् ।। जातुकर्णिः — मूत्रपुरीषाद्युपहता आपः सोमसूर्यांशुस्पर्शेन शुध्यन्ति इति ।। देवलः — क्लिन्नं भिन्नं शवं चैव कूपस्थं यदि दृश्यते । पयः पिबेत्त्रिरात्रं तु मानुषं द्विगुणं व्रतम् इति ।। एतदापद्विषयम् । 'क्लिन्ने भिन्ने शवे तोये तत्रस्थं यदि तत् पिबेत् । शुध्यै चान्द्रायणं कुर्यात् तप्तकृच्छ्रमथापि वा इति हारीतस्मरणात् ।

மனுஷ்ய தேஹம் விழுந்து இறந்து ஊறி அசுத்தமாளுலும் இதேதான் சுத்தி. பெரிய தடாகங்களில் தோஷமில்லை. 'அல்பஜலமுள்ள வாபீ கூப தடாகங்களுக்கு இவ்விதம் சுத்தி விதிக்கப்படுகிறது. பெரிய தடாகாதிகளுக்குத் தோஷமில்லை' என்று ஸ்ம்ருதி உள்ளது. ஜாதுகர்ணி :- மூத்ரம், மலம் முதலியவையால் அசுத்தமான ஜலம், சந்த்ரன், ஸூர்யன் இவர்களின் கிரண ஸ்பர்சத்தால் சுத்தமாகின்றது. தேவலர் :- கிணற்றில், சவமானது நனைந்து ஊறி, பின்னமாய்க் காணப்பட்டால், அறியாமல் அந்த ஜலத்தைப் பருகியவன், மூன்று நாள் க்ஷீரபானம் செய்து உபவாஸமிருக்க வேண்டும். மனிதனின் சவமானுல் இரண்டு மடங்கு வ்ரதமனுஷ்டிக்க வேண்டும். இது ஆபத்விஷயம். ஏனெனில், 'கிணற்றில் சவம் சின்னமாய் இருந்து, அதிலுள்ள ஜலத்தைப் பருகினுல், அவன் சுத்திக்காகச் சாந்த்ராயணத்தையாவது, தப்த க்ருச்ரத்தையாவது அனுஷ்டிக்க வேண்டும்' என்று ஹாரீத ஸ்ம்ருதி உள்ளது.

शातातपः – अन्त्यैरपि कृते कूपे सरोवाप्यादिके तथा। तत्र स्नात्वा च पीत्वा च प्रायश्चित्तं न विद्यते इति। एतदापद्विषयम्। चण्डालखातवापीषु पीत्वा सलिलमग्रजः। अज्ञानाच्चैकभक्तेन त्वहोरात्रेण शुध्यति इति पराशरस्मरणात्। विज्ञानेश्वरः – प्रपास्वरण्ये घटके च सैरे द्रोण्यां जलं केशविनिःसृतं च। श्वपाकचण्डालपरिग्रहेषु पीत्वा जलं पञ्चगव्येन शुध्येत् इति।

சாதாதபர் :- 'அந்த்ய ஜாதிகள் ஏற்படுத்திய கிணறு, குளம், வாபீ முதலியவையில் ஸ்நானம் பானம் இவைகளைச் செய்தாலும் ப்ராயச்சித்தமில்லை' என்றார். இது ஆபத் விஷயமாகும். ஏனெனில், 'சண்டாளன் வெட்டிய வாபிகளில் ப்ராம்ஹணன் ஜலத்தைப் பருகினால், அறியாமையினாலானால், ஒரு நாள் ஏகபக்த (ஒரு வேளை உணவு) நியமத்துடனிருந்தால் சுத்தனாகிறான்' என்று பராசர ஸ்ம்ருதி உள்ளது. விக்ஞாநேச்வரர்:- தண்ணீர்ப் பந்தலிலும், காட்டிலும், சிறிய குடத்திலும், கலப்பைப் பள்ளத்திலும், குழாயிலும், பயிர்களிலும், ச்வபாகன் சண்டாளன் இவர்கள் பரிக்ரஹித்துள்ள ஜலாசயத்திலும் உள்ள ஜலத்தைப் பருகினால், பஞ்சகவ்யத்தால் சுத்தனாவான்.

संवर्तः– सीरखातप्रपातोयं पीत्वा नावगतं जलम्। अहोरात्रोप वासेन पञ्चगव्येन शुध्यति इति॥ सीरखात प्रपातोयपाने प्रायश्चित्त-मेतदापद्विषयम्। अनापदि तु चान्द्रायणम्। सीरखातप्रपातोयं पीत्वा चान्द्रायणं चरेत् इति पराशरस्मृतेः। संवर्तः – वापी कूपतटाकानां दूषितानां विशुद्धये। अपां घटशतोद्धारः पञ्चगव्यं च निक्षिपेत् इति॥ कृम्युपहतदेहस्य शुद्धिमाह पराशरः – ब्राह्मणस्य व्रणद्वारे पूयशोणितसम्भवे। कृमिरुत्पद्यते तत्र प्रायश्चित्तं कथं भवेत्॥ गवां मूत्र पुरीषेण दधिक्षीरेण सर्पिषा। त्र्यहं स्नात्वा च पीत्वा च कृमिदष्टः शुचिर्भवेत्-इति।

ஸம்வர்த்தர்:- கலப்பை உழுத இடத்திலும், தண்ணீர்ப் பந்தலிலும் செய்த ஜலபானத்திற்கு விதித்த இந்த ப்ராயச்சித்தம் ஆபத்விஷயம். மற்றக் காலத்திலானால் சாந்த்ராயணம் ப்ராயச்சித்தம். 'கலப்பை உழுத இடத்திலும், தண்ணீர்ப் பந்தலிலுமுள்ள ஜலத்தைப் பருகினால் சாந்தத்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும்' என்று பராசரஸ்ம்ருதி உள்ளது. ஸம்வர்த்தர்:- வாபீ, கூபம், தடாகம் இவைகள் அசுத்தங்களானால் சுத்திக்காக, நூறு குடம் ஜலத்தை இறைத்துப் பஞ்ச கவ்யத்தையும் போட வேண்டும். புழுக்களால் அசுத்தமான தேஹத்திற்குச் சுத்தியைச் சொல்லுகிறார் பராசரர்:- 'ப்ராம்ஹணனுக்குச் சிரங்கின் த்வாரத்தில், சீழ், ரக்தம் உண்டாகி, புழுவும் உண்டாகின்றது. அதில் ப்ராயச்சித்தம் எப்படி எனில், பசுக்களின் மூத்ரம், சாணம், தயிர், பால், நெய் இவைகளால் மூன்று நாள் ஸ்நானமும், பானமும் செய்தால் அவன் சுத்தனாவான்' என்று.

एतच्च नाभेरधोभागे द्रष्टव्यम् । उपरिभागे तु भानुराह– नाभिकण्ठान्तरोद्भूते व्रणे चोत्पद्यते कृमिः । षड्रात्रं तु तदा प्रोक्तं प्राजापत्यं शिरोव्रणे इति । बोधायनः – यथैव सोमसंयोगात् चमसा मेध्य उच्यते । अपां तथैव संयोगान्नित्यं मेध्यः कमण्डलुः ॥ ततः शौचं ततः पानं सन्ध्योपासनमेव च । निर्विशङ्केन कर्तव्यं यदीच्छेच्छ्रेय आत्मनः इति ।

இது நாபிக்குக் கீழுள்ள பாகத்திலேற்பட்டதைப் பற்றியது. நாபிக்கு மேற்பட்ட பாகத்திலானால் சொல்லுகிறார் பானு:- நாபிக்கும், கழுத்துக்கும் நடுவிலுள்ள வ்ரணத்தில் புழு உண்டானால், ஆறு நாள் வ்ரதம் சொல்லப்பட்டுள்ளது. சிரஸ்ஸில் வ்ரணமானால் ப்ராஜாபத்யம் சொல்லப்பட்டுள்ளது. போதாயனர்:- ஸோமரஸம் சேர்ந்திருப்பதால், சமஸம் சுத்தம் என்று சொல்லப்படுவது போல், ஜல ஸம்பந்தத்தால் கமண்டலு நித்யமும் சுத்தமாகும். அதனாலேயே சௌசத்தையும்,

அதனாலேயே பானத்தையும், அதனாலேயே ஸந்த்யோ பாஸனத்தையும் சங்கையில்லாமல், ச்ரேயஸ்ஸை விரும்புவோன் அனுஷ்டிக்கலாம்.

अत्र कमण्डलुशब्देन ताम्रादिपात्रमुच्यते । न तु नालिकेरफलादि । दीर्घकालब्रह्मचर्यं धारणं च कमण्डलोरिति कलौ तस्य निषेधात्। यतिपात्राणि मृद्वेणुदार्वलाबुमयानि (फलानि च) इति सन्यासिविषयत्वस्मरणाच्च ॥ स एव – प्रायश्चित्तैरपैत्येनो याजनाध्यापनैः कृतम्। प्रतिग्रहनिमिवं तु त्यागेन तपसाऽपि च इति। तन्न केवलं तपसा शुध्यति, किं तु 'षष्ठांशं कर्षको दद्यात् पञ्चमांशं तथा वणिक्। प्रतिगृह्य चतुर्थांशं दत्वा पापैः प्रमुच्यते इत्युक्ततुरीयांशदानेन तपसा कृच्छ्र चान्द्रायणादिना च शुध्यति।

இங்கு, கமண்டலு சப்தத்தால், தாம்ரம் முதலிய பாத்ரம் சொல்லப்படுகிறது. தேங்காய்ப் பாத்ரம் முதலியதல்ல. ''தீர்க்ககால ப்ரம்ஹசர்யமும், கமண்டலு தாரணமும் கூடாது'' என்று கலியில் அது நிஷேதிக்கப்பட்டுள்ளது, ''மண், மூங்கில், மரம், சுரைக்காய், பழம் இவைகளாலுண்டாகிய பாத்ரங்கள் யதிகளுக்குரிய பாத்ரங்கள்'' என்று ஸன்யாஸி விஷயத்வத்தைச் சொல்லியுள்ளது. போதாயனரே:- யாகம் செய்விப்பதாலும், அத்யயனம் செய்விப்பதாலும் செய்யப்பட்ட பாபம், ப்ராயச் சித்தங்களால் விலகும். ப்ரதிக்ரஹத்தால் செய்யப்பட்ட பாபமோவெனில், தானத்தாலும், தபஸ்ஸினாலும் விலகும். அது தபஸ்ஸினால் மட்டும் விலகாது. ஆனால், ''உழுது பயிரிடுபவன் ஆறிலொரு பாகத்தையும், வ்யாபாரம் செய்பவன் ஐந்திலொரு பாகத்தையும், ப்ரதிக்ரஹம் செய்தவன் நாலிலொரு பாகத்தையும் தானம் செய்தால் பாபங்களால் விடுபடுவான்'' என்று சொல்லப்பட நாலிலொரு பாகத்தின் தானத்தினாலும், க்ருச்ரம், சாந்த்ராயணம் முதலிய தபஸ்ஸினாலும் ப்ரதிக்ரஹம் செய்தவன் சுத்தனாகிறான்.

तथा च मनुः - यद्गर्हितेनार्जयन्ति कर्मणा ब्राह्मणा धनम्। तस्योत्सर्गेण शुध्यन्ति जप्येन तपसैव च इति ।। याज्ञवल्क्यः - सोमः शौचं ददौ स्त्रीणां गन्धर्वश्च शुभां गिरम्। पावकः सर्वमेध्यत्वं मेध्या वै योषितो ह्यतः ।। विप्रस्तु पादतो मेध्यो गावो मेध्यास्तु पृष्ठतः ।। अजाश्वा मुखतो मेध्याः स्त्रियो मेध्यास्तु सर्वतः इति ।। शातातपः - गोकुले यज्ञशालायां तिलयन्त्रेक्षुयन्त्रयोः । न मीमांस्यानि शौचानि स्त्रीषु बालातुरेष्वपि इति।

மனு:- ப்ராம்ஹணர்கள் நிஷித்தமான கர்மத்தினால் எந்தத் தனத்தை ஸம்பாதிக்கின்றனரோ, அந்தத் தனத்தைத் தானம் செய்வதாலும், ஜபத்தினாலும், தபஸ்ஸினாலும் சுத்தராகின்றனர். யாக்ஞவல்க்யர்:- ஸ்த்ரீகளுக்கு சந்த்ரன் சுத்தியையும், கந்தர்வன் சுபமான வாக்கையும், அக்னி எல்லாவற்றிலும் சுத்தியையும் கொடுத்தார்கள். ஆகையால் ஸ்த்ரீகள் சுத்தைகள். ப்ராம்ஹணன் பாதத்தில் சுத்தன். பசுக்கள் முதுகில் சுத்தங்கள். ஆடு, குதிரை இவைகள் வாயில் சுத்தங்கள். ஸ்த்ரீகள் எல்லா இடத்திலும் சுத்தைகளாவர். சாதாதபர்:- மாட்டுக் கூட்டத்திலும், யாகசாலையிலும், எள்ளுச் செக்கிலும், கரும்பு ஆலையிலும், ஸ்த்ரீகளிடத்திலும், குழந்தைகளிடத்திலும், பிணியாளரிடத்திலும் சுத்திகளை விசாரிக்க வேண்டாம்.

पराशरः - रथ्याकर्दमतोयानि नावः पन्थास्तृणानि च । मारुतार्केण शुध्यन्ति पक्वेष्टकचितानि च ।। अदुष्टाः सन्तता धारा वातोद्धूताश्च रेणवः ।। स्त्रियो वृद्धाश्च बालाश्च न दुष्यन्ति कदाचन इति। उदकपानगता धाराः शुद्धाः । अशुचिप्रदेशात् वायुनोत्थापिता अपि रेणवः स्पर्शार्हाः । पुरुषवत् प्रातःस्नानाद्यभावेऽपि योषिदादयः शुद्धा इत्यर्थः ।। वैखानसे - आतुरे बाले महानसे स्त्रीषु शौचं न विचारणीयम् इति ।। बृहस्पतिः - पादौ शुची ब्राह्मणानामजाश्वस्य मुखं शुचि। गवां पृष्ठानि मेध्यानि सर्वगात्राणि योषिताम् इति।

பராசரர் :- தெருவிலுள்ள சேறுடன் கூடிய ஜலம், ஓடம், வழி, புல்கள், சுட்ட செங்கல்களால் கட்டப்பட்டவை இவைகள் காற்றினாலும், ஸூர்யனாலும் சுத்தமாகின்றன. தொடர்ந்து விழும் ஜலத்தின் தாரைகளும், காற்றினால் கிளப்பப்பட்ட புழுதிகளும், ஸ்த்ரீகளும், கிழவர்களும், சிறுவர்களும் ஒருகாலம் அசுத்தராவதில்லை. ஜலத்தைப் பருகும் போது தொடர்ந்திருக்கும் ஜலத்தின் தாரைகள் சுத்தங்களே. அசுத்த ப்ரதேசத்தினின்றும் காற்றினால் கிளப்பப்பட்டவைகளாயினும் புழுதிகள் ஸ்பர்சத்திற்கு அர்ஹங்கள்தான். புருஷங்கள் போல் ப்ராத: ஸ்நானம் முதலியவை இல்லாவிடினும் ஸ்த்ரீகள் முதலியவர்கள் சுத்தர்கள் என்பது பொருள். வைகாநஸத்தில்:- பிணியாளன், குழந்தை, சமையல் செய்யுமிடம், ஸ்த்ரீகள் இவர்களிடத்தில் சுத்தி விசாரிக்கத்தக்கதல்ல. ப்ருஹஸ்பதி:- ப்ராம்ஹணர்களின் பாதங்கள் சுத்தங்கள். ஆடு, குதிரை, இவற்றின் முகம் சுத்தம். பசுக்களின் முதுகு சுத்தம். ஸ்த்ரீககளின் எல்லா அங்கங்களும் சுத்தமாம்.

मनुः— नित्यं शुद्धः कारुहस्तः पण्यं यच्च प्रसारितम् । ब्रह्मचारिगतं भैक्षं नित्यं मेध्यमिति स्थितिः ।। नित्यमास्यं शुचि स्त्रीणां शकुनिः फलपातने । प्रस्रवे च शुचिर्वत्सः श्वा मृगग्रहणे शुचिः इति ।। याज्ञवल्क्यः – कारुहस्तः शुचिः पण्यं भैक्षं योषिन्मुखं तथा इति ।। योषिन्मुखं संभोगकाले शुचि ।। तथा, पैठीनसिः – स्त्रीमुखं रतिसंसर्गे इति ।। वसिष्ठात्रि बोधायन शातातप – स्त्रियश्चाः रतिसंसर्गे श्वा मृगग्रहणे शुचिः इति ।

மனு:- சில்பியின் கை எப்பொழுதும் சுத்தம். கடையில் வ்யாபாரத்திற்காக வைக்கப்பட்ட வஸ்து சுத்தம். ப்ரம்ஹசாரியை அடைந்த பிக்ஷாவஸ்து எப்பொழுதும் சுத்தமென்பது மர்யாதை. ஸ்த்ரீகளின் முகம் எப்பொழுதும் சுத்தம். பழத்தைக் கொத்தி

விழுத்துவதில் பக்ஷியும், பால் கறக்கும் போது கன்றும், ம்ருகத்தைப் பிடிப்பதில் நாயும் சுத்தம். யாக்ஞவல்க்யர்:- சில்பியின் கை சுத்தம். கடையிலுள்ள வஸ்து சுத்தம். பிக்ஷான்னம் சுத்தம். ஸ்த்ரீயின் முகம் சுத்தம். ஸ்த்ரீயின் முகம் ஸம்போக காலத்தில் சுத்தம். அவ்விதமே - பைடீநஸி:- ரதி ஸம்ஸர்க்கத்தில் ஸ்த்ரீயின் முகம் சுத்தம். வஸிஷ்டர், அத்ரி, போதாயனர், சாதாதபர்:- ஸ்த்ரீகள், ரதிஸம்ஸர்க்கத்திலும், நாய் ம்ருகங்களைப் பிடிப்பதிலும் சுத்தமாகியவர்கள்.

मनुः – मृत्तोयैः शोध्यते शोध्यं नदी वेगेन शुध्यति। रजसा स्त्री मनोदुष्टा सन्न्यासेन द्विजोत्तमः इति।। पराशरः– रजसा शुध्यते नारी विकलं या न गच्छति इति। विकलं - गर्भधारणम्।। चतुर्विंशतिमते – रजसा शुद्ध्यते नारी परं पुंसाभिगामिनी। तथाऽपि मुनिना प्रोक्तं प्रायश्चित्तं समाचरेत्।। कृच्छ्रार्धं ब्राह्मणी कुर्याद्विप्रस्य गमने सति इति। एतदनभ्यासविषयम्। स्मृत्यन्तरे – स्त्रीशुद्धिरर्थशुद्धिश्च यस्य नास्त्यपि कर्मवान्। स एव नरकं याति शीर्षच्छेदे कुतो भिषक् इति।

மனு:- அசுத்தமான த்ரவ்யம், மண்ணாலும், ஜலத்தாலும் சுத்தமாகிறது, நதீஜலம் வேகத்தால் சுத்தமாகிறது. மனதில் தோஷத்தை அடைந்த ஸ்த்ரீ ரஜஸ்ஸினால் சுத்தையாகிறாள். ப்ராம்ஹணன் ஸன்யாஸத்தால் சுத்தனாகிறான். பராசரர்:- எந்த ஸ்த்ரீ கர்ப்பதாரணமடையவில்லையோ அவள் ரஜஸ்ஸினால் சுத்தையாகிறாள். சதுர்விம்சதிமதத்தில்:- பர புருஷனைச் சேர்ந்த ஸ்த்ரீ, ரஜஸ்ஸினால் சுத்தையாவாள். ஆனாலும், ருஷி ப்ரோக்தமான ப்ராயச்சித்தத்தைச் செய்ய வேண்டும். ப்ராம்ஹண ஸ்த்ரீ, பரபுருஷனான ப்ராம்ஹணனைச் சேர்ந்தால் அரை க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். இது ஒரு தடவை செய்த விஷயம். மற்றொரு ஸ்ம்ருதியில்:- ஸ்த்ரீ விஷயத்திலும், பண விஷயத்திலும் எவனுக்குச் சுத்தியில்லையோ, அவன் நற்கர்மங்களைச்

செய்பவனுயினும் நரகத்தை அவச்யம் அடைவான். தலையை வெட்டிய பிறகு, வைத்யன் எதற்கு!

मनुः—मक्षिका विप्रुषश्छाया गौरश्वः सूर्यरश्मयः । रजो भूर्वायुरग्निश्च स्पर्शे मेध्यानि सर्वदा ।। मार्जारश्चैव दर्वी च मारुतश्च सदा शुचिः इति ।। बोधायनः – आसनं शयनं यानं नावः पन्थास्तृणानि च । चण्डालपतितस्पृष्टं मारुतेनैव शुध्यति इति ।। स्मृत्यर्थसारे– प्रतिमा लोहजाऽल्पोपहतिदूषिता भस्मनोद्धर्षणात् पञ्चगव्येन शुध्येत् । प्रतिमा पाषाणजाऽल्पोपहतिदूषिता वल्मीकमृत्तिकाजलैः प्रक्षालिता पञ्चगव्येन शुध्येत् । प्रतिमा विण्मूत्रश्वादिदूषिता चेत् पञ्चगव्यैः पञ्चाहमधिवास्य आप्लाव्य गोमूत्र गोमयवल्मीकमृत्तिकादिभिः सम्यक् प्रक्षाल्य पुनः प्रतिष्ठया शुद्धचेत् । रत्नजानां पञ्चगव्यैः प्रक्षाल्य पुनः प्रक्षालनं कुर्यात् इति ।

மனு:- ஈக்கள், ஜலத்துளிகள், நிழல், பசு, குதிரை, ஸூர்யனின் கிரணங்கள், தூசி, பூமி, வாயு, அக்னி இவைகள் ஸ்பர்சத்தில் எப்பொழுதும் சுத்தங்களாம். பூனை, கரண்டி, காற்று இவைகள் எப்பொழுதும் சுத்தங்களேயாம். போதாயனர்:- ஆஸனம், படுக்கை, வாஹனம், ஓடங்கள், வழி, புற்கள் இவை சண்டாளர் பதிதர் இவர்களால் ஸ்பர்சிக்கப்பட்டாலும், காற்றினுலேயே சுத்தமாகின்றன. ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் :- லோஹத்தாலுண்டாகிய தேவதா ப்ரதிமை ஸ்வல்ப அசுத்தியினுல் துஷ்டமானுல் சாம்பலினுல் தேய்த்து, பஞ்சகவ்யத்தால் அலம்பினுல் சுத்தமாகும். பாராங்கல்லால் உண்டாகிய ப்ரதிமை ஸ்வல்ப அசுத்தியால் துஷ்டமானுல் புற்றுமண், ஜலம் இவைகளால் அலம்பி பஞ்சகவ்யத்தால் சுத்தி செய்தால் சுத்தமாகும். ப்ரதிமை, மலம், மூத்ரம், நாய் இவைகளால் அசுத்தமானுல் ஐந்து நாள் முழுவதும், பஞ்சகவ்யத்தில் முழுகச் செய்து, ஸ்நானம் செய்வித்து, கோமூத்ரம்,

கோமயம், புற்றுமண் முதலியவைகளால் நன்றாய் அலம்பி, மறுபடி ப்ரதிஷ்டை செய்தால் சுத்தமாகும். ரத்னத்தாலுண்டாகியவைகளுக்குப் பஞ்சகவ்யங்களால் அலம்பி, மறுபடி அலம்புவதால் சுத்தி.

तत्रैव— बाल उपनयनादर्वाक् सदा शुद्धः । स्त्री च विवाहादर्वाक्, मूषिक मशक पतङ्ग मक्षिकाधान्यकीटगोहस्त्यश्वच्छागशुका जलस्थाः सर्वे जीवाः स्वभावशुद्धाः इति।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்திலேயே:- சிறுவன் உபநயனத்திற்கு முன் எப்பொழுதும் சுத்தன். பெண் விவாஹத்திற்கு முன் எப்பொழுதும் சுத்தை. எலி, கொசு, விட்டில்பூச்சி, ஈ, தான்யத்திலுள்ள புழு, பசு, யானை, குதிரை, ஆடு, கிளி, ஜலத்தில் வாழும் ஜந்துக்கள் இவை எல்லாம் இயற்கையாலேயே சுத்தங்களாம்.

## आह्निककाण्डः समाप्तः

## ஆஹ்னிககாண்டம் முற்றிற்று.

வெளியிடுபவர் :

**வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை**

(கும்பகோணம்) சார்பில்

**ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம்**

**ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்**

1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502.

விக்ருதி - 2010

**Lasertypeset & Printed at :**
**V.K.N. ENTERPRISES**
**164, R.H. ROAD, MYLAPORE, CHENNAI-4, 9840217036**